# விவிலியம் திருக்குறள் சைவ சித்தாந்தம்

## ஒப்பாய்வு






டாக்டர். ஏ. தெய்வநாயகம்

# விவிலியம்
# திருக்குறள் சைவசித்தாந்தம்-
# ஒப்பாய்வு

டாக்டர் மு. தெய்வநாயகம் எம். ஏ., பிஎச். டி.




**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

**International Institute of Tamil Studies**

**டி. டி. டி. ஐ. தரமணி, சென்னை-600 113.**

# கிறித்தவமும் தமிழும் - அறக்கட்டளை

சொற்பொழிவு வரிசை - எண் 1

28, 29—3—'85

## Christianity and Tamil Endowment

LECTURE NO. 1

ENDOWMENT LECTURES PUBLICATION NUMBER-8


**BIBLIOGRAPHICAL DATA**

| | | |
|---|---|---|
| Title of the book | : | A Comparative study of Viviliyam, Tirukkural and Saiva Siddantham. |
| Author | : | Dr. M. Deivanayagam |
| Publisher | : | International Institute of Tamil Studies, T. T. T. I. (Post) Taramani, Madras-600 113. |
| Publication Number | : | 107 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | March 1985 |
| Edition | : | First |
| Paper used | : | 14.2 kg. D/Dy white Printing |
| Size of the book | : | 21 x 14 cms. |
| Printing types used | : | 10 Point |
| Number of copies | : | 2200 |
| Number of Pages | : | i—xvi, 334 |
| Price | : | Rupees Twenty only |
| Printers | : | Meipporul Achagam, Madras-23. |
| Binding | : | Pulb Board |
| Artist | : | A. S. Velusamy |
| Subject | : | A comparative study of Bible, Tirukkural and Saiva Siddantha Sastras Fourteen. |

பேராயர் டாக்டர் இரா. அருளப்பா
சென்னை மயிலைப் பேராயம்,
பேராயர் இல்லம், மயிலாப்பூர்.

# வாழ்த்துரை

'கிறிஸ்தவமும் தமிழும்' என்னும் தலைப்பில் உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில் ஓர் அறக்கட்டளை ஏற்படுத்த வேண்டும் என அதன் இயக்குநர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் என்னை அணுகினார்கள்.

ஐரோப்பியர் வருகைக்குப் பிற்பட்ட தமிழ்க் கிறிஸ்தவம்பற்றிப் பலர் ஆய்ந்து பலநூல்கள் வெளியிட்டுள்ளனர். ஐரோப்பியர் வருகைக்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களையும் கிறிஸ்தவத்தையும் ஒப்பிட்டு ஆய்ந்தால் நல்லது எனக் கூறினேன்.

அவர்கள் அதை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டதுடன், தம்மிடம் டாக்டர் பட்டத்திற்காக, 'விவிலியம் - திருக்குறள் - சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு - ஓர் ஒப்பாய்வு' என்னும் தலைப்பின் கீழ் ஆய்ந்துள்ள, தமது மாணவர் தெய்வநாயகத்தின் ஆய்வுக் கட்டுரையை மையமாகக்கொண்டு ஆய்வு நடத்தலாம் எனத் தெரிவித்தார்கள்.

தனித்தனியாக ஒவ்வொருவரும் வெவ்வேறு நோக்கில் ஆய்ந்து செல்லுவதைவிட ஒரு தொடர்ச்சியான ஆய்வு வளர்ச்சியாக அவை இருக்குமாறு அமைக்கப்படுவது நல்லதென்பதால், மேற்கூறப் பெற்றுள்ள ஆய்வுக் கட்டுரை முதல் சொற்பொழிவாகவும், அக்கட்டுரையின் நிறை குறைகளை யாய்ந்து புதிய கருத்துகளுடன் மற்றவர் இரண்டாம் கட்டுரையும், இரண்டாம் கட்டுரையை யாய்ந்து புதிய கருத்துகளுடன் முதல்ஆய்வுக் கட்டுரையை யொட்டி மூன்றாம் ஆய்வுக் கட்டுரையும் மூன்றாம் ஆய்வுக் கட்டுரையை ஆய்ந்து புதிய கருத்துகளுடன் மற்றவர் நான்காம் ஆய்வுக் கட்டுரையும் இப்படியாக, மூன்றாம், ஐந்தாம், ஏழாம், ஒன்பதாம் ஆய்வுக் கட்டுரைகள் டாக்டர் மு. தெய்வநாயகத்தின் ஆய்வுக் கட்டுரை யொட்டியும் இரண்டாம், நான்காம், ஆறாம், எட்டாம் பத்தாம் ஆய்வுக் கட்டுரைகள், அவரை யொட்டிய ஆய்வுக்

கட்டுரைகளை எதிர்க்கோணத்தில் ஆயும் மற்றவர்களாலும், ஆய்வுரைகளும் அவைகளுக்கு மறுப்பு ஆய்வுரைகளுமாக முதல் பத்து ஆண்டுகளுக்கு ஒரு விவாத அரங்கம் போன்ற நிலையிலும் அதே நேரத்தில் சிறந்தஆய்வுக் கருத்துகள் வெளிவரும் அளவிலும் பத்துச் சொற்பொழிவுகள் நூல் வடிவில் வெளியிட்டு உரையாற்றுவதெனத் தீர்மானிக்கப்பட்டது.

அத்தீர்மானத்திற்கிணங்க இந்த ஆய்வுக்கட்டுரை முதல் சொற்பொழிவாக வெளிவருகின்றது. இந்த நோக்கின் ஆய்வுக்கு இது ஒரு தொடக்கம் ஆகும். இக்கட்டுரையாசிரியரோ அவுரால் பரிந்துரை செய்யப்படுபவர்களோ மூன்றாம், ஐந்தாம், ஏழாம் ஒன்பதாம் ஆய்வுக் கட்டுரைகளைக் கொடுப்பர்.

உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் உலகப் பெருநோக்குடையதென நிறுவும் வகையில் உண்மையான ஆய்வுகளை ஊக்கப்படுத்தி உலகமக்களை உண்மை காண அழைக்கும் அதன் இயக்குநர் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்களைப் பெரிதும் பாராட்டுகின்றேன்.

ஐரோப்பியர் வருகைக்கு முற்பட்ட ஆதி இந்தியக் கிறிஸ்தவத்தை உலகுக்கு வெளிப்படுத்தும் நோக்கில் கடந்த பதினாறு ஆண்டுகளாகப் பல்வேறு கோணங்களில் உழைத்து வரும் இக்கட்டுரையாசிரியரும் உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவன இயக்குநரின் மாணவருமான டாக்டர் மு. தெய்வநாயகத்தையும் பாராட்டுகின்றேன்.

அறக்கட்டளை வழியாகச் செயல்பட இருக்கும் இந்த ஆய்வுத் தொடர் சிறந்த முறையில் உலக மக்கள் யாவருக்கும் பயன்பட வாழ்த்துகின்றேன்.

20-3-85 † இரா. அருளப்பா

டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
இயக்குநர்,
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
டி. டி. டி. ஐ அஞ்சல், தரமணி,
சென்னை-600 113.

# பதிப்புரை

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் 12 அறக்கட்டளைகளுக்கு மேலாக நிறுவி உள்ளது. அதில் ஒன்று 'கிறித்தவமும் தமிழும்' என்ற அறக்கட்டளை. அதற்கு முழு நிலையில் நிதி உதவி அளித்த பேராயர் டாக்டர் இரா. அருளப்பா அவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவிக்கிறோம். 'கிறித்தவமும் தமிழும்' என்ற அறக்கட்டளையின் முதல்சொற்பொழிவு டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களின் சொற்பொழிவாக அமைகிறது. டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் எதையும் நுணுகிப் பார்க்கும் ஆற்றல் உடைய ஆய்வாளர். 'விவிலியமும் திருக்குறளும்' பற்றிய பல நூல்கள் எழுதியுள்ளார். உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 'விவிலியம், திருக்குறள், சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு - ஓர் ஒப்பாய்வு' என்ற தலைப்பில் தம்முடைய முனைவர் பட்டத்திற்காக ஆய்வு செய்து ஆய்வுப்பட்டம் பெற்றுள்ளார். அந்த ஆய்வேட்டினைப் பல நிலைகளில் புதுக்கியும், பெருக்கியும், சீர்படுத்தியும் தற்போது அறக்கட்டளைச் சொற்பொழிவாக அமைத்துத் தந்துள்ளார் அவருடைய முயற்சி பாராட்டத்தக்கது.

மனித இனம் ஒரே நிலையுடையது. சமயங்கள் பலவாக இருந்தாலும் சமயங்களின் குறிக்கோள் இறைவனை நினைத்தல், இறைவனை உணர்தல், இறைவனை அடைதல், இறைவனோடு இரண்டறக்கலத்தல், என்ற நிலைகளில்தான் அமையும். அந்த நிலையில் விவிலியமும், திருக்குறளும், சைவ சித்தாந்த நூல்களும் பல ஒருமைப்பாடுடைய செய்திகளைக்கூறுகின்றன. அவைகளைப் பல கோணங்களில் ஆய்ந்து தெளிவுபடுத்தித் தந்துள்ளார் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள். சமய ஒருமைப்பாட்டுக்கு இந்நூல் ஒரு எடுத்துக்காட்டாக அமையவேண்டும் என்று நான் விடும்புகிறேன். ஒரு சமயத்தைச் சார்ந்தவர்கள் இன்னொரு சமய நூலையும் நுணுகிப்படிப்பதற்கு இந்நூல் துணையாக அமையும். டாக்டர்

மு. தெய்வநாயகம் அவர்கள் சைவ சித்தாந்த சாத்திரத்தை நன்கு நுணுகி ஆய்ந்து பல எண்ணங்களைத் தருகிறார். பொது நிலையில் சமயங்களைப் பற்றி நன்கு தெரிந்துகொள்ள வேண்டும் என்பதைப் பற்றி நான் அடிக்கடி நினைத்துப்பார்ப்பதுண்டு. ஜி. யு. போப் அவர்கள் திருவாசகத்தைப் படிக்கும்போது உருகினார், அழுதார் என்பதைக் கேள்விப்பட்டிருக்கிறோம். பிற சமய நூல்களைப் படித்து அதற்காக உருகுகின்ற உள்ளங்கள் உண்டு என்பதை அவர் வாயிலாகத் தெரிந்துகொள்கிறோம். அது போன்று டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களும் சைவ சித்தாந்தத்தை நன்கு உணர்ந்து வருகிறார். அதற்கு அவர் ஆய்வு துணையாக அமைகிறது. அதே போன்று சைவ வைணவத்தைச் சார்ந்தவர்களும் விவிலியத்தை உணர்வதற்கும், திருக்குறளை இன்னும் ஆழமாக எண்ணிப் பார்ப்பதற்கும் இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவு நூலாகிய 'விவிலியம் திருக்குறள் சைவசித்தாந்தம்—ஒப்பாய்வு' என்னும் நூல் உறுதியாகத் துணை புரியும் என்று நம்புகிறேன்.

தமிழில் மிகப் பழமையான நூல் தொல்காப்பியம்; கி.மு. பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என்பது பொதுக்கொள்கை. தமிழ் பல செய்திகளைக் கொண்டுள்ளது. அவ்வாறு தோன்றியது பல நாடுகளுக்கும் சென்று பல வடிவங்களையும் பெற்று மறுபடியும் தமிழகத்திற்குத்திரும்பி இருக்கலாம். இதைப்பற்றி எல்லாம் நண்பர் மு. தெய்வநாயகம் அவர்கள் தம்முடைய நூலில் தந்துள்ளவை ஆய்வாளர்களுக்குத் துணையாக அமையும். அவருடைய முயற்சியைப் பாராட்டுகிறேன். இன்னும் பல நூல்கள், சமய ஒற்றுமைக் கருத்துகள் அவர் வாயிலாக வர வேண்டும் என்று நான் விருப்புகிறேன். இந்நிலையில் அவரைப் பாராட்டிப் போற்றி வாழ்த்தி மகிழ்கின்றேன்.

குறித்த காலத்தில் நூலை அச்சிட்டுத்தந்த மெய்ப்பொருள் அச்சகத்தார்க்கு எங்கள் நன்றி. எங்கள் நிறுவனப் பணிகள் அனைத்திற்கும் ஆக்கமும் ஊக்கமும் தருகின்ற மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்களுக்கு எங்கள் நன்றி.

அன்புள்ள,

20-3-1985 ச. வே. சுப்பிரமணியன்

# நன்றியுரை

1976-இல் நெருக்கடி நிலை கொண்டுவரப்பட்டபோது வள்ளுவர் கோட்டத்தில் நடைபெற்ற திருக்குறள் மாநாட்டில் திருக்குறள் ஆய்வில் எழுந்த என்னுடைய நூல்களைக் காட்சிக்கு வைக்கக் கூடாதென்று அரசு அதிகாரிகள் மறுத்து, உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவன இயக்குநரைக் கை காட்டியபோது, அவரோடு மோதலுக்குச் சென்ற என்னை இன்முகம் காட்டி வரவேற்று மாணவனாக்கிய பெருமை திருவள்ளுவரைப் போன்ற உலகளாவிய சிந்தனைச் செம்மலும் எனது ஆசானுமான டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்களைச் சாரும்.

அவர்களுடைய அரவணைப்பு இருந்திராவிட்டால் என்னுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட எத்தனையோ சோதனைகளுக்கிடையே ஆய்வுப் படிப்பை நிறைவு செய்திருத்தல் இயலாது. அவர்களுக்கு நன்றிக் கடன்பட்டுள்ளேன்.

'கிறித்தவமும் தமிழும்' என்னும் தலைப்பில் ஐரோப்பியர் வருகைக்கு முற்பட்ட ஆதி இந்தியக் கிறித்தவத்தை முதல் பத்தாண்டுகள் ஆய்வதற்கெனத் தனியொரு அறக்கட்டளையை நிறுவியதுடன், அந்த ஆய்வின் மையக் கருத்தாக என்னுடைய ஆய்வேடு அமைவதற்குக் காரணராக விளங்கும் சென்னை மயிலைப் பேராயர் டாக்டர் இரா. அருளப்பா அவர்களுக்கு எனது நன்றியுரித்தாகுக. அவர்கள் இத்தகைய ஆய்வு சிறப்புற நடைபெறுவதற்குப் புறத்துணையாக மட்டும் நில்லாமல் 1969முதல் வெளிவந்துள்ள எனது நூல்களின் கருத்துகளை மேலும் செம்மைப் படுத்தி ஆங்கிலத்திலும் தமிழிலும் பல்வேறு நூல்களை வெளியிட்டு அகத்துணையாகவும் செயல்பட்டுவரும் அருள்திறன் எண்ணி எண்ணி வியக்கத்தக்கது.

இந்த ஆய்வினால் நன்மையடையப் போவது கிறித்தவமா, வள்ளுவமா, சைவமா அல்லது திராவிடமா என்பதை நிர்ணயிக்கப் போவது காலவெள்ளமாகும்.

இவை யாவுமே இணைந்து சிறப்படையப் போகும் அந்தக் காலத்தை என் அகக் கண்ணால் கண்டு மகிழும் காட்சியைத் தந்துள்ள இறைவனுக்கு நன்றி கூறி அமைகின்றேன்.

மு. தெய்வநாயகம்.

# பொருளடக்கம்

# முன்னுரை

அறிஞர்களிடையே, 'கடவுள் இல்லை' என்ற கருத்துடைய பெருமக்கள், காலங்காலமாக மனித சமுதாயத்தில் தோன்றித் தங்கள் கருத்துகளைப் பல்வேறு முறைகளில் வலியுறுத்தி வெளியிட்டு வந்துள்ள போதிலும், 'கடவுள் உண்டு' என்னும் உணர்வு இது வரை அழிக்கப்பட வியலாத ஒன்றாக மனித சமுதாயத்தில் விளங்கிக்கொண்டிருக்கிறது. இந்த உணர்வின் தோற்றத்திற்கு ஒரு கண்டமோ ஒரு நாடோ ஓர் இனமோ மட்டும் உரிமை பாராட்டிக் கொள்ள இயலாது. உலகம் முழுவதிலும் வாழும் பல்வேறு இன மக்களின் உள்ளங்களிலும் இவ்வுணர்வு நீக்கமற நிலைத்து நின்று வருகின்றது எனலாம்.

இந்த உணர்வு குறிப்பிட்ட சில கூட்டத்தாரிடையே அவர்கள் அடைந்த பட்டறிவின் காரணமாக, சமயமாக உருவெடுத்துள்ளது. இலக்கியம் முன்னும் இலக்கணம் பின்னும் செல்வதைப்போன்று, இன வரலாற்றுடன் இணைந்த சமய வரலாறு முன்னும், சமயத் தத்துவக் கொள்கை பின்னுமாக வெளிப்படுகின்றன எனலாம். உலகில் தோன்றிய எந்தச் சமய தத்துவக் கொள்கைக்கும், நாம் வரவாற்றுப் பின்புலத்தை அறிய இயலும்.

உலக மக்கள் யாவருக்கும் பொதுவான இறையுணர்வு, குறிப் பிட்ட இன வரலாற்றில் சமயமாக உருவாகும்பொழுது அவ்வினத் தின் மொழி, பண்பாடு, வரலாறு இவைகளின் அடிப்படையில், பெருகி வளர்கின்ற காரணத்தால் மற்ற இனம், மொழி, பண்பாடு, வரலாறு முதலியவைகளில் இருந்து அது வேறுபட்டதாக எழுகின்றது.

உலகப் பெருஞ் சமயங்களுக்கிடையேயுள்ள கொள்கை வேற்று மைகள், இக்காரணங்களாலேயே நிலைபெறுகின்றன எனலாம். ஒரு நாட்டில் தோன்றிய சமயக்கொள்கை பிறிதொரு நாட்டில் பரவுங்கால், பரவும் நாட்டில் உள்ள மொழி, பண்பாடு போன்ற வற்றை ஏற்றுக்கொண்டு பரவிய போதிலும் சமயக் கொள்கைக்குக் காரணமான சமய வரலாறு, அது தோன்றுவதற்கு அடிப்படையாக விளங்குகின்ற இன வரலாற்றிலிருந்து பிரிந்து, தனித்து நிற்க இயலாததாகின்றது.

இந்த நோக்கில் விவிலியம், திருக்குறள், சைவசித்தாந்தம் இம்மூன்றையும் ஒப்பிட்டு ஆயும்பொழுது இவைகளுக்கிடையே மொழி, பண்பாடு, இவற்றால் வேற்றுமைகள் காணப்படினும் அடிப்படைச் சமயக் கொள்கையளவில் ஒற்றுமைகள் காணப்படு கின்றன.

இந்த ஒற்றுமைக்குக் காரணங்களான, சமய வரலாறும் இன வரலாறும் முயன்று அறிந்துகொள்ள வேண்டிய நிலையில் இருக் கின்றன.

இந்தியச் சமயக் கொள்கைகளில், சைவசித்தாந்தம் தனித் தன்மையுடன் வீறுகொண்டு விளங்குகிறது எனலாம்.

சைவசித்தாந்தமாகிய பதினான்கு தத்துவ சாத்திரங்கள் தோன்றுவதற்கு அடிப்படையாக விளங்கும் சைவ சமயக் கொள்கை களை வெளிப்படுத்துவதாகப் பன்னிருதிருமுறை உள்ளது. பன்னிரு திருமுறை தோன்றுவதற்குக் காரணமாக விளங்கியது, தமிழகத்தில் எழுந்த பக்தி இயக்கமாகும்.

பக்தி இயக்கம் எழுவதற்கு உந்துசக்தியாக இருந்தது எது என்னும் வினாவிற்குத் தெளிவான விடை இதுவரை காண இயலாமல் இருந்தது.

அவ்வாறே எல்லாச் சமயங்களாலும் உரிமை பாராட்டப்படும் திருக்குறளின் அடிப்படைத் தத்துவக் கருத்துகள் தோன்றுவதற்குப் பின்புலமாக இருந்த சமய வரலாறு, இன வரலாறு என்னவென் பதை அறிந்துகொள்வதிலும் பலவிதச் சிக்கல்கள் இருந்து வந்துள்ளன.

பொதுவாக இந்திய நாகரிகம் ஆரியம், திராவிடம் என இரண் டாகப் பகுக்கப்பட்டு நோக்கப்படுகிறது. இரண்டும் ஒன்றுக் கொன்று கொடுத்தும் கொண்டும் வளர்ந்துள்ளன.

இதனால் திராவிட நாகரிகத்தை ஆயும் ஆய்வாளர்கள், திராவிட நாகரிகத்தில் வந்து கலந்த புதிய கருத்துகளை, ஆரியக் கருத்துகள் எனவும், ஆரிய நாகரிகத்தில் கலந்துள்ள புதிய கருத்துகளைத் திராவிடக்கருத்துகள் எனவும் இதுவரை முடிவுசெய்து வந்துள்ளனர்.

மேலே கண்ட முடிவு சமயக் கருத்துகளில் வெளிப்படுத்தப் பட்டுள்ளது. தமிழகத்தில் எழுந்து பரவிய சைவ வைணவச்

சமயங்கள் எழுவற்குக் காரணமான பக்தி இயக்கத்தைத் தோற்று வித்த மூலக் கரு எது என்பதைக் காணுவதில் அறிஞர்களிடையே சிக்கல்கள் இதுவரை இருந்துவந்துள்ளன.

தமிழகத்தில் எழுந்த பக்தி இயக்கத்தின் மூலக் கருவிற்கு ஆரிய வைதீகத்தில் இணைப்புக் காண முயன்ற முயற்சி, அதிகமாக நடைபெற்று வந்துள்ளது. இதன் பயனாகச் சைவ வைணவ சமயங்கள் ஆரிய வைதீகத்தின் கிளைகள் என்னும் எண்ணம் அறிஞர்களிடையே பரவலாக உள்ளது எனலாம்.

ஆனால், ஆரிய இன வரலாற்றையும் ஆரிய வேதங்களையும் ஆரிய சமயங்களையும் ஆராய்ந்த பெருமக்கள், சைவ வைணவ சமயங்கள் ஆரிய சமயத்திலிருந்து வளர்ந்த எளிய வளர்ச்சிகள் அல்ல எனவும் அவை திராவிட மூலக் கூறுகள் எனவும் கருத்துத் தெரிவித்துள்ளனர்.

திராவிட இன வரலாற்றையும் திராவிட சமய வரலாற்றையும் ஆழ்ந்து ஆராயும்பொழுது, இச்சமயங்கள் திராவிட இன வரலாற்றில் மட்டுமே எழுந்து பரவிய சமயங்கள் எனக் கொள்ளு வதற்கு இடமில்லை.

சைவ வைணவ சமயங்களின் எழுச்சிக்கு முற்பட்ட சங்க காலத்தில், வடக்கிலிருந்து ஆரிய நாகரிகமும் மேற்கிலிருந்து யவன நாகரிகமும் தமிழகத்தில் பரவியுள்ளமையைத் தெளிவாக அறிய இயலுகின்றது. இதுவரை தமிழக சமய வரலாற்றை ஆராய்ந்த அறிஞர் பெருமக்களிடையே, தமிழகத்தில் காணப்பட்ட புதிய கருத்துகளை, ஆரிய நாகரிகத்தோடு மட்டும் ஒப்பிட்டு ஆயும் போக்கு வளர்ந்துள்ளதேயன்றி, யவன நாகரிகத்தோடு ஒப்பிட்டு ஆராயும் போக்கு வளரவில்லை.

யவனர்களாகிய கிரேக்கர், உரோமர், யூதர், சீரியர் இவர்க ளோடு தமிழகத்திற்குச் சங்க காலத்தில் இருந்த நெருங்கிய வணிக உறவு, அண்மைக் காலம் வரை முழுமையாக வெளிப்படாமையே இதற்குக் காரணம் எனலாம்.

இப்பொழுது கிடைத்துள்ள புதிய வரலாற்று அறிவின் அடிப் படையில், சங்க காலம், அதற்குப் பிற்பட்ட சமய காலம் இவைகளை நாம் ஆராயும்போது, சைவ வைணவ சமயங்களை உருவாக்கிய பக்தி இயக்கத்தின் மூலக்கருவை, ஆரிய சமய வரலாற்றோடு மட்டும் ஒப்பிடுவதுடன் நிறுத்திவிடாது, யவன சமய

வரலாற்றுடனும் ஒப்பிட்டுக் காணுவது இன்றியமையாத தாகின்றது.

இந்த ஆய்வு அத்தகைய ஒப்பிட்டுக் காணும் ஆய்வின், ஒரு தொடக்கமாகவே அமைந்துள்ளது எனலாம்.

விவிலியம், திருக்குறள், சைவசித்தாந்தம் ஆகிய மூன்றும் மிகப் பரந்துபட்ட கடலென விளங்குவனவாகும். இம்மூன்றையும் முழு அளவில் ஒப்பிட்டுக்காண எனக்கிருக்கும் அறிவும் வாழ்நாளும் போதா. முப்பெரும் வைரங்களாக விளங்கும் இம்மூன்றையும் இணைத்து நிற்கும் இழையை மட்டுமே இங்குக் காண முயன் றுள்ளேன். வருங்கால ஆய்வுகளே இதைவிட விளக்கமான ஆழ்ந்த பரந்த உண்மைகளை வெளிப்படுத்தும் என்று நம்புகின்றேன்.

இயேசு பெருமானின் பன்னிரு மாணவர்களில் ஒருவரான தோமா, யவனர்களில் ஒருவராக, இயேசு பெருமானின் நற்செய்தியைச் சங்ககாலத் தமிழகத்தில் பரப்பியமையும், அதன் அடிப்படையில் எழுந்த புதிய சமயக் கருத்துகளின் எழுச்சியும் கி.பி. 16-ம் நூற்றாண்டுக்குப் பின்னர் வணிகத்திற்காக வந்த ஐரோப்பியர்களால் பரப்பப்பட்ட ஐரோப்பிய வழிக் கிறித்தவத்திற்கு ஆதரவாக வந்த வீரமாமுனிவர், ஜி. யு. போப் போன்றவர்களால் உய்த்துணர்ந்த தன்மையும் தொடர்ச்சியும் முதல் இயலில் நோக்கப் படுகின்றன.

திராவிடப் பண்பாட்டோடு தொடர்புடைய 'ஊர்' என்னுமிடத்திலிருந்து புறப்பட்ட ஆபிரகாம் என்பவருடைய பரம் பரையில், எழுந்த யூத இன வரலாற்றில் தோன்றிய யூத சமயத்தின் வரலாறு, யூத சமயத் திருமறையாகிய பழைய ஏற்பாட்டில் பேசப் படுகின்ற தன்மையும், அடிமைத் தளையிலிருந்து தங்களை மீட்கும் இறையரசன் தோன்றுவதற்காக அவர்கள் கொண்டிருந்த எதிர் பார்ப்பும், யூதராகத் தோன்றிய இயேசு கிறித்துவில் நிறைவேறி, அதனால் ஏற்பட்ட உலக மக்களுக்கான நற்செய்தி, உலகம் முழுவதும் பரவத் தொடங்கியதும் இரண்டாம் இயலாகிய 'விவிலிய'த்தில் ஆயப்படுகின்றன.

கிரேக்க மொழியை ஆட்சிமொழியாகக் கொண்ட உரோமர் களின் ஆட்சியின்கீழ் வாழ்ந்த யூதராகிய இயேசுவில் வெளிப்பட்ட நற்செய்தி, சங்க இலக்கியத்தில் கிரேக்க ரோம யூதரைக் குறிக்கும் 'யவனர்' என்ற மக்களின் வழியாகத் தமிழகத்தில் பரவியமை 'யவனர் வழி தமிழகத்தில் கிறிஸ்தவம்' என்னும் தலைப்பில் பார்க்கப்படுகின்றது.

இயற்கை நெறிக் காலமாகிய சங்க காலத்தில் வாழ்ந்த தமிழ் மக்களுக்குச் சமய உணர்வையூட்டி, சமயநெறிக் காலத்தைத் தமிழகத்தில் தோற்றுவித்த பெருமை, சமயம் கலந்த அறநெறி நூலாகிய திருக்குறளுக்கு உண்டு. இது, 'திருக்குறள்' என்னும் தலைப்பின்கீழ் ஆயப்படுகின்றது.

இயல்புடைய மூவராகிய கடவுள், வான், நீத்தாரைக் கூறும் திருக்குறளால் உந்தப்பட்ட பக்தி இயக்கத்தின் கனிகளாக விளங்கும் சைவ வைணவ சமயங்களும், சைவம் உருவாக்கிய பன்னிரு திருமுறை தோன்றித் தொகுக்கப்பட்ட போக்குகளும், அவற்றின் அடிப்படையில் சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு தோன்றியமையும், வேற்றுக் கொள்கையினரால் பன்னிரு திருமுறையும் சித்தாந்த சாத்திரங்களும் ஊடுருவப்பட்டுள்ளமையும், சைவத்தை உருவாக்கியவர்கள் வேற்று மக்களால் கீழாக நோக்கப் பட்ட தன்மையும் 'சைவ சித்தாந்த சாத்திரம்' என்னும் தலைப்பின் கீழ் ஆராயப்படுகின்றன.

விவிலியம், திருக்குறள், சைவ சித்தாந்தம் இவை மூன்றற்கும் தொடர்புடைய புலால் மறுத்தல், பிறவி சுழற்சிக் கோட்பாடு ஆகிய இரண்டும் 'ஒப்பாய்வு-1' என்னும் பகுதியில் ஒப்பு நோக்கப்படு கின்றன.

உலகப் படைப்பு, வீழ்ச்சி, குருவாதல், தவத்தினில் உணர்த் தல், மீட்பு, திருக்கூட்டம், முக்தி போன்ற சமய அடிப்படை உண்மைகள் மூன்றுடனும் ஒப்பிட்டுப் பார்க்கப்படுகின்றன.

இவ்வாய்வின் விளைவாகப் புலப்படுத்தப்பட்டுள்ள புதிய செய்திகள் :

1. திராவிடப் பண்புடன் கூடிய ஆபிரகாமின் வழி வந்த கோயில் வழிபாட்டுச் சமயங்களாக வளர்ச்சியடைந்த யூத கிறித்தவ சமயங்களின் அடிப்படையில் தமிழகத்தில் எழுந்த இயக்கமே பக்தி இயக்கமாகும்.

2. பக்தி இயக்கத்தின் பயனாகத் தோன்றிய தமிழ்ச் சமயங் களாகிய சைவமும் வைணவமும், ஆரிய வைதிகத்தி லிருந்து எழுந்த சமயங்கள் அல்ல.

3. சைவ தத்துவங்களாகிய அத்வைதமும் சைவசித்தாந்தமும் வைணவத் தத்துவங்களாகிய விசிட்டாத்வைதமும் துவை தமும் திராவிட மக்களிடையே தோன்றியவை. அவை ஆரிய வைதீக சமயங்களிலிருந்து உருவானவை அல்ல.

4. ஆதிக் கிறித்தவத்தின் அடிப்படையிலெழுந்த திராவிடச் சான்றோர்களாகிய சைவசித்தாந்த நூலாசிரியர்களும் சித்தர்களும் ஆரிய வைதீகத்தை எதிர்த்தமையால் இழிவு படுத்தப்பட்டுள்ளனர்.

5. சங்க இலக்கியங்களில் காணப்படும் யவனர்களின் வழி வந்தவர்களே இன்றும் நம்மிடையே உள்ள சீரியக் கிறித்த வர்கள். இடைக்காலத்தில் இவர்களுக்குத் தனி நாடு இருந்தது. தன்னாட்சி உரிமையுடன் விளங்கினார்கள்.

6. கிறித்தவம் கி.பி. 16-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் தமிழகத்தில் பரவிய சமயமன்று. இந்தியாவில் பிற்கால ஐரோப்பிய வழிக் கிறித்தவம், இந்திய மக்களிடையே செல்வாக்குப் பெறவியலாமைக்கு, இந்தியாவில் பரவி யிருந்த ஆதி கிறித்தவத்தை அது அறியாமலும் புரியா மலும் உணராமலும் புறக்கணித்தமையே காரணமாகும்.

7. திருக்குறளில் புதிராய் இருந்துவந்த பாயிர அமைப்பு முறையும் ஐந்தவித்தான், வான், நீத்தார், இயல்புடைய மூவர் போன்ற சொற்றொடர்களும் புதிர் நீங்கித் தெளிவு பெற்றுள்ளன.

8. தோமா தமிழகத்திற்கு வந்து ஆற்றியுள்ள சிறப்புத் தொண்டுகள், வரலாற்று விளக்கத்துடன் புலப்படுத்தப் பட்டுள்ளன.

9. மயிலாப்பூரிலுள்ள தோமா புதைக்கப்பட்ட இடம், தமிழ கத்திலுள்ள ஆதி கிறித்தவர்களுக்கும் பிற்காலக் கிறித்த வர்களுக்கும் இடையேயுள்ள தொடர்பை இணைக்கும் பாலமாக விளங்கிக்கொண்டிருக்கிறது.

# குறுக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அக. | — | அகநானூறு |
| அப். | — | அப்போஸ்தலர் பணி |
| 1 அரசர் | — | 1 அரசர்கள் |
| 2 அரசர் | — | 2 அரசர்கள் |
| அரு. | — | அருளப்பர் |
| ஆதி. | — | ஆதி ஆகமம் |
| உப. | — | உப ஆகமம் |
| எண். | — | எண்ணாகமம் |
| எரே. | — | எரேமியா |
| எஸ்தர் | — | எஸ்தர் ஆகமம் |
| ஏசா. | — | ஏசாயா |
| சங். | — | சங்கத்திருவுரை ஆகமம் |
| 1 சாமு. | — | 1 சாமுவேல் ஆகமம் |
| 2 சாமு. | — | 2 சாமுவேல் ஆகமம் |
| 1 தின. | — | 1 தினவர்த்தமானம் (நாளாகமம்) |
| 1 நாளா. | — | 1 நாளாகமம் (1 தினவர்த்தமானம்) |
| 2 நாளா. | — | 2 நாளாகமம் (2 தினவர்த்தமானம்) |
| நியா. | — | நியாயாதிபதிகள் |
| நெகே. | — | நெகேமியா |
| ப. | — | பக்கம் |
| பக். | — | பக்கங்கள் |
| புல. | — | புலம்பல் ஆகமம் |
| புற. | — | புறநானூறு |
| பெரு. | — | பெரும்பாணாற்றுப்படை |
| மத். | — | புனித மத்தேயு |
| யாத். | — | யாத்திராகமம் |
| யோசு. | — | யோசுவா |
| லூக். | | புனித லூக்காஸ். |
| நற். | — | நற்றிணை |
| ( ) | — | இக்குறியீட்டுக்குள் உள்ள எண்கள் திருக்குறளின் எண்களைக் குறிக்கும். |
| கலி. | — | கலித்தொகை |

# 1. தோற்றுவாய்

ஆசியாக் கண்டத்தின் மேல்கோடிப் பகுதியாகிய பாலத் தீனத்தில் தோன்றிய கிறித்தவ சமயத் திருமறையாக விளங்கும் விவிலியத்தையும், ஆசியாக் கண்டத்தின் தென்கோடிப் பகுதியைச் சார்ந்த தமிழகத்தில் எழுந்த திருக்குறளையும், தமிழர் சமயமாகக் கருதப்படும் சைவசமயத்தின் தத்துவ நூல்களாகிய சித்தாந்த சாத் திரங்கள் பதினான்கையும் ஒப்பிட்டுப் புதிய உண்மைகளைக் காணுவது இவ்வாய்வின் நோக்கம்.

கிறித்தவ சமயம் தோன்றுவதற்குக் காரணரான இயேசு கிறித்துவின் உயிர்த்தெழுதலுக்குப் பின்னர், அவருடைய மாணவர் களுக்கு அவர் கொடுத்த கட்டளையாகிய 'உலகெங்கும் போய்ப் படைப்பிற்கெல்லாம் நற்செய்தியை அறிவியுங்கள்' (மாற்கு 16:15) என்ற திருவாக்கின்படி, அவருடைய மாணவர்கள் உலகெங்கும் பரவி, அவருடைய நற்செய்தியை அறிவித்ததாக நம்பப்படுகிறது.

இயேசு கிறித்துவின் பன்னிரு மாணவர்களில் ஒருவரான தோமா என்பவர், கி.பி. 52 முதல் கி.பி. 72 வரை தமிழகத்தில் நற்செய்திப் பணியாற்றி, மயிலாப்பூரில் கொலையுண்டார் என்பது, ஐரோப்பியர்கள் வருகைக்கு முன்னர் இந்தியாவில் வழிவழியாக வாழ்ந்துவந்த நசரானியர் எனப்பட்ட சீரியக் கிறித்தவர்களின் நம்பிக்கை.

"ஐரோப்பிய நாடுகளுக்குக் கிறித்தவம் சென்று பரவுவதற்கு முன்னரே, தோமா இந்தியாவிற்கு வந்து கிறித்தவத்தைப் பரப் பினார் என்பதும், ஐரோப்பிய நாடுகளைவிட இந்தியா நீண்ட கிறித்தவ வரலாற்றையும், உயர்ந்த கிறித்தவப் பாரம்பரியத்தை யும் கொண்டதாக அமைந்திருப்பது இந்தியர்களுக்குப் பெருமை தரத்தக்கது என்பதும் இராஜேந்திரபிரசாத்தின் கருத்து."[1]

---

1. "Remember St. Thomas came to India when many of the countries of Europe had not yet become Christian, and so, those Indians who trace their Christianity to him have a longer history and a higher ancestry than that of Christians of many of the European Countries. And it is really a matter of pride to us that it so happened."

—The Syrian Christians of Kerala, S. G. Pothan, Asia Publishing House, Madras, 1963, P. 1.

"பேதுருவும் பவுலும் மேற்கத்திய நாடுகளில் நிலைநாட்டிய கிறித்தவத்தைவிட, இந்தியாவில் தோமாவால் ஏற்படுத்தப்பட்ட கிறித்தவம் தனித்தன்மை வாய்ந்தது என்பதும், கிறித்தவத்தின் தொடக்கக் கால முதலே இந்தியாவின் மேற்குக் கரையில் பரவிய கிறித்தவம், இந்தியர்களால் சிறந்த முறையில் நடத்தப்பட்டு உள்ளது என்பதும், இந்திய அரசர்கள் கிறித்தவக் கோயில்களைக் கட்டிக் கொடுத்திருக்கின்றார்கள் என்பதும் இராதாகிருஷ்ணனின் கருத்து."[2]

"இங்கிலாந்திலும் ஐரோப்பாவிலும் ஏன் உரோமிலுங்கூடக் கிறித்தவம் வேரூன்றுவதற்கு முன்னர் இந்தியாவில் கிறித்தவம் பரவியுள்ளது எனவும், இந்திய மக்கள் பெருமளவில் அதை ஏற்றனர் எனவும் ஜவஹர்லால் நேரு கூறியுள்ளார்."[3]

திருக்குறளை எழுதிய திருவள்ளுவர், தோமா இறந்த மயிலாப்பூரில் வாழ்ந்து மறைந்தவர் என்னும் செய்தியும், சைவ சித்தாந்த சாத்திரங்களை எழுதிய பெரியோர்கள் மயிலாப்பூரைத்

---

2. "Christianity has flourished in India from the beginning of the Christian era. The Syrian Christians of Malabar believe that their form of Christianity is Apostolic derived directly from the Apostle Thomas. They contend that their version of the Christian faith is distinctive and independent of the forms established by St. Peter and St. Paul in the West. What is obvious is that there have been Christians in the West Coast of India from very early times. They were treated with great respect by the Hindus, whose princes built for them Churches."

-Dr.S. Radha Krishnan in 'East and West in Religion'; 1958, Quoted by: S. G. Pothan — 'The Syrian Christians of Kerala,' Asia Publishing House, Madras, P. 3.

3. "You may be surprised to learn that Christianity came to India long before it went to England or Western Europe, and when even in Rome it was a despised and prescribed sect-within hundred years or so of the death of Jesus, Christian Missionaries came to South India by sea. They were received courteously and permitted to preach their new faith. They converted a large number of people, and their descendants have lived there, with varying fortunes, to this day. Most of them belong to Old Christian sects which have ceased to exist in Europe."

-Jawaharlal Nehru in "Glimpses of world History"—1934, Quoted by Pothan, 'The Syrian Christians of Kerala,' Asia Publishing House, Madras, 1963, P. 3.

தன்னகத்தே கொண்ட சோழ நாட்டில் வாழ்ந்தவர்கள் என்ற செய்தியும் வழிவழியாக நிலவி வருகின்றன.

கிறித்தவ சமயம் தோன்றக் காரணரான இயேசுவுக்குக் 'கிறிஸ்து' என்னும் கிரேக்கப் பெயர் ஏற்பட்டுப் பரவுவதற்கும், இயேசுவின் அடியவர்களுக்கு 'கிறிஸ்தவர்கள்' என்னும் கிரேக்கப் பெயர் உருவாவதற்கும், விவிலியத்தின் கிறித்தவப் பகுதியாகிய புதிய ஏற்பாடு எழுதப்படுவதற்கும் முன்னரே, தோமா தமிழகத்திற்கு வந்து நற்செய்திப் பணியாற்றியுள்ளார் எனத் தெரிகிறது.

திருக்குறள் கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் தோன்றிய நூல் என்னும் கருத்து ஏற்றுக்கொள்ளப்படுமாயின், திருக்குறளும் தமிழில் தோன்றிய சைவ வைணவ சமய இலக்கியங்களும், சைவ சித்தாந்த சாத்திரங்களும் தோன்றுவதற்கு முன்னர், இயேசு பெருமானின் நற்செய்தியைத் தமிழகம் அறியும் வாய்ப்பைப் பெற்றிருந்தது எனலாம்.

ஐரோப்பியர் வருகைக்குப் பின்னரே இந்தியப் பெருநாட்டின் ஒரு பகுதியாகத் தமிழகம் இணைக்கப்பட்டது. ஐரோப்பியருக்கு முன்னர் தமிழகத்தை இந்தியாவுடன் இணைத்து ஆண்ட அரசர் எவருமிலர்.

தமிழகம் இந்தியாவோடு இணைக்கப்படுவதற்கு முன்னரும், தமிழ் மக்கள் இந்தியர்கள் என அறியப்படுவதற்கு முன்னரும், தமிழகச் சமயங்கள் இந்தியச் சமயங்கள் என்னும் பொருளில் இந்து சமயத்தோடு இணைந்தவை என எண்ணப்படுவதற்கு முன்னரும் தமிழகத்தில் எழுந்து செல்வாக்குப் பெற்றவை திருக்குறளும் சைவ இலக்கியங்களுமாகும்.

ஆகவே, இன்று நாம் பயன்படுத்தும் 'கிறித்தவ சமயம்,' 'இந்து சமயம்' என்னும் பெயர்கள் ஐரோப்பியர் வருகைக்கு முற்பட்ட தமிழகம் அறியாதவை.

தோமாவால் தமிழகத்தில் அறிவிக்கப்பட்ட சமயமும், அதன் செல்வாக்கால் தமிழகத்தில் எழுந்த பிற்கால சமயங்களும் 'கிறித்தவம்' என்னும் பெயரையோ, 'இந்து' என்னும் பெயரையோ அறியாதவை.

சங்க இலக்கியங்களில் சிவன், சைவம், விஷ்ணு, வைணவம் முதலிய பெயர்கள் காணப்படவில்லை. பிற்காலத் தமிழ் இலக்கியங்களிலேயே இவை தோற்றம் பெற்றன.

இயற்கை நெறிக் காலத்தில் வாழ்ந்துகொண்டிருந்த தமிழ் மக்களுக்குத் தோமா, இயேசுவின் நற்செய்தியை அறிவித்துள்ளார்.

தோமாவின் நற்செய்தியைத் தமிழகத்தில் இயற்கை நெறிக் காலத்திற்குப் பின்னர் எழுந்த, அறநெறிக் கால இலக்கியங்களும் சமய நெறிக்கால இலக்கியங்களும் தத்துவ நெறிக்கால இலக்கியங்களும் வெளிப்படுத்துகின்றனவா என்பதைக் காண இவ்வாய்வு முயல்கிறது.

கி.பி. 16-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர், வாணிகம் செய்து பொருளீட்டுவதற்காக இந்தியாவுக்கு வந்த ஐரோப்பியர்கள், கிறித்தவத்தைப் பரப்பிய முறைக்கும், கி.பி. முதல் நூற்றாண்டில் இயேசுவின் கட்டளையை ஏற்றுத் தனி ஆளாய்த் தமிழகத்திற்கு வந்த தோமா, இயேசுவின் நற்செய்தியைப் பரப்பிய முறைக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு.

புதிய ஏற்பாட்டின் பெரும்பகுதி நூல்களை எழுதிய பவுல், இயேசுவின் செய்தியைப் பரப்புவதற்குக் கையாண்ட முறையையே, தோமாவும் தமிழகத்தில் கையாண்டிருத்தல் வேண்டும்.

பவுல், யூதர்களுக்கு யூதப் பண்பாட்டின் அடிப்படையிலும், கிரேக்கர்களுக்குக் கிரேக்கப் பண்பாட்டின் அடிப்படையிலும், மற்றவர்களுக்கு அவரவருடைய பண்பாட்டின் அடிப்படையிலும் இயேசுவின் நற்செய்தியை அறிவித்தார் என்பது, ''எல்லார்க்கும் எல்லாம் ஆனேன்'' (1 கொரி. 9:19-23) என்பதால் விளங்குகிறது. இதைப் போன்றே, தோமாவும் தமிழகத்திலும் அதைச் சுற்றிலும் வாழ்ந்த திராவிட மக்களுக்குத் திராவிடப் பண்பாட்டின் அடிப்படையில், தாம் ஒரு திராவிடனாக வாழ்ந்து, இயேசுவின் நற்செய்தியைப் பரப்பியிருத்தல் வேண்டும்.

ஆரிய நாகரிகம், திராவிட நாகரிகம் என இரு பிரிவுகளாக இந்திய நாகரிகம் பிரித்து நோக்கப்படுகிறது. கி. பி. முதல் நூற்றாண்டில் தமிழகத்தில் பரவிய இயேசுவின் நற்செய்தி, திராவிட நாகரிக வளர்ச்சிக்கு ஓர் உந்து சக்தியாக அமைந்திருத்தல் வேண்டும்.

கி. பி. 16-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் படை, பணம், அதிகாரம் இவைகளின் துணைகொண்டு ஐரோப்பியர்களால் பரப்பப்பட்ட கிறித்தவம், திராவிடப் பண்பிற்கும் இந்தியப் பண்பிற்கும் முற்றிலும் மாறுபட்ட ஐரோப்பியப் பண்பாடு உடையதாக உருவாக்கப்பட்டது. இதனால், இந்திய மக்களால் அஃது ஓர் அந்நிய நாட்டுச் சமயமாகக் கருதப்பட்டு வருகிறது.

தத்துவப் போதகர் எனப்பட்ட இராபர்ட் டி. நோபிலி, வீரமாமுனிவர் எனப்பட்ட கான்ஸ்டான்டைன் ஜோசப் பெஸ்கி போன்றோர் இந்தியப் பண்பாட்டோடிணைந்து, கிறித்தவத்தைப் பரப்ப முயற்சியெடுத்த போதிலும், மற்ற ஐரோப்பியர்களால் அம்முயற்சிகள் யாவும் முறியடிக்கப்பட்டுவிட்டன.

## திராவிட சமயம்

திராவிட மக்கள் மத்தியில், திராவிடப் பண்பாட்டுடன் வளர்ந்த இயேசுவின் நற்செய்தியாகிய சமயம், முற்காலத்தில் 'திராவிட சமயம்' எனவும், ஐரோப்பியர்களாகிய மேல்நாட்டார் பண்பாட்டின் அடிப்படையில் இந்தியாவில் பரவிய இயேசுவின் நற்செய்தியாகிய சமயம், பிற்காலத்தில் 'ஐரோப்பியச் சமயம்,' 'மேல்நாட்டுச் சமயம்' எனவும் எண்ணப்படும் நிலையில் உள்ளன.

இன்று 'கிறித்தவ சமயம்' என்பது பிற்கால ஐரோப்பியப் பண்பாட்டையுடைய 'மேல்நாட்டுச் சமயம்' என எண்ணப்படுகிறது. தமிழகத்தில் திராவிடப் பண்பாட்டின் அடிப்படையில் வேரூன்றிய 'திராவிட சமயம்' என்னும் நோக்கில், முற்காலக் கிறித்தவத்தைப் பார்ப்பார் எவரும் இலர் என்றே கூறலாம்.

திராவிடர் சமயம் எனினும், தமிழர் சமயம் எனினும் பொருள் ஒன்றே எனலாம். ஏனெனில், திராவிட மக்களில், வேறு பண்பாட்டுக் கலப்போ மொழிக் கலப்போ இல்லாமல் வாழ முயலுபவர்களுள் தமிழர் தலைசிறந்து விளங்குகின்றனர்.

தமிழகம் நீண்ட நெடுங்காலமாகவே அயல் நாடுகளுடன் வாணிகத் தொடர்பு கொண்டுள்ளது. வணிகத்திற்காகத் தமிழகத்திற்கு வந்த கிரேக்கர், உரோமர், யூதர், சீரியர் போன்றோர் தமிழகப் பெரு நகரங்களில் தங்கி வாழ்ந்து வந்தனர். தமிழ் இலக்கியங்களில் அவர்கள் 'யவனர்' என்னும் பெயரால் குறிக்கப்படுகின்றனர்.

சீரியாக் மொழியைத் தங்கள் வழிபாட்டு மொழியாகக் கொண்ட இயேசுவின் அடியவர்கள், வழிவழியாகத் தமிழகத்தில் வாழ்ந்து வந்துள்ளனர். அவர்கள் ஐரோப்பியர் வருகைக்குப் பின்னர், சீரியக் கிறித்தவர்கள் என அறியப்படலாயினர். தமிழ் இலக்கியம் குறிப்பிடும் 'யவனர்' என்னும் பெயரில் இவர்களும் அடங்குவர்.

தமிழகத்தில் வாழ்ந்துவந்த தமிழ் மக்களின் பண்பாடு, வழிபாட்டு முறை, மொழி முதலியனவற்றிற்கும், தமிழகத்தில் வழிவழியாக வாழ்ந்துவந்த சீரியர்களின் பண்பாடு, வழிபாடு, மொழி முதலியனவற்றிற்கும், தமிழகத்திற்குப் பிற்காலத்தில் வந்த ஐரோப்பியர்களின் பண்பாடு, வழிபாடு, மொழி முதலியன வற்றிற்கும் மிகுந்த வேறுபாடுகள் உள. எனினும், இம் மூவகைப்பட்ட மக்களின் சமயக் கொள்கையில் அடிப்படையில் இணைப்புகள் காணப்படுகின்றன.

தமிழர்களும் சீரியர்களும் அருகருகே வாழ்ந்த போதிலும், சீரியர்களின் தலைமை இடம் பாரசீகத்தில் இருந்தமையால், சமயக் கொள்கைகளை அவர்கள் வெளிநாட்டிலிருந்து பெறவேண்டியவர் களானார்கள். ஆயினும், இங்குள்ள மற்ற மக்களோடு நெருங்கி வாழ்ந்து வந்தனர் எனலாம்.

தமிழ் மக்கள், ஐரோப்பியர் வருகைக்கு முன்னர் இந்தியர் என வழங்கப்படாவிடினும், ஐரோப்பியர் வருகைக்குப் பின்னர் இந்தியா வுடன் தமிழ்நாடு இணைக்கப்பட்டு இந்தியர்கள், இந்துக்கள் முதலான பெயர்களைப் பெற்றனர்.

ஐரோப்பியர்களும் இசுலாமியர்களும் வருவதற்கு முன்னர், இந்தியாவில் வழிவழியாக வாழ்ந்துவந்த ஆரிய திராவிட மக்கள் பின்பற்றிய சமயங்கள் எல்லாவற்றையும் மொத்தமாகச் சேர்த்து, அவைகளுக்கு ஒரு புதுப்பெயரைப் பின்னர் வந்தவர்கள் ஏற்படுத்தினர். அதுவே 'இந்திய மக்களின் சமயம்' என்பதன் சுருக்கமான 'இந்து சமயம்' என்பதாகும்.

''சிந்து நதிக்கரையில் இருந்தவர்களை ஹிந்துக்கள் என்று பாரசீகர் அழைத்தனர். அவர்களை இந்துக்கள் என்று கிரேக்கர்கள் கூறினர். இந்துக்கள் என்ற பெயரிலிருந்தே இந்தியா என்ற பெயர் ஏற்பட்டது. இந்திய நாட்டில் உள்ள பூர்வீக மக்கள்

ஐரோப்பாக் கண்டத்தாரால் இந்துக்கள் என்று அழைக்கப்பட்டனர். இந்துக்களுக்குள் பல மதங்கள் இருப்பதை அறியாத மேலை நாட்டினர், இந்துக்கள் எல்லாருக்கும் ஒரு மதம் இருப்பதாக எண்ணி, இந்துமதம் என்ற பெயரைத் தோற்றுவித்தனர்.

இந்துமதம் என்னும் பெயர் தமிழிலாவது வடமொழியிலாவது உள்ள பண்டை நூல்களில் காணப்படவில்லை. இக்காலத்தில் வடமொழி வேதத்தைப் பிரமாணமாகக் கொண்ட வைதிகர்கள், தங்கள் மதமே இந்துமதம் என்று பேசுபவராய், அம்மதமே இந்திய நாட்டிலுள்ள எல்லா மக்களுக்கும் உரிய மதம் என்று நிலைநாட்ட முன் வந்துள்ளார்கள். ஆங்கில மதம், சப்பானிய மதம், அமெரிக்க மதம் என்று மதங்கள் இருக்குமாயின், இந்துமதம் என்று ஒரு மதமும் உண்டாகலாம். அவை இலவாதல் போல, இந்துமதம் என்று ஒரு மதமும் இல்லை. வேதத்தையும் ஸ்மிருதியையும் பிரமாணமாகக் கொண்ட மதமே இந்துமதம் என்றால், அது இந்தியாவிலுள்ள பல மதங்களில் ஒரு மதமாகுமேயன்றி, அது இந்தியர் எல்லார்க்கும் உரிய பொது மதமாகாது''[4] என்பார் கா. சுப்பிரமணிய பிள்ளை.

வைதிகம், சமணம், பௌத்தம், சைவம், வைணவம் போன்ற பல்வேறு இந்தியச் சமயங்களின் கொள்கைகள் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையாயிருப்பினும், இவையெல்லாவற்றுக்கும் மொத்தமாகக் கொடுக்கப்பட்ட பொதுப்பெயரே 'இந்து சமயம்' என்பது ஆகும்.

கி.பி. முதல் நூற்றாண்டு முதலே, தமிழகத்தில் இயேசுவின் நற்செய்தி அறிவிக்கப்பட்டு வந்துள்ளது என்பதும், தமிழ் அல்லது திராவிடப் பண்பாட்டில் அந்நற்செய்தியின் பயனாக உருவான திராவிட சமயம், ஐரோப்பியர் - இசுலாமியர் வருகைக்கு முற்பட்ட சமயமாகையால், அதனைப் பின்னர் வந்தவர்கள் இந்து சமயத் தொகுப்பினுள் அடக்கியுள்ளனர் என்பதும் நினைவில் கொள்ளத் தக்க குறிப்புகள் ஆகும்.

ஆகவே, தமிழக - திராவிடப் பண்பாட்டில் எழுந்த, ஐரோப்பியர் வருகைக்கு முற்பட்ட இயேசுவின் நற்செய்தி (திராவிட சமயம்), இன்று 'இந்து சமயம்' என்று சொல்லப்படுகின்ற தொகுப்பினுள் அடக்கப்பட்டுள்ளது என்பதில் ஐயமில்லை.

---

4. கா. சுப்பிரமணிய பிள்ளை — *தமிழர் சமயம்*, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1971, பக். 89-90.

இந்து சமயக் கொள்கைகளை ஆராய்ந்த அறிஞர்கள் வெளியிட்டுள்ள கீழ்க்காணும் கருத்துகள், எண்ணிப் பார்க்கத் தக்கன.

''இந்துமதக் கருத்துகள் என்பவை, ஆரிய நாகரிகம் அல்லது வேத நாகரிகத்திலிருந்து வளர்ந்த எளிய வளர்ச்சிகள் அல்ல என்பதை உறுதியாகக் கூற இயலும். ஆரியச் சார்பு அற்ற, அல்லது வேதச் சார்பு இல்லாத மூலக் கருத்துகள் இவ்வளர்ச்சிக்குத் துணை புரிந்தவற்றைத் திராவிடக் கருத்துகள் என விவரிக்கப்படும். இந்து மதக் கருத்துகளுக்குள்ளும், வேதச் சார்பில்லாதவைகளுக்குள்ளும் மிக முக்கியமானவை திராவிட மூலக் கருத்துகளே.''[5]

''வேதத்தின் மூல பாடங்களிலிருந்து விரிந்தவை என்று காட்டுவதற்கு, வேதத்தில் அறிகுறி காணாதவைகளை, இந்தியக் கருத்துகளிலிருந்து நாம் குறிப்பிட்டுப் பிரிக்கலாம். அவ்வாறு பிரித்தவற்றைத் திராவிடச் சார்புடையன என விரிந்த பொருளில் கருதலாம்.''[6]

''வேத நூல்களுக்கு மாறுபட்ட புது நூல்கள் இந்துமதத்தில் எழுந்தன. இவை கோயில் வழிபாட்டை உடைய ஆகமங்கள் ஆகும்.''[7]

''கி.பி. 5-ஆம் நூற்றாண்டுக்கும் 7-ஆம் நூற்றாண்டுக்கும் இடையில் ஆகமங்கள் தோன்றியிருக்கலாம் என்பர் இக்கால ஆராய்ச்சியாளர்.''[8]

''ஏறக்குறைய சைவ சமயத்தின் எல்லாத் தெய்வங்களும் வேதத் தெய்வங்கள் அல்ல. அவை திராவிடத் தெய்வங்கள் என ஒப்புக்கொள்ளப்படுகின்றன.''[9]

---

5. இராதாகிருஷ்ணன், பதிப்பாசிரியர் குழுத் தலைவர், ஸி. குன்ஹன் இராஜா, சென்னைப் பல்கலைக் கழகம், கட்டுரை ஆசிரியர், ''கீழை மேலை நாடுகளின் மெய்ப்பொருளியல் வரலாறு'' இந்திய அரசாங்கக் கல்வி அமைச்சகம், தமிழ் மொழிபெயர்ப்பு—அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1970, ப. 33.

6. மேற்படி, ப. 34.

7. மேற்படி, ப. 42.

8. அ. வேலுப்பிள்ளை, 'தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்' சென்னை, 1969, ப. 119.

9. அடிக்குறிப்பு 5-இல் பக்கம் 35.

''தென் இந்திய மொழிகள், வேதத் தொடர்பில்லாத சமயங்களின் உயரிய நோக்கங்களைக் குறித்துப் பல நூல்களை வளரச் செய்தன என்று சுட்டிக் காட்டலாம். வேதத்தின் பகுதிகளாக ஒப்புக்கொள்ளாமல், தங்கள் மூலபாடங்கள் தனி உரிமையுள்ளன என்று காட்டும் சைவ சித்தாந்த முறைகளும் வைணவ மதத்தின் சில பகுதிகளும் உள்ளன.''[10]

''பௌத்த மதத்திலிருந்தும் ஜைன மதத்திலிருந்தும் அரசர்களை மீண்டும் இந்துமதத்தில் நாயன்மார்கள் சேர்த்தனர். ஆனால், அவர்களை வேத மதத்தில் சேர்த்தார்கள் என்று சொல்ல இயலாது.''[11]

''சங்கரருடைய ஒருமைக் கொள்கை உபநிடதங்களிலிருந்து தோன்றியதாகலாம். ஆனால், அவருடைய கடவுட் கொள்கை வேதத்தைச் சார்ந்தது அன்று. இராமானுசர், மாத்வர் இவர்களின் முறைகளில் மூலபாடங்கள் வேதத்திலிருந்து எடுக்கப்பட்டவை. அவற்றிற்கு அவர்கள் கூறும் பொருள்கள் எல்லாம், பிற்காலக் கோயில் வழிபாட்டுச் சமயத்தையும் ஆகமங்களையும் அடிப்படையாகக் கொண்டவை. மூன்றடி அளந்தவராக வேதத்தில் கூறப்படும் விஷ்ணுவிற்கும், பிற்கால இந்துமத விஷ்ணுவிற்கும் பொதுவாக உள்ள பெயர் ஒன்றே; சிவன் உருத்திரன் என்ற பெயரின் மற்றொரு பொருளாகத் தொடர்ந்ததேயன்றி, வேத உருத்திரனுக்கும் பிற்காலச் சிவனுக்கும் ஒப்புமையில்லை.''[12]

''சிவனும் விஷ்ணுவும், மிகவும் தனித்தன்மையும் தனிப்பட்ட உருவமும் ஏற்று, இந்துக் கருத்தில் மிக உயர்ந்த இடத்தைப் பெற்றனர். சேஷன் என்னும் பாம்பின் உடற்சுருள்மேல் திருமகள், நிலமகள் என்னும் இரு மனைவியுடன் விஷ்ணு பள்ளிகொண்டிருப்பதும், அவர் காத்தல் தொழிலைப் புரிவதும் வேதத்திற்காணும் தெய்வக் கருத்திலிருந்து பெற முடிந்தவை ஆகா. இக்கருத்தே சிவனைப் பற்றியும் பொருந்தும்.''[13]

---

10. மேற்படி, ப. 43.

11. மேற்படி, ப. 42.

12. மேற்படி, ப. 43.

13. மேற்படி, ப. 41.

"வேத காலத்திற்குப் பிற்பட்ட இந்து சமய வளர்ச்சியில் வேத காலக் கடவுளர்கள் முக்கியமிழந்துவிடுகின்றனர். இந்திரன், வருணன், மித்திரன், பிரஜாபதி, மத்தரிசுவன் முதலிய கடவுளர்கள், முதலிடம் இழந்து பின் வரிசையில் காணப்படுகின்றனர். சிவன், விஷ்ணு, பிரம்மா, சக்தி முதலிய புதிய தெய்வங்கள் நமது மதிப்பையும் கவனத்தையும் கவருகின்றனர்."[14]

"இந்திரன், வருணன், சூரியன் முதலிய வேதகாலத் தெய்வங்கள், அக்காலத்திலே (சம்பந்தர் காலத்தில்) தம் சிறப்பை இழக்க, அவர்களுக்குப் பதிலாய் மும்மூர்த்திகளாகக் கடவுளை அமைத்து வழிபடும் முறை தோன்றியது."[15]

மேலே கண்ட குறிப்புகள் கி.பி. முதல் நூற்றாண்டில் தோமையர் வரவுக்குப் பின்னரும், கி. பி. 15-ஆம் நூற்றாண்டில் ஐரோப்பியர்கள் வருவதற்கு முன்னரும் உள்ள இடைக்காலத்தில், தமிழ்நாடு உள்ளிட்ட திராவிட நாட்டில் பெருகிய கருத்துகளைக் கூறுகின்றன. அவைகளைத் தொகுத்து நோக்கினால், கீழ்க் காணுமாறு அமைகின்றன:

1. ஆரியச் சார்பு அற்ற அல்லது வேதச் சார்பு இல்லா மூலக் கருத்துகளின் தோற்றம்.

2. வேதத்தின் மூல பாடங்களிலிருந்து விரிந்தவை என்று காட்டுவதற்கு, வேதத்தில் அறிகுறி காணாத கருத்துகளின் தோற்றம்.

3. வேதத்திற்கு மாறுபட்ட புது நூல்களின் (ஆகமங்கள்) தோற்றம்.

4. வேதத்திற்கு மாறுபட்ட கோயில் வழிபாட்டின் தோற்றம்.

5. வேதத் தொடர்பில்லாத சைவ வைணவ சமயங்களின் தோற்றம்.

6. வேத மதத்தைச் சேராத நாயன்மார்கள், ஆழ்வார்களின் தோற்றம்.

---

14. கைலாசபதி, 'பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்' மக்கள் வெளியீடு, *1978*, ப. *18*.

15. அ. வேலுப்பிள்ளை, 'தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்' ப. *83*.

7. வேதத்துக்கு மாறுபட்ட பொருளையுடைய சங்கரர், இராமானுசர், மாத்வர் இவர்களுடைய கொள்கை விளக்கங்களின் தோற்றம்.

8. வேதக் கடவுளர்க்கு மாறுபட்ட சிவன், விஷ்ணு, பிரம்மா, சக்தி ஆகிய கடவுள் பெயர்களின் தோற்றம்.

9. வேதத் தெய்வங்களுக்குப் பதிலாக மும்மூர்த்தியாகக் கடவுளை அமைத்து வழிபடும் வழிபாட்டின் தோற்றம்.

மேலே கண்ட குறிப்புகளிலிருந்து ஆகமங்களையும், கோயில் வழிபாட்டுக் கொள்கைகளையும் அடிப்படையாகக் கொண்டு, தமிழக நாயன்மார், ஆழ்வார்கள் இவர்களால் வளர்க்கப்பட்ட— மும்மூர்த்தியாகக் கடவுளை அமைத்து வழிபடும் சைவம், வைணவம் ஆகிய பக்தி இயக்க சமயங்களும், திராவிடமொழி பேசப்படும் இடங்களில் தோன்றி வளர்ந்த சங்கரர், இராமானுசர், மாத்வர் ஆகிய மூவரும் விளக்கும் கருத்துகளும், ஆரிய நாகரிகத்திலிருந்து தோன்றிய நான்கு வேதங்களையுடைய வைதிக சமயத்திற்கு மாறுபட்ட திராவிடக் கருத்துகளாக விளங்குகின்றன என்பது பெறப்படுகிறது.

அத்வைதம், விசிட்டாத்வைதம், துவைதம், சைவ சித்தாந்தம் ஆகிய நான்கு தத்துவங்களையும் உருவாக்கிய சங்கரர், இராமானுசர், மாத்வர், மெய்கண்டார் ஆகிய நால்வரில், சங்கரரும் மெய்கண்டாரும் சைவ சமயத்தையும், இராமானுசரும் மாத்வரும் வைணவ சமயத்தையும் சார்ந்தவர்கள் ஆவர்.

சைவமும் வைணவமும் ஆரியத்திற்கு மாறுபட்ட திராவிட மூலக் கருத்துகளை அடிப்படையாகக் கொண்டவை.

### திராவிட மூலக்கருத்தில் மும்மூர்த்தி வழிபாடு

கடவுளை மும்மூர்த்திகளாக அமைத்து வழிபடும் முறை, பக்தி இயக்கக் காலத்தில் முழு உருவம் பெற்றுச் சைவ வைணவ சமயங்களாக மலர்ந்தது.

'வெறுமையிலிருந்து எதுவும் தோன்றுவதில்லை' என்பதற்கு இணங்க மும்மூர்த்திகளாகக் கடவுளை அமைத்து வழிபடும் முறை, தமிழகத்தில் பக்தி இயக்கக் காலத்தில் தோன்றுவதற்குத் தகுந்த பின்னணி இருந்திருத்தல் வேண்டும். இயற்கை நெறிக் காலத்தில் தமிழகத்தில் தோன்றிய சங்க இலக்கியங்களில் காணப்படும்

திராவிட வழிபாட்டு முறைகளில் 'நடுகல் அல்லது தெய்வமு மில்லை'[16] என்னும் கோட்பாடு காணப்படுகிறது.

கிறித்துவுக்கு முற்பட்ட பழந்திராவிட நாகரிகத்தில், வளர்ச்சி யடைந்த ஓரிறைக் கோட்பாடுடைய சமயத்தை, நாம் காண இயல வில்லை. தமிழக இலக்கிய வரலாற்றிலும், சமயக் கருத்துகளிலும் சமய இலக்கியங்களை அறநெறிக் காலத்திற்குப் பின்னரே நாம் காண நேரிடுகின்றது. இயற்கை நெறிக் காலத்தில் வாழ்ந்த தமிழ் மக்களைச் சமய நெறிக் காலத்திற்கு வளர்ச்சியடையச் செய்த பெருமை அறநெறிக்கால நூல்களுக்கு—சிறப்பாகத் திருக்குறளுக்கு உண்டு.

சமயநெறிக் காலத்திற்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களில், வளர்ச்சி பெற்றுள்ள தெளிவான கடவுள் கோட்பாட்டைத் திருக் குறளில் மட்டுமே நாம் காண இயலுகிறது. திருக்குறள் பாயிரத் தின் முதல் மூன்று அதிகாரங்களும், கடவுளை மும்மூர்த்திகளாக அமைத்து வழிபடும் பக்தி இயக்கச் சமயங்கள் தோன்றுவதற்கு அடிப்படை வித்தாக அமைந்துள்ளன.

கடவுளின் அருவ நிலை, அருவுருவ நிலை, உருவ நிலை ஆகிய மூன்று நிலைகளையும், திருக்குறளின் பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங்களும், வாழ்த்திச் சிறப்பித்துப் பெருமைப்படுத்து கின்றன. உருவக் கடவுளின் வாழ்த்தாக நீத்தார் பெருமையும், அருவக் கடவுளின் வாழ்த்தாகக் கடவுள் வாழ்த்தும், அருவக் கடவுளில் இருந்து உருவக் கடவுள் தோன்றுவதற்குக் காரணமாக விளங்கும் இறைவனின் அருட்சக்தி வாழ்த்தாக வான் சிறப்பும், அமைக்கப்பட்டுள்ள இணைப்புத் திருவள்ளுவரின் மூவொரு கடவுள் கோட்பாட்டை விளக்குவதாக அமைந்துள்ளது.

திருவள்ளுவர், 'ஐந்தவித்தான்' என்னும் பெயரால் அருவக் கடவுளாகிய இறைவனையும் (குறள். 6), உருவக் கடவுளாகிய 'நீத்தாரையும்' (குறள். 25) ஒருவராக்கிக் காட்டியிருக்கும் தனிச் சிறப்பு எண்ணிப் பார்ப்பதற்குரியது.

உயிரினும் ஓம்பப்படும் ஒழுக்கம் (குறள். 131), யார் யார்க்கும் அமைவதற்குக் காரணமாக விளங்கும் வானாகிய இறைவனின் அருட்சக்தியை (குறள். 20) இறைவனின் அருவ உருவங்களுக்கு இடையே சிறப்பித்திருக்கும் தன்மை ஆழ்ந்து நோக்கத் தக்கது.

---

*16. புறம், 335*

அருவக் கடவுளையும் உருவக் கடவுளையும் இறைவனின் அருட்சக்தியையும் விளக்கிக் காட்டுவதற்காக எழுந்த உருவக் கதைகளே, பிற்காலத்தில் புராணங்களாக உருவம் பெற்றன.

திருக்குறளுக்குப் பிற்பட்ட காலத்திலேதான் சிவன், விஷ்ணு, சைவம், வைணவம் என்னும் பெயர்கள் தோற்றம் பெற்றன. இறைவனுக்கு மனைவி, மக்கள் உண்டு என்னும் உருவகக் கதைகள் எழுந்தன.

இந்து சமயத்தில் உள்ள கடவுளர் பெயர்களையும், அவர்களுக்கு இடையே கூறப்படும் உறவுகளையும், அவர்களைப்பற்றி எழுதப்பட்டுள்ள புராணங்களையும் நாம் ஆழ்ந்து நோக்குங்கால், அவை வெறுமையிலிருந்து உருவாகவில்லை என்பதையும், இறைவனைப்பற்றிய அடிப்படைத் தத்துவத்தை விளக்குவதற்காக நாளாவட்டத்தில் ஏற்பட்ட விளக்கக் குறிப்புகளே அவை என்பதையும் அறியலாம். அன்பாகிய இறைவனை அப்பனாகவும், அருளாகிய இறைச் சக்தியை அம்மையாகவும் காண முயன்றது தமிழ் உள்ளம். அன்பும் அருளும் இணைந்து மக்களுக்கு வெளிப்பட்ட இறைவனின் உருவமே மனித உருவில் தோன்றிய குமரக் கடவுளானார்.

கிறித்தவம் கூறும் தந்தை (Father), மகன் (Son), பரிசுத்த ஆவி (Holy Spirit) என்னும் கோட்பாட்டிற்கும் 'அப்பன்,' 'அம்மை,' 'மகன்' என்னும் கோட்பாட்டிற்கும் அதிக வேற்றுமையில்லை. தந்தை, மகன் என்னும் குடும்ப உறவுப் பெயர்களில், தந்தையிலிருந்து மகன் தோன்றுவதற்குக் காரணமாக விளங்கி, தந்தையையும் மகனையும் இணைக்கும் உறவுப் பாலமாக விளங்குபவள் தாயே. அருவக் கடவுளாகிய தந்தையிலிருந்து உருவக் கடவுளான மகன் தோன்றுவதற்கு, இடையில் நிற்கும் அருட்சக்தியாகிய தாயாகப் பரிசுத்த ஆவி எண்ணப்படுகிறது எனலாம்.

விண் என்னும் அடிமூலத்திலிருந்து 'விண்டு,' 'விஷ்ணு' உருவானதாகக் கூறப்படுகிறது.[17] 'விண்' என்பதும் 'வான்' என்பதும் வேறுபட்ட பொருளுடையவை அல்ல.

இறைவனின் மூன்று நிலைகளில் அருவ நிலையையும் உருவ நிலையையும் ஆணாகக் கூறும்போது, அருவுருவ நிலையையும்

---

17. அ. தட்சிணாமூர்த்தி, 'தமிழர் நாகரிகமும் பண்பாடும்.' வெற்றிச் செல்வி வெளியீட்டகம், தஞ்சாவூர், 1973, பக். 72.

ஆணாகக் கொள்ளுதலே சிறப்பு என்னும் நிலையில் அப்பன், அம்மை, மகன் என்னும் குடும்ப உறவுப் பெயர்களுக்குப் பதிலாக சிவன், விஷ்ணு, பிரம்மா என்னும் மும்மூர்த்திக் கோட்பாடு உருவாயிற்று எனலாம். இம் மும்மூர்த்திக் கோட்பாட்டிலும் தந்தை, மகன் என்னும் அடிப்படை உறவுநிலை பாதுகாக்கப்பட்டு வந்துள்ளமையைப் புராணங்கள் வெளிப்படுத்துகின்றன. குமரன் என்றாலும் பிள்ளை என்றாலும் பொருள் ஒன்றே. 'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்'என்பார் திருமூலர். அன்பு சிவமாகிய அப்பன், அருட்சக்திவழியாக ஈன்றெடுத்த பிள்ளையாகக் குமரன் காணப்படுகின்றார் என்பதை விளக்குவனவாகச் சிவனுக்குச் சக்தி வழியாகக் குமரன், பிள்ளையார் என இரு மக்கள் உளர் என்னும் கதை உருவாயிற்று.

சக்தியின் ஆண் வடிவமாகக் கொள்ளப்பட்ட விஷ்ணுவும் தாய்மைப் பண்பிலிருந்து விடுபடவில்லை. ஐயப்பனின் தாயாக விஷ்ணுவும் தந்தையாகச் சிவனும் கூறப்படுகின்றனர். பிரம்மன் விஷ்ணுவின் வயிற்றில் தோன்றியவர் என்பர். விஷ்ணுவும் சக்தியும் உடன்பிறந்தவர்கள்-சிவனுடைய உடலின் ஒரு பகுதியாக விளங்குபவர்கள். சிவனுக்குச் சக்தி வழியாக இரு பிள்ளைகள், விஷ்ணு வழியாக இரு பிள்ளைகள் என்னும் உறவுகளும், சக்தியையும் விஷ்ணுவையும் ஒன்றாக்கி ஆண், பெண் என்னும் பால் வேறுபாடுகளுக்கு அப்பால் உள்ளதாக்கிக் கிறித்தவம் கூறும் தந்தை, மகன் இவர்களுக்கிடையே சொல்லப்படும் ஆண்-பெண் என்னும் பால் வேறுபாடுகளுக்கு அப்பாலுள்ள 'பரிசுத்த ஆவி' என்னும் தன்மையோடு இயைந்ததாகக் காட்டப்படுகிறது.

இன்றைய இந்து சமயத்தின் முக்கிய கடவுளர்களாகிய சிவன், விஷ்ணு, சக்தி, பிரம்மன், ஐயப்பன், குமரன், பிள்ளையார் ஆகியோரைப்பற்றிய புராணங்கள் யாவும் தந்தை, மகன், பரிசுத்த ஆவி என்னும் கோட்பாட்டை விளக்கிக் காட்டுவதற்கு எழுந்த விளக்கங்களாகவே தோன்றுகின்றன. இக் கடவுளரின் பெயர்களும் அவர்களைப்பற்றிய தத்துவ விளக்கங்களும், ஆரிய மூலக் கூறுகளுக்கு மாறுபட்ட திராவிட மூலக் கூறுகளே என்பதும், அத்திராவிட மூலக் கூறுகள் தோமா வருகையினால் சங்க காலத்திற்குப் பின்னர் எழுந்து பரவியவை என்பதும் பெறப்படுகின்றன.

**வேள்வி நிறைவேற்றக் கோட்பாடு**

கிறித்தவத்திற்கு முன்னர் உலகில் தோன்றிய சமயங்கள் அத்தனையையும், இரு பெரும் பிரிவுகளுக்கு உட்படுத்தலாம்.

மனித சக்திக்கு மேலான தெய்வ சக்தி உண்டு என்று நம்புகின்ற அத்தனை சமயங்களும், இயற்கை வணக்கமாயினும் ஒரு தெய்வ வணக்கமாயினும் பல தெய்வ வணக்கமாயினும் ஓரிறைக் கோட்பாட்டுச் சமயமாயினும், ஆடு-மாடு போன்ற உயிர்களைக் கொன்று வேள்வி செய்யும் வேள்விக் கோட்பாட்டுச் சமயங்களாகவே இருந்திருக்கின்றன.

கடவுள் கோட்பாட்டை மறுத்து எழுந்த சமணம், பௌத்தம் போன்ற கடவுள் மறுப்புக் கோட்பாட்டுச் சமயங்கள், வேள்வியை மறுத்து எழுந்த வேள்வி மறுப்புக் கோட்பாட்டுச் சமயங்களாக விளங்கியுள்ளன. வேள்விக் கோட்பாட்டுச் சமயங்களைக் 'கடவுள் கோட்பாட்டுச் சமயங்கள், எனவும், வேள்வி மறுப்புக் கோட்பாட்டுச் சமயங்களைக் 'கடவுள் மறுப்புக் கோட்பாட்டுச் சமயங்கள்' எனவும் பிரிக்கலாம்.

கிறித்தவம் தோன்றுவதற்கு முன்னர், கடவுள் கோட்பாடு உடைய எவரும் பலியிடாமல் இருந்ததில்லை. பலி அல்லது வேள்வியின் சிறப்பை இகழ்ந்தவர் எவருமிலர்.

கிறித்தவம் புதிய ஒரு கோட்பாட்டை உலகுக்கு அறிமுகப்படுத்தியது. கடவுள் கோட்பாடும் வேள்வி மறுப்புக் கோட்பாடும் இணைந்த வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டுச் சமயமாக அது அறிமுகமாகியது. கடவுள் இயேசுவாகிய மனிதனாகி, இவ்வுலகில் தோன்றிச் சிலுவையில் தம்மைப் பலியாக்கினார் என்ற நிலையில், வேள்வியின் சிறப்பை ஏற்ற வேள்விக் கோட்பாடாகவும், இயேசு கிறித்துவின் பலிக்குப் பின்னால் ஆடு, மாடு போன்ற உயிர்களைக் கொன்று செய்யும் பலி தேவையற்றது என்ற நிலையில், வேள்வி மறுப்புக் கோட்பாட்டுச் சமயமாகவும் உலகிற்கு அறிமுகமாகியது. கிறித்தவம் தோன்றுவதற்கு முன்னர், கடவுளை வணங்கும் எவரும் வேள்வி செய்யாதிருத்தல் இயலாது என்ற நிலை இருந்தது.

கிறித்தவம் தோன்றியபின், இயேசுகிறித்துவின் சிலுவை மரணத்திற்கு முன்னர் இருந்த வேள்விகளின் சிறப்பை ஏற்றுக் கொண்டு, வேள்வியை ஏற்றுக்கொண்ட வேள்விக் கோட்பாட்டுச் சமயமாகவும், சிலுவை மரணத்திற்குப் பின்னர் இறைவனுக்கு வேள்வி தேவையில்லை, ஆகவே இனி வேள்வி செய்வது தவறு என்ற நிலையில் வேள்வி மறுப்புக் கோட்பாட்டுச் சமயமாகவும் இரண்டும் இணைந்த வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டுச் சமயமாக 'இயேசுவின் நற்செய்தி' பரவியது.

இதன் காரணமாகக் கடவுள் கோட்பாட்டிற்கும் வேள்வி மறுப்புக் கோட்பாட்டிற்கும் ஒரு புதிய இணைப்பு ஏற்படலாயிற்று.

இந்தச் செய்தியின் செல்வாக்கின் காரணமாக மலர்ந்த சமயங்கள், கடவுளை வணங்குவனவாகவும், உயிர் பலியற்ற வேள்வி மறுப்புக் கோட்பாடு உடையனவாகவும் உலகிற்கு அறிமுகமாயின.

யூத சமயத்தையும் கிறித்தவ சமயத்தையும் அடிப்படையாகக் கொண்ட இசுலாமிய சமயத்தில், யூத சமயத்தில் இருந்த வேள்வி செய்யப்படுதல் நிறுத்தப்பட்டதற்குக் காரணம் கிறித்தவத்தின் செல்வாக்கே ஆகும்.

அவ்வாறே வேள்விக் கோட்பாட்டையுடைய வைதிகசமயமும், வேள்வி மறுப்புக் கோட்பாட்டையுடைய சமண பௌத்த சமயங்களும் பரவியிருந்த திராவிட நாட்டில், ஓரிறைக் கோட்பாடும் வேள்வி மறுப்புக் கோட்பாடும் இணைந்த 'வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டுச் சமயங்கள்' உருவாயதற்கு இயேசுவின் நற்செய்தியே காரணமாக அமைந்தது.

இந்த நோக்கில் நாம் மும்மூர்த்தி வழிபாடாகத் திராவிட மக்கள் இடையே எழுந்த சைவ வைணவ சமயங்கள் கடவுள் கொள்கை யுடையனவாகவும், வேள்வியின் சிறப்பை ஏற்றுக்கொண்டனவாக வும் விளங்கி, நடைமுறையில் வேள்வி மறுப்புக் கோட்பாடு உடை யனவாகத் திகழ்வதற்கு, வேள்வி நிறைவேற்றக் கோட்பாடுடைய இயேசுவின் நற்செய்தியே காரணம் என்னும் நிலை ஏற்படுகிறது.

இயேசுவுக்கு முன்னர், இந்தியா முழுவதும் செல்வாக்குப் பெற்றிருந்த, கடவுள் மறுப்புக் கோட்பாட்டையும் வேள்வி மறுப்புக் கோட்பாட்டையுங்கொண்ட சமண பௌத்த சமயங்கள் வீழ்ச்சி யடைந்து, கடவுள் கோட்பாட்டையும் வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டையுங்கொண்ட இன்றைய இந்து சமயக் கடவுளர்கள் வெற்றியடைந்திருக்கிறார்கள் என்றால், இயேசுவின் நற்செய்தியே அதற்குக் காரணம் என அமைகின்றது.

வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டையுடைய இயேசு கிறித்துவின் நற்செய்தியின் பயனாகத் திராவிட மக்களிடையே உருவான திராவிட சமயம், இன்று இந்திய சமயங்களோடு இணைக்கப்பட்டு, இந்து சமயம் என்னும் பெயரால் அறியப் படுகின்றது.

### நற்செய்தி நூல்களின் தொகுப்பு

பேதுரு, பவுல் போன்றவர்களால் பாலத்தீனத்தைச் சுற்றி யுள்ள நாடுகளில் பரப்பப்பட்ட இயேசுவின் நற்செய்தி, தோமா இந்தியாவிற்கு வந்த பின்னர் எழுத்துருவம் பெறத் தொடங்கிய போது, கிரேக்க மொழியில் நூல்கள் உருவாயின. கிரேக்க மொழிச் சொற்களாகிய 'கிறிஸ்து,' 'கிறிஸ்தவம்' என்ற புதிய பெயர்கள் அறிமுகப்படுத்தப்பட்டன. கிரேக்க மொழியில் எழுதப்பட்ட இயேசுவைப்பற்றிய நூல்கள் பின்னர் தொகுக்கப்பட்டுப் புதிய ஏற்பாடாக உருவாயிற்று.

பேதுரு, பவுல் இவர்களால் பரப்பப்பட்ட நற்செய்தி, கிரேக்க மொழியில் எழுதப்பட்டு, கிரேக்கப் பெயர்களுடன் காணப்படுவதைப் போலவே, தோமாவால் திராவிட மக்களிடையே பரப்பப்பட்ட நற்செய்தி, தமிழ்மொழியில் எழுத்துருவம் பெற்றுத் தமிழ்மொழிப் பெயர்களுடையனவாக எழுந்திருத்தல் இயல்பே.

கிரேக்க மொழியில் எழுந்த இயேசுவின் நற்செய்தி நூல்கள், தொகுக்கப்பட்டு முறைப்படுத்தப்பட்டதைப் போலவே, தமிழ் மொழியில் தமிழ்ச் சூழலில் எழுந்த தமிழ் நற்செய்தி நூல்களும் தொகுக்கப்பட்டு, முறைப்படுத்தப்பட்டிருத்தல் வேண்டும்.

இந்த நோக்கோடு நாம் பார்க்குங்கால், மும்மூர்த்தி வழிபாட்டி லிருந்து தோன்றிய சைவ வைணவத் தொகுப்பு நூல்களாகிய பன்னிரு திருமுறையும், நாலாயிரத் திவ்விய பிரபந்தமும் தமிழ் மொழியில் நம் முன் காட்சியளிக்கின்றன.

### பெயர்கள்

கிரேக்க மொழிப் பெயர்களான கிறிஸ்தவம், கிறிஸ்தவர்கள் போன்றவை காரணப் பெயர்களாகும். 'மேசியா' என்ற எபிரேயக் காரணப் பெயர், கிரேக்க மொழியில் 'கிறிஸ்டாஸ்' என மாறுவது போன்று, தமிழில் தமிழ்ப் பொருளுடைய காரணப் பெயராக அமைதலே இயல்பு.

மொழி வேற்றுமையும் பண்பாட்டு வேற்றுமையும் பெயர் வேற்றுமையை ஏற்படுத்துகின்றன. ஒரே பொருள் இருவேறு மொழிகளில் இருவேறு பெயர்களைப் பெறுகின்றது. இருவேறு பெயர்களைப் பெறுகின்ற காரணத்தால், அவற்றை ஒப்பிடும் பொழுது, பெயர் ஒப்புமையை நோக்காமல் பொருள் ஒப்பு மையையே நோக்க வேண்டியதாய் உள்ளது.

கிரேக்க மொழியில் எழுதப்பட்ட இயேசுவின் நற்செய்தி, ஐரோப்பியர்களிடையே பரவி, செல்வாக்குப் பெற்ற பின்னர், அவர்கள் வழியாக உலகம் முழுவதும் பரவும் வாய்ப்பைப் பெற்றமையால், கிரேக்கப் பெயர்களாகிய 'கிறிஸ்து,' 'கிறிஸ்தவம்' என்பன உலகம் முழுவதும் பரவின.

இயேசுவின் நற்செய்தி இன்று உலகம் முழுவதும் 'கிறிஸ்தவம்' என்னும் பெயரால் அறியப்படுகின்ற காரணத்தாலும், தோமாவால் திராவிடப் பண்பாட்டில் விதைக்கப்பட்ட திராவிட சமயமாகிய இயேசுவின் நற்செய்தி, இன்று இந்து சமயத்தில் உள்ளடக்கப் பட்டுவிட்ட காரணத்தாலும், இந்தியாவிலுள்ள மற்றச் சமயங்களில் இருந்து அதைப் பிரித்து நோக்குவதற்கு வாய்ப்பாக 'இந்துக் கிறித்தவம்' என்னும் பெயரால் இனி அதை நாம் கூறலாம்.

ஐரோப்பியர் வருகைக்கு முன்னர் இந்தியாவில் இருந்த, இந்துக் கிறித்தவமாகிய இயேசுவின் நற்செய்தி, பெயராலும் மொழியாலும் பண்பாட்டாலும் முற்றிலும் வேறுபட்டிருந்த காரணத்தாலும் பவுல், தோமா போன்றவர்கள் நற்செய்தி பரப்பிய முறையிலிருந்து மாறுபட்டுப் படை, பணம், அதிகாரம் இவற்றின் துணைகொண்டு, ஐரோப்பியர் நற்செய்தியை இந்தியாவில் பிற்காலத்தில் பரப்ப முயன்றமையாலும், இந்துக் கிறித்தவத் திற்கும் ஐரோப்பிய கிறித்தவத்திற்கும் இணைப்பு ஏற்படாமல் போயிற்று.

ஐரோப்பியர் வருவதற்கு முன்னர் இருந்த இயேசுவின் நற்செய்தியைப் பின்பற்றிய அடியவர்களில், இந்தியர்களை இந்துக் கிறித்தவர்கள் எனவும், சீரியர்களைச் சீரியக் கிறித்தவர்கள் எனவும் வழங்கலாம். ஐரோப்பியர் இங்கு வந்து பரவியபொழுது, அவர்களை ஐரோப்பியக் கிறித்தவர்கள் எனவும், அவர்கள் காட்டிய ஐரோப்பியப் பண்பாட்டின் வழியில் அவர்களோடு சேர்ந்த மற்ற இந்திய மக்களை, 'ஐரோப்பிய வழி இந்தியக் கிறித்தவர்' எனவும் இனி நாம் அறியலாம்.

(1) இந்துக் கிறித்தவர்கள். (திராவிடக் கிறித்தவர்கள்)
(2) சீரியக் கிறித்தவர்கள்.
(3) ஐரோப்பியக் கிறித்தவர்கள்.
(4) ஐரோப்பியர் வழி இந்தியக் கிறித்தவர்கள்.

ஆகிய நான்கு பிரிவினரை நாம் பிற்கால இந்தியாவில் காணலாம்.

**ஐரோப்பியக் கிறித்தவம் — இந்துக் கிறித்தவம் — சீரியக் கிறித்தவம்**

கி.பி. 1498 மே22-இல் வாணிகத்திற்காக இந்தியாவில் வந்து, முதன் முதலில் கால்வைத்த ஐரோப்பியக் கிறித்தவரான வாஸ் கோடகாமா, கள்ளிக்கோட்டையிலுள்ள இந்தியக் கோயில் ஒன்றிற்குச் சென்று, தம் கூட்டத்தோடு வழிபாடு செய்து போர்ச்சு கலுக்குத் திரும்பியபொழுது, அவருடைய அரசரிடம் தாமும் தம்முடைய கூட்டத்தினரும் இந்தியாவிலுள்ள கிறித்தவக் கோயிலில் வணங்கியதாகக் கூறியுள்ளார்.[18]

ஆனால், அந்தக் கோயில் அமைப்புப்பற்றியும் அங்குள்ள சிற்பங்கள், ஓவியங்கள் முதலியனபற்றியும் அங்கு வழிபாடு நடத்தியவர்களின் தோற்றம்பற்றியும் அவர் விளக்கிக் கூறியன யாவும், பிற்கால ஐரோப்பிய வழி இந்தியக் கிறித்தவக் கோயில் அமைப்பு முறை, வழிபாடு யாவற்றினின்றும் வேறுபட்ட இந்தியக் கோயில் அல்லது இந்துக் கோயில் வழிபாட்டு முறையைச் சார்ந்த தாகும்.[19]

---

18. A. Mathias Mundadan, St. Thomas Christians, 1498—1552, PP. 44.

19. Let us first follow up some of the details given by Diario. The author is describing the City of Calicut and its people. "This town of Calicut is of Christians...............(follows the description of these "Christians" their dress etc...) they wore on the fontanel tufts, (Kudumi) as a distinguishing mark of Christians. (Here follows the description, how V. da. Gama was led to the King for an audience and of the things that happened on the way.) They took us to a big Church, in which were the following things. (An interesting description of 'the Church' and the things in it is given.) And inside there was a small image, which they said was of our lady. And in front of the principal door of the Church; along the walls, were seven tomb-stones. Here the Captain-general, and we with him, made our prayers. And we did not enter this Chapel; because their custom is not to enter in it except certain people who served in the Churches, whom they called "Quafees." These "quafees" wear some thread, drawing the same over their left shoulders and under their right arms just as the deacons wear the stole.These ministers offered us holy water. They gave us also a kind of clay which the Christians of the land are used to put on their heads, below their breasts, around their necks, and on the superior parts of their arms. All these ceremonials were done for the Captain-general and they offered him that Clay which he might put on him and theCaptain received it and gave it to someone to be kept, saying that he would put it later. There were many, many other saints along the walls of the Church, and their painting was in diverse

இந்துக் கோயிலை வாஸ்கோடகாமாவும் அவரது ஆள்களும் கிறித்தவக் கோயிலென நினைத்து, அங்கு வழிபட்டு இருக்கின்றார்கள். அந்த இந்துக்கள் கிறித்தவத்திற்கு மாறுபட்டவர்களா? கிறித்தவத்தின் மற்றொரு பிரிவைச் சார்ந்தவர்களா என்பதற்குச் சரியான விளக்கம் கிடைக்கவில்லை எனக் கூறப்படுகிறது.[20]

கி. பி. 1498-இல் வாஸ்கோடகாமா வழிபட்ட கோயில், உயர் சாதி இந்துக்களின் கோயில் என்பதும், உயர் சாதி இந்துக்களின் கோயிலைக் கிறித்தவக் கோயில் என நினைத்து வழிபட்டது எவ்வாறு என்பதும் ஆராயப்படுகின்றன.

கோயில் வழிபாட்டையுடைய இந்துக்களை, முதன் முதலில் இந்தியாவில் கால் வைத்த ஐரோப்பியப் பண்பாட்டை உடைய ஐரோப்பியக் கிறித்தவர்கள், இந்தியக் கிறித்தவர்களாக ஏற்று, இந்திய முறையில் கட்டப்பட்ட, இந்தியப் பண்பாட்டின் அடிப்படையில் வழிபாடு நடைபெற்றுவரும், இந்தியாவின் கிறித்தவக் கோயிலாக முழு உள்ளத்தோடு ஏற்று, வழிபட்டு உள்ளனர்.

இரண்டாம் முறை கி.பி. 1502-இல் வாஸ்கோடகாமா வந்து இறங்கப் போவதை அறிந்த—இந்தியாவில் வாழ்ந்துவந்த, சீரியப் பண்பாட்டையும் சீரிய நெஸ்தோரியக் கொள்கையையும் சீரிய வழிபாட்டு மொழியையும் கொண்ட, சீரியா நாட்டிலிருந்து இந்தியாவில் குடியேறி வாழ்ந்தவந்த சீரியக் கிறித்தவர்கள், போர்ச்சுகீசியருடைய பாதுகாப்பை நாடித் தாங்களே உண்மையான கிறித்தவர்கள் எனவும், கிறித்தவர்களாகிய போர்ச்சுகீசியரின் மேலாதிக்கத்தைத் தாங்கள் ஏற்றுக்கொள்ளுவதாகவும், தங்களை

---

manners,the teeth being very long and each saint having four or five arms. And below this Church there stood another, equally big. So also many other Churches along the way were shown to us......we visited one of them in which also there were things similar to those described above'' (Diario 66-68).

— The Thomas Christians 1498-1552, A. Mathias Mundadan, Dharmaram College, Bangalore-29, 1967, PP. 46-47.

20. ''Did V. da. Gama and his men take the ''Christians'' they found in Calicut for Catholics or for heretics? It is difficult to give an answer. The fact they did not hesitate to pray in their temples wrongly concluding that they were Churches would point out that were Catholics for Portuguese. In the letters of Manuel I they are said to be herstics.

—St. Thomas Christians-1498-1552, A. Mathias Mundadan, P. 48.

நெருக்கிக்கொண்டிருக்கும் இந்துக்களிடமிருந்தும் இசுலாமியர்களிடமிருந்தும் தங்களைக் காக்க வேண்டுமெனவும் வேண்டிக்கொண்டு, தங்கள் பணிவைக் காட்டத் தங்களை ஆண்ட தங்கள் முன்னாள் அரசனின் செங்கோலைப் போர்ச்சுகீசியரிடம் ஒப்படைத்தனர். அவ்வாறு செங்கோலை ஒப்படைத்ததன் வாயிலாக, இந்தியாவில் உள்ள சுமார் 30,000 சீரியக் கிறித்தவர்கள் போர்ச்சுகல் மன்னனின் குடிமக்களானதுடன், ஐரோப்பியக் கிறித்தவத்தையும் ஐரோப்பிய நாகரிகத்தையும் ஏற்க ஆயத்தமாயினர்.[21]

சீரியக் கிறித்தவர்களுக்கும் போர்ச்சுகீசியக் கிறித்தவர்களுக்கும் கொள்கை, வழிபாட்டு முறை, கோயில் அமைப்பு முறை, பண்பாடு இவைகளில் வேற்றுமைகள் இருந்தன.

தோமாவைப் பின்பற்றிய இந்திய மக்களாகிய இந்துக் கிறித்தவர்களுக்கும், சீரியா நாட்டிலிருந்து வந்து குடியேறிய சீரியக் கிறித்தவர்களுக்கும் கொள்கை, வழிபாட்டு முறை, கோயில் அமைப்பு, பண்பாடு, மொழி இவைகளால் பல வேற்றுமைகள் காணப்பட்டன.

---

21. "Thome Lopes tells us that on November 19, 1502 some Christians of dignified looks, came to Cochin from Mangallore and from many other places in the interior and approached the ship of the admiral, bringing with them presents of fowls, and fruits for him. They also tendered him for his acceptance a pointed staff, red in colour, both ends plated in silver, with three bells of silver at one end, each bell having a bob of silver. Together with it they brought to him a letter of the lord of all that part of the country with a population of 30,000 adults. They told the Portuguese that they were very much content and happy at the arrival of the Portuguese in India and that their lord sent allegiance to the King of Portugal whom they accepted as their King and to whom they were presenting their rod of justice. In the name of their lord they yielded to the admiral their fidelity and homage in such a decisive way that from that day onwards they would not administer justice (or) pronounce judgement against any male factor except in the name of the King of Portugal... According to Barros, the deputation came from the territories of Crangnore and represented the Christians of St. Thomas numbering more than 30,000. living in parts of Crangnore, and governed by Armenian bishops who resided there and therefore subject to the patriarch of Armenia. They had come to V. da. Gama to ask in the name of the passion of our Lord, protection and safety from the pagans and Mohammedans who were oppressing them."

--St. Thomas Christians 1498-1552, A Mathias Mundadon, P. 62-63

மேலே கண்ட வேறுபாடுகளில் எதையும் அறியாத ஐரோப்பியக் கிறித்தவர்களான வாஸ்கோடகாமாவும் அவரது கூட்டத்தினரும், கள்ளிக்கோட்டையில் வணங்கிய கோயில் இந்தியக் கிறித்தவம் அல்லது இந்துக் கிறித்தவம் எனக் கொள்ளலாம்.

சீரிய நாட்டிலிருந்து வாழ்வு தேடி வந்த சீரியக் கிறித்தவர்கள், ஐரோப்பியக் கிறித்தவர்களுடன் கி. பி. 1502-க்குப் பின்னர், பண்பாட்டில் ஒன்றாக இணைக்கப்பட்டதுடன், கி. பி. 1599-இல் 'உதயம் பேரூர்' சபை மன்றத்திற்குப் பின்னர், சீரியக் கிறித்தவர்களுக்கும் இந்துக் கிறித்தவர்களுக்கும் இடையே இருந்த, அரைகுறைப் பண்பாட்டுத் தொடர்புகளும் முழுமையாகத் துண்டிக்கப்பட்டன. கி.பி. 1599-ஆம் ஆண்டில் உதயம் பேரூரில் நடைபெற்ற சபை மன்றக் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்திற்கு இணங்க, சீரியக் கிறித்தவர்களிடம் இருந்த வரலாற்று நூல்கள் யாவும் அழிக்கப்பட்டன. இந்திய மக்களுக்கும் சீரியக் கிறித்தவர்களுக்கும் இடையே நிலவிவந்த பண்பாட்டுத் தொடர்புகள் யாவும் துண்டிக்கப்பட்டன. கோயில்களில் தேங்காய் உடைத்தல் போன்ற இந்தியப் பழக்க வழக்கங்கள் வலிந்து நிறுத்தப்பட்டன. இதனால், இந்தியாவில் வாழ்ந்த இந்துக் கிறித்தவர்களுக்கும் சீரியக் கிறித்தவர்களுக்கும் இடையே நிலவிய தொடர்புகளைக் காட்டும் குறிப்புகள், யாவும் அழிக்கப்பட்டு விட்டன.[22]

கி. பி. 1510-இல் கோவா, போர்ச்சுகீசியர் வசமானவுடன், போர்ச்சுகீசியர் தங்கள் நாகரிகத்தையும் பண்பாட்டையுமே இந்தியாவில் பரப்ப முயன்றனர். இதன் பயனாகத் தோமாவால் உருவாக்கப்பட்ட இந்துக் கிறித்தவத்திற்கும், ஐரோப்பிய நாகரிகத்தைப் பின்பற்றிய ஐரோப்பியவழி இந்தியக் கிறித்தவத்திற்கும் இடையே, பெரும் பிளவு ஏற்படலாயிற்று. அதற்குப் பின்னர் வந்த டச்சுக்காரர், பிரெஞ்சுக்காரர், ஆங்கிலேயர் போன்ற ஐரோப்பியர்

---

*22. "சீரிய கண்காணியாரின் தலைமை அலுவலகம் அங்கமலையில் இருந்ததால், அங்கு மிகுதியான நூல்களையும், பத்திரங்களையும் சேர்த்து வைத்திருந்தனர். மெனிசிஸ் அங்குச் சென்று, அவைகளில் பலவற்றை அழித்து விட்டார். இதனால் மக்கள் அவரை இகழ்ந்து பேச வாய்ப்பு உண்டாயிற்று. 16-ஆம் நூற்றாண்டிற்கு முன்னுள்ள இந்து தேச சீரிய திருச்சபை வரலாற்றை அறிய ஏதுவாயிருந்த எழுத்துச் சான்றுகள் யாவையும் மெனிசிஸ் அழித்து விட்டார்."*

*--இந்திய திருச்சபை வரலாறு, சிரில் புரூஷ்பெர்த், கிறித்தவ இலக்கியச் சங்கம், 1962, ப. 148—149.*

களும் போர்ச்சுகீசியரைப் பின்பற்றிய காரணத்தால், தோமாவின் இந்துக் கிறித்தவத்தை அறியும் வாய்ப்பைப் பின்வந்தவர்கள் முற்றிலும் இழந்தனர்.

தோமா வழியில் வந்த இந்தியக் கிறித்தவம் மறக்கப்பட்டுப் புனித பவுல், புனித பேதுரு முதலானோர் பரப்பிய ஐரோப்பியக் கிறித்தவமே கிறித்தவம் என்னும் பெயருக்கு உரியது என எண்ணும் நிலை இந்தியாவில் ஏற்பட்டு விட்டது.

தோமா புதைக்கப்பட்ட இடமான மயிலாப்பூரை கி.பி. 1324-இல் பார்வையிட்ட 'ஓடோரிக்' என்பவர், 'தோமாவைப் புதைத்த இடத்தில் கட்டப்பட்டிருக்கும் கோயில், சிலைகளால் நிறைந்திருக்கின்றது எனவும், கோயிலுக்கு அருகே பதினைந்து நெஸ்தோரியக் கிறித்தவர்களின் வீடுகள் இருக்கின்றன' எனவும் குறிப்பிடுகின்றார்.[23]

கி. பி. 1292-இல் மயிலாப்பூரில் தோமாவின் கல்லறையைப் பார்வையிட்ட வெனிஸ் நகரத்து பிரயாணியான மார்க்கோபோலோ, தோமா புதைக்கப்பட்டிருக்கும் இடத்திற்குத் 'திருப்பயணம்' செல்கிறவர்கள், அங்குள்ள கோவிலிலிருந்து புனிதமான திருமண்ணை எடுத்துச் செல்வது வழக்கம் என்று கூறுகின்றார். இத்திருமண் நோயாளிகளின் நோயைக் குணமாக்கும் ஆற்றலைப் பெற்றதென அவர் கூறுகின்றார்.[24]

---

23. In 1324 the Bl. Odoric of Pordenone who visited Mylapore says the following: "From this realm (minibar - Malabar) It is a journey of ten days to another realm which is called Mobar, and this is very great and hath under it many cities and towns. And in this realm is laid the body of the Blessed Thomas the Apostle. His CHURCH IS FILLED WITH IDOLS, and beside it are some fifteen houses of Nestorians" (Yule-Cordier. CWT. 3. 141-2).

--A.C. Perumalil, The Apostles in India, Xavier Teachers Training Institute, Patna, 1952-1971, P. 74.

24. Towards the close of the 13th Century, in 1292, the Venetian Traveller Marcopolo, visited Mylapore and recorded in his book as follows: "The body of Blessed St. Thomas lies in this province of Maabar (not Malabar, let it be noted) at a certain little town having no great population. Both Christians and Saracens however greatly frequent it in pilgrimage. For the Saracens also do hold the saint in great reverence and say that he was one of their own Saracens and a great prophet, giving him the Title of Avarian; which is as much as to say Holy Man. The

சீரியக் கிறித்தவர்களுடைய ஆலயத்தினுள் சிலைகள் வைக்கப் படாமல், சிலுவை மட்டுமே அமைக்கப்பட்டிருந்தது. ஆலயங்களில் மணிகள் அமைக்கப்படுவதில்லை.[25]

சீரியக் கிறித்தவர்களின் கோயிலுக்குள் சிலைகள் அமைக்கப் படுவதில்லை என்பதும், ஓடோரிக் பார்வையிட்ட தோமாவின் கல்லறைக்கு அருகிலுள்ள கோயிலில் சிலைகள் அமைக்கப் பட்டிருந்தன என்பதும், மார்க்கோபோலோ பார்வையிட்டபோது மயிலாப்பூரிலுள்ள கோயிலிலிருந்து மக்கள் திருமண் எடுத்துச் சென்றதும், வாஸ்கோடகாமா வணங்கிய கள்ளிக்கோட்டை கோவிலில் சிலைகள் அமைக்கப்பட்டிருந்ததையும், அங்கும் வாஸ் கோடகாமாவுக்குத் திருமண் கொடுக்கப்பட்டமையும், சீரியக்கோயில் அமைப்பிலிருந்து மாறுபட்ட கிறித்தவக் கோயில் அமைப்புக்கு, ஐரோப்பியரின் கோவிலமைப்போடு காணப்படும் மிக நெருங்கிய ஒற்றுமைக் கூறுகள் ஆகும்.

மயிலாப்பூர் கோயில், தோமாவைச் சிறப்பிப்பதில் சீரியக் கிறித்தவத்தையும் இந்துக் கிறித்தவத்தையும், இணைத்திருந்த போதிலும், கோயில் அமைப்பு முறை, வணக்க முறை, கோயிலுக்குள் சிலையை வைக்கும் முறை முதலியனவற்றில் சீரியக் கிறித்தவத் திற்கும் இந்துக் கிறித்தவத்திற்கும் இடையே வேறுபாடுகள் பல இருந்தன என்பதைக் காட்டுகிறது. இவ்வகையில் சீரியக் கிறித் தவத்திற்கு மாறுபட்ட—சிலைகளோடு கூடிய மயிலாப்பூர் கோயில், வாஸ்கோடகாமா வணங்கிய கள்ளிக்கோட்டைக் கோயிலோடு ஒற்றுமையுடன் காணப்படுகின்றது.

---

Christians who go there in pilgrimage take of the earth from the place where the saint was killed and give a portion there of to any one who is sick of a quartan or a tertian fever, and by the power of God and of St. Thomas the sick man is incontinently cured.''

- Marcopolo, Vol. II, P. 290 - Quoted by C.H. Mathew and M.M; Thomas, The Indian Churches of Saint Thomas I.S.S.P.C.K. Delhi, 1967. P.7-8.

25. ''Sriyan Christian's Churches were built on the model of the Western Churches but differed from them in this that there were only crosses inside. Each Church was surmounted by a Cross. There were no bells for the Churches.''

--A. Mathias Mundadon, C.M.I. - The Arrival of the Portuguese in India and the Thomas Christians under Mar Jacob 1498-1552; Dharmaram College.Bangalore-29, India, 1967, P.57.

இந்த ஒற்றுமை சீரியக் கிறித்தவத்திற்கு மாறுபட்ட ஐரோப்பியக் கிறித்தவத்தோடு இணைந்துள்ளது. இதனால், இந்தியாவிலிருந்த சீரியக் கிறித்தவத்திற்கும், இந்தியாவில் வழி வழியாக இருந்து வந்த இந்துக் கிறித்தவத்திற்கும், இடையே இருந்த அகன்ற இடைவெளியையும், ஐரோப்பியக் கிறித்தவத் திற்கும் இந்துக் கிறித்தவத்திற்கும் இடையே இருந்த நெருங்கிய ஒற்றுமையையும் நாம் அறிய இயல்கின்றது. இந்த ஒற்றுமைக் கூறுகளே ஐரோப்பியக் கிறித்தவரான வாஸ்கோடகாமாவைக் கள்ளிக்கோட்டையிலுள்ள இந்துக் கிறித்தவக் கோயிலுக்குள் எவ்விதத் தயக்கமுமின்றி வழிபடுவதற்கு ஏவியுள்ளது.

வாணிகத்திற்காகவும் ஆதிக்கம் செலுத்துவதற்காகவும் வந்த ஐரோப்பியர்களை 30,000 சீரியக் கிறித்தவர்கள் வரவேற்றுத் தங்களை அவர்களுடைய குடிமக்களாக இணைத்துக்கொண்டு, அவர்களுடைய மேலாதிக்கம் பரவுவதற்குத் துணைநின்ற காரணத் தால், இந்துக் கிறித்தவத்திற்கும் ஐரோப்பியக் கிறித்தவத்திற்கும் தொடர்பு ஏற்படாமல் போயிற்று. இந்துக் கிறித்தவமும் ஐரோப்பியக் கிறித்தவமும் பிளவுண்டன.

கி.பி. 1510-இல் ஐரோப்பியர்களான போர்ச்சுகீசியர், கோவாவை வெற்றிகொண்டதிலிருந்து போர்ச்சுகீசியரின் செல் வாக்கு ஓங்கியது. இவர்கள் இந்திய நாகரிகம், பண்பாடு இவை களைப் புறக்கணித்து, இந்தியரைப் போர்ச்சுகீசிய மயமாக்க முனைந்தபோது, அவர்களைப் பின்பற்றி இந்திய நாகரிகம், பண் பாடு இவைகளைப் புறக்கணித்த மக்கள் 'பரங்கிகள்'என இந்திய மக்களால் புறக்கணிக்கப்பட்டனர்.

ஆதி இந்தியக் கிறித்தவத்திற்கும் பரங்கி மார்க்கத்திற்கும் இடைவெளி மேலும் விரிவடைந்தது.[26]

---

26. " With the capture of Goa by the Portuguese in 1510, Political Conquest went along with their Portuguizing cultural aggression. This as well as their inquisitorial methods vitiated their zeal to spread the Christian faith as they understood it. They received into their padroado patronage mostly 'those they found the readiest to accept Christianity; the waifs and strays of Hindu Society," as Professor M.Ruthnaswami put it. They imposed their Portuguese surnames of them, portuguized them in the manner of dressing, eating and behaving and convinced them that they now belonged to a superior status and culture as well as to a super-natural religion. They denounced Hinduism in toto, pointing out to its real or imagined defects as proof for their denunciation and inculcated

இந்தப் பெரிய இடைவெளியின் காரணமாக, இந்தியாவில் புனித தோமையரால் இந்தியப் பண்பாட்டின் அடிப்படையில் உருவாக்கப்பட்ட இந்துக் கிறித்தவம், பின்னர் வந்த ஐரோப்பிய வழி இந்தியக் கிறித்தவத்தைத் தன்னுடன் எவ்விதத்திலும் தொடர்பில்லாத அந்நிய நாட்டுச் சமயமாகக் கருதி ஒதுக்கியது. அவ்வாறே இந்தியாவில் ஐரோப்பியமயமாக உருவாக்கப்பட்ட ஐரோப்பிய வழி இந்தியக் கிறித்தவமும் நாகரிகம், பண்பாடு, நடை, உடை, பாவனை எல்லாவற்றிலும் ஐரோப்பியரைப் பின்பற்றித் தாங்களே உயர்ந்தவர்கள் என்ற தவறான எண்ணத்தில், இந்துக் கிறித்தவத்தை இருள் நிறைந்த சமயம் எனவும் நாகரிகம், பண்பாடு இவைகளில் குறைபாடுள்ளது எனவும் ஒதுக்கியது. இதன் காரணமாக இரண்டுக்கும் எண்ணிப் பார்க்கவும் இயலாத அளவுக்குப் பிரிவு ஏற்பட்டுவிட்டது. இதனால், இரண்டையும் இணைத்துப் பார்ப்பவர்களை, மற்றவர்கள் இகழ்ச்சிக் குறிப்போடு நோக்கும் போக்கு வளர்ந்துவிட்டது.

**உரிமைப் போட்டி**

(இந்துக் கிறித்தவர் — ஐரோப்பிய வழி இந்தியக் கிறித்தவர்)

போர்ச்சுகீசியர் வருகைக்குப் பின்னர், புனிதர் தோமா ஆலயம் கட்டப்பட்டிருக்கும் இடத்தைக் குறித்து, மயிலாப்பூரிலுள்ள சைவ சமய மக்களுக்கும் ஐரோப்பிய வழி இந்தியக் கிறித்தவர்களுக்கும் இடையே, உரிமைப் போட்டி எழுப்பப்பட்டிருக்கிறது.

1923-இல் அங்கு விக்கிரமச் சோழன் காலத்திய கல்வெட்டு ஒன்று கிடைக்கப்பெற்றது. அதில் 'சுரமுடையார் கோவில் கூத்தாடுந் தேவர்'க்குக் கொடுக்கப்பட்ட மான்யம் குறித்துக் கல்வெட்டுக் கூறுகிறது.

---

in their neophytes a contempt for their old religion. The Portuguese population itself was,in the polite words of Prof. Ruthnaswami,'wilting, uprooted as it was from its native soil and culture." The Indian population found all this intolerable and termed the Portuguese and their converts 'Paranghis,' despicable foreigners who spread by their easy morality the Paranghi disease in the country. We can surmise the ignorance on the part of the portuguese and the laugh of scorn from self-respecting Indian hearers when the former titled their proselytising booklet as 'Paranghikulam Puhuda Venumo?'

--Ignatius Hirudayam; Christianity and Tamil Culture, University of Madras, 1977, PP. 9-10

இதை ஆதாரமாக வைத்து, அங்கு இருந்த கோயில் சைவக் கோயில் எனச் சைவர்களும், மார்க்கோபோலோ போன்றோர் அங்குப் புனிதர் தோமையர் கோயில் இருந்ததைப் பார்த்துத் தெளிவாகக் கூறியுள்ளனராகையால், அங்கு இருந்தது கிறித்தவக் கோயிலே என ஐரோப்பிய வழி இந்தியக் கிறித்தவர்களும் வாதிட்டு உள்ளனர்.[27]

---

27. Fragmentary Tamil inscription of 8 lines on a stone found at the Cathedral, North-West end of the verandah; on the top line of the granite foundations of walls projecting from the verandah into the garden.

When I visited Mylapore last in February, 1924, the stone was still lying near the place of the find. It ought to go to the Bishop's Museum and receive an appropriate number.

According to the Assistant Archaeological Superintendent for Epigraphy, Madras, this inscription is a fragment on Tamil, "and it seems to register a tax-free gift of land for burning at night a lamp before the image of Kuttaduvar (Nataraja) in the temple of Suramudaiyar. Palaeographically this inscription may be assigned to the 11th Century A. D."

A later communication from the Government Epigraphist for India, Fernhill, Nilgiris, says that Mr. Venkoba Rao, the Assistant Archaeological Superintendent for Epigraphy, Madras, pronounces the inscription to belong to Vikrama Chola's time (12th Century), and "that the gift was to the Hindu God Nataraja, whose shrine is always to be seen in a Siva temple."

The stone was not found at its original site, as is shown by its fragmentary condition, the parts above and below, as well as right and left, being wanting. All we can gather is that the foundations in which the stone was inserted are of a date later than the inscription. To argue, as was done at the time of the discovery in The Madras Mail, that, if the stone was dug up from any depth, it would indicate an original Saiva temple, on the ruins of which the portuguese Church of modern St. Thomas was erected, is to show a lamentable ignorance of what Marco Polo and even earlier writers have written about the St. Thomas shrine. The Church was doubtless in existence in Vikrama Chola's time. Besides, the line of foundations was intact on three sides, and the stone was found on the top row, 2nd from the N.W. corner, not more than one foot below the present ground level. We have not inquired further into the history of Kuttadum deva,

மயிலாப்பூரிலுள்ள இந்துக் கோயில் திருமேனி நகர்வலம் வருங்கால், தோமையர் ஆலயத்தைத் தாண்டும்பொழுது, மும்முறை பல்லக்குடன் மரியாதை செலுத்தும் வழக்கம் இருந்ததாகவும் இதனால், அந்த இடத்திற்கும் இந்துக்களுக்கும் இருந்த தொடர்பு வலியுறுத்தப்படுவதாகவும், அந்த இந்துக்கள் யாவரும் கிறித்தவத்திலிருந்து பிரிந்து சென்றவர்களாக இருக்க வேண்டும் எனவும் கருதப்படுகிறது.[28]

---

Nataraja Suramudaiyar, and...ladeva-chaturvedi-mangalam. The first portuguese historians say, however, that St. Thomas built his 'house,' meaning his church, on the site where a JOGI had his temple. If that were true, the ground might yield carvings and inscriptions one thousand years older than No. 83.''

—Rev. H. Hosten, S.J. Antiquities from San Thome and Mylapore; The Diocese of Mylapore, 1936, PP. 54-55.

During some excavations made near the tomb this year (1923), when an Indian inscription was found which no one could read, one writer wrote to the Madras Mail to insist that the church was on the site of a Hindu fane. This writer would have been greatly puzzled if we had asked him at what time the place became Christian.

—Rev. H. Hosten, PP.260

28. The Hindus of Mylapore, we may remember, avowed to the first portuguese that their custom at their processions was to make their idols salute thrice the Church of St. Thomas tomb. Ships out at sea saluted the Church of St. Thomas Mount at Mylapore, when they passed in front. What would it prove? Perhaps that there had been defections EN MASSE on the Coromandel Coast.

—Rev. H. Hosten, PP. 565

In fact, the shrine was so greatly venerated that according to what was related to Gaspar Correa, the Portuguese historian, by the custodian, it was held in the highest esteem. For on their festival days the Hindus would bring their images accompanied by large crowds and great rejoicing, and would, as they approached the door of the church, lower them three times to the ground as a mark of reverence to it a practice which had been followed from time immemorial.

—Correa, Landas de India, P. 724.

Quoted by George Mark Moraes - A History of Christianity in India—Manaktalas - Bombay, 1964, P. 48.

இந்தியச் சமய வரலாறு, இந்திய வரலாறு முதலியன, புனை கதைகளாலும் புராணங்களாலும், மூடி மறைக்கப்பட்டு, யாரும் எளிதில் அவற்றை அறிந்துகொள்ள இயலாவண்ணம் இருந்தன எனவும், ஐரோப்பிய அறிஞர்களின் முயற்சியாலேயே இந்தியர் களுக்கு வரலாற்று உணர்வு பெருகியது[29] எனவும், தமிழ் மொழியை ஆழ்ந்து கற்ற பிற்காலக் கிறித்தவ அறிஞர்களான ஐரோப்பியர்கள், தமிழ் மக்கள் தமிழ் மொழியை இழிந்தது என ஒதுக்காமல் தங்களுடைய தாழ்வு மனப்பான்மையை நீக்கி, அதை ஆழ்ந்து கற்பதற்குத் தூண்டியுள்ளார்கள்[30] எனவும் தமிழின் உயர்ந்த பண் பாட்டை அறிவியல் ரீதியாக உலகுக்கு உணர்த்தி, தமிழ் மக்களின் நீண்ட தூக்கத்திலிருந்து அவர்களைத் தட்டி எழுப்பிய பெருமை ஐரோப்பியக் கிறித்தவர்களையே சாரும்[31] எனவும் தமது ஆய்வுக் கட்டுரையில் கா. மீனாட்சிசுந்தரம் குறிப்பிடுகின்றார்.

---

29. "Unless the history of Tamilnad synchronising with their advent and labours is investigated, it is not easy to comprehend and appreciate the difficulties that surrounded them and the obstacles which deterred their progress. History has never been a fertile soil for Indian minds. History was shrouded by legends and myths and facts were distorted beyond recognition. It was only after European scholars commenced their labours that a taste for history developed."

--Dr. K. Meenakshisundaram, The Contribution or European Scholars to Tamil, University of Madras, 1974, P.2.

30. The study of Tamil had been neglected by educated natives. A remark of Dr. Jonn Murdock stands out. He says "Let them (natives who studies English and neglected Tamil) be assured, that so long as they despise their mothertongue, they have merely a thin white-wash of civilization." Coming as it did from a reputed western scholar, this statement was an eye opener. The famous Dr. Pope writes, "Let Tamilians cease to be ashamed of their vernacular." But sad to say until the close of the 19th Century, educated natives were indifferent to their mothertongue. It was but natural that this non-chalant attitude of the educated natives towards their own language should deter the throbbing curiosity of interested foreign scholars."

--Dr. K. Meenakshisundaram, Ibid. PP. 84-85.

31. " To sum up, we have to emphasis the facts European schoelars declared to the world the great culture inherent in Tamil and introduced a new scientific way of studying her. Through Tamil, the great scientific discoveries were introduced to her people and they

தமிழ் மக்கள் இன்று தலைநிமிர்ந்து நிற்பதற்கும் தன்னுணர்வு பெற்றதற்கும் தமிழ்மொழி மறுமலர்ச்சியுற்றதற்கும் காரணமான ஐரோப்பியக் கிறித்தவர்களின் தொண்டைப் பட்டியலிட்டுக் காட்டுகின்றார் பேராசிரியர் சற்குணர்.[32]

ஐரோப்பியர்கள் வரும்வரை தமிழகமும் தமிழும் கருமேகங்களால் மூடப்பட்டு இருந்தன. ஐரோப்பியர்களின் வரவுக்குப் பின்னரே தமிழர்களிடையே விழிப்புணர்வும் புத்துணர்வும் தோன்றி, கருமேகங்களில் இருந்து விடுபட்டுத் தமிழ் இலக்கிய ஆர்வம் பிறந்தது என்பார் கா. மீனாட்சிசுந்தரனார்.[33]

---

were awakened from a long slumber to an era of activity and advancement."

--Dr. K. Meenakshisundaram, The Contribution of European Scholars to Tamil, University of Madras, 1974, P. 338.

32. They simplified the Tamil script. They introduced space between the words, simple or compound, of a sentence; for it had been the native custom to write a whole sentence as if it were composed of one long word. They were the first to introduce the study of Tamil into the civilised countries of the world. They were the first to make Tamil translations from European languages. They were the first to compile Tamil word-books, dictionaries, and lexicons, which made obsolete the time-honoured custom of memorising the metrical Tamil Vocabularies, before taking up literature. They were the first to write Tamil treatises on Natural Science. They were the first to urge educated Tamils to bring out expurgated editions of Tamil works, and to write interesting general literature of a wholesome character. They were the first to show us how to make a critical study of our language, literature and grammer. And they were the first not only to teach us that "that is not good language that all understand not;" and that there can be no social, moral, religious, political, or economical progress among a people who have no homely prose literature to read but also to write "MODERN TAMIL PROSE," and create the reading habit among us.

--மே. கோ. மயிலை சீனி வேங்கடசாமி, கிறித்தவமும் தமிழும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1. 1971, ப. 14.

33. "A dark cloud descended on the Tamil country and shrouded Tamil. During this age Tamil literature was veritably stagnant. Tamilnad stipped growing politically, economically and socially. With the arrival of European scholars, a new awakening

தமிழில் அதுவரை மறைந்து கிடந்த உயர்ந்த கருத்துகள், ஐரோப்பியர் வரவால் உலகமறியக்கூடிய வாய்ப்பைப் பெற்றன. திருக்குறளையும் திருவாசகத்தையும் உலகறியச் செய்த பெருமை அவர்களையே சார்ந்தது. திருக்குறளுக்கும் திருவாசகத்திற்கும் அவர்கள் தொண்டாற்றிய பின்னரே, மற்ற இந்தியர்கள் அவை களின் பெருமையை உணர்ந்து, அவைகளை மற்ற மொழிகளில் மொழி பெயர்ப்பதில் ஐரோப்பியர்களைப் பின்பற்றினர்.[34]

திருக்குறள், திருவாசகம் இவைகளை அடிப்படையாகக் கொண்ட, திராவிடத் திருநெறியாகிய சைவசித்தாந்தத்திற்குக் கிறித்தவர்களாகிய ஐரோப்பியர்கள் ஆற்றியுள்ள தொண்டையும், அவர்களின் பாராட்டுதலையும் குறித்து மகிழ்ச்சியடையும் திரு வாசகமணி கே.எம். பாலசுப்பிரமணியம், மற்ற இந்து சமயத்தினர் இவைகளை அற்பமாக ஒதுக்குவதை வழிவழியாக நடந்துவரும் ஒரு சதியாகக் கருதி வருந்துகின்றார்.[35]

---

was heralded. Their interest began slowly to seep through the thick cloud of apathy and a revival of literary interest commenced."

--Dr. K. Meenakshisundaram, The Contribution of European Scholars to Tamil, University of Madras, 1974, P. 336.

34. "The unique ideas embedded in Tamil were for the first time startingly released to the Western world by translations. The various translations of the great Tamil works into the different tongues of the occident exhibited the peerlessness of the Kural, the exquisitiveness of the TIRUVACHAKAM and other major works which had hitherto remained occult. Natives recognised the value of such translations and began to emulate their methods."

--Dr. K. Meenakshisundaram, The Contribution of European Scholars to Tamil, University of Madras, 1974, P. 337

35. "Saiva Siddhanta Philosophy is the choicest product of the Dravidian intellect" according to Dr. G. U. Pope. According to the Rev. W.Goudie "there is no School of Thought and no system of faith that comes to us with anything like the claims of the Saiva Siddhanta. As a system of religious thought, as an expression of faith and life, the Saiva Siddhanta is by far the best that South India possesses." Not content with this eulogy, the Reverend gentleman goes a step further and avers: "Indeed, it would not be rash to include the whole of India and to maintain that judged by its intrinsic merits, the Saiva Siddhanta represents the high-water-mark of Indian life."

No greater tribute than this has ever been paid by a Christian missionary to an Indian School of metaphysics. And yet; the tragedy

இது ஏன் என்பது எண்ணிப் பார்க்கத் தக்கது. திருக்குறளையும் சைவசித்தாந்தத்தையும் ஐரோப்பியக் கிறித்தவ அறிஞர்கள் பாராட்டக் காரணம் என்ன என்பதைக் குறித்து, அறிஞர் சிலர் தம் கருத்துகளைத் தெரிவித்துள்ளனர்.

''திருக்குறள், நாலடியார் ஆகிய இரு நூல்களையும் மொழி பெயர்த்துப் பிற நாட்டாருக்கு நல்கும் பணியைச் சிறிது காலத்திற்கு முன்வரை செய்தோர், கிறித்தவ மதப் போதகர் ஆவர். திருக்குறளும் நாலடியாரும் சமணசமயச் செல்வாக்குடன் காணப்பட்ட போதிலும், அந்நூல்கள் கூறும் அறங்களில் மிகப் பெரும்பாலன கிறித்தவருக்கும், உடன்பாடாகக் காணப்பட்டமையால், அந்நூல்கள் இவ்வாறு பிரபலமெய்தின'' என்பது ஆ.வேலுப்பிள்ளையின் கருத்து.[36]

''பாதிரிமார்களுள் சிலர், சைவ சித்தாந்த விஷயமாகப் பத்திரிகைகளில் விஸ்தாரமாக எழுதியுள்ளனர். இந்தியாவில் வழங்கும் மதங்களில், கிறித்தவ மதத்தோடு மற்றெல்லாவற்றிலும் அதிக ஒற்றுமை உடையது இம்மதமே என்பது அன்னார் அபிப்பிராயம்''[37] என்பது அநவரத விநாயகம் பிள்ளையின் கருத்து.

ஆகவே, தமிழ் மக்களைத் தட்டி எழுப்பிய-தமிழ் மறுமலர்ச்சிக்குக் காரணமான - தமிழுக்குப் பல்வேறு தொண்டாற்றிய - தமிழ் மக்களுக்கும் இந்திய மக்களுக்கும் வரலாற்று உணர்வை ஊட்டிய

---

of this system is that it has never been accorded that place of honour or recognition to which it is entitled in the Comity of the Hindu Darsanas or the Council of Philosophic Systems. No standard work on the Hindu Systems of metaphysics published so far has ever devoted a considerable chapter to this School of Siddhanta; and if ever a work has here and there sought to recognise it, the treatment of the subject has been tardy, halting and defective, not to say disproportionately insufficient. I cannot help feeling sometimes that there must be a conspiracy of silence behind this invariable indifference to this School."

--K. M. Balasubramaniam, Introduction, Special Lectures on Saiva Siddhanta, The Annamalai University, 1959, P. IX

*36. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்.*

*37. அநவரத விநாயகம் பிள்ளை, சைவசித்தாந்த வரலாறு, 1909, ப. 51.*

ஐரோப்பியக் கிறித்தவ அறிஞர்கள், மற்ற இந்திய மக்களால் புறக் கணிக்கப்பட்டு இருந்த திருக்குறள், திருவாசகம் போன்ற நூல்களை மொழிபெயர்த்ததுடன், மற்ற இந்து மக்களால் புறக்கணிக்கப்பட்டு அவர்களின் சதிக்கு உள்ளானதெனக் கருதப்படும் சைவசித்தாந்த உண்மைகளை விரிவாக எழுதக் காரணம், ஐரோப்பியக் கிறித்தவ சமய உண்மைகளுக்கும் இந்துக் கிறித்தவ சமயமாகிய திராவிட சமய உண்மைகளுக்கும் இடையே இருக்கும் நெருங்கிய தொடர்பே என்பது விளங்குகிறது.

புனை கதைகளாலும் புராணங்களாலும் சூழப்பட்டு வரலாற்று உணர்வை இழந்து நின்ற இந்தியக் கிறித்தவம் அல்லது திராவிடக் கிறித்தவம், வரலாற்றுணர்வை ஊட்டிய ஐரோப்பியக் கிறித்தவர் களால் அறியப்பட்டிருக்கின்றதா என்பது நோக்கத் தக்கது.

இந்தியக் கிறித்தவமாகிய திராவிடக் கிறித்தவத்திற்கும், ஐரோப்பியப் பண்பாட்டை ஏற்ற பிற்கால ஐரோப்பிய வழிக் கிறித் தவர்களுக்கும், இணைக்க இயலா இடைவெளி ஏற்படுத்தப்பட்டு விட்டது. ஐரோப்பியருடைய நோக்கில் இந்தியா இருள் நிறைந்த நாடாகவும், இந்தியச் சமயங்கள் இருள் நிறைந்தனவாகவும் காட்சி யளித்தன.

ஆனால், திருக்குறளை முதன்முதலில் மேலைநாட்டு மொழியில் மொழிபெயர்த்த ஐரோப்பியரான வீரமாமுனிவர் திருவள்ளுவரை, 1. 'மெய்யாம் ஞானத் திருக்கடல்' எனவும், 2. 'இருளில் விளங்கும் மீன்' எனவும், 3. 'பாலையில் பதுமம்' எனவும், 4. 'இருளில் விளக்கு'' எனவும், 5. 'கடவுள் இயற்றிய ஞானத் திருவிளக்கு' எனவும் பாராட்டிப் பெருமிதத்துடன் கூறியிருப்பது நோக்கத் தக்கது.[38]

---

38. "வேத நூன் முத லெவ்வகை நூலுங் கல்லாதுணரவுஞ் சொல்லா துணர்த்தவும் வல்லவராகி, மெய்ஞ்ஞானத் திருக்கடலாகியவொரு மெய்க்கடவுற் றிருவடி மலரே, தலைக்கணியெனக் கொண்டேத்தி, இருளிராவிடத்து விளங்கியவொரு மீன் போலவும், பாலைச் சுரத்தரி தலர்ந்த பதுமம் போலவும் மெய்யாஞ்சுருதி விளக்கா திருளே மொய்த்த நாட்டின் கண்ணுங் கடவுளேற்றிய ஞானத் திருவிளக் கொப்பத்தெளிந்து உணர்ந்தெங்கும் ஒரு விளக்கென நின்றுயர்ந்த திருவள்ளுவருரைத்த பலவற்றொன்றை நான் தெரிந்துரைப்பத் துணிந்தேன்."

- மயிலை சீனி வேங்கடசாமி, கிறித்தவமும், தமிழும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1971, பக். 83-84.

திருக்குறளுக்கு உரை காணுங்கால், வீரமாமுனிவர் கிறித்தவ நோக்கிலேயே அதற்கு உரை எழுதிச் செல்லுகின்றார். கிறித் தவத்தை விட்டுப் பிரிந்து அவரால் திருவள்ளுவரைக் காண இயல வில்லை.

வீரமாமுனிவருக்குப் பின்னர், வீரமாமுனிவரால் விடப்பட்டிருந்த திருக்குறளின் 3-ஆம் பகுதியாகிய இன்பத்துப் பாலையும் சேர்த்து, ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த டாக்டர் ஜி. யு. போப் அதை ஆங்கிலத்தில் 'THE SACRED KURAL' எனப் பெயரிட்டதுடன் இயேசு பெருமானுடைய மலைப்பொழிவின் எதிரொலியாகத் திருக் குறள் விளங்குகிறது எனவும், திருவள்ளுவருக்கும் கிறித்தவர் களுக்கும் நேரடித் தொடர்பு இருந்திருக்க வேண்டும் எனவும் கருதுகின்றார்.

டாக்டர் போப்பின் இந்த நம்பிக்கை கிறித்தவத் திருமறையை யும் திருக்குறளையும் ஒப்பிட்டு ஆராயும் வருங்கால ஆராய்ச்சிக்குப் பின்னரே, சரியானது என ஏற்றுக்கொள்ள இயலும் எனக் கா. மீனாட்சிசுந்தரனார் தமது ஆய்வுக் கட்டுரையில் கூறு கின்றார்.[39]

கோவர் என்னும் ஐரோப்பியரும் குறளை மொழி பெயர்த்த போது, திருக்குறள் விவிலியத்தின் அடிப்படையில் எழுந்தது எனவும், விவிலியத்தின் உந்து சக்தியாலேயே திருவள்ளுவர்

---

39. " Dr. Pope was the first to translate the entire KURAL into English. He has rendered it into English poetry, paying heed to the rhymes. It is interesting here to note that Dr.Pope has called his translated work " The Sacred Kural ". Writing about the author he says " We may, fairly, I say, picture pacing alone the seashore with the Christian teachers and imbibing Christian ideas, tinged with the peculiarities of the Alexandrian School and day by day working them into his own wonderful KURAL. He finds the KURAL an " echo of the Sermon on the Mount." Pope believes that Tiruvalluvar drew his inspiration from Christian Scriptures. He declares that every sect in Tamilnad claims the Kural as its own; " and has furnished it with commentary and critical apparatus accordingly." This is true to himself also. He claims Valluvar to have been greatly influenced by the Christians. The belief of Dr. Pope that Christian ideas expressed in the KURAL presuppose a regular interconnection between the Kural and the Christian Scriptures, however, may be taken for granted only after later research proves it."

- Dr. K. Meenakshisundaram. The Contribution of European Scholars to Tamil; University of Madras, 1974; P. 105.

இத்தகைய உயர்ந்த உண்மைகளைக் கூறி இருக்க இயலும் எனவும், மற்ற யாரும் திருவள்ளுவரைப் போன்று விவிலிய உண்மைக்கு இவ்வளவு நெருக்கமாய் வர இயலாது எனவும் கருதுகின்றார்.[40]

திருவாசகத்தை மொழி பெயர்த்த போப், திருவாசகரிடத்திலே மேலைநாட்டுப் பேரறிஞரான புனித அகஸ்டீனுடைய (St. Augustine) குறை ஏற்பு உணர்வைக் காணாது இருக்க இயலாது எனக் கூறுகின்றார்.[41]

மாணிக்கவாசகர் மெய்யுணர்வு பெற்ற திருப்பெருந்துறையில், மேலை நாடுகளிலிருந்து குதிரைகள் மட்டும் வந்திறங்கவில்லை; சிறந்த கொள்கைகளும் வந்திறங்கின எனக் கூறுகின்றார்.[42]

---

40. " Gover comes dangerously near the frequently asserted belief that Tiruvalluvar had his Kural based on the Bible. He translates one of the Tamil verses on gratitude and says that its idea reminds one of the " Holy Unit " and he adds, " I have heard missionaries declare that no other uninspired man, who had not the Bible at his elbow, ever came so near the truth in the higher morality as Tiruvalluvar."

- Dr. K. Meenakshisundaram, The Contribution of European Scholars to Tamil, University of Madras, 1974, P. 156.

41. " The recital of these mental troubles, and the touching confession of his ignorance and youthful folly are to be found in many of his poems (See especially No. V, The SACRED CENTO. pp. 44-84). They remind one most forcibly of the confessions of St. Augustine, and we cannot help saying that, in our Tamil sage, we find a spirit congenial to that of the great doctor of the West. "

- Rev. G. U. Pope; The Tiruvacagam; At the Clarendon Press; 1900, P. XX.

42. " One day when the king was sitting in state in the midst of his nobles and dependant kings; messengers came announcing that, in a harbour in the territory of the CORA king, ships had arrived with multitudes of horses of rare value, from the ' Aryan land.' We may suppose that this means Arabia and the whole legend points to the traffic ever carried on by coasting vessels between India and the Western countries from whence not goods only, but influential ideas also came. "

-Rev. G. U. Pope, Tiruvacagam, XX.

மாணிக்கவாசகரைப்பற்றிய முழுக்கதையிலும் நாம் எவ்வளவு தள்ளக்கூடியவைகளைத் தள்ளினாலும், புனித பவுலிடத்திலும் அசீசியைச் சேர்ந்த புனித பிரான்சீஸிடத்திலும் காணப்பட்ட குணங்களின் இணைப்பு, மாணிக்கவாசகரின் குண அமைப்பில் காணப்படுகிறது என்பது போப்பின் நம்பிக்கை.[43]

போப் தம்முடைய திருவாசக மொழிபெயர்ப்பில், முக்கிய மல்லாதவை தவிர மற்றவற்றில் சைவ சமயம், கிறித்தவத்தோடு பெரிதும் ஒத்திருப்பதாகக் கருதுகின்றனர்.[44]

---

43. " In the whole legendary history of this sage, whatever we may think of the accuracy of many of its details, and whatever deductions we are compelled to make for the exaggerations that have grown up around the obscurity of the original facts; there stands out a real historical character, which seems to be a mixture of that of St. Paul and of St. Francis of Assisi. Under other circumstances what an apostle of the East might he have become. This is conversion, as his South India believes it and in almost every poem he alludes to it. Pouring forth his gratitude in ecstasies of thanksgiving, and again and again repeating the words " I am Thine, save me. His poetry lives in all Tamil hearts and in the main and true essence of it deserves so to live."

- Rev. G.U. Pope, The Thiruvasagam, At the Clarendon Press, 1900, P. XXIII.

44. " Manikka Vacagar went about testifying that he had seen CIVAN in PERUN-TURAI, and had then and there passed from darknees to light. He thus declared to all what he fully believed himself to have seen and handled. He was an enthusiast, but absolutely sincere. The doctrines that he taught will abundantly appear from an attentive consideration of his disputes with the Buddhist GURUS (NOTE IX). He taught the people that there was one supreme personal God, no mere metaphysical abstraction, but the Lord of gods and men. He also taught that it was the gracious will of Civan to assume humanity, to come to earth as a GURU, and to make disciples of those who sought Him with adequate preparation. He announced that this way of salvation was open to all classes of the community. He also taught very emphatically the immortality of the released soul-its conscious immorality - as he said that the virtual death of the soul which Buddhism teaches is not its release (NOTE III). It will be seen how very near in some not unimportant respects the Caiva system approximates to Christianity; and yet some of the corruptions to which it has led; by what almost seems a necessity are amongst

மேலும் சைவத்திற்கும் கிறித்தவத்திற்கும் உள்ள நெருங்கிய தொடர்பைக் காட்டுவதற்காகவே, சைவசித்தாந்த நூல்களில் ஒன்றான திருவருள் பயனை, கிறித்தவத்தோடு ஒப்பிட்டு மொழி பெயர்த்து, திருவாசக மொழிபெயர்ப்புக்கு முன்னர் வைத்து ஒரே நூலாக வெளியிட்டுள்ளார்.

ஆகவே, திருக்குறளுக்கும் சைவநூல்களுக்கும் விவிலியத் தோடுள்ள தொடர்பு 18-ஆம், 19-ஆம் நூற்றாண்டுகளில் தமிழகத் திற்கு வந்த ஐரோப்பியக் கிறித்தவர்களால் எடுத்துக் காட்டப் பெற்றுள்ளது.

தமிழகத்திற்கு வந்து சைவசித்தாந்தத்தைப் படித்த மேலை நாட்டு அறிஞர்கள், சைவசித்தாந்தத்திற்கும் கிறித்தவத்திற்கும் உள்ள தொடர்பைக் கூறுவது போன்று, மேலைநாட்டுக் கிறித்தவ நூல்களை அறிந்த சைவப் பெரியாரான மறைமலையடிகள், ''சைவ சித்தாந்தத்திற்கும் மேலைநாட்டாசிரியர்களில் எத்தனையோபேர் சைவசித்தாந்தத்தோடு ஒத்த கோட்பாடுகளை விளக்கி எழுதி இருக்கின்றார் - விளக்கி எழுதி வருகின்றனர்''[45] எனக் கூறுகின்றார்.

இவ்விருவகை கூற்றுகளும் விவிலியத்திற்கும் திருக்குறள், சைவசித்தாந்தம் இவைகளுக்கும் இடையே உள்ள கருத்து ஒற்றுமையை விளக்குவனவாகக் கொள்ளலாம்.

ஆகவே விவிலியம், திருக்குறள், சைவசித்தாந்தம் இவை மூன்றையும் ஒப்பிட்டு ஆராயவேண்டியதின் அவசியம் வெளிப் படுவதுடன், அவ்வாய்வு புதிய உண்மைக்கு நம்மை நடத்திச் செல்லும் என்பதும் வெளிப்படுகிறது.

வரலாற்று ஒழுங்கின்படி ஏறத்தாழ கி.மு. 12-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. இரண்டாம் நூற்றாண்டு வரை, பல்வேறு வகையான காலம், இடம், சூழல் முதலியவற்றால், மாறுபட்ட மனிதர்களால் எழுதப்பட்ட, பல்வேறு நூல்களின் தொகுப்பாகிய விவிலியத்தை முதலில் நோக்குவோம்.

---

the most deplorable superstitions anywhere to be found. Here the truth of the old maxim is abundantly verified, ' Corruption optimi pessima. '

- Rev. G. U. Pope, The Tiruvacagam, P. XXXIV.

45. மறைமலையடிகள், சிவஞானபோத ஆராய்ச்சி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1971, ப. 264.

# 2. விவிலியம்

**விவிலியம்—பெயர்க்காரணம்**

எகிப்திலுள்ள நீல நதிக்கரையில் வளர்ந்த 'பப்பய்ரஸ்' என்னும் ஒருவகை நாணற்புற்களால் செய்யப்பட்ட வரைதாள்களில் எழுதப் பட்ட புத்தகங்கள் 'பிபிலியா' என்று கிரேக்க மொழியில் பெயர் பெற்றன. பீபிலியா என்னும் கிரேக்கச் சொல்லே ஆங்கிலத்தில் பைபிள் எனவும் தமிழில் விவிலியம் எனவும் வழங்கப்படுகின்றது.

நாணற்புல்லின் பெயர், அதில் எழுதப்பட்ட நூல்களுக்குப் பொதுப் பெயராகிப் பின்னர் நூல்களில் சிறப்புடையதெனக் கருதப் பட்ட கிறித்தவத் திருமறைக்குச் சிறப்புப் பெயர் ஆயிற்று.

**ஆபிரகாம் வழி ஆசீர்வாதம்**

கிறித்தவத்தைத் தோற்றுவித்தவர் இயேசு கிறித்து. இவர் யூதர் குலத்தில் தோன்றினார். யூதர்கள், இசுரவேலரின் பன்னிரு கிளைகளை உருவாக்கிய இசுரவேல் என்பவருடைய பிள்ளைகளில் ஒருவரான, யூதா என்பவருடைய பரம்பரையினர். இசுரவேல் என்பவருடைய தந்தைவழிப்பாட்டன், ஆபிரகாம் என்பவராவார். இந்த ஆபிரகாமை அவர் வாழ்ந்த 'ஊர்' என்னுமிடத்திலிருந்து கி.மு. 2000 அளவில் இறைவன் அழைத்து ஆசீர்வதித்து, அவர் வழியாக உலகம் முழுவதற்கும் ஆசீர்வாதம் கொடுக்கத் திட்ட மிட்டார் என்பதும், அந்தத் திட்டம் இயேசு கிறித்துவின் வழியாக நிறைவேற்றப்பட்டது என்பதும், விவிலிய நற்செய்தியின் விளக்க மாகவே விவிலியம் முழுவதும் அமைந்துள்ளது எனலாம்.

''உலகெங்கும் சென்று படைப்பிற்கெல்லாம் நற்செய்தியினை அறிவியுங்கள்'' (மாற்கு. 16:15) என உயிர்த்தெழுந்த இயேசு, தம் மாணவர்களுக்குக் கொடுத்த கட்டளையில் குறிப்பிடப்படும் நற்செய்தி, ஆபிரகாமுக்கு இறைவன் கொடுத்த வாக்குத்தத்தத்தின் நிறைவேற்றமே ஆகும்.

இயேசுவின் மாணவர் பன்னிருவரில் ஒருவரான தோமா, இறைவன் கொடுத்த வாக்குத்தத்தத்தின் நிறைவேற்றமாகிய நற் செய்தியினைத் திராவிட மக்களிடையே பரப்பியுள்ளார்.

## திராவிடப் பண்பாடும் ஆபிரகாமின் சுமேரியப் பண்பாடும்

திராவிடப் பண்பாட்டிற்கும், ஆபிரகாம் வாழ்ந்த 'ஊர்' என்ற பெயரையுடைய நகரம் இருந்த சுமேரியப் பண்பாட்டிற்கும் உள்ள, மிக நெருங்கிய தொடர்பு,வரலாற்று ஆசிரியர்களால் கூறப்படுகிறது.

திராவிடர்களுக்கும் ஆரியர்களுக்கும் இருந்த பண்பாட்டுத் தொடர்பைவிட, திராவிடர்களுக்கும் ஆபிரகாம் வாழ்ந்த 'ஊர்'[1] நகரம் அமைந்திருந்த சுமேரியருக்கும் இருந்த பண்பாட்டுத் தொடர்பு மிகமிக நெருங்கியதென்பது ஆய்வாளர்களின் கருத்து. அவைகளை நோக்குவோம்.

"திராவிட நாகரிகம் சுமேரியர் வாழ்ந்த மெசபெடோமியாவுக்குச் சென்றது. பாபிலோனிய நாகரிகமும் மற்றும் பிற நாகரிகங்களும் அதனிடத்தினின்றும் தோன்றின."[2]

தற்காலக் கருத்துப்படி, கடல்வழியாகவும் தரைவழியாகவும் தமிழர்கள் மெசபெடோமியப் பள்ளத்தாக்கில், மிகப்பழங் காலத்திலேயே குடியேறிய அப்பகுதிகளில் சுமேரிய நாகரிகத்தைத் தோற்றுவித்தனர் என்கின்றார் H. R. ஹால் என்பவர். சுமேரிய இனத்து மக்களின் சிலைகளும், ஓவியங்களும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளினின்றும் முற்றிலும் வேறுபட்டதாய் இருப்பதுடன், அவர்களது மொழி செமித்திய, ஆரிய அல்லது பிற மொழிகளினின்றும் வேறுபட்டதாய் இருக்கின்றது. அவர்கள் ஐயத்திற்கு இடமின்றி இந்திய இனத்தினரின் மாதிரியாகவே உள்ளனர். இப்பொழுது இந்தியாவில் உள்ள ஒரு சராசரி இந்தியனின் முக அமைப்பு, ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட திராவிடப் பழங் குடியினரின் முக அமைப்போடு சிறிதும் ஐயத்திற்கு இடமின்றி ஒத்திருக்கின்றது.

இந்தியாவின் இத்தகைய திராவிட இனத்தவரோடு சுமேரியர்கள் பெரும்பான்மையும் ஒத்துள்ளார்கள். இதனை அவர்களது எழுத்து மூலச்சான்றுகளினின்றும் நாம் அறியலாம். (இப்பொழுதும் திராவிட மொழிகளையே பேசிக்கொண்டிருக்கும்) தக்காணத்திலுள்ள தென் இந்தியரைப்போன்றே அவர்கள் பெரிதும்

---

1. ஆதி. 11:31

2. குமாரஸ்வாமிஜீ—வீர சைவம் - கீழை மேலை நாடுகளின் மெய்ப் பொருள் இயல் வரலாறு - மொழிபெயர்ப்பு - அண்ணாமலைப் பல்கலைக் கழகம் - 1970 - பக். 722

உள்ளனர். சுமேரியர் என்பவர் இந்தியப் பழங்குடியினரே என்பதும், அவர்கள் கடல்வழியாகவும் நிலவழியாகவும், பெர்சியாவின் வழியாக இரண்டு ஆற்றுப் பள்ளத்தாக்குகளுக்கும் சென்றிருப்பர் என்பதும் நடந்திருக்கக்கூடாததொன்று அன்று. இந்த வாக்கியத்திலுள்ள கடல், நிலம் என்னும் சொற்களுக்கு, அவர் தமது அடிக்குறிப்பில், தற்பொழுது பலுசிஸ்தானத்தில் திராவிட மக்கள் பிராஹுயினராக உள்ளனர் என்றும் தென் பெர்சியாவில் திராவிட இனத்தவர் இருப்பதாக அறியப்பட்டுள்ளது என்றும் தென் பெர்சியாவில் ஆரியரல்லாத பழங்குடியினரும் (கிரேக்கரின் அனாரியாக்கி என்ற பிரிவினர்) அதே திராவிட இனத்தினருடன் ஒத்திருப்பதோடு, பாபிலோனியாவையும் இந்தியாவையும் இணைக்கின்றனர் என்றும் கூறுகின்றார்.

ஹால் எழுதிய 'பழங்காலத்தின் நேர்ச்சான்றுகள்' என்ற புத்தகம் வெளியிடப்பட்ட 12 ஆண்டுகட்குள் ஹரப்பா, மொகஞ்சதாரோவில் செய்த ஆராய்ச்சிகளின் பயனாக அவருடைய கொள்கைகள் பொருத்தமானவை என்பதும், அவர் பார்வையில் எவையெல்லாம் 'நிகழக்கூடியவையாக' இருந்தன என்று குறிப்பிட்டாரோ அவை உண்மையாகவே நிகழ்ந்தவையாக இருக்கின்றன என்பதும் கண்டுபிடிக்கப்பட்டது. அவர் கூறியபடி எழுத்துகளின் படியுருவங்கள் கண்டுபிடிக்கப்பட்டதுடன், அதிகமான வரலாற்றுச் சின்னங்களும் வெளியாக்கப்பட்டன.... செம்மையற்ற கரடு முருடான வேலைப்பாடமைந்த சில சிற்பங்களும் பழமையான உருவங்களும், மொஹஞ்சதாரோவில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. "மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த மூக்கும், களிமண்ணால் செய்யப்பட்ட தட்டையான குமிழிகளான கண்களும் மெசபெடோமியாவிலுள்ள மிகப்பழங்காலச் சிற்பங்களின் உருவங்களை ஒத்துள்ளன."

சிந்துவெளிக்கும் சுமேரியாவிற்குமிடையே தொடர்பு இருந்திருக்குமானால், இந்த இரண்டு மாவட்டங்களுக்கும் தென் இந்தியாவிற்குமிடையே உறுதியாக மிகப்பெரிய அளவில் தொடர்பு இருந்திருக்கும். சேஸ் என்பவரால் இரு உண்மைகள் இதற்குச் சான்றாகக் குறிக்கப்பட்டுள்ளன. ஒன்று, 'ஊர்' என்ற இடத்திலுள்ள சிதைவடைந்த தேக்கு மரம். இந்த 'ஊர்' என்ற இடமே கி. மு. 4000 ஆண்டுக்கு முற்பட்ட சுமேரிய அரசர்களின் தலைநகரமாகும். மற்றொன்று, பாபிலோனிய துணிவகைகளுள் சிந்து, மஸ்லின் போன்ற வார்த்தைகள் காணப்படுவது ஆகும். மஸ்லின் என்னும் வார்த்தை பெர்சியா வழியாக மெசபெடோமியாவிற்குச் சென்றிருக்க இயலாது என்பதை மஸ்லின் (Muslin) என்னும்

வார்த்தையிலுள்ள 'S' என்னும் எழுத்து நிரூபிக்கின்றது. எப்படி யெனில், பெர்சியர்களின் மாதங்களில் 'S' என்ற எழுத்து 'h' ஆக மாறியிருக்கும். இந்த நாட்டின் பெயரும் (Sind) சிந்து நதியிலிருந்தே (Hind) ஹிந்துவாக மாறி பெயரிடப்பட்டுள்ளது. எனவே, இதிலிருந்து மஸ்லின் என்ற வார்த்தை தமிழ்க் கடற் கரையிலிருந்து நேராகப் பெர்சியக் கடற்கரைக்குச் சென்றிருக்கும் என்று நான் கருதுகிறேன். பாபிலோனிய வார்த்தையான மஸ்லி னுக்குப் பதிலான 'சிந்து' என்ற வார்த்தையும் ஆற்றின் பெயரி லிருந்து பெறப்பட்டிருக்காது (அவர் கூறியது போன்று). ஆனால், பழைய 'சிந்தி' என்னும் திராவிடச் சொல்லிலிருந்தே பெறப் பட்டிருக்கும் 'சிந்து' என்னும் வார்த்தை இப்பொழுது துளுவிலும் கன்னடத்திலும் உள்ளது. இதன் பொருள் 'துண்டுத் துணி' என்பதாகும். இது தமிழில் கொடி என்னும் பொருளில் சிந்து என்னும் சொல்லாகக் குறிக்கப்படுகின்றது.[3]

கி.மு. 4000 ஆண்டுகட்கு முன்பே பண்டைத் தமிழர் சிறந்த கடல்வழிப் பயணிகளாகவும், உலகச்சுற்றுநராகவும், நீண்டநாள் பிரயாணம் மேற்கொள்பவராகவும் இருந்தனர். சுமேரியாவிற்குத் தமிழர் வருகை தந்துள்ளனர் என்பது, சுமேரியாவிலுள்ள நகரம் ஒன்றிற்கு ஊர் (Ur) என்னும் பெயர் இருப்பதிலிருந்து தெரி கின்றது. இந்த வார்த்தை, தமிழ்ச் சொல்லான 'ஊர்' (Ur) என்பதிலிருந்து பெறப்பட்டதாகும். மொழியியல் சார்ந்த தொல் பொருள் ஆராய்ச்சியின் மூலம், பல தமிழ்ச் சொற்கள் சுமேரியாவில் பயன்படுத்தப்படுவது வெளிப்படுத்தப்பட்டுள்ளது. (எ-டு) பானை (Pot), நாள் (Day), ஏர் (Plough), கொல்லன் (Ironsmith), உழவன் (Tiller), தச்சன் (Carpenter), ஆயன் (Priest). God என்பது தமிழில் கடவுள் (Kadavul). பழந்தமிழில் இயவுள் (Eyavul) எனப்படும். இதனைச் சுமேரியர்கள் தொகுத்து இயா (Eya) என்கின்றனர். தமிழில் இயவு என்பது வழியையும் மனிதருக்கு நல்வழியைக் காட்டுகின்ற இறைவனையும் குறிக்கின்றது.[4]

ஜான் மார்ஷல் என்பவர் ''சுமேரிய முத்திரைகளில் மொஹஞ்ச தாரோவில் காணப்படுவதைப் போன்று உயரமான காளை, அமர்ந்துள்ள குரங்கு, புலியோடு போர்புரியும் வீரன், திரி

3. P. T. Srinivasa Iyengar - History of the Tamils - Asian Educational Service - 1982. P. 36 - 39.

4. V. G. Ramachandran - Siva Around the World - The International Society for the Investigation of Ancient Civilization - 1983 - P. 34, 35.

சூலத்தோடு சிவன் ஆகியவை காணப்படுவதோடு சிதைந்த சிவன் கோவில்களும் சுமேரியாவில் காணப்படுவதைத் தமது ஆராய்ச்சியின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். சுமேரியா என்னும் வார்த்தை 'சு-மேரு' என்பதிலிருந்தே பெறப்பட்டுள்ளது. ஆப்கானிஸ் தானத்தில், பெரிய மேரு இறைவனின் இருப்பிடமாகக் கருதப் படுகின்றது.

திரு கல்யாணராமன் என்பவரும் 'சுமேர்' என்னும் வார்த்தை, 'சு - மேரு' என்பதிலிருந்தே பெறப்பட்டிருக்கும் என்று கருது கின்றார். இவர்கள் இந்தியரின் வழித்தோன்றல்களே. இவர்கள் ஏறக்குறைய கி.மு. 3500-ல் அவ்விடத்தில் குடியேறியவர்களே. மேலும், சிலர் பழமையான இலெமூரியாக் கண்டத்தினின்றும்-குமரிக் கண்டத்தினின்றும் சென்றுள்ளனர். மற்றும் பெருவெள்ளம் காரணமாகத் தமிழர் பலர் மத்திய ஆசியாவை நோக்கிப் படகின் மூலம் சென்றனர். சிலர் எகிப்தின் மேற்குப் பகுதிக்கும், ஆப்பிரிக்கா வுக்கும் சென்றனர். இத்தமிழர்கள் தங்களது பண்பாட்டையும், பழக்கவழக்கங்களையும் சுமேரியாவிற்கு எடுத்துச் சென்றனர். தமிழில் 'மேரு மலை' சிவனின் இருப்பிடமாகக் கருதப்படுகிறது. மற்றும் தமிழகத்தில் மேரு மலை ஒன்று உள்ளது. தமிழர்களைப் போன்றே சுமேரியருக்கும் திங்களை (lunar) அடிப்படையாகக் கொண்ட ஆண்டுக் குறிப்பேடு உண்டு.''[5]

''ஊர் என்னுமிடத்தில் 'மலைமகள்' என்று வழங்கிய இறைவியை மக்கள் வழிபட்டார்கள். அந்த இறைவிக்கும் நிலாக் கடவுளுக்கும் ஆண்டுதோறும் அங்குத் திருமண விழா நடை பெற்றது. கடவுளைத் தாயாக வழிபடும் அந்த மரபிற்கும், பார்வதியை (மலைமகளை) பல்வேறு வடிவங்களில் இந்திய மக்கள் வழிபடும் மரபிற்கும் நெருங்கிய தொடர்பு இருக்கிறது. பண்டைய சுமேரியாவில் இருந்த கோயில்களில் நடைபெற்ற வழிபாட்டு முறைகளுக்கும், தென்னிந்தியாவில் இன்று வரைக்கும் வழக்கி லிருக்கும் வழிபாட்டு முறை, கோயிலின் அமைப்பு முறை ஆகிய வற்றிற்கும் பல ஒற்றுமைகள் இருக்கின்றன.''[6]

மேற்கண்டவைகளிலிருந்து திராவிட நாகரிகம் சுமேரியர் வாழ்ந்த மெசபெடோமியாவிற்குச் சென்றது என்பதும், பாபி

---

5. V. G. Ramachandran - Siva Around the World - The International Society for the Investigation of Ancient Civilization - 1983 - P. 34-35.
6. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி - தென்னிந்திய வரலாறு(முதல்பகுதி) தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1973 - பக். 103.

லோனிய நாகரிகமும் மற்றும் பிற நாகரிகங்களும் அதனிடத்தி னின்றும் தோன்றின என்பதும் பெறப்படுகின்றன.

ஆகவே, சுமேரியரின் தலைநகராகிய 'ஊர்' என்றவிடத்தி லிருந்து கானான் நாட்டுக்குச் சென்ற[7] ஆபிரகாம் அல்லது இப்ராகிம் என்பவர் திராவிடரின் வழிவந்தவர் என்பதாகிறது.

திராவிடரின் சிந்துவெளி நாகரிகம், அதன் கிளையான சுமேரிய நாகரிகம், அவைகளின் சமகாலத்ததாகிய எகிப்திய நாகரிகம் ஆகிய மூன்று நாகரிகங்களையும் இணைக்கும் இணைப்புப் பாலமாக ஆபிரகாம் விளங்குகின்றார் எனலாம்.

ஆபிரகாமுக்கு மூன்று மனைவியர் இருந்தனர் என விவிலியம் கூறுகிறது. சாராள், சுமேரிய நாகரிகத்தைச் சேர்ந்தவள்[8] எனவும் ஆகார், எகிப்து நாகரிகத்தைச் சேர்ந்தவள்[9] எனவும் கேத்தூராள், சிந்துவெளி நாகரிகத்துடன் இணைந்தவள்[10] என்பதைப் போலவும் விவிலியத்தில் குறிப்புகள் காணப்படுகின்றன.

ஆபிரகாமிலிருந்து பல இனங்கள் தோன்றியதாக விவிலியம் கூறுகின்றது. ஆபிரகாமின் முதல் மகன் இஸ்மவேல். இஸ்மவேலின் சந்ததியினர் இஸ்மவேலர். ஆபிரகாமின் இரண்டாம் மகன் ஈசாக்கு. ஈசாக்குக்கு ஏசா, யாக்கோபு என இரு புதல்வர். ஏசாவின் சந்ததி யினர் ஏதோமியர். யாக்கோபின் மறுபெயர் இஸ்ரவேல். இஸ்ர வேலின் சந்ததியினரே இஸ்ரவேலர். இஸ்ரவேலரில் ஒரு பிரிவினர் யூதர்.

ஆபிரகாமுக்குக் கேத்தூராள் என்ற பெயருடைய மனைவியின் வழியாக 6 பிள்ளைகள் இருந்தனர். அவர்களிடமிருந்தும் பல இனங்கள் உருவாயின. ஆகவே, ஆபிரகாமிலிருந்து பல இனங்கள் உருவாயின. அவ்வினத்தவர்களில், பெரிய சமயங்கள் எழக் காரணமாயிருந்தவர்கள் இஸ்மவேலர், யூதர் என்ற இரு இனத்தினராவர். யூதர்களின் வழியாக யூத சமயமும், கிறித்தவ சமயமும் எழுந்தன. இயேசுகிறித்து யூத சமயத்தில் தோன்றியவர்.

---

7. *ஆதியாகமம் 11:31*

8. *ஆதியாகமம் 11:31*

9. *ஆதியாகமம் 16:1*

10. *ஆதியாகமம் 25:6*

இஸ்மவேலரில் தோன்றிய முகமதுநபி யூத சமயம், கிறித்தவ சமயம் ஆகிய இரண்டையும் ஆதாரமாகக் கொண்டு, இசுலாமிய சமயத்தை உருவாக்கினார்.

ஆகவே, ஆபிரகாமிலிருந்து பல இனங்கள் உருவானதைப் போன்றே, யூத சமயம், கிறித்தவ சமயம், இஸ்லாமிய சமயம் ஆகிய மூன்று சமயங்களும் உருவாயின.

இம்மூன்று சமயங்களும் கொள்கைகளால் வேறுபட்டு விளங்கிய போதிலும், இவைகளுக்குப் பொதுவான சமய அடிப்படையைக் கொடுத்த பெருமை ஆபிரகாமையே சாரும். தாங்கள் கடவுளால் தேர்ந்தெடுக்கப்பட்ட இனம் எனவும் கடவுளால் வெளிப்படுத்தப் பட்ட கொள்கை தங்களுக்கு உண்டு எனவும் கூறுவர். இவை மூன்றும் உரிமை பாராட்டுவதற்குக் காரணமாக இருப்பவர் ஆபிரகாம் ஆவார்.

ஏனெனில், ஆபிரகாமைக் கடவுள் அழைத்து, அவருக்குத் தெளிவான வாக்குறுதிகளைக் கொடுத்து, அவரையும் அவருடைய சந்ததியினரையும் எல்லா வழிகளிலும் ஆசீர்வதித்து வழிநடத்தி வருகிறார் என்பது, இம்மூன்று சமயத்தினரின் நம்பிக்கையாகும். ஆபிரகாமின் வழியாக உலகம்முழுவதும் ஆசீர்வாதத்தைப் பெற்றுக் கொள்ள, இறைவன் உலக வரலாற்றில் செயல்பட்டு வருகிறார் என்பது இவர்களுடைய நம்பிக்கை.

ஆபிரகாமிலிருந்து இஸ்மவேலர், ஏதோமியர், இஸ்ரவேலர், யூதர் முதலிய இனங்களும், யூத சமயம், கிறித்தவ சமயம், இசுலாமிய சமயம் முதலிய சமயங்களும் தோன்றியுள்ளன.

### கோயில் வழிபாடு

ஆபிரகாமின் பெயரரான இசுரவேல் எனப்பட்ட யாக்கோபு, கானான் தேசத்தில் வாழ்ந்தபோது, அவன் வாழ்க்கையில் சில நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

அவன் சீரியா நாட்டானாகிய தனது மாமனிடத்திற்குப் போகப் புறப்பட்டு வழி நடந்து, இரவு ஓர் இடத்திலே தங்கியபோது, அவனுக்கு ஏற்பட்ட அனுபவம் அந்த இடத்தைக் கோயிலாகக் காணுமாறு அவனைத் தூண்டியது (ஆதி. 28:10-22).

'கடவுள் வீடு' என்றாலும் 'கோயில்' என்றாலும் பொருள் ஒன்றே. விவிலியத்தில் முதன்முதலில் 'கடவுளின் வீடு' அல்லது 'கோயில்' என்னும் கருத்து விளக்கத்தையும் (ஆதி. 28:16-17). அங்கு யாக்கோபு தலைக்கு வைத்துப் படுத்த கல்லை எடுத்து நினைவுத் தூணாக நிறுத்தியதையும், அதன்மேல் எண்ணெய், பானபலி முதலியவற்றை ஊற்றி இறைவனை வணங்கியதையும் நாம் காணுகின்றோம் (ஆதி. 28;16-22; 35:14).

''நான் நினைவுத் தூணாக நாட்டிய இந்தக் கல்லே 'கோயில்' எனப்படும். மேலும், நீர் எனக்குத் தரும் எல்லாவற்றிலும் நான் பத்தில் ஒரு பங்கு உமக்குச் செலுத்துவேன் என்று நேர்ந்து கொண்டான்'' (ஆதி. 28:22).

இவ்வாறு 'நினைவுத் தூண்' நாட்டிக் கடவுளை வணங்கிக் கொள்ளுவதை இசுரவேல் வரலாற்றில் பிற்காலங்களிலும் நாம் பார்க்கின்றோம் (யோசுவா 24:26, 1 சாமு. 7:12, ஆதி. 28:11-22; 31;44-53; 31:13, 35:14).

இவ்வாறு நாட்டப்பட்ட நினைவுக் கற்கள் கடவுளருக்கும் மனிதருக்கும் இடையே சான்றாக விளங்குகின்றன எனவும், அவற்றிற்குக் கேட்கும் ஆற்றல் உண்டு எனவும் இசுரவேலர் நம்பினர்.[11]

தமிழகத்தின் மிகப் பழங்கோயிலாகக் கருதப்படும் தில்லையிலுள்ள கனகசபையின் கோயில் அமைப்பு, யாக்கோபு தொடங்கி வைத்த கோயில் வழிபாட்டின் விரிவே என்பது கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் கருத்து.[12]

---

*11. ''யோசுவா ஒரு பெரிய கல்லை எடுப்பித்துப் புனித இடத்திற்கு அருகிலிருந்த தெரெபிந்த் என்ற ஒரு மரத்தின்கீழே அதை நாட்டினார். பின்னர் எல்லா மக்களையும் பார்த்து, 'இதோ இக்கல் ஆண்டவர் உங்களுக்குச் சொல்லியிருக்கிற எல்லா வார்த்தைகளையும் கேட்டிருக்கின்றது. நீங்கள் எப்போதாவது அவற்றை மறுத்து உங்கள் ஆண்டவராகிய கடவுளுக்கு எதிராகப் பொய் சொல்லத் துணிவீர்களேயானால், இக்கல் உங்கள் நடுவில் உண்மைக்குச் சான்றாக விளங்கும் என்றார்'' (யோசுவா 24:26-27).*

*12. ''பைபிளில் யாக்கோபு என்பவன் காட்டு வழியிற் சென்றபோது தான் தெய்வக் கனவு கண்ட இடத்தில் ஒரு கல்லை நட்டு, அதற்கு கடவுள் வீடென்று பெயர் கொடுத்து அதன்மீது எண்ணெய் சொரிந்தானென்று கூறப்பட்டுள்ளது. தெய்வக் கல்லின் மீது வெயில், மழை படாதபடி கொட்டகைகள் போட்டு, வழிபடுவோ*

ஜி. யு. போப்பும் தில்லையிலுள்ள இலிங்க வழிபாட்டையும், யாக்கோபு நாட்டிய நினைவுத் தூணையும், ஒற்றுமையுடையன எனக் காணுகின்றார்.[13]

"திணை, பால் ஏதும் அறியமுடியாதபடியும் உருவம், அருவம் என வரையறை செய்துகொள்ளவியலா வண்ணமும் விளங்குவது சிவலிங்கம்" என்பார் தயானந்தன் பிரான்சிஸ்.[14]

சைவத்திலுள்ள இலிங்க வழிபாடும், யாக்கோபு பெத்தேலில் நாட்டிய நினைவுத் தூணும், இசுலாமியர் மெக்காவில் சிறப்பாகக் கொண்டாடும் காபா என்னும் கறுப்புக் கல்லும், ஒரே பொருளையே குறிப்பதற்குத் தோன்றின என்பது ஆராய்ச்சியாளருடைய கருத்து.[15]

ஆகவே, உலகப் பெரும் சமயங்களினூடே புகுந்து, அவைகளை ஒன்றாகக் கோத்து இணைக்கும் இழையாக யாக்கோபு நாட்டிய நினைவுத் தூண் விளங்குகிறது எனலாம்.

---

ருக்கும் சுற்றி வருவதற்கும் இடம் அமைத்தபோது மலையாளத்து அம்பலம் போன்ற கோயில்கள் அமைந்திருக்க வேண்டும். தில்லையிலுள்ள கனகசபையில் அத்தகைய கோயில் அமைப்பே காணப்படும்."

- கா. சுப்பிரமணியபிள்ளை, தமிழர் சமயம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1977, ப. 52.

13. " At Cithambaram is one the Prencipal lingams, generally enumarated as twelve. It is celled the 'Air - Lingam' and is now invisible. This worship of God (Generally some local deity) in connection with a stone or pillar, as marking a sacred spot, is found everywhere in ancient records. See Genesis XXVIII, and Dr. Charles, Eschatology. "

- G. U. Pope, The Thiruvasagam; P. XI; Foot Note No. 11.

14. தயானந்தன் பிரான்சிஸ், தமிழ்ச் சைவம், கிறித்தவ இலக்கியச் சங்கம், 1972, ப. 32.

15. "சேஸ் என்னும் ஆராய்ச்சி அறிஞரின் கூற்று பின்வருமாறு: யூதரின் பெத்தேல் (Bethal) அல்லது 'கடவுளின் வீடு' புனிதமான கல்லாக விருந்தது. அது கடவுளின் ஆவி உறையும் இடமாக மாத்திரம் கருதப்படவில்லை. அது கடவுளாகவே கருதப்பட்டது. (The sacred stone was Bethel or house of God, no habitation of mere spirt, but the dwelling place of deity itself.)

**கன்றுக்குட்டி — பலிபீடம்**

யாக்கோபு 'கடவுள் வீடு' (பெத்தேல்) எனக் கண்டு நினைவுத் தூண் நாட்டிய இடமாகிய பெத்தேலிலே, மக்கள் வழிபடும்படியாகக் கன்றுக்குட்டியை 'எரோபெயாம்' என்னும் இசுரவேல் அரசன் அமைத்தான் (1 அரசர். 12:28-33). அங்கே பலிபீடம் கட்டிக் கடவுளைத் தொழுதுகொண்டான்.

ஆகவே, இலிங்கம் போன்ற அடையாளத் தூண்,கன்றுக்குட்டி, பலிபீடம் ஆகிய மூன்றும் இசுரவேல் மக்கள் வழிபட்டு வந்த (கோயிலிலே) பெத்தேலிலே இருந்தன.

இசுரவேலர் வழிபட்ட இடபக்கன்று நந்தியாகும் என்பார் ந. சி. கந்தையா பிள்ளை.[16]

ஆபிரகாமின் மரபினரான இசுரவேல் மக்களிடம் காணப்பட்ட வழிபாடும், திராவிட நாட்டில் உள்ள சிவ வழிபாடும் ஒன்றே, என என்னும் மறைமலையடிகள் கருத்து வருமாறு:

''கிறித்தவ மறையின் முதற் புத்தகத்தில், எல்லாம் வல்ல முழு முதற் கடவுட்கு 'எலோகிம்' எனும் பெயரே நணி சிறந்ததாய்ச் சாலப் பழையதாய் எடுத்தாளப்பட்டிருக்கின்றது. இப்பெயர் 'எல' என்னுஞ் சொல்லிலிருந்து வந்ததெனக் கிறித்தவ வேத ஆராய்ச்சி வல்ல புலவோர் உரை கூறுகின்றார். அல்லதூஉம், மோசே என்னும் அடியவர்க்கெதிரே கடவுள் தோன்றி, 'யான் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் எதிரே காட்சி தந்தபோது,

---

இக்கற்கள் செமித்திய மக்களுக்கும் அவர்கள் கிளையினருக்கும் புனிதமுடையன. மெக்காவிற் காணப்படும் காபா எனப்படும் கறுப்புக்கல் இவ்வுண்மைக்குச் சாட்சியளிக்கும் சான்றாகும். அராபிய மக்கள் இக்கல்லின் மேல் அளவுகடந்த கடவுள் பக்தி கொண்டிருந்தார். ஆதலின் மகமது அதனை அழித்துவிட முடிய வில்லை. ஆகவே அவர் அதனை விவிலிய மறையின் பழைய ஏற்பாட்டுக் கதைகளோடு தொடர்புபடுத்தி அதனைப் புனிதமுடைய தாக்க் கொண்டார்.''

- The Herbert Lectures, 1887, Origin and Growth of Religion, Ancient Babylon, P. 408, A.H. Saycs.

16. ந. சி. கந்தையா பிள்ளை, சிவன்; சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1953, பக். 44.

எல்சடை என்னும் பெயராற்றோன்றினேன்' என்று அருளிச் செய்த சொற்றொடரில் எல் என்னும் பெயரே நன்கு காணக்கிடக்கின்றது.

'எல்சடை' என்னும் பெயரிற் கண்ட 'சடை' என்னுஞ் சொல்லுஞ் சிவபெருமாற்குச் சிறந்த பெயராகத் தமிழ்நாட்டில் வழங்குஞ் 'சடையன்' என்னும் சொல்லும் ஒன்றாயிருத்தல் பெரிதும் நினைவுகூரற்பாலதாகும். மேலும், யாக்கோபு என்னும் அடியவர் இறைவனருளை நேரே பெற்று, அவனைத் தொழுகுறியாக ஒரு குவிந்த கல்லினை நிறுத்தி, அதன்மேல் எண்ணெய் சொரிந்து அதனைப் பீத்தெல் அல்லது முதல்வன் இருக்குமிடம் (கோயில்) என்று பெயரிட்டு வழிபாடாற்றி வந்தமையும், ஆன் என்னும் ஊரிலிருந்த பகலவன் கோயில்கள் ஆன்கன்றினை (நந்தியை) இசுரவேல் மரபினர் வணங்கி வந்தமையும், பலிபீடங்களின்மேற் குன்றாத்தீ வேட்டு வழிபட்டமையும், இசுரவேல் மரபினரின் குருமார்கள் ஒளிவடிவின் அடையாளமான குவிந்த மணிக் கற்களை மார்பிற் கட்டிக்கொண்டிருந்தமையும் (சிவலிங்கதாரணம்) ஆராய்ந்து பார்க்கும் நடுநிலையாளரெல்லாம் கிறித்தவ சமயத்தினர் தம் முன்னோர் செய்து போந்த முதற் கடவுள் வழிபாடும் தமிழ் நாட்டினர் செய்து போதருஞ் சிவ வழிபாடும் ஒன்றேயாம் என்று உணராமற் போவாரோ.''[17]

**பழைய ஏற்பாடும் புதிய ஏற்பாடும்**

விவிலியம் பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு என்னும் இரு பகுதிகளை உடையது. கிறித்தவச் சமயம் தோன்றுவதற்குக் காரணரான இயேசு கிறித்து, இசுரவேல் சமயத்தில் தோன்றிய ஓர் இசுரவேலர்.

இயேசு கிறித்து பிறப்பதற்கு முற்பட்ட இசுரவேலருடைய 1500 வருடகால வரலாற்றையும், அவர்கள் கடவுளைப் புரிந்து கொண்ட தன்மையையும், அவர்களுடைய சமயக் கோட்பாடு களையும் எடுத்துரைக்கும் பகுதி பழைய ஏற்பாடாகும்.

கிறித்தவ சமயம் இசுரவேலர் சமயத்தின் நிறைவு எனப்படு கிறது. கிறித்தவ சமயம் தோன்றக் காரணரான இயேசு கிறித்துவின் வாழ்க்கை வரலாற்றையும், அவர் வழியாக உலகுக்குக் கொடுக்கப்பட்ட மீட்பின் நற்செய்தி உலகம் முழுவதும் பரவிய வரலாற்றையும் விளக்கிக் கூறும் பகுதி புதிய ஏற்பாடாகும்.

---

17. மறைமலையடிகள், சிவஞானபோத ஆராய்ச்சி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1971; பக். 155-157.

"பழைய ஏற்பாட்டில் புதிய ஏற்பாடு மறைந்து கிடக்கின்றது. புதிய ஏற்பாட்டில் பழைய ஏற்பாடு விரிந்து கிடக்கின்றது" என்றார் ஓரிகென் (Origun). இவர் கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த கிறித்தவப் பெரியார் ஆவார்.

பழைய ஏற்பாடின்றி நாம் புதிய ஏற்பாட்டைப் புரிந்துகொள்ள இயலாது. அதேபோன்று புதிய ஏற்பாடின்றி நாம் பழைய ஏற்பாட்டின் சிறப்பையும் அறிந்துகொள்ள இயலாது. இயேசு கிறித்துவில் வெளிப்பட்ட கடவுள், பழைய ஏற்பாட்டில் செயலாற்றினார் என்கின்ற காரணத்தால்தான், பழைய ஏற்பாடு கிறித்தவர்களுக்குச் சிறப்புடையதாக இருக்கின்றது.[18]

**யூத சமயத் தோற்றம்**

இசுரவேலர் சமயம் பிற்காலத்தில் யூத சமயம் எனப் பெயர் பெற்றது. இசுரவேலர் சமயம் மிகநீண்ட வரலாற்றைக் கொண்டது. 'இசுரவேலர்' என்பதும் 'யூதர்' என்பதும், ஓர் இனத்தையும் அந்த இனத்தின் இறுதியில் எஞ்சி நின்ற ஒரு கிளையையும் குறிக்கும் பெயர்களாகும். இனம், அதன் கிளை ஆகியவற்றின் பெயர், அவை பின்பற்றிய சமயத்தின் பெயர்களாயின. அதனால், அந்த இனத்தின் வரலாறும் அது பின்பற்றியசமயத்தின் வரலாறும் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து காணப்படுகின்றன.

எந்தச் சமயமும் தகுந்த பின்னணி இல்லாமல் திடீரென்று தோன்ற இயலாது. உலக வரலாற்றில் சமயங்களின் தோற்றத்தை நாம் நோக்கும்போது, பழைய சமயங்களின் மறுமலர்ச்சியாகவே புதிய சமயங்கள் தோன்றுவதை அறியலாம். மேலெழுந்தவாரியாக அவை ஒன்றுக்கொன்று மாறுபட்டவையாகத் தோன்றியபோதிலும், அவைகளின் அடிப்படை இணைப்பையும் வளர்ச்சியையும் ஆயும் எவரும் அவைகளை எளிதில் கண்டுகொள்ள இயலும்.

கிறித்தவ சமயம் தோன்றுவதற்குக் காரணமாயிருந்த இசுரவேல் சமயம், இசுரவேலருக்கு முற்பட்ட பாபிலோனியர், எகிப்தியர், கானானியர் முதலிய இசுரவேலரோடு தொடர்புகொண்ட பழங்குடி மக்களின் சமயங்களோடு தொடர்புடையது ஆகும்.

---

*18.* சாமுவேல் அமிர்தம், பழைய ஏற்பாட்டு இறையியல், திருமறைத் தோழன் கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை, *1972*, பக். *188-189.*

"படைப்புப்பற்றிய கதைகளை எடுத்துக்கொள்ளலாம். பாபிலோனிய மக்களிடமிருந்தும் பிற மக்களிடமிருந்தும் இக்கதைகள் வந்திருக்கின்றன. இக்கதைகள் படைப்பை விவரிக்கும் விதத்தையும், திருமறை படைப்பை விவரிக்கும் விதத்தையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போதுதான், ஆதியாகமத்தின் தொடக்க அதிகாரங்களில் வெளிப்படுத்தப்பட்டுள்ள சத்தியத்தை, நாம் தெளிவாகப் புரிந்து கொள்ள இயலும்."[19]

"கானானிய சங்கீதங்களில் ஒன்றை யெகோவாவுக்குப் புகழ்ப் பாடலாக மாற்றியதுதான் 29-ஆம் சங்கீதம் எனவும், எகிப்திய பாடல் ஒன்றை எடுத்து, எபிரேய பக்திக்கு ஏற்ப மாற்றியதுதான் 104-ஆம் சங்கீதம் எனவும் ஆய்வாளர் கூறுகின்றனர். பாடல் முறைமையும் பாடல் கருத்துகளும் சில வேளைகளில் பிற சமயங்களினின்று ஏற்றுக்கொள்ளப்பட்டாலும், யெகோவா கடவுளின் தன்மைக்கும் வெளிப்பாட்டிற்கும் ஏற்ற முறையிலே மாற்றப்பட்டு, வழிபாட்டிலே பயன்படுத்தப்பட்டன"[20] என்பார் சாமுவேல் அமிர்தம்.

ஆபிரகாமின் பெயரரான யாக்கோபின் இறுதிக் காலத்தில், கானான் நாட்டில் வாழ்ந்த யாக்கோபின் குடும்பத்தினர், கானான் தேசத்தில் தோன்றிய வற்கடத்திலிருந்து விடுபட எகிப்து தேசத்திற்குச் சென்றனர். எகிப்து தேசத்தில் இசுரவேலர் 400 ஆண்டுகள் வாழ்ந்து பெருகியபோது, பெருந்திரளான இம்மக்களை எகிப்தியர் அடிமைகளாக நடத்தினர்.

எகிப்தின் அரண்மனையில் 40ஆண்டுகள் வளர்க்கப்பட்ட இசுரவேலரான மோசே முனிவர், 40 ஆண்டுகள் காடுகளில் அலைந்து அனுபவம் பெற்ற பின்னர், இசுரவேல் மக்களை எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து விடுவித்து, இசுரவேலரின் முன்னோருக்கு வாக்களிக்கப்பட்ட கானான் நாட்டிற்கு அழைத்துச் சென்றார்.

நாற்பது ஆண்டுகளாக நடைபெற்ற நீண்ட வழிநடைப் பயணத்தில், மோசே முனிவர், அவர்களுக்குக் கொடுத்த கட்டளைகள், இசுரவேலருக்குச் சமுதாயச் சட்டங்களாகவும் சமயச் சட்டங்களாகவும் மாறின.

---

19. வெஸ்லி நியுபிகின், திருமறையை படிப்பதெப்படி? - திருமறைத் தோழன், கிறித்தவ இலக்கியச் சங்கம், 1972, பக். 27.

20. சாமுவேல் அமிர்தம், பழைய ஏற்பாட்டு இறையியல். திருமறைத் தோழன், மேற்படி, பக். 188.

கானான் நாட்டில் இசுரவேல் மக்கள் வாழ்ந்து வருங்கால், பிற நாட்டார் அவர்களை வென்று அடிமையாக்கிய போதெல்லாம், தகுந்த தலைவர்கள் தோன்றி அவர்களை மீட்டனர்.

இசுரவேல் மக்களுக்குப் அரசர்கள் ஏற்படலாயினர். சவுல், தாவீது, சாலமோன் என்போர் இசுரவேல் மக்களை ஆண்டனர்.

சாலமோனின் காலத்திற்குப் பின்னர், இசுரவேலின் பன்னிரு கோத்திரங்களில் சவுல், தாவீது, சாலமொன் இவர்கள் தோன்றிய யூதா கோத்திரமும் பென்யமீன் கோத்திரமும் தனியாகவும், மற்றப் பத்துக் கோத்திரங்கள் தனியாகவும் பிரிந்து அரசு அமைத்தன.

யூதா கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் யூதர்கள் எனவும், மற்ற வர்கள் இசுரவேலர் எனவும் பிளவுபட்டு—யூதேயா நாடு, இசுரவேல் நாடு என இரு நாடுகள் தோன்றின.

இசுரவேல் நாடு அசீரியரின் படையெடுப்பால் கி.மு. 721-இல் அழிந்தது. இதன் விளைவாக இசுரவேல் குடும்பங்களும் சிதை வுண்டன.

இசுரவேலரின் பன்னிரு கோத்திரங்களில் யூதா கோத்திரமும் அது ஆட்சிபுரிந்த யூதேயா நாடும் மட்டுமே எஞ்சின. பொதுவான இசுரவேல் என்பது, யூதர் என்ற அளவுக்குச் சுருங்கிவிட்டது. இதன் பயனாக 'இசுரவேல்' என்பது 'யூதர்' எனவும் 'இசுரவேல் சமயம்' என்பது 'யூத சமயம்' எனவும் குறிக்கப்படலாயின.

பாபிலோன் அரசனாகிய நேபுகாத்நேசரால் கி.மு. 586-இல் யூதேயா நாடும் அதன் தலைநகரான எருசலேமும் அழிக்கப்பட்டு, யூதர்களும் சிறைக் கைதிகளாகப் பாபிலோனுக்குப் பிடித்துச் செல்லப்பட்டனர்.

## யூத இன வரலாற்றில் யூதத் திருமறையின் தோற்றம்

**இறைவன், தங்கள் இன முதல்வருடன் செய்திருந்த உடன் படிக்கையைப் பின்னர்த் தோன்றிய இனத் தலைவர்கள் மீறிய காரணத்தால், தாங்கள் அடிமை வாழ்வு வாழ நேரிட்டது என்பதை உணர்ந்து, பாபிலோனில் அடிமை வாழ்வு வாழ்ந்துவந்த யூதர்கள் விடுதலைக்காக இறைவனிடம் வேண்டினர்.**

கி.மு. 539-இல் கோரேசு என்னும் பாரசீக அரசன், பாபிலோனை வெற்றிகொண்டான். இவன், யூதர்கள் தங்கள் தாய் நாடான யூதேயா திரும்ப அனுமதி கொடுத்தான்.

அணி அணியாக யூதர்கள் தங்கள் தாய்நாடு திரும்பி, அதைப் புதுப்பிக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். புத்துணர்வுடனும் புது நோக்குடனும் செயல்படலாயினர்.

யூதர்களின் புனித இடமான எருசலேம் தேவாலயம், கி.மு. 520-இல் மீண்டும் கட்டப்படத் தொடங்கி, 516-இல் அதன் திருப்பணிகள் நிறைவுபெற்றன. யூத சமயம் புதுநோக்குடன் புத்துருவம் பெறத் தொடங்கியது.

தாய்நாட்டிற்குத் திரும்பிய யூதர்கள், இறைவன் தங்கள் இன முதல்வர்களுடன் செய்திருந்த உடன்படிக்கைகள், கொடுத்த கட்டளைகள், இன முதல்வர்கள், இனத்தலைவர்கள் போன்றோரின் வரலாறுகள் முதலியவற்றை அறிந்து கொள்ளவும் அவை பின்பற்றப்படவும் தங்கள் பரம்பரையினருக்கு அவைகளைத் தெரிவிக்க விரும்பினர்.

இதன் பயனாக யூத இன வரலாறும் அவ்வரலாற்றில் கடவுள் அவர்களை நடத்திய விதமும், புதிய கோணத்தில் எழுத்துருவம் பெறத் தொடங்கின. வரலாற்று நோக்கே சமய நோக்காயிற்று.

அதுவரை அவர்களுக்குக் கிடைத்த வாய்மொழிச் செய்திகள், வரலாற்றுச் செய்திகள், நாட்டுப்புறப் பாடல்கள், பழமொழிகள், பழங்கதைகள், முன்னோரின் எழுத்துகள் யாவும் தொகுக்கப்பட்டு முறைப்படுத்தப்பட்டன. இவ்வாறு தொகுக்கப்பட்டு முறைப் படுத்தப்பட்ட நூல்களே பின்னர் சமய நூல்களாக மாறின.

''சில சமயங்கள், தங்கள் நம்பிக்கைக்கு அடிப்படையான திருமறை நூல்களை உடன்கொண்டு தோன்றியுள்ளன. வேறு சில, தங்களது வளர்ச்சிக் காலத்தில் திருமறை நூல்களைத் தோற்றுவித்தன. சமய நிறுவனர்களில் சிலர் இம்மறை நூல்களைத் தோற்றுவித்தனர். சமய நிறுவனர்களில் சிலர் இம்மறை நூல்களை எழுதி, நம்பிக்கைக்கு அடிப்படையான நூல்கள் இவைகளே என வரையறுத்துச் சென்றதுண்டு; அவர்களது காலம் சென்றபின் நூல்கள் தோன்றி, பிற்கால இறைத் தொண்டர்களால் வரையறுக்கப்பட்டதுமுண்டு. இஸ்லாம் சமயத்தின் குர்ஆன் நூல் முதல்-

வகையைச் சார்ந்தது. யூத கிறிஸ்தவ சமயங்களின் விவிலியம், இரண்டாம் வகையைச் சார்ந்தது. மோசே முனிவரோ இயேசு பெருமானோ சமய நூல்களை எழுதி வைத்துச் செல்லவில்லை. (மோசேயின் காலத்தில் தோன்றிய சட்ட ஏடுகள் உண்டு) பழைய ஏற்பாட்டு நூல்கள், இசுரவேல் மக்கள் சமய வரலாற்றுக்கால அளவில் தோன்றினவை. அவை,சுமார் கி.மு. 10-ஆம் நூற்றாண்டு தொட்டு, கி.மு. இரண்டாம் நூற்றாண்டு வரை எழுதப்பட்டவை யாகும்.''[21] புதிய ஏற்பாட்டு நூல்களும் இயேசு பெருமானின் உயிர்த் தெழுதலுக்குப் பின், கி.பி. முதல் நூற்றாண்டில் எழுதப்பட்டன. எனவே, இச்சமயங்கள் நூல்களை ஆதாரமாகக் கொண்டு தோன்றாமல், சில வரலாற்று நிகழ்ச்சிகளின் அடிப்படையில் தோன்றின என்பது தகும்.

திருமறையெனும் தொகுப்பில் இடம்பெற வேண்டுமெனும் முன் நோக்கத்துடன், பழைய ஏற்பாட்டின் எந்த நூலும் எழுதப்பட வில்லை.

யூதத் திருச்சபையில் நெடுங்காலமாக இறைவழிபாட்டிலும், தனி பக்தி வாழ்க்கையிலும் இந்நூல்கள் பயன்படுத்தப்பட்டுச் சிறப் பிடம் பெற்றன. இவை உள்ளுணர்வு (Inspiration) பெற்றவை என நம்பப்பட்டன. கால வெள்ள ஓட்டத்தில், இவற்றில் சில திரு மறை நூல்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டன.

'பழைய ஏற்பாடு' என்னும் பெயர் கிறித்தவத் திருச்சபை வழங்கியதாகும். எபிரேய மொழி பேசி வந்த யூதர்கள், தங்கள் திருமறையைத் 'திருமறை' அல்லது 'வேதம்' என்ற பெயராலேயே குறிப்பிட்டனர். மற்றவர்கள் அதை யூதர்களுடைய திருமறை என்பதால் 'யூதத் திருமறை' எனவும் எபிரேய மொழியில் எழுதப் பட்டமையால் 'எபிரேயத் திருமறை' எனவும் குறிப்பிட்டனர்.

யூதத் திருமறை மூன்று பகுதிகளைக் கொண்டது.

1. தோரா (Torah) அல்லது சட்ட நூல்.
2. நபீம் (Nabi'im) அல்லது தீர்க்கர்.
3. கெதூபீம் (Kethubim) அல்லது திருவெழுத்துகள்.

---

21. அ.சாமுவேல் அமிர்தம்,பழைய ஏற்பாட்டுக் கனோன்;திருமறை தோழன், கிறித்தவ இலக்கியச் சங்கம், 1972, பக். 126.

**சட்ட நூல்கள்** (Torah)

“ஆரம்ப நூற்களில் அடங்கியுள்ள மிரியாமின் பாடல் (யாத். 15:21), தெபோராவின் பாடல் (நியா. 5), லாமேக்கின் பாடல்கள் (ஆதி. 4:23) போன்ற பகுதிகள் மிக மிகத் தொன்மை வாய்ந்தவை. (கி.மு. 13-12-ஆம் நூற்றாண்டு) உடன்படிக்கைச் சட்டம் (யாத். 21-23), வழிபாட்டுப் பத்துக் கட்டளை (யாத். 34:1-36), பத்துக் கட்டளைகள் (யாத். 20) போன்ற சட்டங்களும் தொகுப்புகளும் மிகப் பழமையானவை. இசுரவேல் மக்களின் பாரம்பரியங்களிலும் நினைவிலும் நிலவிவந்தனவும், சிறு ஏட்டுத் தொகுப்புகளாக அறியப்பட்டு வந்தனவுமான இவ்விதப் பாடல்கள், சட்டங்கள், உண்மைகள், பக்தி வரலாற்றுக் கதைகள், வரலாற்று நிகழ்ச்சிகள் ஆகியவற்றை முதலாம் C ஆசிரியர் குழாம் (எகோவா எனும் பெயரை ஒழுங்காகப் பயன்படுத்தியதால் இப்பெயர் பெற்றனர்) சுமார் கி.மு. 9-ஆம் நூற்றாண்டில் தொகுத்துத் தற்போதிருக்கும் ஐந்தாகம நூற்களின் அமைப்பை வகுத்தனர் என்று, ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். அதுபோன்று 8-ஆம் நூற்றாண்டில் E ஆசிரியர் குழாம் (எலோகிம் எனும் இறைப் பெயரைப் பயன்படுத்தியதால் இப்பெயர்), 7-ஆம் நூற்றாண்டில் D குழாம் (D. Deuteronomist - உபாகம நூல் ஆசிரியர்; 2 இரா. 22:8-இல் உபாகம நூல் கண்டெடுக்கப்பட்ட வரலாற்றைக் காண்க), 5-ஆம் நூற்றாண்டில் P ஆசிரியர் குழாம் (P. Priestly - ஆசாரியத்துவத்திற்கு முதலிடம் கொடுப்பதால் இப்பெயர்) ஆகியவர்கள் எழுதின வரலாறுகளும் அவைகளின் இறையியல் விளக்கங்களும் ஒன்றன்பின் ஒன்றாய்த் தொகுக்கப்பெற்றுப் பதிப்பிக்கப்பட்டுப் பஞ்சாகமங்கள் உருவெடுத்தன. கி.மு. 5-ஆம், 4-ஆம் நூற்றாண்டுவரை யளவில்தான் இந்த ஐந்து நூல்களும் தற்போதைய வடிவம் பெற்றுச் சட்டநூல்களென அங்கீகரிக்கப்பட்டன. என்றாலும் அவரைச் சேர்ந்த ஆசாரியரும் இதற்குத் துணையாயிருந்தனர்.[22] (எஸ்றா 7:14 நெகே. 8:1)

ஆதியாகமம், யாத்திராகமம், லேவியராகமம், எண்ணாகமம், உபாகமம் ஆகிய ஐந்து நூல்களும் சட்ட நூல்கள் என்னும் தலைப்பில் அடக்கப்படுகின்றன.

**தீர்க்க தரிசன நூல்கள்** (Nabi'im)

எபிரேயர் தீர்க்கதரிசனம் தனிச் சிறப்பு வாய்ந்தது. அது மக்கள் வாழ்க்கையிலும் சமயத்திலும் முக்கிய இடம் வகித்தது.

---

*22. சாமுவேல் அமிர்தம், பழைய ஏற்பாட்டுக் கனோன் - திருமறைத் தோழன். பக். 128.*

இசுரவேல் பிற்கால வரலாற்றை உருவாக்கியதில் தீர்க்கதரிசி களுக்கு ஒப்பானவர் எவரும் இலர் எனல் பொருந்தும். அவர்கள் சமயப் பாதுகாவலராகவும், நாட்டுப்பற்று மிக்கவராகவும் காணப் பட்டனர். கடவுள் சார்பாக மக்கள் இதயத்தோடும் பேசினர். அன்னார் தங்கள் கால மக்களிடத்தில் பேசினர். எனினும்,அவர்கள் கூறிய அறிவுரைகள் அம்மக்களுக்குமட்டும் அன்றி, எல்லாக் காலத்து மக்களுக்கும் பொருந்துவனவாயுள்ளன. ஏனெனில், அவை இன்றும் என்றும் மக்கள் மனச்சான்றினைத் தூய்மை செய்யும் தெய்வ அருளுரைகளாக அமைந்துள்ளன.

இந்தத் தீர்க்கதரிசனப் பாரம்பரியம், பழைய ஏற்பாடு முழுவதி லும் விரவிக் கிடக்கிறது. பழைய ஏற்பாட்டு நூல்களில் யோசுவா, நியாயாதிபதிகள், 1-2 சாமுவேல், 1-2 இராஜாக்கள், ஆகிய நூலாசிரியர்கள், முந்திய தீர்க்கர்கள் எனப்படுவதுண்டு. ஏனெனில், இந்நூல்களில் தெபோராள், சாமுவேல், நாத்தான், அகியா,எலியா, எலிசா ஆகிய தீர்க்கர்களின் பணி தரப்படுகின்றது. புலம்பல், தானி யேல் என்னும் இரு நூல்கள் தவிர ஏசாயா முதல் மல்கியா வரை உள்ள நூலாசிரியர்கள் பிந்திய தீர்க்கர்கள் எனப்பட்டனர். பிந்திய தீர்க்கர்களில் ஏசாயா, எரேமியா, எசேக்கியேல், ஆகியோர் 'பெரிய தீர்க்கர்' என்றும் ஓசேயா, யோவேல், ஆமோஸ்,ஒபதியா,யோனா, மீகா, நாகூம், ஆபகூக், செப்பனியா, ஆகாய், சகரியா, மல்கியா ஆகிய பன்னிருவரும் 'சிறிய தீர்க்கர்' என்றும் அறியப்பட்டனர்.

### திருவெழுத்துகள்

இப்பகுதியில் பின்வரும் 13 நூல்கள் அடங்கும்:

1. ரூத்தின் சரித்திரம்.
2. தினவர்த்தமானம் முதலாம் புத்தகம்.
3. தினவர்த்தமானம் இரண்டாம் புத்தகம்.
4. எஸ்றா
5. நெகேமியா
6. எஸ்தர்
7. யோபு
8. சங்கீத புத்தகம்.
9. நீதிமொழிகள்.
10. பிரசங்கி
11. உன்னதப்பாட்டு.

12. புலம்பல்
13. தானியேல்

பழைய ஏற்பாட்டு இலக்கியத்தில், மூன்றில் ஒரு பகுதி கவிதை நடையில் காணப்படுகின்றது. சங்கீதம், நீதிமொழிகள், உன்னதப் பாட்டு, புலம்பல், ஒபதியா, மீகா, நாகூம், ஆபகூக், செப்பனியா ஆகிய நூல்களும் யோபு, ஏசாயா, யோவேல், ஆமோஸ் ஆகிய நூல்களின் பெரும்பகுதிகளும் கவிதை நடையில் காணப்படுகின்றன. இவை தவிர, கவிதைகள் பழைய ஏற்பாடு முழுவதிலும் விரவிக் கிடத்தலையும் காண்கிறோம் (ஆதி. 4:23-24; யாத். 15:1-18, நியா. 5 முதலியன).

கவிதைகள் பெரும்பாலும் பழைய ஏற்பாட்டின் பிந்திய கால நூல்களில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். ஆரம்ப காலங்களில் கவிதைகள் வாய்மொழியாய் வழங்கப்பட்டுப் பின்னால் எழுத்து நிலையை அடைந்ததை இது காட்டுகிறது.

பழைய ஏற்பாட்டில் சமயச் சார்பற்ற பாடல்களும் சமயச் சார்புள்ள பாடல்களும் காணப்படுகின்றன.

**பழைய ஏற்பாட்டு நூல்கள்**

யூதத் திருச்சபையின் மரபின்படி பழைய ஏற்பாடு 39 நூல்களைக் கொண்டது. யூதத் திருச்சபையின் மரபைப் பின்பற்றிக் கிறித்தவப் பிரிவுகளில், சீர்திருத்தத் திருச்சபையினர் (Protestants) தாங்கள் வெளியிட்டுள்ள விவிலியத்தின் பழைய ஏற்பாட்டில், 39 நூல்களைக் கொண்டுள்ளனர்.

கத்தோலிக்கத் திருச்சபையினர் கி. பி. 4-ஆம் நூற்றாண்டில் ஏரோம் ஆக்கிய இலத்தீன் மொழிபெயர்ப்பாகிய 'வல்கத்தா' (Vulgate) வைப் பின்பற்றி, தொபியாசு ஆகமம், யூதித் ஆகமம், ஞான ஆகமம், சீராக் ஆகமம், பாரூக் ஆகமம், 1-2, மக்கபே ஆகமம் ஆகிய ஏழு நூல்களையும் சேர்த்துப் பழைய ஏற்பாட்டில் மொத்தம் 46 நூல்களை அடக்கியுள்ளனர்.

ஏனோக்கு, யூபிலி, 12 முற்பிதாக்களின் ஏற்பாடு, சாலொமோனின் சங்கீதம், சாதோக்கிய ஏடு, மோசேயின் விண்ணேற்பு, ஏசாயாவின் பரத்துக்கேறல் 1,2,3,4,எஸ்திராஸ், பாரூக்கின் சிறிய தரிசனம், யூத சிபில் 3,4, மக்கபேர், ஸ்லாவிய ஏனோக்கு, எரேமியாவின் தினவர்த்தமானம், யோபின் ஏற்பாடு, சாலமோனின் ஏற்பாடு,

எலியாவின் ஏற்பாடு, செப்பனியாவின் ஏற்பாடு, எசேக்கியாவின் அப்போகிரிபா நூல்கள், ஆதாம் ஏவாளின் வாழ்க்கை, ஆபிரகாமின் தரிசனம், ஆபிரகாமின் அப்போகிரிபா, அசெனாத்தின் நூல் போன்றவைஉண்மை ஆசிரியர் அறியா நூல்கள்(Prendepigraphe) என்னும் பெயரால் அறியப்பட்டு வருகின்றன. கத்தோலிக்கசபையில் இவற்றை 'அப்போகிரிபா' (apocrypha) (மறைநூல்கள்) என வழங்கினர்.கும்ரான் குகையில் கண்டெடுக்கப்பட்ட வேறு நூல்களும் உள. இவ்வாறு பழைய ஏற்பாட்டில் இடம் பெறாத யூத சமய நூல் களும் உள.

## வரலாற்றில் இறைவனைப் புரிந்துகொள்ளல்

கடவுள் இசுரவேல் எனும் மக்களைத் தெரிந்துகொண்டு, அவர்களுக்கு வரலாற்றுச் செயல்களின் மூலமாகத் தம்மை வெளிப் படுத்தி, அச்சமூகம் தமக்குக் கீழ்ப்படிய அவர்களைப் பயிற்று வித்தார்; இறுதியில் தம்மை முற்றிலும் அவர்களுக்கு வெளிப்படுத் தினார் என்னும் கருத்தே பழைய ஏற்பாட்டில் அடிப்படையாக நிற் கின்றது. இசுரவேல் சமுதாயத்திற்கும் யெகோவா கடவுளுக்கும் உள்ள உறவுதான் பழைய ஏற்பாட்டின் அடிப்படை, என்று நாம் திட்டமாகக் கூறலாம். வளர்ந்துவந்த இவ்வுறவின் அடிப்படையில், வரலாற்றில் நடந்த நிகழ்ச்சிகளை அவர்கள் புரிந்துகொண்டு, அதை அறிக்கை செய்ததின் பயனாகவே பழைய ஏற்பாடு தோன்றிற்று.

இசுரவேலர் வரலாற்றில் அடிமைப்படுதல், மீட்படைதல் ஆகிய இரண்டும் தொடர்ந்து வருதலைக் காண்கின்றோம்.

தங்களுக்கு வாக்களிக்கப்பட்ட கானான் நாட்டை விட்டுச் செழிப்பை நாடி, எகிப்திற்குச் சென்ற யாக்கோபாகிய இசுரவேலின் சந்ததியினர், அங்குச் செழித்து வளர்ந்தபோது எகிப்தியர்களால் அடிமைப்படுத்தப்பட்டனர். கடவுளிடம் அவர்கள் முறையிட்ட போது, கடவுள் அவர்களில் மோசேயை எழுப்பி அற்புதங்கள் பல நிகழ்த்தி, அவர்களை எகிப்தின் அடிமைத்தனத்திலிருந்து மீட்டு, கானான் நாட்டுக்கு அழைத்து வந்து அதை அவர்களுக்குக் கொடுத் தார்.

கானான் நாட்டில் அவர்கள் வாழ்ந்தகாலை தங்கள் கடவுளை மறந்ததினிமித்தம், வேற்று மக்கள் அவர்களை அடிமையாக்கிய போதெல்லாம், அவர்கள் தங்கள் செயலுக்கு வருந்திக் கடவுளை வேண்டியபோது, நியாயாதிபதிகளை எழுப்பி அவர்களை மீட்டு,

அவர்கள் அமைதியாக வாழுமாறு செய்தார். மற்ற மக்களைப் போன்று தங்களுக்கும் நிலையான அரசர் வேண்டுமென, இசுரவேல் மக்கள் கடவுளைக் கேட்டபோது, அவர்களை ஆளுமாறு அரசர் களை ஏற்படுத்தினார். அரசர்களுடைய ஆட்சியில் அரசர்கள் சிலர் கடவுளுக்கு ஏற்ப நடந்து, எருசலேமில் கோயில் கட்டி வழிபட்டனர்.

பின்னர் வந்த அரசர்களும் குடிமக்களும் கடவுளுடைய கட்டளைகளை மீறினர். இதன் காரணமாகத் தீர்க்கதரிசிகளைக் கொண்டு, கடவுள் இசுரவேலரை எச்சரித்தும் அவர்கள் மனந் திருந்தவில்லை.

ஆதலால், அவர்கள் பாபிலோனுக்கு அடிமைகளாகக் கொண்டு போகப்பட்டனர். பாபிலோனில் அடிமை வாழ்வு வாழ்ந்த யூதர்கள் கடவுளை வேண்டியபோது, அவர்கள் திரும்பவும் எருசலேமுக்கு வரவும், பழைய கோட்டையையும் கோயிலையும் கட்டிப் புதுப் பிக்கவும் முற்பட்டனர். இதனால் புதிய கோணத்தில் நூல்கள் உரு வாகத் தொடங்கின.

பாபிலோனிலிருந்து விடுதலை பெற்று யூதேயா நாட்டிற்கு வந்தவர்கள், சிறையிருப்புக்கு முன்னிருந்த முழு விடுதலை வாழ்வைத் துய்க்கவில்லை. பாரசீகர்களுக்கும் அதன் பின்னர் அவர்களை வென்ற கிரேக்கர்களுக்கும் பணிந்தே வாழ வேண்டிய தாயிற்று.

ஆகவே, அவர்கள் இனத்தின் சிறந்த அரசனாக முன்னர் விளங்கிய தாவீதின் வழியில் - கடவுள், அரசன் (மேசியா) ஒருவனைத் தோன்றச் செய்து, யூதர்களின் அடிமைத்தனத்தை ஒழித்து, யூத அரசைத் திரும்பவும் நிலைநிறுத்துவார் என எதிர் பார்க்கலாயினர்.

கி. மு. 165 முதல் கி. மு. 63 வரை, யூதர்கள் மக்கபேயர் என்னும் யூதத் தலைவர்களின்கீழ், தன்னாட்சி அமைத்திருந்தனர். கி. மு. 63-இல் அவ்வாட்சியும் உரோமர்களால் தோற்கடிக்கப் பட்டதனால், யூதர் உரோமர்களுக்கு அடங்கி வாழ வேண்டிய தாயிற்று.

இதன் பயனாக உலக அரசு என்ற எண்ணத்திலிருந்து வளர்ச்சி பெற்று, என்றும் விடுதலை வாழ்வை நிலையாகத் தரக் கூடிய இறையரசை எதிர்நோக்கலாயினர்.

கி. மு. 10-ஆம் நூற்றாண்டு முதல் கி. மு. இரண்டாம் நூற்றாண்டு வரையுள்ள ஏறத்தாழ எண்ணூறு (800) ஆண்டுகளில், பற்பல காலநிலைகளில் வாழ்ந்த பல்வேறு வகையான இறையடியார்கள் எழுதிய, எபிரேயத் திருமறையாகிய பழைய ஏற்பாட்டு நூல்களின் வழியாக, வரலாற்றில் செயல்படும் கடவுளைப் புரிந்து கொண்ட கருத்துகளின் நிறைவேற்றமாகவே, கடவுள் மறுவுரு எடுத்த இயேசு பெருமானின் வரலாறும், அவரைப் பின்பற்றும் திருச்சபையின் வரலாறும் விளங்குவதைப் புதிய ஏற்பாடு விளக்குகிறது.

பழைய ஏற்பாட்டு இறைவன் எந்த நூலையும் எழுதவில்லை. அவ்வாறே புதிய ஏற்பாட்டில் இறைமகனாக விளங்கும் இயேசுவும் எந்த நூலையும் எழுதவில்லை. ஆனால், இறைவன் மனிதனாக வந்து, மனிதருக்கு மீட்பைக் கொடுத்துள்ளார் என்னும் இசுரவேல் மக்களின் வரலாற்று அறிவு, பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு ஆகிய இரண்டும் அடங்கிய விவிலியத்தின் வழியாக, உலகுக்கு வெளிப்படுத்தப்படுகிறது.

### எழுதப்பட்ட மொழி

விவிலியத்தை எழுதியவர்கள் யாவரும் (லூக்கா ஒருவர் நீங்கலாக) யூத இனத்தவரே. ஆனால், பழைய ஏற்பாடு அவர்களுடைய சொந்த மொழியாகிய எபிரேய மொழியிலும் புதிய ஏற்பாடு அது தோன்றிய காலத்தில் அவர்களைச் சுற்றியுள்ள மக்களின் பொது மொழியாக விளங்கிய கிரேக்கத்திலும் எழுதப்பட்டன. ஆகவே, பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு இரண்டையும் எழுதிய யூதர்கள், தங்கள் இன வரலாற்றில் இறைவன் செயல்பட்டு, எபிரேயர்களாகிய தங்களுக்குமட்டுமல்லாது, உலக மக்கள் யாவருக்கும் அருளியுள்ள ஆன்மீக விடுதலைச் செய்தியை விளம்பியுள்ளனர் எனலாம்.

### புதிய ஏற்பாட்டின் வளர்ச்சி

"ஆதித் திருச்சபை ஓர் உறுதியான பின்னணியிலிருந்து தோன்றியது. அது யூத சமயத்தோடு மிகநெருங்கிய தொடர்புடன் உருவாயிற்று. பழைய ஏற்பாட்டின் நிறைவேறுதலாகவே திருச்சபை தோன்றியது என ஆதித் திருச்சபை உணர்ந்தது."[23]

---

23. *பியான் பியாஸ்டட், புதிய ஏற்பாட்டுக் கனோன், திருமறைத் தோழன், கிறித்தவ இலக்கியச் சங்கம், 1972, பக். 203.*

இயேசுபிரான் போதனையும் சாதனையும் வேதநூலின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன (மத். 5:17; யோ. 5:29; லூக். 16:17).

இயேசுபிரானுக்கும் திருநூல்களுக்குமுள்ள நெருங்கிய தொடர்பு, லூக்கா நற்செய்தி நூலின் கடைசி அதிகாரத்தில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளது. எம்மாவுக்குச் செல்லும் வழியில் இயேசுநாதர், தம்முடைய சீடர்களில் இருவரைச் சந்திக்கின்றார். அவர்கள் இவரை அடையாளம் கண்டுகொள்ளவில்லை. அவர்களோடு இவர் செல்கையில், எருசலெமில் நிகழ்ந்தவைகள் யாவும், திருமறையின் நிறைவேறுதல்களே என்பதை மெய்ப்பிக்கும் பொருட்டு, திருமறையின் ஆரம்பத்திலிருந்து இறுதிவரை அடங்கியுள்ள ஆதாரங்களை அவர்களுக்கு அவர் சுட்டி விளக்கினார். 'பின்பு இயேசு அவர்களைப் பார்த்து, மோசேயின் நியாயப் பிரமாணத்திலும் தீர்க்கதரிசிகளின் ஆகமங்களிலும் சங்கீதங்களிலும், என்னைக்குறித்து எழுதியிருக்கிறவைகள் எல்லாம் நிறைவேற வேண்டியதென்று, நான் உங்களோடிருந்தபோது உங்களுக்குச் சொல்லி வந்தவைகள் இவைகளே என்றார்' (லூக். 24:44). ஏதோ ஒருசில சமயங்களில் விளக்கம் கொடுப்பதற்காகத்தான், பழைய ஏற்பாட்டிலிருந்து மூலப் பகுதிகளைப் பயன்படுத்தி வந்தார்கள் என்பது சரியன்று. வேத நூல்களும் அவைகளில் அடங்கியுள்ள யாவும், இயேசு பெருமானையே குறிக்கின்றன என்பதே பொருத்தமான கருத்தாகும்.

**யூத சமயத்தின் தொடர்ச்சியே கிறித்தவ சமயம்**

யூத சமயம், அது தோன்றுவதற்குக் காரணமாயிருந்த இசுரவேலர்களின் முன்னோர்களோடு தொடர்பு கொண்ட பாபிலோன், எகிப்து, கானான் முதலான மக்களிடமிருந்து பெற்றுக்கொண்ட வணக்க முறையோடு தொடங்கி, வரலாற்றில் இறைவன் அவர்களை வழிநடத்திய முறையால், பழைய கொள்கைகளில் தள்ளவேண்டுவனவற்றைத் தள்ளி, கொள்ளவேண்டுவனவற்றைக் கொண்டு இறையறிவில் வளர்ந்தது. இவ்வாறு வளர்ந்த யூத இன வரலாற்றில் அனுபவ அறிவோடு கூடிய இறைக் கொள்கையை,யூத சமயத் திருமறையாகிய பழைய ஏற்பாடு கூறுகின்றது.

ஓர் இன வரலாற்றின் அறிவு, அவ்வினத்தில் வரக்கூடிய தனி மனிதன் ஒருவனை எதிர்பார்க்கின்றது. இறைவனிடமிருந்து வரும் தனி மனிதன், யூத இனத்திற்குமட்டுமல்லாது உலகிலுள்ள எல்லா இனத்திற்கும், விடுதலை வாழ்வைக் கொடுக்கக்கூடியவனாக விளங்குவான் என்று, அது எதிர்பார்த்தது.

யூத இனத்தின் எதிர்பார்ப்பு, தனிமனிதனாகிய இயேசு பெருமானில் நிறைவேறிய தன்மையையும், அத்தனிமனிதன் மூலமாக உலகம் முழுவதற்கும் ஆன்மீக விடுதலை அருளப்பட்டிருப்பதையும், யூத இனம் மட்டுமல்லாது உலகிலுள்ள எல்லா இனமும் அத்தனிமனிதன் மூலமாக இறைவனுக்குள் இணைக்கப்படுவதையும்,புதிய ஏற்பாட்டு நூல்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன.

ஆகவே, பழைய ஏற்பாடும் புதிய ஏற்பாடும், இறைவனின் விடுதலைச் செய்தி என்னும் நீண்ட வரலாற்றின் வளர்ச்சிக் கருத்துகளாக விளங்குகின்றனவேயன்றி, அவை இரண்டும் வெவ்வேறு ஆனவையே என்று துண்டித்துக் காணக்கூடிய நிலையில் அவை பிளவுபட்டிருக்கவில்லை.

'' 'கிறித்து'[24] என்பதுஎண்ணெய் வார்க்கப்பட்டவர் என்னும் பொருளுடையது. யூதர்களுடைய வழக்கத்தில், ஒருவரைக் குருவாகவோ அரசராகவோ தீர்க்கராகவோ நியமிப்பதற்கு, அவர் தலையில் எண்ணெயை ஊற்றுதல் மரபு'' (யாத். 29:7,21; 1 சாமு. 10:1, 16:13, அரசர் 9:6).

'எண்ணெய் வார்க்கப்பட்டவர்' என்னும் பொருளுடைய கிறித்து என்னும் சொல்லுக்குக் குரு, அரசன், தீர்க்கன் என்னும் மூன்று பொருள்களும் உள.

இயேசு கிறித்துவுக்கு இந்த மூன்று பொருள்களும் பொருந்தக் கூடியன ஆகும். அவர் பிறந்தபொழுதும் அவரைச் சிலுவையில் அடித்தபொழுதும், 'யூதருக்கு அரசர்'என்று அறியப்பட்டார். அவர் வாழ்ந்தகாலை, மக்கள் அவரைத் தீர்க்கர் என்றனர். அவருடைய மாணவர் பன்னிருவருக்கும் அவரைப் பின்பற்றிய ஏராளமான மக்களுக்கும் அவர் குருவாக விளங்கினார்.

ஆயினும், 'இயேசுவே கிறித்து' (இயேசுவே அரசன்), (அப். 10:38, 9:22, 18:28) என அவர் உரையாற்றத் தொடங்கிய பொழுது, யூதர்கள் எதிர்பார்த்த அரசனாக இயேசு காட்டப்படுகின்றார். ஆகவே, கிறித்து என்னும் கிரேக்கச் சொல், அரசனையும் கிறித்தவர்கள் என்னும் கிரேக்கச் சொல் அரசனுடையவர்களையும் சிறப்பாகக் குறித்தன.

---

24. தோ. சா. காரட், கிறிஸ்து, மேசியா, திருமறைச் சொற்பொருள்' கிறித்தவ இலக்கியச் சங்கம், 1963, பக். 107.

யூதர்களுடைய அடிமைத் தளையிலிருந்து அவர்களை விடுவித்ததுமட்டுமல்லாது, உலகிலுள்ள எல்லா மனிதருடைய அடிமைத் தளைகளிலுமிருந்து விடுவிக்கும் இறையரசராக, இயேசு விளங்குகின்றார் என்னும் கருத்து, 'இயேசுவே கிறித்து' என்னும் சொற்களில் அடக்கப்படுகிறது (இயேசு - மீட்பர்).

இயேசு கிறித்துவிடம், அவரை விசாரித்த பிலாத்து, ''நீர் அரசரா?'' என அவரை வினவியபோது அவர், ''ஆம்'' என்றதுடன் 'தம்முடைய அரசு இவ்வுலகத்துக்குரியதுஅன்று' எனவும் 'மறுமைக்குரியது' எனவும் தெளிவுபடுத்தினார்.

ஆகவே, இயேசுவாகிய அரசன், நிலையான நன்மையைப் பயக்கும் ஆன்மீக விடுதலையைக் கொடுப்பவர் என்னும் பொருளும், நிலைத்து வாழும் அரசன் என்னும் பொருளும், 'இயேசுவே கிறித்து' என்பதில் வெளிப்படுத்தப்படுகின்றன.

படைப்பு முழுவதையும் ஆட்சிபுரியும் அரசராகிய இறைவன், ஆன்மீகத்தில் அடிமைப்பட்டுக் கிடக்கும் மனிதர்களை மீட்க, ஐம்புலன்களையுடைய மனிதனாக இவ்வுலகத்திற்கு வந்து, தீமையோடு போராடி வென்று, மனிதர்களுக்கு ஆன்மீக விடுதலையை அருளிச்செய்து, அவர்களுடைய உள்ளங்களில் வீற்றிருந்து ஆட்சி புரிகின்றான்; என்னும் கருத்தே யூதர்களுடைய வரலாற்றில் எழுந்த பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு ஆகிய இரண்டும் உலகுக்கு வெளிப்படுத்தும் நற்செய்தியாகும்.

**இயேசுவின் வாழ்க்கை வெளிப்படுத்திய உண்மைகள்**

இயேசு பெருமானின் பிறப்பும் உயிர்த்தெழுதலும் இயற்கை இறந்த நிலையில் சித்திரிக்கப்படுகின்றன.

இன்று உலக வரலாறு கி. மு., கி. பி. என்று பிரிக்கப்பட்டு, வரலாற்றின் மைய இடத்தை அவர் பெற்றிருந்தபோதிலும், வரலாற்றின் நாயகனாக விளங்கும் அவருடைய வரலாற்றின் தொடக்கமாகிய கன்னிப் பிறப்பும், முடிவாகிய உயிர்த்தெழுதலும், அவரைச் சார்ந்த கொள்கையுடையவர்களுக்குமட்டுமே ஏற்றுக் கொள்ளக் கூடியனவாக விளங்குகின்றன.

கடவுள் கோட்பாடு, நம்பிக்கையின் அடிப்படையில் எழக் கூடியதேயன்றி, அறிவியலால் நிலைநாட்டிக் காட்டக்கூடியது அன்று. கடவுளை நம்ப இயலாதவர்களால், கடவுள் மனிதனானார் என்னும் கருத்தையும் நம்ப இயலாதது இயல்பே.

ஆயினும் இக்கருத்து, யூத இன வரலாறு உலகுக்கு வெளிப் படுத்தும் உண்மையாகக் காட்சியளிக்கின்றது. பழைய ஏற்பாட்டில் கீழ்க்காணுமாறு எதிர்பார்க்கப்பட்ட இறையரசனின் தன்மைகள், இயேசு கிறித்துவின் வாழ்க்கையில் வெளிப்பட்டன.

''நமக்காக ஒரு குழந்தை பிறந்துள்ளது; நமக்கு ஒரு மகன் தரப்பட்டுள்ளான்; ஆட்சியின் பொறுப்பு அவருடைய தோள்மேல் இருக்கும். அவருடைய பெயரோ 'வியத்தகு ஆலோசனையாளர் - வல்லமையுள்ள இறைவன் - முடிவில்லாத் தந்தை - அமைதியின் மன்னன்' என வழங்கப்படும். அவருடைய ஆட்சியின் வளர்ச்சிக்கும் அமைதியின் பெருக்கிற்கும் முடிவு என்பதே இராது.''[25]

''நாம் கேள்விப்பட்டதை யார் நம்பியிருக்கக்கூடும்? ஆண்டவரின் கைவன்மை யாருக்கு வெளிப்படுத்தப்பட்டது? மனிதரால் புறக்கணிக்கப்பட்டவர்; அவர் துன்புறும் மனிதனாய்த் துயரத்தில் ஆழ்ந்தவராய் இருந்தார்; நம் பாவங்களுக்காகவே அவர் காயப் பட்டார்; நம் அக்கிரமங்களுக்காகவே அவர் நொறுக்கப்பட்டார். நம்மை நலமாக்கும் தண்டனை அவர்மேல் விழுந்தது; அவருடைய காயங்களால் நாம் குணமடைந்தோம்.''[26]

மேலே கண்ட பழைய ஏற்பாட்டுப் பகுதிகள், இயேசு பெருமானின் வாழ்க்கையை விவரிப்பதாக அமைந்துள்ளன.

### உயிர்த்தெழுதலுக்கு முன்னும் பின்னும்

இயேசு பெருமானின் உயிர்த்தெழுதல், கிறித்தவ நம்பிக்கையின் அடிப்படையாகும். கிறித்தவ நம்பிக்கைக்குள் வராதவர்கள் இயேசு பெருமானின் உயிர்த்தெழுதலை ஏற்றுக்கொள்ளாததில் வியப்பில்லை.

யூத இன வரலாற்றில் யூதர்களின் ஆதி முன்னோனாகிய ஆபிரகாமுக்கு, கடவுள் ''பூமியிலுள்ள இனமெல்லாம் உன் வழியாய் ஆசீர்வதிக்கப்படும்''[27] எனக் கொடுத்த திருவாக்கு, ஆபிரகாமின் சந்ததியில் வந்த இயேசு கிறித்துவின் உயிர்த்தெழுதலில் நிறை

---

*25. ஏசா. 9:6-7.*

*26. ஏசா. 53:1-12.*

*27. ஆதி. 12:3.*

வேறிய தன்மையை, வெளிப்படுத்திக் காட்டும் வரலாறே விவிலியம் கூறும் வரலாறு ஆகும்.

இயேசு பெருமானின் உயிர்த்தெழுதல்வரை, விவிலியத்தில் கூறப்பட்டுள்ள வரலாறுகள் யாவும், ஆபிரகாமின் சந்ததியாகிய யூதர்களோடுமட்டுமே மிகுதியும் தொடர்புடையனவாக விளங்கு கின்றன.

வெறும் யூத இன வரலாறாக இருந்த ஒன்று, இயேசு பெருமானின் உயிர்த்தெழுதலுக்குப் பின்னர் உலக வரலாறாக மாறியது. இயேசு பெருமானின் உயிர்த்தெழுதலின் செய்தி, உலக வரலாற்றின் போக்கை நிர்ணயித்துள்ளது எனலாம்.

இயேசு பெருமானோடு வாழ்ந்து பழகிய அவருடைய மாணவர்கள், அவர் சிலுவையில் அறையப்பட்ட பொழுது மறுதலிக் கிறவர்களாகவும், ஓடி ஒளிகிறவர்களாகவும், உயிருக்குப் பயந்த கோழைகளாகவும் விளங்கினர். ஆனால், இயேசு பெருமானின் உயிர்த்தெழுதலுக்குப் பின்னரோ, கோழைகளாக வாழ்ந்த அவர்கள் வீரர்களாக மாறினார்கள். மற்றவர்களை அழிவுக்கு உட்படுத்தும் மறவீரர்களாக அல்லாமல், மக்களின் ஆக்கத்திற்குத் தங்களை அழித்துக்கொள்ளும் அறவீரர்களாக மாறினார்கள்.

இயேசு பெருமானின் உயிர்த்தெழுதல், அவர்களுக்குப் பரிசுத்தாவியின் நிறைவு என்னும் ஆன்மீக ஆற்றலைக்கொடுத்தது. அந்த ஆற்றலால் அவர்கள் உலகெங்கும் சென்று,[28] நற்செய்தியை அறிவிக்கும் ஆன்மீக ஆற்றல் பெற்ற வீரர்களாகச் செயல்பட்டனர்.

ஏறத்தாழ இயேசு பெருமானின் மாணவர்கள் அனைவருமே இயற்கை மரணத்துக்கு ஆளாகாமல், ஆன்மீக வீரர்களாக விளங்கிக் கொலையுண்டனர் எனலாம்.

### நற்செய்தி பரவியமை

''உலகமெங்கும் போய், படைப்பிற்கெல்லாம் நற்செய்தியினை அறிவியுங்கள்''[29] என்ற இயேசுபெருமானின் கட்டளைக்கு இணங்க, அவருடைய மாணவர்கள் உலகின் பல பாகங்களுக்கும்,

---

*28. அப், 1:8.*

*29. மாற். 16:15.*

இயேசு பெருமான் வழியாக உலகுக்குக் கொடுக்கப்பட்ட நற்செய்தியினைச் சுமந்து சென்றனர். அவர்கள் போன இடங்களில் இயேசுவின் அடியவர்த் தொகை பெருகலாயிற்று; ஆங்காங்கே திருச்சபைகள் உருவாயின.

இப்புதிய கொள்கைகளுக்கு எதிராகப் பழங்கொள்கையினர் எழுந்து, அதை அழிக்க முயன்றனர். அவ்வாறு அழிக்க முனைந்தவர்களில் 'சவுல்' என்னும் வாலிபன் முன்னணியில் நின்றான்.

கிறித்தவர்களைக் கட்டிக் காவலில் போடவும், அவர்களைக் கொலை செய்யவும் யூத சமயத் தலைவரிடமிருந்து அதிகாரம் பெற்றிருந்தான். தேவான் என்னும் கிறித்தவப் பெரியாரைக் கல்லெறிந்து கொன்றவர்களில் முன்னணியில் நின்றான். எருசலேமில் கிறித்தவர்களை அடக்கித் தமசுக்குவிலும் அவர்களை அடக்குமாறு ஆணை பெற்றுத் தமசுக்குவுக்குச் செல்லும் வழியில், அவனில் ஒரு பெரிய மாற்றம் நடைபெற்றது. கிறித்தவர்களை அழிக்கச் சென்றவன் கிறித்தவன் ஆனான்.

'பவுல்' என்ற பெயரோடு கிறித்தவத் தொண்டனாகத் துன்பங்களை ஏற்றுக்கொள்வதற்குத் தன்னை ஒப்படைத்தான்.

கிறித்தவத் திருமறையாகிய புதிய ஏற்பாட்டில் பெரும்பகுதி நூல்கள், பவுல் எழுதிய கடிதங்களே ஆகும்.

திருச்சபை பல்வேறு நாடுகளிலும் பரவியபோது, நற்செய்தி நாயகரான இயேசுபெருமானின் வாழ்க்கை வரலாறு, அவருடைய போதனைகள், அவர் உலகுக்கு வழங்கும் செய்தி யாவும், இயேசு பெருமான் உடன் வாழ்ந்த மாணவர்களாலும், அம்மாணவர்களுடன் வாழ்ந்த அடியவர்களாலும் மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்லப்பட்டன.

காலம் செல்லச் செல்ல நற்செய்திகள் எழுத்துருவம் பெறத் தொடங்கின. எழுத்துருவம் பெற்றவைகளில், திருச்சபை ஏற்றுக் கொண்டவை நிலை நின்றன.

### புதிய ஏற்பாட்டு நூல்கள்

யூத குலத்தில் தோன்றிய இயேசுபெருமானின் நற்செய்தி, யூத இன வரலாறாகிய பழைய ஏற்பாட்டுடன் தொடர்புடையது என்பதைப் பார்த்தோம். யூதர்கள் வழியாகத் தோன்றிய நற்செய்தி, யூதர்களுக்கு முதலிலும் மற்றவர்களுக்கு அதனை அடுத்தும் பரவிய

போது, நற்செய்தியை ஏற்றுக்கொண்ட யூதர்களுக்கும் மற்றவர்களுக்கும், நற்செய்தியைப் புரிந்துகொள்வதில் கருத்து வேறுபாடுகள் எழலாயின.

யூதர்களின் பழைய ஏற்பாட்டுக் கடவுள், யூதர்களுக்குமட்டுமே நன்மை செய்கிறவராக காட்டப்படுகின்றபடியால், எல்லோருக்கும் அன்பு காட்டும் புதிய ஏற்பாட்டு நல்ல கடவுளைமட்டுமே விரும்பிய யூதரல்லாதார் தோன்றினர். அவர்கள் புதிய ஏற்பாட்டு நூல்களைச் சிறப்பித்து எழுதப்பட்ட நூல்களே தங்களுக்குப் போதும் என எண்ணினர். இதனால், திரிபுக் கொள்கைகள் திருச்சபையில் இடம் பெறத் தொடங்கின.[30]

இதன் காரணமாக, திருச்சபை ஒரு தெளிவான வரையறை செய்ய வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டது.

அப்படிப்பட்ட தெளிவான வரையறை செய்வதற்கு அவை அடுத்துக் குறித்துள்ள நிபந்தனைகளுக்கு உள்ளாயின;

---

30. "திரிபுக் கொள்கையினர் இடைப்பட்ட காலங்களில் தோன்றியிரா விட்டால், இன்றுங்கூட கனோன் அமைப்பு உறுதியற்ற நிலையில் தான் இருந்திருக்கும். இதுபோன்ற ஒரு புதிய சூழ்நிலையைப் பற்றி கி.பி. 140-இல் உரோமையில் தோன்றியதாகக் கருதப்படும் ஓர் அத்தாட்சியில் காண்கின்றோம். பெரிய சபைகளில் காணப் பட்டது போலவே, திருமறை நூல்கள் எல்லா இடங்களிலுமுள்ள சபைகளிலும் சேகரித்து வைக்கப்பட்டிருந்தன. அக்காலத்தில் சின்ன ஆசியாவிலுள்ள பொந்து (Pontus) என்னும் இடத்தில் மார்சியான் என்றொருவன் இருந்தான். கி.பி. 144-இல் அவன் திருச்சபையினின்று பிரிந்துகொண்டபடியால் திரிபுக் கொள்கை யினனாகத் தீர்க்கப்பட்டான். அவன் பழைய ஏற்பாட்டிற்கு எதிரான இறையியல் கொள்கையை உடையவன். ஏனெனில் பழைய ஏற்பாட்டால்தான் நம்பக்கூடாத ஒரு கடவுளைப் பற்றி கூறப்பட்டுள்ளதாகக் கண்டான். அதே சமயத்தில் புதிய ஏற் பாட்டில் காணும் நல்ல கடவுளைப் பற்றி கூறப்பட்டுள்ளதாகக் கண்டான். அதே சமயத்தில் புதிய ஏற்பாட்டில் காணும் நல்ல கடவுளைப் பற்றிப் போதிக்க ஆவல் கொண்டான். பழைய ஏற்பாட்டை மிகவும் உயர்வாகக் கொண்டு எழுதப்பட்ட நூல் களையும், பழைய ஏற்பாட்டுடன் மிக் நெருங்கிய தொடர்புள்ள நூல்களையும் வேத நூல்களினின்றும் அகற்றிவிட எண்ணினான்."
- பியான் பியாஸ்டட், புதிய ஏற்பாட்டுக் கனோன், திருமறைத் தோழன், கிறித்தவ இலக்கியச் சங்கம், 1972, பக். 207.

1. அந்நூல்கள் அப்போத்தலரிடமிருந்தே[31] தோன்றியிருக்க வேண்டும்.

2. அப்போத்தலர்களால் எழுதப்பட்டிருக்க வேண்டும். அல்லதுஅப்போத்தலர்களது மேற்பார்வையில்அவருடைய சீடர்களால் எழுதப்பட்டிருக்க வேண்டும்.

3. ஓரளவுக்காவது அப்போத்தல அதிகாரம் பெற்றவை என்னும் நிலையிலிருக்க வேண்டும்.

இயேசு கிறித்துவின் உடன் வாழ்ந்த மாணவர்களும், அம் மாணவர்களுடன் திருச்சபை வளர்ச்சிக்காகப் பாடுபட்ட பவுல் அடிகளுமே அப்போத்தலர்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டனர்.

மேற்கண்ட நிபந்தனைகளுக்கு உட்பட்டு, திருச்சபைகளில் நிலைநின்ற 27 நூல்கள் புதிய ஏற்பாட்டுத் திருமறையாக வரை யறை செய்யப்பட்டன.

புதிய ஏற்பாட்டு நூல்கள் 27 என்பதை ஏற்றுக்கொள்வதில், கத்தோலிக்கத் திருச்சபைக்கும் சீர்திருத்தத் திருச்சபைக்கும் கருத்து வேற்றுமையில்லை.

கத்தோலிக்கத் திருச்சபை கையாளும் விவிலியத்தில் 73 (46-27) நூல்களும், சீர்திருத்தத் திருச்சபை கையாளும் விவிலியத்தில் 66 (39-27) நூல்களும் அமைந்துள்ளன.[32] புதிய ஏற்பாட்டு நூல் கள் யாவும், கி.பி. முதல் நூற்றாண்டின் இறுதிக்குள்ளாகவே எழுத் துருவம் பெற்றுவிட்டன எனப் பெரும்பான்மையான ஆராய்ச்சி யாளர்கள் கருதுகின்றனர். கி.பி. 2-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி யில் எழுத்துருவம் பெற்ற நூல்களும் உண்டு என்பது, ஆராய்ச்சி யாளர் சிலரின் கருத்து.

### புதிய ஏற்பாடு எழுதப்பட்ட மொழி

பழைய ஏற்பாட்டு நூல்கள் யாவும், இசுரவேலரின் சொந்த மொழியான எபிரேய மொழியில் எழுதப்பட்டுள்ளன. கிரேக்க வேந்தனாகிய மகா அலெக்சாந்தர்,பல நாடுகளை வென்றபொழுது கிரேக்க மொழி செல்வாக்குப் பெற்றது. இசுரவேலரும் கிரேக்கர் களுடைய ஆட்சிக்கு உட்பட்டனர்.

---

*31.* அப்போத்தலர் - இயேசுவோடு வாழ்ந்தவர்களும் அவர்கள் காலத் தில் நற்செய்திப் பணியாற்ற அதிகாரம் பெற்றவர்களும்.

*32.* பின் இணைப்பு காண்க. ( விவிலிய நூல்கள் )

கிரேக்க மொழியின் செல்வாக்கு எபிரேய மொழியைப் பாதித்தது. தங்களைச் சுற்றியுள்ள மக்களுக்கும் விளங்குவதற்காக, எபிரேயர்கள் கிரேக்க மொழியில் எழுதத் தொடங்கினர். பழைய ஏற்பாட்டு நூல்களோடு சில நூல்கள் சேர்க்கப்படாமல் தள்ளிவிடப் பட்டதற்கு, அவை கிரேக்க மொழியில் எழுதப்பட்டமையும் ஒரு காரணம் ஆகும்.

புதிய ஏற்பாட்டு நூல்கள் யாவும், கிரேக்க மொழியிலேயே எழுதப்பட்டுள்ளன. மத்தேயு நற்செய்தி நூல்மட்டும் எபிரேய மொழியோடு இணைந்த அரமேயிக் மொழியில் முதலில் எழுதப் பட்டதாகவும், பின்னர் அது கிரேக்க மொழியில் மொழிபெயர்க்கப் பட்டதாகவும் ஒரு கருத்து உண்டு.

புதிய ஏற்பாட்டுத் திருச்சபையில் யூதர்கள்மட்டுமல்லாது கிரேக்கர், உரோமர் போன்ற புற மதத்தவரும் கடவுளின் பிள்ளைகளாகச் சேர்க்கப்பட்டமையால், எல்லோருக்கும் விளங்கக்கூடிய கிரேக்க மொழியில் எழுதவேண்டிய கட்டாயச் சூழல் ஏற்பட்டது.

யூதர்களுக்குமட்டுமே உரிமையாய் இருந்த விவிலியத் திருமறை நெறி, இயேசு கிறித்துவின் வழியாய் உலக மக்கள் யாவருக்கும் உரிமையாக்கப்பட்டது என்பதையே இது விளக்குகிறது.

**''நீங்கள் உலகமெங்கும் போய் படைப்பிற்கெல்லாம் நற்செய்தியை அறிவியுங்கள்''** என்ற இயேசுபெருமானின் கட்டளை நிறைவேற்றப்பட கிரேக்க மொழி பயன்பட்டது.

### விவிலியத்தின் அடிப்படைக் கருத்துகள்—நான்மறைச் செல்வர்

பழைய ஏற்பாடு, புதிய ஏற்பாடு ஆகிய இரண்டும் இணைந்த விவிலியமே, கிறித்தவ சமயத் திருமறையாகத் தொடக்க காலம் முதல் விளங்குகிறது.

ஏறத்தாழ 1,500 ஆண்டுகால யூத இன வரலாற்றில், யூதர்கள் புரிந்துகொண்ட இறைவன், இயேசுகிறித்துவின் வழியாக உலக மக்களுக்கு வெளிப்படுத்தப்பட்ட நற்செய்தியே, கிறித்தவம் கூறும் நற்செய்தியாக விளங்குகின்றது.

பழைய ஏற்பாட்டில் படைப்புப்பற்றிக் கூறப்படும் விளக்கமும் யூத இன வரலாற்றில் யூதர்களின் வீழ்ச்சியும் மீட்பும், யூதர்கள் எதிர்பார்த்த நிலையான மீட்பைக் கொடுக்கும் மேசியாவாகிய

கிறித்துவின் மீட்பின் நற்செய்தியும், ஒன்றாக இணைந்து விவிலியம் உலகுக்குக் கொடுக்கும் மீட்பின் நற்செய்தியாக மலர் கின்றது.

முன்னோருடைய தவறாலும் தன்னுடைய தவறாலும், அடிமைப்பட்டுக் கிடக்கும் மனிதனை மீட்கும்படியாக இறைவன் இவ்வுலகில் மனுவுருவை ஏற்றார் என்பதும், மனிதன் அடைய வேண்டிய துன்பத்தைத் தாம் ஏற்று அவனைத் துன்பத்திலிருந்து விடுவித்து, அவனுக்கு மீட்பை அளித்துள்ளார் என்பதும், அந்த மீட்பை ஏற்றுக்கொள்ளுகின்றவர்கள் தீமையிலிருந்து விடுபட்டு இறைவனோடு இணைந்து இன்பம் அனுபவிக்க இயலும் என்பதும் விவிலியத்தின் அடிப்படைக் கருத்துகள் ஆகும்.

இந்த அடிப்படைக் கருத்துகள், யூத இனத்தின் 1,500 ஆண்டு கால வரலாற்றிலிருந்து பெறப்பட்டவையாகும்.

இந்நற்செய்தி யாரோ ஒருவர் தனிப்பட்ட முறையில் எழுதிய கதை— புராணம் போன்றது அன்று. முழுவதும் தகுந்த பின்னணி யையுடைய வரலாற்றுத் தொடர்புடையது என்பதில் ஐயமில்லை. யூதத் திருமறையாகிய பழைய ஏற்பாடு, தோரா, நபீம், கெதூபீம் ஆகிய மூன்று பிரிவாக விளங்குவதை முன்னர் பார்த்தோம். மூன்று பிரிவாக விளங்கும் பழைய ஏற்பாட்டுடன் இயேசு கிறித்துவின் நற்செய்தியாக விளங்கும் புதிய ஏற்பாடும் இணைந்து விவிலியம் நான்கு பகுதிகளைக் கொண்ட திருமறையாக—நான்மறையாக விளங்குகின்றது. விவிலியம் கூறும் கடவுள் நான்மறைச் செல்வ ராக விளங்குகின்றார்.

## தோமாவும் தமிழகமும்

இயேசுவின் பன்னிரு மாணவர்களில் ஒருவராகிய தோமா, இயேசுவின் உயிர்த்தெழுந்த செய்தியை மற்றவர்கள் கூறக் கேட்ட போது நம்ப மறுத்தார்.[33] ஆனால், உயிர்த்தெழுந்த இயேசு அவர் முன் தோன்றி, தாம் உயிர்த்தெழுந்ததை உறுதிப்படுத்திக் காட்டிய போது நம்பிக்கை பெற்றார் என, விவிலியம் கூறுகிறது.

கி.பி. முதல் நூற்றாண்டிலே இயேசுவின் நற்செய்தி உலகம் முழுவதும் பரவலாயிற்று. தோமா அந்நற்செய்தியைப் பாலத்தீன

33. யோவான். 20: 24-29

நாட்டிலிருந்து வெகு தூரத்திலுள்ள நமது தமிழகத்திற்குக் கொண்டுவந்தார். நமது தமிழகத்திற்கும் அப்போது பாலத்தீனத்தை ஆண்டுவந்த உரோமர்களுக்கும், வணிகத் தொடர்பு இருந்து வந்ததை வரலாறு தெளிவாகக் கூறுகின்றது.

கிரேக்கர், உரோமர், யூதர், சீரியர் முதலியோர் தமிழகத்தில் சங்க இலக்கியங்களில் 'யவனர்' என்னும் பெயரால் குறிக்கப்பட்டுள்ளனர்.

திராவிடப் பண்பாட்டையுடைய ஆபிரகாமின் மரபில் தோன்றிய யூதர் வழியில் பிறந்த இயேசுவின் நற்செய்தியை, தோமாவாகிய யூதர் தமிழகத்திற்குக் கொண்டுவந்தபோது, சங்க இலக்கியக் குறிப்பின்படி தோமா ஒரு யவனராகவும், தோமாவின் நற்செய்தி யவன நாகரிகத்தில் தோன்றிய நற்செய்தியாகவும் தமிழ் மக்களுக்குக் காட்சியளித்திருத்தல் இயல்பு. யவனராகிய தோமா வழியாகத் தமிழகத்தில் யவன நாகரிகத்தின் நற்செய்தியாகிய கிறித்தவம் பரவியதை நோக்குவோம்.

# 3. யவனர் வழித் தமிழகத்தில் கிறித்தவம்

கிறித்தவ சமயத்தைத் தோற்றுவித்த இயேசுகிறிஸ்து ஒரு யூதர் என்பதையும், யூதர்கள் அக்காலத்தில் உரோம ஆட்சியின் கீழ் அடங்கி வாழ்ந்தனர் என்பதையும், உரோமர்களுக்கு முன்னர் அந்நாடுகளை ஆண்டுவந்த கிரேக்கர்களின் செல்வாக்கினால், கிரேக்கமொழி பொதுமொழியாக விளங்கியது என்பதையும் நாம் முன்னர்க் கண்டோம். கிரேக்கர், உரோமர், யூதர் இவர்களோடு சீரியர்களும் அப்பகுதியில் வாழ்ந்து வந்தனர்.

இயேசுபெருமான் வாழ்ந்தகாலை, இந்த நான்கு இனத்தாருக்கும் பொதுமொழியாகக் கிரேக்க மொழியே இருந்துவந்த காரணத்தால், விவிலியத்தின் புதிய ஏற்பாடாகிய இயேசுபெருமானின் நற்செய்தி,எல்லோரும் அறிந்துகொள்வதற்கு வாய்ப்பாக, அதை எழுதியவர்கள் யூதராய் இருந்தபோதிலும், கிரேக்க மொழியில் எழுதப்பட்டது என்பதையும் முன்னர்ப் பார்த்தோம்.

''கிரேக்க நாட்டவர் தம் மொழியை 'அயேவானேஸ்' (Iaovanes) என்றுதான் குறித்தனர். யவனர் என்ற பெயர் இதன் திரிபே''[1] என்பார் வி. கனகசபை.

யூதர், உரோமர், கிரேக்கர், சீரியர் ஆகிய நான்கு இனமக்களுக்கும் கிரேக்க மொழி பொது மொழியாக விளங்கியிருக்கிறது.

தமிழகத்தில் கிரேக்க மொழியைப் பேசியவர்கள் என்னும் பொருளையுடைய 'யவனர்' என்னும் சொல், கிரேக்கத்தைப் பொதுமொழியாகக் கொண்ட கிரேக்கர், உரோமர், யூதர், சீரியர் ஆகிய நான்கு பிரிவினரையும் சுட்டி நிற்கின்றது.

''ஆதியில் யவனர் என்ற சொல் கிரேக்கரையே சுட்டி நின்றது. பிறகு உரோமரையும் அடுத்து அயல்நாட்டினர் அனைவரையுமே அது குறிப்பிடலாயிற்று''[2] என்பார் கே. கே. பிள்ளை.

---

1. வி. கனகசபை, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 19[illegible], பக். 69.

2. கே. கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1972, பக். 79.

"ரோமர்கள்மட்டுமன்றிக் கிரேக்கரும் சீரியரும் யூதரும், தமிழகத்துடன் வாணிகத் தொடர்பை வளர்த்துக்கொள்ளலானார்கள். தமிழகத்தில் ரோமாபுரிமக்கள் குடியேறி வாழ்ந்துவந்த இடங்களில் எல்லாம், அவர்களும் இணைந்து வாழலானார்கள். அவர்களுள் பலர் தமிழகத்திலேயே நீண்ட காலம் தங்கிவிட்டனர்" என்பார்[3] கே. கே. பிள்ளை.

தமிழகத்திலேயே நீண்டகாலம் தங்கிய யவனர் வழியாக, அவர்களுடைய நாகரிகம் தமிழகத்தில் பரவியிருத்தல் இயல்பே.

இயற்கை நெறிக் காலத்தில் வாழ்ந்த தமிழர்களிடையே, மேல்புல மக்களாகிய யவனர் வழியாக யவனர் நாகரிகமும், வடபுல மக்களாகிய ஆரியர்களின் வழியாக ஆரிய நாகரிகமும் பரவியிருந்தமையைச் சங்க இலக்கியங்கள் தெளிவாகக் காட்டுகின்றன.

சங்க காலத்தில் மேல்புல நாகரிகமாகிய யவன நாகரிகம், வடபுல நாகரிகமாகிய ஆரிய நாகரிகம் இவையிரண்டில், ஆரிய நாகரிகம் செல்வாக்குப் பெற இயலாமல் போனமைக்கு, யவன நாகரிகத்திற்குத் தமிழ்நாட்டில் இருந்த செல்வாக்கே காரணமாகலாம் என, ஆ. வேலுப்பிள்ளை கீழ்க்காணுமாறு கூறுகின்றார்.

"யவனர் குடியிருப்புகள் தமிழ்நாட்டில் இருந்ததும், யவனர் மதுவைத் தமிழ்நாட்டார் அருந்தியதும், யவன வீரர் தமிழ் மன்னருக்கு மெய்க்காப்பாளராக விளங்கியதும், யவனர் காசு தமிழ்நாட்டில் விளங்கியதும் ஆகிய இவை யாவும் வரலாற்றுண்மைகள். யவனர் வாழ்க்கை முறையும் கருத்துகளும் தமிழ் நாட்டிற் செல்வாக்குப் பெற்றனவா? அங்ஙனம் பெற்றிருந்தால், அச்செல்வாக்கின் அளவு எத்தகையது என்பவற்றைப்பற்றி ஒன்றும் நிச்சயமாக அறிந்துகொள்ள இயலாதிருக்கின்றது. யவனருடைய நாகரிகம் உலகியல் ஈடுபாடு மிக்கது. சங்ககாலத் தமிழகத்தில் சமய நெறியைப் போற்றிய ஆரிய நாகரிகம், மிக்க செல்வாக்குப் பெற இயலாமற் போனமைக்கு, உலகியலைப் போற்றிய யவனர் நாகரிகத்திற்குத் தமிழ்நாட்டில் இருந்த செல்வாக்கும் ஒரு காரணமாகலாம்.[4]"

---

3. கே. கே. பிள்ளை; தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1972, பக். 53.

4. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், தமிழ்ப் புத்தகாலயம் 1969, பக். 8.

யவன நாகரிகத்தைப்பற்றிய வரலாற்றுண்மைகளை - தமிழகத்தைப் பற்றி ஆராய்ந்த வரலாற்றாசிரியர்கள்,சரியாக அறிந்து கொள்ள இயலாத காரணத்தாலும், இதுவரை தமிழக வரலாற்றை எழுதிய ஆசிரியர்களில் பெரும் பகுதியினர், வடபுல ஆரிய நாகரிகச் சார்புடையவர்களாய் இருந்தமையாலும், தமிழகத்திற்கு வந்த புதிய கருத்துகள் யாவும் வடபுல ஆரியர்களிடமிருந்தே வந்திருக்க வேண்டும் என்ற நோக்கிலேயே இதுவரை ஆய்வுப் போக்குகள் அமைந்திருந்த காரணத்தாலும், யவனர் வாழ்க்கை முறையும் கருத்துகளும் தமிழ்நாட்டில் செல்வாக்குப் பெற்றனவா? அங்ஙனம் பெற்றிருந்தால், அச்செல்வாக்கின் அளவு எத்தகையது என்பவற்றைப்பற்றி ஒன்றும் நிச்சயமாக அறிந்துகொள்ள இயலாதிருக்கின்றது.

ஆரியர்களின் வேத வழிபாட்டிற்கு மாறுபட்ட கோயில் வழிபாட்டையும், வேத நூல்களுக்கு மாறுபட்ட ஆகமங்களையும், வேதத் தெய்வங்களுக்கு மாறுபட்ட திராவிடத் தெய்வங்களையும் உடைய திராவிட நாகரிகம், ஆரிய நாகரிகத்திற்கு மாறுபட்டது என்பதையும் சைவம், வைணவம் போன்றவை திராவிட நாட்டில் உருவான திராவிட சமயங்கள் என்பதையும் முன்னர்க் கண்டோம்.

பக்தி இயக்கத்தின் காரணமாக எழுந்த சைவ வைணவமாகிய சமயங்கள் தோன்றுவதற்கு அடிப்படையாக விளங்கிய காலம், இயற்கை நெறிக் காலமாகும்.

இயற்கை நெறிக் காலத்தில் ஆரிய நாகரிகத்திற்கு மாறுபட்ட யவன நாகரிகம், செல்வாக்குப் பெற்றிருந்தது என்றால், ஆரிய வேதத்திற்கு மாறுபட்ட திராவிட சமயங்களின் எழுச்சிக்குக் காரணமாய் அமைந்தது யவன நாகரிகமே என்பது பெறப்படுகிறது.

தமிழர்களின் திராவிட சமயங்கள் தோன்றுவதற்கு அடிப்படையான கருவைக் கொடுக்கக்கூடிய வாய்ப்பு, இயற்கை நெறிக் காலத்தில் தமிழ் மக்களிடையே வாழ்ந்த யவனர்களின் ஒரு பிரிவினரான, யூதர்களின் சமய வரலாற்றில் எழுந்த இயேசுவின் நற்செய்திக்கு உண்டு என்னும் கருத்து, உண்மைக்கு மாறானதன்று.

இயேசுவின் நற்செய்தி கி.பி. 16-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னரே, ஐரோப்பியர் வழியாகத் தமிழகத்தில் பரவியுள்ளது என்னும் தவறான முடிவின் காரணமாகவும் கி.பி.முதல் நூற்றாண்டிலிருந்து யவனர் நாகரிகத்தின் வழி திராவிடப் பண்பாட்டில் வளர்ந்து பெருகிய திராவிட சமயங்களான சைவம், வைணவம்

போன்றவற்றிற்குக் கருவாக விளங்கக்கூடிய ஆற்றல், இயேசுவின் நற்செய்திக்கு உண்டா என்ற நோக்கில்கூட, யாரும் எண்ணிப் பார்க்க இயலா நிலையில், வடபுல ஆரியச் செல்வாக்கில் பிற்காலத் தமிழகம் அடங்கிவிட்ட காரணத்தாலும், பிற்கால ஐரோப்பிய வழிக் கிறித்தவத்திற்கும் முற்காலத் திராவிடப் பண்புடைய இந்துக் கிறித்தவத்திற்கும் பெரும் பண்பாட்டு வேற்றுமையிருந்த காரணத் தாலும், யவன நாகரிகத்தில்—சங்க காலத் தமிழகத்தில் பரவிய இயேசுவின் நற்செய்தி அறியப்படாமல் மறைந்துள்ளது எனலாம்.

இப்பொழுது தமிழக யவன வரலாற்றுத் தொடர்பை நோக்கு வோம்:

**வரலாற்றில் வணிகத் தொடர்பு**

"ஒரு நாட்டிற்கும் இன்னொரு நாட்டிற்கும் இடையில் நிகழும் வணிகத் தொடர்பினால், பண்பாட்டு இலக்கியத் தொடர்புகள் ஏற்படுகின்றன. இலக்கிய பண்பாட்டுத் தொடர்புகளின் முன்னோடி வாணிபத் தொடர்பாகும்."[5]

'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்பது தமிழனின் பண்டைய மொழி. தமிழர்கள் திரைகடலைக் கடந்து பொருளீட்டிய வரலாறு கி.மு. 4,000-க்கு முன்னரே குறிக்கப்படுகிறது.

இசுரவேலரின் ஆதி முன்னோனாகிய ஆபிரகாம் புறப்பட்டு வந்ததாக விவிலியம் கூறும் 'ஊர்' என்னும் இடத்தில் அகழ்ந்து எடுக்கப்பட்ட தேக்கு மரத்துண்டு, தமிழகத்தின் சேரநாட்டைச் சார்ந்தது.

தென்னிந்தியாவுக்கும் சுமேரியாவுக்கும் இடையில் கி.மு. நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வாணிபப் போக்குவரத்து நடைபெற்றது என்பதற்கு, இத்தேக்கு மரத்துண்டு சான்றாக இருக்கின்றது என, சேஸ் என்பார் சிந்துவெளி நாகரிகச் சின்னங் கள் கண்டுபிடிக்கப்படுவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்னரே, (1887-இல்) தம் ஹிப்பர்ட் சொற்பொழிவுகளில் குறிப்பிட்டுள்ளார்.[6]

---

5. *அந்தனி ஜான், வள்ளுவரும் விவிலியமும்-ஓர் ஒப்பாய்வு, ஆய்வேடு சென்னைப் பல்கலைக் கழகம், 1979, பக். 09.*

6. மேற்கோள் : கே. கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண் பாடும், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1972, பக். 49-50.

"தமிழகத்துக்கும் பாபிலோனியாவுக்குமிடையே மிக விரிவான வாணிபம் நடைபெற்றுவந்ததற்குச் சான்றுகள் கிடைத்துள்ளன. பாபிலோனியாவில் நிப்பூர் என்ற இடத்தில் மரஷு என்பவரும் அவர் மக்களும் நடத்திவந்த காசு வாணிபத்தில், கணக்குப் பதியப் பட்ட களிமண் ஏடுகள் சிலவற்றில், பாபிலோனியர் தமிழக வாணிக ருடன் கொண்டிருந்த பற்றுவரவுகள் குறிக்கப்பட்டுள்ளன. அதே காலத்தில் தமிழ் வாணிகர்கள் பாபிலோன் நகரத்தில் குடியேறி அங்கேயே தங்கித் தொழிலை நடத்தி வந்ததற்கும் இவ்வேடுகள் சான்று பகர்கின்றன."[7]

"தென் அராபிய நாட்டு அரசி ஷோபா என்பாள், இசுரவேலின் மன்னன் சாலமோனைக் காணச் சென்றபோது ஏலம், இலவங்கம் போன்ற நறுமணப் பண்டங்களைக் கையுறையாகக் கொண்டு போனதாகவும் பழைய ஏற்பாட்டில் ஒரு குறிப்புக் காணப்படுகிறது (1 அரசர் 10:2). சாலமோன் ஆண்ட காலம் கி.மு. 1000 என்று அறுதியிட்டுள்ளனர். இவருடைய காலத்தில் டயர் நாட்டு மன்னர் ஹீராம் என்பவரின் ஏவலின்கீழ், கப்பல்கள் மூன்றாண்டுகளுக்கு ஒருமுறை பாய் விரித்தோடிப் பொன், வெள்ளி, தந்தம், குரங்குகள், தோகை, அகில் மரங்கள், விலையுயர்ந்த இரத்தினங்கள் ஆகிய பொருள்களை ஏற்றிக்கொண்டு வந்தனவாம் (2 நாளா. 9:21, 1 அரசர் 10:22, 22:48, 1 நாளா. 7:10). சாலமோன் மன்னனுக்கு அளிக்கப்பெற்ற மதிப்பிறந்த இப்பண்டங்களின் பெயர்கள் யாவும், தமிழ்ப்பெயர்களின் சிதைவுகளே என்பதில் ஐயமில்லை. இப் பொருள்கள் அனைத்தும் பண்டையத் தமிழகத்தின் சேரநாட்டுத் துறைமுகங்களினின்றும் ஏற்றுமதியாகியிருக்க வேண்டும்" என்பார் கே. கே. பிள்ளை.[8]

"கிரேக்கர்கள் தமிழகத்துடன் வாணிபத்தில் இறங்கியது கி.மு. ஐந்தாம் நூற்றாண்டின் தொடக்கத்திற்றான். இவ்வாணிபத் தின் மூலம் தமிழ்ச் சொற்கள் பல, கிரேக்க மொழியில் நுழைந்து இடம் பெற்றுள்ளன. சொபோகிளீஸ், அரிஸ்டோபேனீஸ் முதலிய கிரேக்க அறிஞரின் நூல்களில் இவற்றைக் காணலாம். அரிசி என்னும் தமிழ்ச் சொல், கிரேக்க மொழியில் 'அரிஸா' என்று உருக் குலைந்தது. அம்மொழியில் கருவா (இலவங்கம்) என்கிற தமிழ்ச்

7. கே. கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1972; பக். 49.

8. மேற்படி, பக். 48-49.

சொல் 'கார்ப்பியன்' என்றும், இஞ்சிவேர் 'கின்ஜிபரஸ்' என்றும், பிப்பாலி 'பெர்ப்பெரி' யாகவும் உருமாற்றம் அடைந்தன.''[9]

இயேசு பெருமான் பிறந்தபோது, அந்நாட்டை ஆண்டுவந்த உரோமப் பெருமன்னன் 'அகஸ்டஸ்' ஆவான். (லூக். 2:1) அகஸ்டஸ் மன்னனுக்கும் தமிழகத்திற்கும் மிக நெருங்கிய வாணிபத் தொடர்பு இருந்திருக்கின்றது.

''தமிழகத்துடன் உரோமர்கள் மேற்கொண்டிருந்த வாணிபம் அவர்களுடைய பேரரசரின் ஆதரவின் கீழ்ச் செழிப்புடன் வளர்ந்து வந்தது. இவ்வாணிபத்தின் வளர்ச்சியில் பேரரசர் அகஸ்டசும் பேருக்கங் காட்டினார். ஆர்மஸ் துறைமுகத்திலிருந்து ஏறக்குறைய நூற்றிருபது மரக்கலங்கள், பாய் விரித்தோடியதைத் தாம் நேரில் கண்டதாக ஸ்டிராபோ கூறுவதாக கே. கே. பிள்ளை குறிப்பிடு கின்றார்.[10]

''கி.மு. 21-இல் பாண்டியனிடமிருந்து 'வாணிப தூதுக்குழு' ஒன்று ரோம் நாட்டிற்குச் சென்று அகஸ்டஸை சந்தித்தது.''[11]

''தமிழகத்தில் ரோமாபுரி மக்கள் குடியேறி வாழ்ந்துவந்த இடங்களிலெல்லாம், யூதரும் சீரியரும் இணைந்து வாழலானார்கள். அவர்களுள் பலர், தமிழகத்திலேயே நீண்ட காலம் தங்கிவிட்டனர். அப்படித் தங்கியிருந்தவர்களிடமிருந்தே தமிழகத்தினைப்பற்றிய செய்திகளைத் தாம் கேட்டறிந்ததாகப் பிளினி கூறுகின்றார். வாணிபம் விரிவடைய விரிவடையத் தமிழ்நாட்டிலேயே குடியேறி விட்ட ரோமாபுரியினரின் தொகையும் வளர்ந்துவந்தது. அவர் களுடைய சேரி ஒன்று மதுரை மாநகருடன் இணைந்திருந்ததாகத் தெரிகின்றது. அவர்கள் வழங்கி வந்த பொன், வெள்ளி நாணயங் களும் செப்புக் காசுகளும் இப்போது புதைபொருள் அகழ்வாய்வில் கண்டெடுக்கப்படுகின்றன.''[12]

---

9. கே. கே. பிள்ளை, *தமிழக் வரலாறு - மக்களும் பண்பாடும்*, தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, *1972*, பக். *51*.

10. மேற்படி, பக். *53*.

11. மா. இராசமாணிக்கனார், *தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும்*, தனலட்சுமி பதிப்பகம், சோமு புத்தகாலயம், மதுரை, 1974, பக். 42.

12. கே. கே. பிள்ளை, மு. நூ. பக். 53-54.

''பழைய தமிழ்நாடான சேர நாட்டிலே திருவனந்தபுரத்துக்கு வடக்கே 150 மைல் தூரத்தில் உள்ள பஞ்சாரியிலும், திருச்சூருக்கு வடமேற்கே 22 மைல் தூரத்திலுள்ள எய்யலிலும், 1945-ஆம் ஆண்டில் உரோம தேசத்துப் பழங்காசுகள் கிடைத்தன. கொங்கு நாட்டில் கரூர், காட்டன் கள்ளி, குளத்துப்பாளையம், பென்னார், பொள்ளாச்சி, வெள்ளலூர் முதலான இடங்களிலும், பாண்டி நாட்டில் மதுரை, கலியம்புத்தூர், கரிவலம்வந்த நல்லூரிலும், புதுக் கோட்டையைச் சேர்ந்த கருக்காக்குறிச்சியிலும், தஞ்சாவூர், மகாபலிபுரம் முதலான ஊர்களிலும் யவன நாணயங்கள் (உரோமா புரிப் பழங்காசுகள்) கிடைத்துள்ளன''[13] என மயிலை சீனி வேங்கடசாமி குறிப்பிடுகின்றார்.

''இந்தியாவில் கிடைத்துள்ள உரோமானியக் காசுகளின் புதையல்களுள், 57 புதையல்கள் விந்திய மலைக்கு தெற்கே கிடைத் துள்ளன. இவை நான்கு முதல் நூறு ஆயிரம் காசுகள்வரை கொண்ட தனித்தனியான புதையல்களாக அகப்பட்டுள்ளன. இக் காசுகளில் பெரும்பான்மையானவை உரோமாபுரியை ஆண்ட அரசர்களான அகஸ்டஸ் (கி. மு. 29— கி. பி. 14) டைபீரியஸ் (கி.பி. 14-37) ஆகியோர் காலத்தவை.''[14]

''மதுரையில் ரோம நாணய அச்சுச்சாலை ஒன்று நடைபெற் றிருக்க வேண்டுமென ஊகிக்க வேண்டியுள்ளது. அகஸ்டஸ் பேரரசனின் கோயில் ஒன்று, வழிபாட்டில் இருந்து வந்ததாக பியூட்டிங்கரின் அட்டவணைகளிலிருந்து அறிகின்றோம்.''[15]

''மதுரையில் வையையாற்றுக் கரைப்பகுதியிலும் பிற இடங் களிலும் கணக்கற்ற ரோமப் பொன்-வெள்ளி-செப்பு நாணயங்கள் கிடைத்துள்ளன. இவை மதுரையில் யவனர் குடியிருப்பை உணர்த்துகின்றன. இன்றுள்ள புதுச்சேரிக்கு அண்மையில் ரோமர் தொழிற்சாலை ஒன்று இருந்தமைக்குரிய சான்றுகள் கிடைத் துள்ளன. சேர நாட்டுக் கடற்கரைப் பகுதியில், யவனர் குடியிருப்பும்

---

13. மயிலை சீனி வேங்கடசாமி, பழங்காலத்துத் தமிழர் வாணிபம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்-பிரைவேட் லிமிடெட், சென்னை, 1978. பக். 57.

14. கே. ஏ. திருஞான சம்பந்தம், சங்ககாலப் பண்டமாற்று நெறியும் காசுகளின் புழக்கமும், எம். பில் ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், 1980, பக். 99.

15. கே. கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1972, பக். 54.

அகஸ்டஸ் கோவிலும் இருந்தமைக்குரிய அடையாளங்கள் கண்டறியப்பட்டன. கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் வரையப்பட்ட கிரேக்க பரிகாசக்கூத்து நூலில், கன்னட வாசகங்கள் இடம் பெற்றுள்ள ஒரு காட்சி வரையப்பட்டுள்ளது. அக்காட்சி தென் கன்னட மாவட்டத்து உடுப்பிக்கு அருகிலுள்ள, மால்பே என்னும் இடத்திற்கு அண்மையில் நடைபெற்றதாக அந்நூல் கூறுகின்றது.''[16]

**பண்டைத் தமிழ் இலக்கியங்களில் யவனர்**

யவனர் என்பது முதலில் கிரேக்கர்களையும், பின்பு உரோமர், யூதர், சீரியர் ஆகியோரையும் குறித்தது என்பதையும், யவனர்களுடைய குடியிருப்புகள் பாண்டிய நாட்டிலும் சேரநாட்டிலும் பாண்டிச்சேரியிலும் இருந்தன என்பதையும், யவனப் பேரரசன் அகத்தசுக்குத் (Augustus) தமிழகத்தில் கோயில்கள் இருந்தமையையும், யவனக் காசுகள் தமிழகத்தில் ஏராளமாகக் கிடைத்தமையையும் பார்த்தோம்.

அகநானூறு, புறநானூறு, நெடுநல்வாடை, முல்லைப்பாட்டு, பெரும்பாணாற்றுப்படை, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலான பண்டைத் தமிழ் இலக்கியங்களில், யவனர்களைப்பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

| | |
|---|---|
| 'யவனர் தந்த வினைமாண் நன்கலம்,' | (அகம். 149) |
| 'யவனர், நன்கலந் தந்த தண்கமழ் தேறல்.' | (புறம். 56) |
| 'யவனர் இயற்றிய வினைமாண் பாவை.' | (நெடுநல்வாடை. 101) |
| 'வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்.' | (முல்லைப்பாட்டு. 61) |
| 'யவனர் ஓதிம விளக்கு.' | (பெரும்பாண். 316,317) |
| 'யவனத் தச்சர்.' | (மணிமேகலை. 19:108) |
| 'யவனர் இருக்கை.' | (சிலப்பதிகாரம் 5:10) |
| 'அடல் வாள் யவனர்.' | (சிலப்பதிகாரம் 14:67) |
| 'வன்சொல் யவனர்.' | (சிலப்பதிகாரம் 28: 141, 29:25) |

16. மா. இராசமாணிக்கனார், தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும், தனலட்சுமி பதிப்பகம், சோமு புத்தகாலயம், மதுரை, 1974, பக். 43-44.

யவனர்கள் தமிழகத்தில் ஒரு பகுதியில் அரசு அமைத்து ஆண்டு வந்தனர். யவனர்களுக்குத் தனிநாடு இருந்தது என்னும் குறிப்பு,

'வன்சொல் யவனர் வளநா டாண்டு
பொன்படு நெடுவரை புகுந்தோ னாயினும்'[17]

'வன்சொல் யவனர் வளநாடு வன்பெருங்கல்
தென்குமரி யாண்ட செருவில் கயல்புலியான்'[18]

என்னும் சிலப்பதிகார அடிகளால் விளங்குகின்றது. மேலும்'பல்சந்த மாலை' என்னும் பழைய நூலிலும் இதற்கான குறிப்புக் காணப் படுகிறது.

பல்சந்தமாலை முழுவதும் இப்போது கிடையாவிடினும், அதிலுள்ள சில பாடல்கள் 'களவியற் காரிகை' என்னும் நூலில் அதன் உரையாசிரியரால் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பெற்று உள்ளன. அப்பாடல்களில்,

''இயவனராசன் கலுபதி தாமுலென்ன வந்தோர்
அயன்மிகு தானையர் அஞ்சுவண் ணத்தவர்''

என்னும் பகுதி யவன அரசனைக் குறிக்கின்றது.

கிரேக்கர், உரோமர், யூதர், சீரியர் ஆகிய யவனர்களில், சிலப்பதிகாரமும் பல்சந்தமாலையும் கூறும்-தமிழகத்தில் யவனர் வளநாடு ஆண்ட'அயன்மிகுதானை இயவன ராசன்' யார் என்பது, காணத் தக்கதாயுள்ளது,

**யவனர் வளநாடு**

தமிழகத்தில் யவனக் குடியிருப்புகள் இருந்தன. யவன நாண யங்கள் ஏராளமாகத் தமிழகத்தில் புழக்கத்தில் இருந்தன.

''வாணிப உறவால் தமிழகத்துக்குப் பழங்காலத்தில் வந்த அயலகக் காசுகளான திரமம், தினாராக் காசுகள், கி.பி. 9, 10-ஆம்

---

17. சிலப்பதிகாரம், 28: 141, 142.

18. சிலப்பதிகாரம், 29: 25-26.

நூற்றாண்டுகளில்கூடச் செலாவணியாயின என்பதைத் தமிழகக் கோயில் கல்வெட்டுகள் உணர்த்தும்.''[19]

''சோழ மன்னர்களின் கல்வெட்டுகளில் காணப்படும் 'திரமம்' காஞ்சிபுரம், தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள உடையார்குடி, திருப் புகலூர் ஆகிய இடங்களில் வரையப்பெற்ற கல்வெட்டுகளில், இந் நாணயத்தின் பெயர் மிக அருகியே வந்துள்ளது. சேர மன்னர் களின் கல்வெட்டுகளிலும் இதன் பெயர் காணப்படுகிறது. இது கிரேக்க நாணயத்தின் பெயராகவும் இருத்தலால், அந்நாட்டிற்கும் நம் தமிழ் நாட்டிற்கும் வாணிபத் தொடர்பு ஏற்பட்டிருந்த கி.மு. முதல் நூற்றாண்டிலேயே இந்நாணயம் தமிழகத்தில் வழங்கிய தாதல் வேண்டுமென்பது, அறிஞர் சிலருடைய கருத்தாகும். அங்ஙனமாயின், இது பிற்காலத்திலும் தொடர்ந்து வழங்கி யிருத்தல் வேண்டும்''[20] என்பார் தி.வை. சதாசிவ பண்டாரத்தார்.

யவனக் காசு கி.பி. 10-ஆம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் வழக்கில் இருந்ததைப் போன்று, யவனக் குடியிருப்புகளும் தமி ழகத்தில் வழிவழியாக இருந்து வந்தமையையும், அது ஒரு சிற்றரசு அளவுக்குச் செயல்பட்டது என்பதையும் 'யவனர் வளநாடு' எனும் தொடர் சுட்டுகிறது.

கூட்டம் கூட்டமாகத் தமிழகத்தின் ஒரு பகுதியான சேர நாட்டில் வந்து தங்கிய யூதர்களையும் சீரியர்களையும் அவர் களுக்கு உரிமை அளித்த சேர அரசர்களையும்பற்றிச் செப்புப் பட்டயக் குறிப்புகள் காணப்படுகின்றன.

''கிறித்தவ ஊழியின் முதல் நூற்றாண்டுகளிலேயே யூதர்கள், மேல் கடற்கரைக்கு வந்ததாகத் தெரிகிறது. கி.பி. 68-இல் நிகழ்ந்த ஜெருசலேம் கோயில் அழிவின் பின், அவர்களில் பலர் மலபாருக்கு வந்து குடியேறியதாக அவர்கள் மரபுரை கூறுகிறது. ஆயினும், இரண்டாம் நூற்றாண்டில் அவர்கள் மேல்கடற்கரைப் பகுதியில் தங்கி வாழ்ந்திருந்தனர் என்பதில், ஐயத்திற்கு இடம் இல்லை. ஏனெனில், இதை நிலைநாட்டுவதற்குரிய முறையில், பண்டைய செப்புப்பட்டயப் பத்திரங்கள் மலபாரிலுள்ள யூதர்களிடமும் சீரியக்

---

19. கே. ஏ. திருஞான சம்பந்தம், சங்ககால பண்டமாற்று நெறியும் காசுகளின் புழக்கமும், எம். பில். ஆய்வேடு, சென்னைப் பல்கலைக் கழகம், *1971*, பக். *132*.

20. தி. வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு— மூன்றாம் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், *1971*, பக். *132*.

கிறித்தவர்களிடமும் இன்றும் உள்ளன''[21] என, வி. கனகசபை கூறுகின்றார்.

அவர் மேலும், ''கி.பி. 192-க்குரிய சேர அரசன் பாஸ்கர இரவிவர்மனின் இந்தப் பத்திரம், தென் இந்தியாவில் ஒழுங்காகப் பேணப்பட்டு, நமக்கு வந்து சேர்ந்துள்ள செப்புப்பட்டயங்களில் மிக மிகப் பழமை வாய்ந்ததாகும். இக்காரணத்தால் அஃது ஆராய்ச்சிக்கு மிகவும் முக்கியமானதாகும். பண்டை இலக்கியங்களைவிட எழுத்து மூலங்களிலேயே மிகுதி நம்பிக்கை கொள்ளும் வரலாற்று ஆராய்ச்சியாளர்களுக்கு, இரண்டாம் நூற்றாண்டுக்குரிய தமிழ் நாகரிகத்தின் வகையில், இந்த எழுத்து மூலம் மிகவும் ஏற்புடைய சான்று தருகின்றது''[22] எனக் கூறுகின்றார் வி. கனகசபை.

செப்புப்பட்டயம் பெற்ற சீரியக் கிறித்தவர்கள் பரம்பரையாகச் சேரநாட்டில் வாழ்ந்து வந்துள்ளனர். கி.பி. 6-ஆம் நூற்றாண்டில் சேர நாட்டில் கிறித்தவ சமயம் இருந்து வந்ததை கே. கே. பிள்ளை பின்வருமாறு கூறுகின்றார்:

''சங்க காலத்துக்குப் பிந்திய சேரநாட்டைப்பற்றிய செய்திகள் விரிவாகக் கிடைக்கவில்லை. சேரமான் பெருமாள் என்ற பெயர் கொண்ட மன்னர் சிலர்ஆண்டு வந்தனர் என அறிகின்றோம். 6-ஆம் நூற்றாண்டிலேயே சேரநாட்டில் கிறிஸ்துவ சமயம் அண்டிவிட்ட தாகக் 'கிறிஸ்துவ நிலப்பரப்புகள்' என்னும் தம் நூலில், காஸ்மாஸ் இந்திகோ பிளியுஸ்டீஸ் எழுதுகின்றார்,''[23]

### செப்புப்பட்டயமும் கல்வெட்டுகளும்

''இக்காலத்தைப்பற்றி வெளிப்படுத்தும் சின்னங்களாகத் தென் இந்தியாவில் கற்களில் செதுக்கப்பட்ட ஐந்து சிலுவைகள் கண்டுபிடிக்கப்பட்டன. ஒன்று சென்னை மயிலாப்பூரைச் சேர்ந்த பரங்கிமலையிலும் (St. Thomas Mount) மற்றவை கேரள

---

21. வி. கனகசபை, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1973, பக். 69.

22. மேற்கோள் பத்திரங்கள் எண். 1, 2, 3 இவற்றின் மொழிபெயர்ப்பு லோகனின் மலபார்க் கையேடு-11, பக். 115-122.

23. மேற்கோள் கே. கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1973, பக். 196.

நாட்டிலுள்ள கோட்டயத்திலும், ஏனைய மைசூர் நாட்டிலுள்ள கோலார் பிரதேசத்திலும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. அவை யாவும் கருங்கல்லில் வெட்டப்பட்டவை; ஒரே மாதிரியானவை. ஒரு பீடத்தின்மேல் ஒரு சிலுவை. அதன் மேல், பறந்து இறங்கி வருவது போல் ஒரு புறா. இவை யாவையும் சூழ்ந்து ஓர் ஒளி வளைவு. இவ்வளைவில் பாலி மொழியில் பொறிக்கப்பட்ட எழுத்துகள் அடங்கியுள்ளன. ஆனால், ஓர் இடத்தில் மாத்திரம் சீரிய எழுத்துகள் சில கையாளப்பட்டுள்ளன.''[24]

''பழங்கால எழுத்துமுறை ஆராய்ச்சியாளர், இச்சிலுவைகள் எட்டாம் அல்லது ஒன்பதாம் நூற்றாண்டுகளுக்குரியவை எனக் கணிக்கின்றனர். அக்காலத்தில் தென்னிந்தியாவில் மயிலாப்பூரிலும் மலையாள நாட்டிலும் திருச்சபை இருந்தன என்பதற்கு, இது ஒரு தெளிவான சான்றாகும்.''[25]

''$14\frac{3}{4}$ அங்குல நீளமும் 4 அங்குல அகலமுமுள்ள மற்றொரு செப்பேடு, இன்றும் கோட்டயத்திலுள்ள பழைய இறையியற் கல்லூரியில் (Old Seminary) இருக்கிறது. இது கிராங்கனூரிலுள்ள கிறித்தவ சமூகத்தைப்பற்றிக் குறிப்பிட்டு, வீரராகவ சக்கரவர்த்தி என்னும் அரசனால் 'சேரமான் நாட்டின் மேன்மையான செட்டியார்' என விவரிக்கப்பட்டுள்ள மகாதேவ பட்டினத்து இரவி கொற்றன் (Iravikorttan) என்பவருக்கு அளிக்கப்பட்ட சிறப்புரிமைகள்பற்றியும் மணிக்கிராமம் (Manigramam) என்னும் பட்டத்தை அவருக்குச் சூட்டியதுபற்றியும் கூறுகின்றது. இப்பட்டம், இவர் கிராங்கனூரிலுள்ள வணிகர்களுக்குத் தலைவர் என்பதை உறுதிப்படுத்தி, ஒருகால் அளிக்கப்பட்டிருக்கலாம். அவ்விடத்திலுள்ள இரு ஜாதியினர் அவருக்கு அடிமைகளாக உதவவும், கிராங்கனூர் துறைமுகத்திலும் பட்டினத்திலுள்ள எல்லா வாணிபச் சரக்குகளின் மீதும் விதிக்கப்பெற்ற வரிகளை வசூல் செய்யவும், அவருக்கும் அவருக்குப்பின் சந்ததியாருக்கும் அரசர் அனுமதி அளித்தார்.''[26]

''மணிக்கிராமத்தார் என்ற குழுவினர், தலைநகரங்களிலும் கடற்றுறைப் பட்டினங்களிலும் வெளிநாடுகளிலும் வாணிபம் நடத்திய செய்திகள், கல்வெட்டுகளிலும் செப்பேடுகளிலும் காணப்

---

24. சிறில் புரூஷ் பெர்த், இந்திய திருச்சபை வரலாறு, கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை, 1962, பக். 50.

25. மேற்படி, பக். 51.

26. மேற்படி, பக். 49-50.

படுகின்றன. உறையூர் மணிக்கிராமம், (Ins. 519 of 1905...) காவிரிப்பூம்பட்டினத்து மணிக்கிராமம், (காவிரிப்பூம்பட்டினத்தின் ஒரு பகுதி இக்காலத்தில் மணிக்கிராமம் என்னும் பெயருடன் தனி ஊராயிருத்தல் அறியத் தக்கது) கொடும்பாளூர் மணிக்கிராமம் ('கொடும்பாளூர் மணிக்கிராமத்து வியாபாரி மணிய மார்த்தாண்டன் பாசிறீ கோயிலில் வைத்த கழஞ்சு' (S. I. I., Vol. IXI No.) இளங்-கோப்பட்டினத்து மணிக்கிராமத்தார் (Ins. 474 of 1926) என்னும் கல்வெட்டுத்தொடர்களால், அவர்கள் தலைநகர்களில் வாணிபத்தில் சிறந்து விளங்கியிருத்தல் வேண்டும் என்பது ஒருதலை. ஸ்தாணு ரவியின் கோட்டயம் செப்பேடுகளில், 'அஞ்சு வண்ணமும் மணிக் கிராமமும் ரட்சிக்கக் கடவர்' எனவும், வீரராகவச் சக்கரவர்த்தியின் கோட்டயம் செப்பேடுகளில் 'பெருங்கோயிலகத்திருந்தருள மகோ தையார் பட்டினத்து இரவிக்கொற்றனாய சேரமான் லோகப்பெருஞ் செட்டிக்கு மணிக்கிராமப் பட்டம் கொடுத்தோம்.... நகரத்துக் கர்த்தாவாகிய இரவிக்கொற்றனுக்கு' எனவும் போதரும் சாசனப் பகுதிகளால், நகரங்களில் அக்குழுவினர்க்கிருந்த பெருமதிப்பும் அக் குழுவின் உறுப்பினர் மணிக்கிராமப் பட்டம் அரசர்பால் பெறும் வழக்கமும் நன்கு புலனாதல் காணலாம். திருநெல்வேலி ஜில்லா திருக்குற்றாலத்திலுள்ள கல்வெட்டொன்று 'மணிக்கிராமத்து தர்ம செட்டி ஆயின சடையன் கவையன் வச்ச விளக்கொன்று' (439 of 1017) என்று கூறுவதால் அவர்கள் 'தர்மசெட்டி' என்று வழங்கப் பெற்றமை யுணரற்பாலதாகும். திருவண்ணாமலையிலுள்ள இரு கல் வெட்டுகளில் 'சத்திய வாசகர் ஆன தன்மவாணியர் (S. I. I., Vol. III, 138) எனவும், 'தன்மவாணிகர்' (Ibid. No.141) எனவும் அவர்கள் குறிக்கப்பெற்றுள்ளனர்.''[27]

மேலே கண்ட குறிப்புகளில் 'செட்டியார்', 'மணிக்கிராமத்தார்' எனக் கிறித்தவ வாணிபர்கள் பெயர் பெற்றமையும், அப்பெயர் களைப் பெற்றவர்கள், திருக்குற்றாலம், திருவண்ணாமலை முதலிய ஊர்களில் செய்துள்ள தானங்களும் நோக்கத் தக்கன. மணிக் கிராமம், அஞ்சுவண்ணம் என்ற பெயர்களைப் பெற்றிருந்த சீரியக் கிறித்தவர்களை, சதாசிவ பண்டாரத்தார் இசுலாமியர் எனத் தவறாகக் கருதியுள்ளார்.

கி. பி. 1321-இல் ஓடோரிக் என்பவர், 'தோமையர் ஆலயத்தில் சிலைகள் நிரம்பியிருக்கின்றன' எனக் கூறும் குறிப்பும், சீரியக் கிறித் தவர்களோடு இணைந்த மணிக்கிராமம் என்ற பட்டம் பெற்றவர்கள்

---

*27. தி. வை. சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, 3-ஆம் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1971, பக். 110-112.*

குற்றாலம், திருவண்ணாமலை முதலான இடங்களில் தானங்கள் செய்திருப்பதும் குறிப்பிட்டு எண்ணிப் பார்க்கத் தக்கன.

கி. பி. 1502-இல் வாஸ்கோடகாமா இரண்டாம் முறை தென் இந்தியாவில் கால்வைத்த போது, 30,000 சீரியக் கிறித்தவர்கள் அவரை வரவேற்றுத் தங்கள் முன்னாள் அரசனின் செங்கோலை ஒப்படைத்தமையும், சீரியக் கிறித்தவர்கள் மேல்சாதி இந்துக்கள் வரிசையில் மதிக்கப்பட்டமையையும் கீழ்க்காணுமாறு கூறப்படுகின்றது.

''கி.பி. ஒன்பதாம் பத்தாம் நூற்றாண்டுகளுக்கிடையில்,கிறித்தவ சமூகம் இந்து அரசர்களிடமிருந்து ஒருவாறு சுவாதீனம் பெற்று வாழ்ந்தது என்பதே, மலையாளத்திலுள்ள சீரிய கிறித்தவர்களின் எண்ணம். 10-ஆம் நூற்றாண்டில் உதயம் பேரூர் (Udayam Perur) என்னும் இடத்திலிருந்து, கிறித்தவ அரசனான பெல்லியார்ட் (Belliyart) இந்து நாடுகள் மத்தியில் சிதறிக் கிடந்த கிறித்தவ சமூகங்களை ஆட்சிசெய்தான் என்று, 'பிலிப்' என்னும் நூலாசிரியர் கூறுகின்றார். இவ்வாளுகை உரிமை பெற்ற இக்குடும்பம் நீண்ட காலம் ஆண்டது என்றும், அக்குடும்பம் அழிந்து போனபின் அதிகாரங்கள் யாவும் கொச்சின் இராஜாவுக்கே உரிமையாயின என்றும் கூறப்படுகின்றது. 1330 - ஆம் ஆண்டு மலையாள நாட்டு கிறித்தவர்களுக்கு போப் ஜான் எழுதிய கடிதத்தில், அவர்களின் ஆண்டவர் (Lord) என்பவரைப்பற்றிக் குறிப்பிடுகிறார். 1502-இல் இவர்கள் போர்த்துக்கீசியரிடம் ஒரு தூதுக்குழு அனுப்பினார்கள். அக்குழுவினர் ஒரு நுனியில் வெள்ளியாலான மூன்று மணிகள் தொங்க வைத்த ஒரு சிவப்புக்கோலைப் போர்த்துக்கீசியரிடம் கொடுத்தனர். அக்கோல் தங்கள் முற்கால அரசர்களின் செங்கோல் எனக் கூறினர்.''[28]

சீரியக் கிறித்தவர்களுக்கு ஆட்சி உரிமை இருந்தது எனவும், உதயம் பேரூர் என்னுமிடத்தில் அவர்களுடைய அரசன் இருந்தான் எனவும் கூறப்படும் குறிப்புகளும், சிலப்பதிகாரம் - பல்சந்த மாலை குறிப்பிடும் 'யவனர் வளநாடு,' 'அயன்மிகு தானை யவனர் ராசன்' என்பனவும் சீரியக் கிறித்தவ அரசனையே குறிப்பதாகக் கொள்ளவேண்டியிருக்கிறது.

---

28. சிரில் புரூஸ் பெர்த், தமிழாக்கம் ஆ.தே. மனுவேல், இந்திய திருச்சபை வரலாறு, கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை, 1962, பக். 55-56.

சீரியக் கிறித்தவர்கள் இந்நாள் வரை நம் மத்தியிலே இருந்து வருகிறார்கள். தமிழ் இலக்கியம் அவர்களை யவனர் என்னும் பெயரால் வெளிப்படுத்தியிருக்கின்றது. 'அடல்வாள் யவனர்', 'யவனர் தந்த வினைமாண் நன்கலம்' என்னும் தொடர்களுக்கு ஏற்ப, அவர்கள் சிறந்த போர் வீரர்களாகவும் சிறந்த வாணிகர்களாகவும் விளங்கியதை அவர்களுடைய வரலாறு காட்டுகின்றது. கிரேக்கர்களைச் சுட்டிய யவனர் என்னும் தமிழ்ச்சொல், அவர்களோடு இணைந்த உரோமர், யூதர், சீரியர் யாவரையும் சேர்த்துக் குறிப்பதாகி, இறுதியில் இந்தியாவில் வாழ்ந்த கிறித்தவர்களான சீரியர்களைக் குறிப்பதற்குத் தமிழ் இலக்கியத்தில் பயன்பட்டுள்ளது என்னும் உண்மை நமக்குப் புலனாகின்றது.

**சீரியரும் தோமாவும்**

கி. பி. முதல் நூற்றாண்டு முதல் இந்தியாவில் வாழ்ந்து வரும் யவனர்களாகிய சீரியக் கிறித்தவர்கள், தாங்கள் கிறித்தவத்தை ஏற்றுக்கொள்ளக் காரணமானவர் இயேசு கிறித்துவின் பன்னிரு மாணவர்களில் ஒருவராகிய தோமையரே என முழுமையாக நம்புகின்றனர். வழிவழியாக இந்த நம்பிக்கையை வெளியிட்டுள்ளனர்.

கி. பி. 1502 - இல் ஐரோப்பியக் கிறித்தவரான வாஸ்கோடகாமாவைச் சந்தித்தபோது, இந்தச் செய்தியைக் கூறியுள்ளனர்.

புனித தோமையரைப் புதைத்த இடமான மயிலாப்பூருக்குச் சென்று வழிபடும் வழக்கம், வாஸ்கோடகாமா வருவதற்கு முன்னரே அவர்களிடம் இருந்திருக்கிறது.

**சீரியக் கிறித்தவ மரபு**

சீரியக் கிறித்தவ மரபு எத்தகையது என்று பார்ப்போம். தோமா ஆப்பிரிக்காவின் வடகிழக்கு எல்லைப்பகுதியில், அரபிக் கடலிலுள்ள சோகோத்திராத் தீவிற்குப் போய்விட்டுச் சுமார் கி. பி. 52-ஆம் ஆண்டு கிராங்கனூரில் (Crangnore) வந்து இறங்கினார். அங்குக் குடியிருந்த யூதருக்கு நற்செய்தியை அறிவுறுத்தி, அவர் அண்மையில் வாழ்ந்த ஏனைய மக்களில் சிலரைக் கிறித்துவின் அடியார்களாக்கி, பின்னர் கடலோரமாய்த் தென்னிலப் பகுதிக்குச் சென்று ஏழு இடங்களில் சபைகளை நிறுவினார். அவையாவன: மாலியன் கரை, (கிராங்கனூர் அண்மையில்) பலயூர், பரூர், கோகமங்கலம் நிரானம், சயால், கொல்லம். இற்றை நாள்வரை மேற்கூறியனவற்றில் நான்கு இடங்களில் சீரியத் திருச்சபையைக் காணலாம்.

மேலும், அவர் நான்கு பிராமணக் குடும்பங்களிலிருந்து மூப்பரை நியமித்தார் என்பர். அவர் பெயர் சங்கரப்பரி, பக்கலம் மட்டம், காளி, காளி அங்கல். இதன் பின்னர்க் குறுக்கு வழியே கீழ்க் கரைக்குச் சென்று மலாக்கா, சீனா வரையும் போயினார் எனவும் இறுதியில் இதுகாலைச் சென்னை நகரின் ஒரு பகுதியாக விளங்கும் மயிலாப்பூர் திரும்பினர் எனவும் கூறுவர். இங்கே பிராமணர் சிலர், இவரது அறவுரைகளை எதிர்த்துப் பகைமையுணர்ச்சியுடன் கலகம் பண்ணி, அவரை ஈட்டியினால் குத்திக் கொலை செய்துவிட்டனர் என்பர். அவர் அவ்வாறு இரத்தச் சாட்சியாக உயிர்நீத்த காலம் கி. பி. 77-ஆம் ஆண்டு என்று சொல்லப்படுகிறது.[29]

''வரலாற்று நூலாசிரியர் சிலரோ சீரியக் கிறித்தவர்களால் உறுதியாய் நம்பப்பட்டு வரும் பாரம்பரியத்தை ஏற்றுக்கொள்ளாது, புனிதர் தோமா இந்தியா வந்ததை முற்றிலும் மறுக்கின்றனர். அத்தகைய கொள்கையுடைய ஆசிரியர்களில் சிலர்: பதினேழாம் நூற்றாண்டின் முடிவில் பிரான்சு தேசத்திய புராட்டஸ்தாந்து சபையைச் சார்ந்த பஸ்னேஜ் (Basnage), உரோமச்சபையைச் சார்ந்த தில்லமாண்ட் (Thilamont), 18 - ஆம் நூற்றாண்டில் புராட்டஸ்தாந்து சபையைச் சார்ந்த லாகுரோஸ்(Lagurose), 19-ஆம் நூற்றாண்டில் ஆங்கிலேய புராட்டஸ்தாந்து சபைச் சரித்திராசிரியர் ஜேம்ஸ்ஹூக் (James Hoke), ஜான் கயே (John Gaya) முதலியோர். இவ்வாறு அவர்கள் மறுப்பதற்குக் காரணம், கி. பி. முதலாம் நூற்றாண்டில் பாலஸ்தீனா நாட்டிலிருந்து இந்தியாவிற்குப் போக்குவரத்து வசதிகள் இருந்ததில்லை என்பதே. ஆனால், இந்தியாவின் மேலைக் கரைக்கும் உரோமப் பேரரசுக்கும் இடையில் செங்கடல் அலெக்சாந்திரியா வழியாய் முதலாம் நூற்றாண்டிலிருந்தே போக்குவரத்தும் வியாபாரமும் நடைபெற்றனவென எண்ணப்படுகின்றது. மேலும் அக்காலத்தில், இந்தியாவின் மேற்குக் கரையோரத்திலும் வடமேற்குப் பகுதிகளிலும் யூதர் குடியேறியிருந்ததாகத் தெரிய வருகின்றது. ஆகையால் 18-ஆம், 19-ஆம் நூற்றாண்டுகளில் கருதப்பட்டது போல், தோமா இந்தியாவில் திருத்தொண்டு செய்திருக்க இயலாது என எண்ண எவரும் இப்பொழுது முன்வருகின்றனரல்லர்''[30] எனச் சிரில் புரூஷ்பெர்த் என்பார் குறிப்பிடுகின்றார்.

''தோமாவைப்பற்றி வழங்கும் இந்திய வழக்கிற்கு, மூன்றாம் நூற்றாண்டு வரலாற்றில் கிடைக்கும் சில அத்தாட்சிகளுமுண்டு.

---

*29.* *சிரில் புரூஷ் பெர்த், இந்திய திருச்சபை வரலாறு, கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை, 1962, பக். 6.*

*30.* *மேற்படி, பக். 21.*

இவற்றில் மிகப் பழமையும் நன்கு அறியப்பட்டதுமான அத்தாட்சி 'அப்போஸ்தலரின் அறவுரை' என்ற நூலே. இது சுமார் கி. பி. 250 - இல் சீரியா நாட்டில் எழுதப்பட்டதாகும்.''[31]

''புனிதர் எப்பிராயீம் சீரியாவில் கி.பி. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். தெய்வத் துதிப்பாடல் இயற்றியவர். அவர் தோமாவைப் பற்றி,

'திருச்சிலுவையினின்று தெய்வக்குருதி எண்ணெய் பெற்று,
இந்தியாவின் காரிருளை மாற்றி அதனைச் சுடர் ஒளி மயமாக்குகிறீர்
வணிகர் கோலத்தில் வந்தவரே! நீர் பெருவாழ்வுடையவர்
உண்மையில் உலகை உய்விக்கும் உத்தம வணிபர் நீரே'

என அவருடைய வணிகக் கோலத்தைச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.''[32]

''புனிதர் தோமாவின் ஆலயம்பற்றிய முதல் செய்தி, ௬-ஆம் நூற்றாண்டில் தியோடர் என்பவர் கூறியதே. இவர் பிரான்ஸ் நாட்டிலுள்ள டூர்ஸ் (Tours) கண்காணியாரான கிரகரி என்பவரிடம், புனிதர் தோமா அடக்கம் பண்ணப்பட்டவிடத்தில் ஒரு மடத்தையும் ஓர் அழகிய கோவிலையும் தாமே நேரில் கண்டதாகக் கூறினார். டூர்ஸ் கண்காணியார் இதைப்பற்றி கி.பி. 590- இல் எழுதியுள்ளார்.''[33]

அப்போஸ்தலரான தோமையரின் கல்லறையைப்பற்றி மார்க்கோபோலோ (கி.பி. 1293) எழுதியது: ''கிறித்தவர்களும் சரசினியரும் திருயாத்திரையாக வந்து, இவ்விடத்தை அடிக்கடி தரிசிக்கின்றனர். சரசினியர் இப்புனிதரை மிக வணக்கத்துடன் போற்றி, இவர் ஒரு சரசினியர் ஆகவும் பெரும் இறைவாக்கினராகவும் இருந்தார் எனக் கூறுகின்றனர். 'புனித மன்னன்' எனப் பொருள்படும் 'அவரியான்' என்ற பட்டத்தையும் அவருக்கு அளித்துள்ளனர். இப்புனித இடத்திற்கு திருயாத்திரையாக வரும் கிறித்தவர்கள், புனிதர் கொல்லப்பட்ட இடத்திலிருந்து மண் எடுத்துச் சென்று, நோயாளிகளுக்கு அளிக்கின்றனர்; இறைவனின்

---

*31.* *சிறில் புருஷ் பெர்த்; இந்திய திருச்சபை வரலாறு, கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை, 1962, பக். 11.*

*32.* மேற்படி, பக். *8.*

*33.* மேற்படி, பக். *6.*

வல்லமையாலும் புனித தோமையாரின் சக்தியாலும் நோயுற்றவன் உடனே குணமடைகிறான். இம்மண் சிவப்பு நிறமுடையது....''[34]

''பார்டனோன் என்னும் ஊரைச் சேர்ந்த துறவியான ஓடோரிக் என்பவர் 1321-இல் இந்தியாவுக்கு வந்தார். அவர் இந்தியாவின் மேற்குக் கடற்கரை நாடுகளில் பயணம் செய்து இலங்கைக்குப் போய்விட்டு, அதன்பின் மயிலாப்பூருக்கு வந்து, செயின்ட் தாமஸ் மாதா கோயிலைப் பார்த்தார். இந்தியப் பழக்க வழக்கங்களை அவர் நேரில் பார்த்து எழுதியிருக்கிறார் என்பதை, அவருடைய குறிப்புகள் தெளிவாகக் காட்டுகின்றன'' எனவும், ''பிரான்சைச் சேர்ந்த மரிக்னொல்லி ஜான் என்பவர், நமது கவனத்தைச் சிறிது கவரும் இன்னொரு துறவி. அவர் போப்பாண்டவரின் பிரதிநிதியாகக் குப்ளாகான் அரசவைக்குப் போனார். அவரும் மார்க்கோ போலோவைப் போல் தரைவழியாகவே சீனாவுக்குச் சென்றவர். 1346-ஆம் ஆண்டில் அவர் புகழ்பெற்ற சீனத் துறைமுகமான ஜெயிட்டன் துறைமுகத்தில் கப்பல் ஏறிக் கொல்லத்துக்கு வந்து சேர்ந்தார். அங்குச் சிறிது காலம் தங்கியபின் செயின்ட் தாமஸ் மாதா கோயிலைத் தரிசிப்பதற்காகச் சோழ மண்டலக் கடற்கரைக்கு வந்தார்''[35] எனவும் கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி கூறுகின்றார்.

கிராங்கனூர் என்னும் மகாதேவாரப் பட்டணத்தில் வாழ்ந்த யவனர்களாகிய சீரியர்கள் தென்கும்பர், வடகும்பர் என இரு பிரிவுகளாகப் பிரிந்தனர் என்றும், வடகும்பர் என்போர் திராவிட மக்களுடன் கலப்பு மணம் செய்தவர்கள் என்றும், தென்கும்பர் கலப்பு மணத்திற்கு இணங்காதவர் என்றும், வடகும்பரின் தொகையே இவர்களில் அதிகம் என்றும் சீரியக் கிறித்தவ சரித்திராசிரியர் கருதுகின்றனர்.[36]

'சீரியாக்' மொழியை வழிபாட்டு மொழியாகக் கொண்டவர்கள் சீரியக் கிறித்தவர்கள் என்பதும், மற்றவர்கள் அவ்வாறு எண்ணப் படாததும் இங்கே ஆழ்ந்து எண்ணிப் பார்க்க வேண்டிய குறிப்பு ஆகும்.

---

34. P. J. Podipara, The Thomas Christians, St. Pauls Publication Bombay, 1970, P. 23.

35. கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்திய வரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், 1973, பக். 50.

36. சிரில் புருஷ் பெர்த், இந்திய திருச்சபை வரலாறு, கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை, 1962, பக். 44-45.

திராவிட மக்களுடன் கலந்து வழிவழியாகத் திராவிட நாட்டில் வாழ்ந்து வந்த யவன மக்கள், திராவிடப் பண்பாட்டுடனும் திராவிட மொழிகளுடனும் ஒன்றித் திராவிடர்களாய் மாறிவிடுதல் இயல்பே. கோயில்களில் சிலையமைத்து வழிபடாத நெசுத்தோரியக் கொள்கைக்கு மாறுபட்டு, கோயில்களில் சிலையமைத்து வழிபடும் திராவிடக் கொள்கையுடையவர்கள் தமிழகத்தில் பெருகி வாழ்ந்து வந்துள்ளனர் என்பது, கி. பி. 1321 - இல் ஓடோரிக் என்பவரின் 'தோமையர் ஆலயத்தில் சிலைகள் நிரம்பியிருக்கின்றன' என்னும் குறிப்பின் வழியாகப் புலப்படுகின்றது.

கோயில்களில் சிலைகள் அமைக்கப்பட்டிருக்குமானால், அச் சிலைகள் சீரியக் கிறித்தவத்தில் நெசுத்தோரியக் கொள்கைக்கு மாறுபட்ட பிரிவினை உடையவர்களுடையது என்பதும், கோயிலில் அமைக்கப்பட்ட சிலைகள் திராவிடப் பண்பாட்டில் எழுந்த நிலைகளாக இருத்தல் வேண்டும் என்பதும் பெறப்படுகின்றன. கி.பி. 15-ஆம் நூற்றாண்டில் சிலைகளையுடைய மயிலாப்பூர் கோயில், முகமதியர்களால் அழிக்கப்பட்டது என்ற குறிப்பும், கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் போர்ச்சுகீசியர்கள் அங்கு மீண்டும் தங்களுடைய ஐரோப்பியப் பண்பாட்டுக்கு ஏற்பக் கோயிலை அமைத்தனர் என்பதும் எண்ணிப் பார்க்க வேண்டிய குறிப்புகளாகும்.

கி.பி. 1923-இல் விக்கிரமச் சோழன் காலத்து கல்வெட்டு ஒன்று அங்குக் கண்டெடுக்கப்பட்டுள்ளதும், சுரமுடையார் கோயில் கூத்தாடும் தேவர்க்குக் கொடுக்கப்பட்ட மானியம் குறித்து அக்கல் வெட்டுக் கூறுவதாலும், மயிலாப்பூரிலுள்ள இந்துக் கோயிலின் திருமேனி நகர்வலம் வருங்கால் ஐரோப்பியர் கட்டிய தோமையர் ஆலயத்தைத் தாண்டும்போது, மும்முறை பல்லக்குடன் மரியாதை செலுத்தும் வழக்கம் இருந்துவந்ததையும்,மயிலாப்பூரில் தோமையர் ஆலயம் கட்டப்பட்ட பின்னர் சைவ சமயத்தினரால் கட்டப்பட்டுள்ள கபாலீசுவரர் ஆலயம், தோமையர் ஆலயம் கட்டப்பட்டுள்ள இடத்தில் முன்பிருந்ததாக சைவர்கள் உரிமை பாராட்டுவதும், இன்றும் தோமையர் ஆலயத்தில் சுற்று மதிலுக்குள் காட்சிக்காக வைக்கப்பட்டுள்ள அவ்விடத்தில் கிடைத்ததாகக் கூறப்படும் பழைய ஆலயத்தின் எஞ்சிய பகுதிகளில் 'மயிலோடு கூடிய முருகப் பெருமானின் சிதைந்த சிலை' காணப்படுவதும்,சைவமாகிய இந்துக் கிறித்தவம், சீரியக் கிறித்தவம், ஐரோப்பியக் கிறித்தவம், ஐரோப்பிய வழி இந்தியக் கிறித்தவம் ஆகிய நான்கையும் இணைக்கும் இணைப்புப் பாலமாகத் தோமா ஆலயம் விளங்குவதாக இருக்கின்றது என்பதை உறுதிப்படுத்துகின்றது.

இந்துக் கிறித்தவத்திற்கும் சீரியக் கிறித்தவத்திற்கும் இருந்த தொடர்புகள், ஐரோப்பியக் கிறித்தவர்களால் வலிந்து துண்டிக்கப் பட்டு, ஐரோப்பியப் பண்பாட்டையுடைய ஐரோப்பிய வழி இந்தியக் கிறித்தவம் தோற்றுவிக்கப்பட்டமை இங்கு எண்ணிப் பார்க்கத் தக்கது. ஐரோப்பிய வழி இந்தியக் கிறித்தவம் தோற்றுவிக்கப்படு வதற்கு முன்னர், சீரியக் கிறித்தவர்களிடம் வழக்கிலிருந்து வந்த தேங்காய் உடைத்தல், இந்துக் கோயில் வழிபாடுகளில் கலந்து கொள்ளுதல், இந்தியக் கோயில் வழிபாட்டுப் புத்தகங்கள் வாசித்தல் முதலியன ஐரோப்பியக் கிறித்தவர்களால் கி. பி. 1704-இல் தடை செய்யப்பட்டமையை முன்னர்ப் பார்த்தோம். அவை இவ் விடத்தில் நினைவுகூரத் தக்கன.

தோமா ஆலயம் கட்டப்பட்டுள்ள மயிலாப்பூரில், தோமா ஆலயத்திலிருந்து சுமார் 2 பர்லாங் தூரத்தில் திருவள்ளுவர் வாழ்ந்ததாகக் கூறப்படும் இடத்தில் கட்டப்பட்டுள்ள திருவள்ளுவர் கோயில் அமைந்து உள்ளது. தோமா இறந்து புதைக்கப்பட்ட இடமும் திருவள்ளுவர் பிறந்து வாழ்ந்த இடமும் மயிலாப்பூரில் அருகருகே அமைந்துள்ளன. தோமாவின் வரலாற்றை நம்பாத வர்கள், தோமா புதைக்கப்பட்டதாக உலகில் வேறோர் இடத்தை இதுவரை குறிக்க இயலவில்லை என்பதும், திருவள்ளுவர் மயிலாப்பூரில் பிறந்ததை நம்பாதவர்கள், அவர் பிறந்ததாக வேறோர் இடத்தை இதுவரை குறிக்க இயலவில்லை என்பதும் எண்ணிப் பார்க்கத் தக்கவை. தோமா வாழ்ந்த இயற்கை நெறிக் காலத்திற்குப் பின்னர், தமிழகத்தில் சமயநெறிக் காலம் உருவா வதற்கு வழி வகுத்த அறநெறிக்கால இலக்கியமாகிய திருக் குறளைப் படைத்த பெருமை திருவள்ளுவரைச் சாரும்.

இப்பொழுது திருக்குறளை நோக்குவோம்:

# 4. திருக்குறள்

இயற்கை நெறிக் காலத்திலிருந்த மக்களை, அறநெறிக் காலத்திற்கு வழி நடத்திய சான்றோர்க்குத் தலைமையானவர் திருவள்ளுவர்.

"தமிழிலுள்ள நீதி நூல்கள் எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து ஒரு தட்டில் வைத்து, மற்றொரு தட்டில் திருக்குறளையும் வைத்தால், இரண்டாம் தட்டே தாழ்ந்திருக்கும். எல்லா நீதி நூல்களும் திருவள்ளுவர் கூறியுள்ளஅறவுரைகளை விளக்குவதற்காகவே இயற்றப்பட்டவை என்று கூறும் அளவிற்குத் திருக்குறள் சிறப்புடன் விளங்குகின்றது."[1]

இயற்கை நெறியில் வாழ்ந்த தமிழ் மக்களைத் தம்முடைய அறநூல் வழியாகச் சமய நெறிக்கும் தத்துவ நெறிக்கும் வழி நடத்தித் தமிழகத்தில் சமயங்களும் தத்துவங்களும் தோன்றக் காரணமாக அமைந்த பெருமையும் திருக்குறளையே சார்ந்தது ஆகும். தமிழும் தமிழகமும் சிறப்படைய திருக்குறள் பெரிதும் பணியாற்றியுள்ளது. பண்டைத் தமிழ் இலக்கியங்களை அரிதில் தேடி, அச்சு வாகனம் ஏற்றிய உ. வே. சாமிநாதையர், தமிழையும் திருக்குறளையும் ஒப்பிட்டுக் கீழ்க்காணுமாறு கூறுகின்றார்:

"தமிழ் மணம் எங்கெங்கே உண்டோ அங்கெல்லாம் திருக்குறளின் நறுமணம் வீசிக்கொண்டே இருக்கும். குறள் மணம் எங்கெங்கே உண்டோ அங்கெல்லாம் தமிழ் மணம் வீசுகிறதென்று கூறுதலே பின்னும் பொருத்தமாகத் தோன்றுகின்றது. ஏனெனில், தமிழ் வழங்காத பிற நாடுகளில் உள்ள அறிஞர்கள், திருக்குறளின் மொழிபெயர்ப்புகளைப் படித்து இன்புறுகிறார்கள். அங்கே தமிழ் மணம் எது? நாமெல்லாம் தமிழை அறிந்து அதன்மூலம் குறளை அறிகின்றோம். அவர்களெல்லாம் குறளின் பொருளை அறிந்து, அதன்மூலம் தமிழைப் பற்றி அறிந்துகொள்கிறார்கள். இதனால் தமிழைக் காட்டிலும் குறளுக்கு வியாபகம் அதிகமாக இருப்பதை அறிகிறோமல்லவா?"[2]

---

1. மு. வை. அரவிந்தன், திருக்குறளும் சங்க இலக்கியமும், முத்துப் பதிப்பகம், வளவனூர், 1970, ப. 10.
2. உ. வே. சாமிநாதையர், திருவள்ளுவரும் திருக்குறளும், கலைமகள் வெளியீடு, சென்னை, 1936, ப. 1.

மற்றத் தமிழ் நூல்களுக்குக் கிடைக்காத சிறப்புத் திருக் குறளுக்கு மட்டும் கொடுக்கப்படுவது ஏன் என்பதற்கும் அவர் விடை கூறுகின்றார்.

''ஏனைய தமிழ் நூல்களில் காணப்படாத சில சிறப்பியல்புகள், திருக்குறளுக்கு உண்டு. நூற்பயனாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றைத் தெளிவாகக் கூறிய நூல்களுள் குறளுக்கு ஈடானது வேறு இல்லை.''[3]

இயற்கை நெறியில் வாழ்ந்துகொண்டிருந்த மக்களுக்கு, வீடு பற்றிய எண்ணத்தை ஏற்படுத்தியது திருக்குறள் என்னும் கருத்து, எண்ணிப் பார்க்கத் தக்கது. திருக்குறளில் கூறப்பட்டிருக்கும் வீடு பற்றிய கருத்துகளின் விரிவே, தமிழகத்தில் திருக்குறளுக்குப் பின்னர் எழுந்த சமயநெறிக் காலத்தில் ஏற்பட்ட சமயங்களும் தத்துவநெறிக் காலத்தில் ஏற்பட்ட தத்துவ விளக்கங்களும் ஆகும்.

'வெறுமையிலிருந்து ஒன்றும் வருவதில்லை' (Nothing comes out of vaccum) என்பதற்கிணங்கத் தமிழகத்தில் எழுந்த பக்தி இயக்கமும், அதன் பயனாக ஏற்பட்ட தத்துவ விளக்கங்களும், தகுந்த பின்னணி இல்லாமல் எழுந்திருக்க இயலாது என்பதை அறிஞர் யாவரும் ஏற்றுக்கொள்ளுவர்.

நாம் முன்னர்ப் பார்த்தபடி தமிழகத்தில் தோன்றிய ஆரிய நாகரிகத்திற்கும் ஆரிய வேதத்திற்கும் ஆரிய மூலக்கூறுகளுக்கும் மாறுபட்ட, ஆகமங்களை அடிப்படையாகக் கொண்ட கோயில் வழிபாட்டையுடைய, திராவிட மூலக்கூறுகளோடு தோன்றிய திராவிடத் தெய்வங்களும் திராவிடச் சமயங்களும், எழுவதற்கு உந்து சக்தியாய் இருந்தது திருக்குறளே ஆகும் என்பதை, அதைப் பற்றிக் கூறப்படும் கருத்துகள் வெளிப்படுத்துகின்றன.

ஆரிய வேதத்திற்கு மாறாகத் 'திராவிட வேதம்' எனப் பெயர் பெறுவது, தமிழகத்தில் வாழ்ந்த வைணவப் பெரியார்களுடைய திருப்பாடல்களின் தொகுப்பு ஆகும். திராவிட வேதமாகிய நாலாயிர திவ்விய பிரபந்தம் தோன்றும் முன்னர், வேதம் என்று சிறப்பிக்கப்படும் ஒரே தமிழ் நூல் திருக்குறள் மட்டுமே ஆகும். திருக்குறளின் பெயர்களாக - உத்தரவேதம், தமிழ் மறை, பொது மறை என்று குறிக்கப்படுதல் வேதம், மறை இவைகளின் தன்மையை அது கொண்டு விளங்குவதால் அன்றோ?

---

3. உ. வே. சாமிநாத ஐயர், திருவள்ளுவரும் திருக்குறளும், கலை மகள் வெளியீடு, சென்னை, 1936, பக். 4.

திருக்குறளைப் பாராட்டி எழுந்த திருக்குறளின் சிறப்புப் பாயிரமாக விளங்கும் திருவள்ளுவமாலை,

''வேதப் பொருளை விரகால் விரித்துலகோர்
ஓதத் தமிழா லுரை செய்தார்'' (42)

எனவும்,

''வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார்
ஓதவழுக் கற்ற துலகு'' (37)

எனவும் கூறுவதன் வாயிலாகத் திருக்குறளின் கருத்துகள், வேதக் கருத்துகளே என்பதைத் தெரிவிக்கின்றன.

வடமொழி வேதங்களுக்குத் தமிழ் வேதமாகிய திருக்குறள் குறைந்ததன்று என்பதை ஒப்பிட்டுக் காட்டும் வகையில், வடமொழி வேதங்கள் தோன்றக் காரணமானவர்கள் என நினைக்கப் பட்ட நாமகள் (2), நான்முகன் (4, 28), வள்ளுவரிலிருந்து செயல் பட்டதாகவும் பாரதம், இராம கதை, மனுநூல், வடமொழி வேதம் இவைகளுக்கு ஒப்பச் சிறந்து விளங்குவது திருக்குறள் என்பதை நிறுவ, ஆரிய வேதம் ஒரு சாதியினருக்கு மட்டுமே உரியது; திருக் குறள் உலகத்திலுள்ள யாவருக்கும் உரியது எனவும் (23) வட மொழியாளருடைய வேதம் ஏட்டில் எழுதினால் அதன் ஆற்றல் அழிந்து போகக் கூடியது; ஆனால், திருக்குறளோ ஏட்டில் எழுதினாலும் எவர் படித்தாலும் ஆற்றல் இழக்காத் தன்மை பொருந்திய வேதக் கருத்துகளைக் கொண்டது (15) எனவும் சிறப்பிக்கப்படுகிறது.

ஒரு கருத்தை ஆய்வாளர்கள் எண்ணிப் பார்க்கலாம். ஆரிய வேதத்தைப் பற்றித் தமிழகத்தில் சிறப்பித்துக் கூறும் புலவர்கள் யாவரும், ஆரிய வேதத்தை நன்கு கற்றுத் தேர்ந்த அறிஞர்களா என்பது எண்ணிப் பார்க்க வேண்டிய ஒன்று.

ஆரிய வேதம் எழுதாக்கிளவி எனப்பட்டு, ஆரியர்களால் மட்டுமே பரம்பரை பரம்பரையாக, மனனம் செய்யப்படுதலும், ஒப்பிக்கப்படுதலுமாக நிகழ்ந்து வந்ததென்று சொல்லப்படுகின்றது.

ஆரியர் அல்லாத யாரேனும் அவ்வேதத்தைக் கேட்க நேரிட்டால், அவர்கள் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றி அழிக்குமாறு மனுநீதி கூறுகிறது.

இந்நிலையில் தங்களுக்கு எதுவுமே தெரியாத ஆரிய வேதத்தைப் பற்றித் தமிழ் அறிஞர்கள் புகழக் காரணமென்ன? ஆரியம் தமிழர்களுக்குக் கூறியவைகளை உண்மையென நம்பிச் சொல்லப்பட்ட கருத்துகளேயல்லாமல் வேறு அன்று என்பது தெளிவாக விளங்குகின்றது.

இன்றும் கிறித்தவம், இசுலாம் போன்ற சமயங்கள், தங்கள் வேதங்களை அச்சிட்டு மற்றவர்களுக்கு வழங்கும்பொழுது, ஆரிய வேதங்களைச் சிறப்பாகப் பேசும் அன்பர்கள், அவைகளை அச்சிட்டு வழங்க முன்வராதது ஏன் என்பது எண்ணிப் பார்க்கத் தக்கது. கிறித்தவம், இசுலாம் போன்ற மற்றச் சமயங்களைச் சார்ந்தவர்கள் ஒவ்வொருவரும், தங்கள் வீடுகளில் வேதங்களை வைத்து வேத அறிவைப் பெருக்கிக்கொள்ளுவதைப் போல, ஆரிய வேதத்தைப் பின்பற்றும் அன்பர்களும் தங்கள் வீடுகளில் அவைகளை வைத்துத் தங்கள் வேத அறிவைப் பெருக்கி யுள்ளார்களா என்பது எண்ணிப் பார்க்கத் தக்கது.

பிற்காலப் புராணங்களையும் இதிகாசங்களையும் கற்கும் அன்பர்களுக்கு, வேதம் கொடுக்கப்படாதது ஏன் என்பதற்கும் காரணம் கூறப்படுகிறது. ஆற்றல் அழியும் என்று அந்தணர்கள் ஏட்டில் எழுதுவதில்லை (15) என்பது அன்று கூறிய கருத்து இன்றும் உண்மை என்பது இன்று அச்சிடப்பட்டுள்ள வேதங்களைப் படித்து அதிலுள்ள யாக முறைகளையும், பலி முறைகளையும் கற்றோர் அறிவர்.

கடவுள் கோட்பாட்டையும் வேள்வி நிறைவேற்றக் கோட் பாட்டையுங்கொண்ட இந்திய அறிஞர்கள், இயற்கை வணக்கக் கோட்பாட்டையும் வேள்விக் கோட்பாட்டையுமுடைய ஆரிய வேதத்தைக் கற்க நேரிடின், இரண்டுக்குமுள்ள வேற்றுமைகளைத் தெளிவாக அறிவர். எழுதப்பட்ட வட மொழி வேதங்கள் இதனால் ஆற்றல் அழிந்து நிற்பது புலனாகிறதன்றோ?

ஆனால், எழுதப்பட்டாலும் ஆற்றல் அழியாது நிற்கும் தமிழ் மறையாக விளங்குவது திருக்குறளாகும். அது தமிழ் மறை மட்டு மன்று; உலக மக்கள் யாவருக்கும் உரிய பொதுக் கருத்துகளைக் கொண்டுள்ள 'பொது மறை'யாகவும் விளங்குகின்றது.

இன்று உலகில் நாற்பதுக்கு மேற்பட்ட மொழிகள், திருக் குறளைப் பெற்றுக் குறளின்பத்தைச் சுவைக்கின்றன. தமிழில்

தோன்றிய நூல்களில் இத்தகைய சிறப்புத் திருக்குறளுக்குமட்டுமே கிடைத்துள்ளது.

திருவள்ளுவர் தமிழகத்தில் தோன்றித் தமிழ்மொழியில் தம்முடைய கருத்துகளை வெளியிட்டிருந்த போதிலும், தம்முடைய சொந்த மொழியாகிய தமிழின் பெயரையோ தம்முடைய நாடாகிய தமிழ்நாட்டையோ தம்முடைய அரசர்களாகிய சேர சோழ பாண்டியர்களையோ தாம் வாழ்ந்த தமிழ்நாட்டின் எந்த ஓர் ஊர்ப் பெயரையோ தம் இனத்தவராகிய தமிழர் பெயரையோ குறிப் பிடாமல், உலக மக்கள் எல்லோருக்கும் உரிய பொதுக் கருத்து களையும் பொது உணர்ச்சிகளையும் பொதுச் சமயநெறியையும் கூறிச் சென்றிருக்கும் பாங்கையும், உலகளாவிய கண்ணோட்டத் தையும், ஒவ்வொரு தமிழனும் எண்ணி எண்ணி இறும்பூதெய்தலாம். உலகம் முழுவதுக்கும் பொதுக்கருத்துக் கூறிய வள்ளுவரை, இன்று உலக மொழிகள் வரவேற்றுப் பாராட்டிச் சிறப்பிப்பதில் வியப்பு ஒன்றுமில்லை.

தமிழனுக்கு இருந்த தாழ்வு மனப்பான்மையை நீக்கி, எழுச்சி பெறச் செய்ததுடன், தமிழ்நாட்டிலிருந்த வள்ளுவத்தையும், அதன் உலகப் பொதுத் தன்மையையும், உலகம் முழுவதுக்கும் அறிமுகப் படுத்திய பெருமை ஐரோப்பியக் கிறித்தவர்களைச் சாருவது ஏன் என்பது எண்ணிப் பார்க்கத்தக்கது.

ஏட்டில் எழுதப்பெற்ற திருக்குறளின் ஆற்றல் அழியாமல் உலகம் முழுவதும் பரவி நின்று, அது எழுதப்பட்ட தமிழ் மொழியைச் சிறப்பிக்கிறது.

'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' விளங்குகின்றது.

### திருக்குறள் ஒரு சமயநூலா?

திருக்குறள் ஓர் அறநூல். அஃது ஒரு சமய நூல் அன்று; என எண்ணப்படுவதுண்டு. மேலே உ. வே. சா. திருக்குறளைப் பற்றிக் கூறியுள்ள கருத்தில் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கும் திருக்குறளிலே உண்டு என்று கூறியுள்ளார். ஆனால், திருக்குறள் அறம், பொருள், இன்பம் என்று முப்பாலாக விளங்குகிறதேயன்றி, வீட்டுப்பால் என்னும் ஒன்று கொண்டு நான்கு பகுதியாக விளங்கவில்லை. வீடு என்று தனிப் பகுதியாகக்

கூறப்படாத காரணத்தால், அதைச் சமய நூல் என்று கூறுவதற்கு இயலாது என அறிஞர் பலர் எண்ணுகின்றனர்.

திருக்குறள் ஓர் அறநூல் என்பதில் கருத்து வேறுபாடில்லை. எவ்வாறு எனில், வள்ளுவர் பாயிரத்தில் அறத்தை வலியுறுத்தித் தம் நூலினுள் கூறுவதற்கு முன்னேற்பாடாக, அறன் வலியுறுத்தல் என்னும் அதிகாரத்தை நான்காவது அதிகாரமாக வைத்துள்ளார்.

முதல் மூன்று அதிகாரங்கள் தெய்வ வணக்கமாகவும் நான்காம் அதிகாரம் செயப்படு பொருளாகவும்

''தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும்
எய்த உரைப்பது தற்சிறப் பாகும்''

என்னும் தற்சிறப்புப் பாயிர இலக்கணத்திற்கேற்ப அமைந்துள்ளன.

வள்ளுவர் கூறும் அறம் எத்தகையது என்பதைப் பாயிரத்திலேயே விளக்கியுள்ளார். 'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்' (34) என அறத்துக்கு இலக்கணம் கூறும் வள்ளுவர், மனமாசை நீக்கும்படியாக மற்ற எவ்வுயிர்க்கும் செந்தண்மைபூண்டு ஒழுகி, அறத்தை உலகுக்குக் காட்டிய அறவோர் எனவும் அந்த அறவோன் ஐந்தவித்தான் (25, 6) என்ற நிலையில் கடவுளோடு இணைந்தவர் எனவும், அந்தக் கடவுள் அறவாழி அந்தணனாக (8) விளங்குகின்றான் எனவும், அவ் அறவாழி அந்தணனாகிய கடவுள் ஐம்புலனுடைய மனிதனாகிப் பொறிவாயில் ஐந்தவித்து ஒழுகிக் காட்டிய பொய்தீர் ஒழுக்க நெறியே (6) வள்ளுவர் கூறும் நெறி எனவும் விளங்குகிறது.

ஆகவே, வள்ளுவர் கூறும் அறம், அறவாழி அந்தணனாகிய கடவுள் பொறிவாயில் ஐந்தவித்து, மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு, அறத்தையுடையவனாய் விளங்கி, மக்களுக்கு வெளிப்படுத்திய பொய்தீர் ஒழுக்க நெறியை அடிப்படையாகக் கொண்டதாகும் என்பது விளங்குகிறது.

**ஈண்டு அறம் பூண்டார்**

அறம் ......... அறன் வலியுறுத்தல்.
அறவோர் ...... நீத்தார் பெருமை.
அறவாழி அந்தணன் ... கடவுள் வாழ்த்து.

அறவாழி அந்தணனாகிய கடவுள், ஐம்புலனை ஏற்று, மற்றும் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு, அறவோனாய் ஒழுகிக் காட்டிய அறத்தையே வள்ளுவர் தம் நூலில் வலியுறுத்துகின்றார்.

எனவே, வள்ளுவர் எழுதியுள்ள அறம், அறவாழி அந்தண னாகிய கடவுள் காட்டியது. ஏனெனில், வள்ளுவரின் அறக் கோட்பாடு அறவாழி அந்தணனாகிய கடவுளிடமிருந்தே வெளிப் படுகிறது என்பது, அவருடைய நூலால் விளங்குகிறது.

ஆகவே, வீட்டுப் பகுதி திருக்குறளில் இல்லை எனக் கூறல் இயலாது. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கும் வள்ளுவர் கூறும் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றன் விரிவே ஆகும். வள்ளுவர் கூறும் மூன்றாவதாக வுள்ள இன்பத்தையே இருகூறாக்கிச் சிற்றின்பத்தை இன்ப மெனவும், பேரின்பத்தை வீடு எனவும் பிற்காலத்தார் பிரித்தனர். வள்ளுவர் கூறும் இன்பமோ சிற்றின்பத்தைமட்டும் கூறுவதா யிருந்தால், அறத்துப் பாலில் தொடக்கத்திலுள்ள இல்லறவியலிலே கூறப்பட்டிருத்தல் வேண்டும். ஆனால் வள்ளுவரோ இல்லறம், துறவறம் இவையிரண்டையும் தாண்டிய நிலையில் இன்பத்தை வைத்துள்ளார். இல்லற நோக்கில் அது சிற்றின்பமாகவும், துறவற நோக்கில் அது பேரின்பமாகவும் விளங்கக்கூடிய தன்மை அதில் அடக்கப்பட்டு இருக்கின்றது.

வடமொழியில் அறவாழி அந்தணனை அறியாத அற நூல் களும், அறத்தை அறியாத பொருள் நூல்களும், அறத்துக்கும் பொருளுக்கும் மாறுபட்ட காமநூல்களும் தனித்தனியாக இயற்றப் பட்ட காரணத்தால், இவைகளோடு எந்தத் தொடர்புமில்லாத வீடு பற்றிய நூல்களும் எழலாயின. ஆகவே, வடமொழி கூறும் 'தர்மார்த்த காமமோட்சா' எனப்படும் நால்வகை பிரிவிற்கும் திருக் குறளிற்கும் மிகப் பெரிய வேறுபாடு உண்டு.

வடமொழியில் உறுதிப்பொருள் நான்கினையும் இணைத்து எழுதப்பட்ட நூல்கள் கி. பி. 10 -ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் எழுந்தவை ஆகும்.

கி. பி. 10 -ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் எழுதப்பட்டுள்ள வடமொழி, தென்மொழி நூல்களுள் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கையும் இணைத்துக் கூறும் முழு முதல் நூல் திருக் குறள் ஒன்றேயாம். திருவள்ளுவமாலையிலுள்ள 8, 20, 38, 40, 50 ஆகிய எண்ணுள்ள வெண்பாக்கள், திருக்குறளில் வீட்டுப் பகுதி

அடங்கியிருக்கின்ற தன்மையை எடுத்துக் கூறுகின்றன. சிறுமேதாவியார் பெயரிலுள்ள இருபதாம் செய்யுள், பாயிரத்தை வீட்டுப் பகுதியாகக் கூறுகின்றது. வீட்டிலிருந்து வெளிப்படுத்தப்பட்ட அறமும், அறத்திற்கு மாறாத பொருளும், அழியா இன்பத்தை அளிக்கக் கூடியன என்பதைத் திருக்குறள் வற்புறுத்துவதாக அதன் அமைப்புக் காணப்படுகின்றது.

''பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும் எண்ணிய தேயத்தைச் சென்று'' என வள்ளுவர் கூறும் பொருள், உலகப் பொருள் மட்டுமன்று; 'இறைவன் பொருளும்' (5) அதனோடு இணைந்ததெனக் கூறலாம்.

வீட்டுக்குரிய அறம், வீட்டுக்குரிய பொருள், வீட்டுக்குரிய இன்பம் ஆகிய மூன்றையும் இவ்வுலகத்தில் சுவைத்தல் எவ்வாறு என்பதைத் திருவள்ளுவர் விளக்குவதாகவே, திருக்குறள் அமைந்துள்ளது.

ஆகவே, திருக்குறள் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படுவதற்கு, மனிதனை வழி நடத்தக்கூடிய நூல் என்பதில் ஐயமில்லை. வள்ளுவர் காட்டும் வழி உலக முழுவதற்கும் பொதுமையானது. அது ஒரு குலத்தாருக்குமட்டும் உரியதன்று.

வீட்டுப்பகுதி திருக்குறள் முழுவதிலும் காணப்பட்டபோதிலும், சிறப்பாக வெளிப்படும் சில பகுதிகளைக் கொண்டு, திருக்குறளைச் சமய நூல் எனக் காட்டுகின்ற அறிஞர்களும் உளர்.

''உறுதிப்பொருள் நான்கினுள் இறுதிக் கண்ணதாகிய வீடு பேற்று
நிலை—திருக்குறளில் கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு,
நீத்தார் பெருமை, அறன்வலியுறுத்தல் என்னும் பாயிரப்
பகுதியிலும் துறவறவியலில் அருளுடைமை, நிலையாமை,
துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல் ஆகிய அதிகாரங்களிலும்
தெளிவாக உணர்த்தப்பெறுகின்றது''[4]

என்பார் வெள்ளைவாரணம்.

---

4. க. வெள்ளைவாரணம். திருக்குறளில் சைவமும் வைணவமும், திருக்குறட் சிந்தனைகள், பக். 7.

மேலே கண்ட ஒன்பது அதிகாரங்களும் இறையியல்பற்றிய செய்திகளே; ஆதலின், திருக்குறளை ஒரு சமய நூல் எனக் கூறுவதிலும் தவறில்லை என்பதை ப. அருணாசலம் கீழ்க்காணுமாறு விளக்குகின்றார்.

"ஒரு நூலில் கூறப்படும் பொருளின் பெரும்பான்மை, சிறுபான்மை குறித்து அந்நூலை மதிப்பிடுவது என்பது ஒரு முறை. பிறிதொன்று, அந்நூல் உயர்நிலையாகப் பேசும் பொருள்பற்றி மதிப்பிடுவது. பண்டை அகத்திணைப் பாடலைக்கொண்டு இதனை விளக்க இயலும். பத்துப்பாட்டுள் 'பட்டினப்பாலை' என்பது ஓர் அகத்திணைப் பாடல். முந்நூற்றோரடிகளையுடைய இப் பாடலில் அகம்பற்றி எழுந்த அடிகள் நான்குதாம். ஏனைய பிற செய்திகளையே விளக்குகின்றன. இருப்பினும் இதனை அகத்திணைப் பாடல் எனக் கூறுவது இப்பாட்டின்உயிர்நிலையாக அகப்பொருள் விளங்குவதாலேயே. இதைப் போன்றுதான், நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களைக் கொண்டுள்ள திருக்குறளில், அறத்துப்பாலில் வரும் ஒன்பது (பத்து) அதிகாரங்களே இறையியல்பற்றியன, ஏனைய உலகியல்பற்றியன என்று கூறினாலும், நூல் முழுமைக்கும் உயிர்நிலையாக விருப்பன இறையியல்பற்றிய செய்திகளே. ஆதலின் இதனை ஒரு சமயநூல் எனக் கூறுவதில் தவறில்லை."[5]

திருவள்ளுவர் சமயம் சார்ந்த அறத்தையே கூறியுள்ளார். ஆகவே, வள்ளுவர் ஒரு சமய அறிஞரே எனவும், திருக்குறள் ஒரு சமய நூலே எனவும் கொள்ள நேரிடுகின்றது.

வள்ளுவர் பின்பற்றும் சமயம் எது என்னும் வினாவுக்கு, பொய் நிறைந்த உலகில் பொய்யை நீக்கி மெய்யைக் காட்டும்படியாக, இறைவன் ஐம்புலனையுடைய ஒரு மனிதனாகிப் பொறிவாயில் ஐந்தவித்துப் பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டிச் சென்றுள்ளான். அப் பொய்தீர் ஒழுக்க நெறியே வள்ளுவர் சமயம் ஆகும்.

"இறைவனையடையும் நெறியையே வள்ளுவர் பொய்தீர் ஒழுக்க நெறி என்கின்றார். சமயம் அல்லது மதத்தையே குறள் 'நெறி' என்கின்றது. 'உண்மையான' என்பதை விட்டுக் குறள் 'பொய்தீர்' எனக் கூறுவது உலகியலுக்குப் பொருத்தமாக இருக்கின்றது. காலப்போக்கில் சமயங்களில் பொய்மைகள் கலக்கக்கூடும்.

5. ப. அருணாசலம், குறளின் செய்தி, பாரி நிலையம், சென்னை, 1968, பக். 6.

அவற்றை அடிக்கடித் தூய்மை செய்து மதத்தைக் காக்க வேண்டு மென்பது அதிலடங்கியிருக்கின்றது''[6] என மு. கோவிந்தசாமி கூறுகின்றார்.

ஆகவே, சமயங்களையெல்லாம் தூய்மை செய்வதற்காகவே, இறைவன் மனிதனாகிப் பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டிச் சென்றுள்ளான். அந்நெறியாகிய சமயமே மனிதர்களுக்கு நீடு வாழ்வைக் கொடுக்கக் கூடியது என்பதனை, வள்ளுவர் கூறும் சமயக் கொள்கையாகக் கொள்ளலாம்.

திருக்குறளில் வீடு கூறும் பகுதிகளில், சிறப்பாக விளங்கும் முதல் நான்கு அதிகாரங்களையுடைய பாயிரத்தைப்பற்றி, அறிஞர் களிடையே கருத்து வேறுபாடுகள் காணப்படுகின்றன. பாயிர அமைப்பு முறையும் பாயிரத்தில் வள்ளுவர் கூறும் கடவுள் கருத்தும் இதுவரை அறிஞர்களுக்குப் பெரும் சிக்கலை ஏற்படுத்தியிருக் கின்றன.

தமிழகத்தில் பரவியுள்ள சமயங்களில், வள்ளுவரை உரிமை பாராட்டாத சமயம் எதுவும் இல்லை எனலாம். வள்ளுவருக்குப் பிற்பட்ட காலங்களில் தமிழகத்தில் தோன்றிய சமயங்களுக்கும், அச்சமயங்கள் தோன்றுவதற்குக் காரணமாயிருந்த திருக்குறளுக்கும் நெருங்கிய ஒற்றுமை காணப்படுவது இயல்பே.

ஆயினும், திருவள்ளுவருடைய கடவுள் கருத்தைச் சரியாகப் புரிந்துகொள்வதில் அவைகளும் இடர்ப்படுகின்றன எனலாம்.

திருக்குறள், சமயம் சார்ந்த நூலாக இருப்பினும், வள்ளுவர் பின்பற்றும் சமயத்தின் அடிப்படைக் கொள்கைகள் உருவானதற் கான வரலாற்றுப் பின்னணி, சமுதாயச் சூழல் முதலியனபற்றி, எதையுமே அறிந்துகொள்ள இயலா நிலையில் வள்ளுவருடைய கடவுள் கருத்தை முழுமையாகப் புரிந்துகொள்ள இயலாதன்றோ?

திருவள்ளுவர், தமது சமயத் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு, வையத்துள் வாழ்வாங்கு வாழவேண்டிய அறவுரை களைக் கூறிச் சென்றுள்ளாரே அன்றி, தாம் பின்பற்றிய தத்துவங்கள் எழுந்ததற்கான வரலாற்றுச் சூழலையோ சமுதாயச் சூழலையோ விளக்கவில்லை. திருக்குறள், ஒரு சமய வரலாற்று

6. *மு. கோவிந்தசாமி, திருக்குறள் பொருள் அகராதி, அண்ணா மலைப் பல்கலைக் கழகம், 1972, பக். 61.*

நூல் அன்று. சமய வரலாற்று நூலாய் இருந்திருப்பின், திருவள்ளுவரைப் புரிந்துகொள்வதில் இவ்வளவு சிக்கல்கள் எழுந்திருக்க இடமில்லை.

திருவள்ளுவர் பின்பற்றும் சமய தத்துவத்தின் வரலாற்றுப் பின்னணியும் சமுதாயப் பின்னணியும், முழுமையாக வெளிப்பட்டாலன்றித் திருவள்ளுவரின் சமயத்தைப் புரிந்துகொள்ளுதல் இயலாது. வீட்டுப் பகுதியில் சிறப்பிடமாக விளங்கும் பாயிரத்தையும், முழுமையாக அறிந்துகொள்ள இயலாது என்பதைத் திருக்குறளின் ஆராய்ச்சியாளர்கள் கருத்து தெளிவுபடுத்துகின்றது.

**பாயிரம்**

திருக்குறள், முதல் நான்கு அதிகாரங்களும் 'பாயிரம்' என்று பெயர் பெறுகின்றன. ஆயினும், பாயிர இலக்கணத்திற்கு உட்பட்டு இந்நான்கு அதிகாரங்களும் அமைக்கப்பெற்றுள்ளதாக இதுவரை யாரும் விளக்கவில்லை. நன்னூலார் கூறும் பாயிர இலக்கணத்திற்கும் திருக்குறள் பாயிர அமைப்புக்கும் எந்தத் தொடர்பும் இருப்பதாகத் தெரியவில்லை.

''தெய்வப்புலமைத் திருவள்ளுவர், தம் பெருநூற்றொடக்கத்தே கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்னும் நான்கதிகாரங்களை மட்டும் தனியே கொண்டது எக்காரணம்பற்றி என்னும் வினா, நெடுக நிகழ்ந்து வருவதுண்டு. இதற்குத் தக்க விடை இதுகாறும் பெறப்பட்டதில்லை'' என்பார் மு. இராகவையங்கார் (தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி). பாயிர அமைப்புக்கு விடைகாண முயன்ற மு. இராகவையங்கார்,

> ''கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற
> வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
> கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே''

என்னும் தொல்காப்பிய நூற்பாவுடன் இணைத்துப் பொருள்காண முற்படுவர். அவர் கருத்தினை, ''இங்ஙனமாயின் வள்ளுவர் அவ்வதிகாரங்களை - வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன்வலியுறுத்தல் என்னும் அதிகாரங்களை முறையே கொடிநிலைச் சிறப்பு - கந்தழிப் பெருமை -வள்ளி வலியுறுத்தல் என்றேபெயரிட்டு அமைத்திருக்கலாமன்றோ?... அந்த அதிகாரச் செய்யுள்களில் கூட வள்ளி, கந்தழி, கொடிநிலை போன்ற இச்சொற்கள் காணப்படாதது

ஏன் என ஆராயத் தொடங்கினால் மு. இராகவையங்கார் கொண்ட கருத்து பொருத்தமற்றதெனத் தெரியலாம்''[7] என அவருக்கு மறுப்பும் உள்ளது.

நாவலர் சோமசுந்தர பாரதியும் மு. இராகவையங்கார் கருத்தை மறுத்து, ''புறநிலை வாழ்த்தைக் கடவுள் வாழ்த்தென்றும் (2), எல்லார்க்கும் நனி பயக்கும் வாயுறை வாழ்த்தை வான் சிறப்பென்றும் (3), எல்லாமறிந்தார்க்கு வழிமொழியும் அவையடக்கியலை நீத்தார் பெருமை என்றும் (4), அறமறிவுறுத்தும் செவியுறையை அறன்வலியுறுத்தலென்றும், வள்ளுவர் நூற்கு வாழ்த்தியல் நான்கும் வகுத்து முன்வைத்தார்''[8] எனக் கூறுகின்றார்.

இவர் கூறும் இம்முறையும் அறிஞர்களால் ஏற்றுக்கொள்ளத் தக்கதாயில்லை. மேலும், திருக்குறள் பாயிர அதிகாரம் நான்கும் அருக சரணம், சித்த சரணம், சாது சரணம், தர்ம சரணம் என்னும் துதிகளைக் குறிக்கும் என்பார்க் கூற்றைப்பற்றிய க. வச்சிரவேல் முதலியாரின் கருத்து வருமாறு:

''ஒரு சாரார் திருக்குறட் பாயிரத்தில் உள்ள கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை, அறன்வலியுறுத்தல் என்பவற்றை முறையே அருக சரணம், சித்த சரணம், சாது சரணம், தர்ம சரணம் என்னும் துதிகள் என்பார். அக்கூற்று அவ்வதிகாரங்களுள் ஒன்றேனும் நூலின் புறத்துறுப்பாய்த் தற்சிறப்புப் பாயிரமாய், மங்கல வாழ்த்து நுதலிய தன்றால், அவையெல்லாம் நூலுட் கூறப்படும் அறத்தின் அகவுறுப்பாய், அறத்தையுணர்தற்கு வாயிலாக, இன்றியமையாது உணர்த்தக் கடவ அடிப்படை உண்மைகளை நுவலுவனவாதலே அறியும் நுண்ணுணர்வில்லாதவர் கூற்றேயாதல், யாவராலும் தெளியப்படும்.''[9]

வச்சிரவேல் முதலியாரின் இக்கூற்று ஒரு சாராரைத் தாக்குவதைப் போன்று காணப்படினும், அக்கூற்றில் உண்மையில்லாமலில்லை.

---

7. க. நடேச உடையார், திருக்குறள் திறவுகோல்-2, நீத்தார் பெருமை, சேலம் திருவள்ளுவர் கழகத்தார், 1955, பக். 81.

8. சோமசுந்தர பாரதியார், நாவலர் புத்தக நிலையம், மதுரை, 1971 பக். 60.

9. க. வச்சிரவேல் முதலியார், திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே, திருவருள் தவநெறி மன்றம், மதுரை, 1953, பக். 261

பல்வேறு தடைவிடைகளுக்குக் காரணமானதும், புரிந்து கொள் வதற்கு அரியதுமான பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங்களும், உரையாசிரியரின் உரைப்படி நோக்குங்கால், பிற்சேர்க்கையாகவே இருத்தல் வேண்டும் என்பர் வ. உ. சிதம்பரம் பிள்ளை.

''திருக்குறட் சுவடிகளில் பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங் களாகக் காணப்படும் 'கடவுள் வாழ்த்து,' 'வான் சிறப்பு,' 'நீத்தார் பெருமை' என்னும் மூன்று அதிகாரங்களும் பாக்களும் திருவள்ளுவ ரால் இயற்றப்பட்டவையல்ல வென்றும், அவை திருவள்ளுவர் காலத்திற்குப் பிற்காலமும் முந்திய உரையாசிரியர்கள் காலத்திற்கு முற்காலமுமாகிய இடைக்காலத்துப் புலவர் ஒருவரால் பாடிச் சேர்க்கப்பட்டவையென்றும் யான் கருதுகிறேன். அவ்வாறு யான் கருதுவதற்குரிய காரணங்களிற் சில:

1. இம்மூன்று அதிகாரங்களிலும் காணப்படும் பாக்கள், நூலின் பாக்களைப் போலச் சொற்செறிவும் பொருட் செறிவும் உடையன அல்ல.

2. இப்பாக்களில் பலவற்றின் பொருள்கள் பல தடைகளுக்கு இடம் கொடுக்கின்றன.

3. 'மெய்யுணர்தல்' - 'துறவு' என்னும் அதிகாரங்கள் நூலின்கண் இருக்கின்றமையால், 'கடவுள் வாழ்த்து,' 'நீத்தார் பெருமை' என்னும் அதிகாரங்களைப் பாயிரத்தில் கூறவேண்டிய தில்லை.

4. 'மெய்யுணர்த'லில் கடவுளுக்குக் கூறியுள்ள இலக்கணங் களையும், கடவுள் வாழ்த்தில் கடவுளுக்குக் கூறியுள்ள இலக்கணங் களையும் ஒப்பிட்டுப் பார்த்தால், இரண்டு அதிகாரங்களையும் இயற்றியவர் ஒருவரல்லர் என்பது நன்றாக விளங்கும்.

5. அவ்வாறே, துறவின் பாக்களையும் 'நீத்தார் பெருமை'யின் பாக்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால், அவ்விரண்டு அதிகாரங் களையும் இயற்றியவர் ஒருவரல்லர் என்பது நன்றாக விளங்கும். மழையைச் சிறப்பிற்றணிப்பாருமில்லை; வரப்பிற்றருவாருமில்லா கையால், வான் சிறப்பைக் கூறுவதால் பயன் ஒன்றும் இல்லை.[10]

---

10. *வ.உ.சிதம்பரம் பிள்ளை, திருவள்ளுவர் திருக்குறள் அறத்துப்பால் விருத்தியுரை, 1935, உரைப் பாயிரம்*

வ.உ.சி. கூறும் இக்கருத்துகள் யாவும் உரையாசிரியர்களின் உரையை உண்மையென நம்பி ஏற்றுக்கொண்டதன் விளைவே யாகும். உரையாசிரியர்கள் வள்ளுவரின் உள்ளக்கிடக்கையை அறியவியலா நிலையில், தங்கள் தங்கள் உள்ளக் கருத்தையே வள்ளுவர் மேல் ஏற்றிச் சென்றுள்ளனர் என்பார் ச. தண்டபாணி தேசிகர்.

''திருக்குறளுக்குப் பத்துப்பேர் உரை வகுத்துள்ளார்கள். இன்றுவரையில்கூடத் திருக்குறளுக்கு உரை காணும் முயற்சி ஓய்ந்தபாடில்லை... திருக்குறள் கண்ணாடியிலே அவரவர் தங்கள் தங்கள் முகத்தைப் பார்க்கும்போது, அதுதான் அக்கண்ணாடியில் இருப்பதாக அறிகிறார்கள்.''[11]

மேலும், வ.உ.சி. யின் ஐயங்களைத் தீர்க்கும் வகையில், ஒவ்வொரு குறிப்பிற்கும் பதில் சொல்ல முயன்றுள்ளார் க. நடேச உடையார். இறுதியில், ''நல்லறிஞர் ஒருவர்க்குத் திருக்குறட் பாயிரத்தில் இங்ஙனம் ஐயம் எழுந்தது ஏன்? குறட்பாயிரத்துக்கு முன்னை உரையாசிரியர்கள் கூறி வைத்துள்ள உரையை உண்மை யாக நம்பியதும் பின்பற்றியதுமேயாகும்.''

''இதுவரை கூறியதுகொண்டு, திருக்குறட்பாயிர அதிகாரங்கள் நான்கும், வள்ளுவரால் கூறப்பட்டவை என்பதும் அப்பாயிர அதிகாரங்கட்கு இன்றுவரை கூறப்பட்டு வரும் உரைகளின் போக்குப் பொருத்தமற்றது என்பதும் தெளிவாம்''[12] எனக் கூறு கின்றார். இவருடைய மறுப்புரையில், கடவுளையும் நீத்தாரையும் வள்ளுவர் 'ஐந்தவித்தான்' என்று கூறுவது ஏன் என்னும் வினா வுக்கு விடையில்லை. 'நீத்தார் பெருமை' துறவிகளின் பெருமை யன்று. ஆகவே, துறவு அதிகாரத்தோடு பொருத்தம் காண வேண்டியதில்லை எனக்கூறும்இவர், ''ஐயுணர் வெய்தியக்கண்ணும் பயமின்றே மெய்யுணர் வில்லா தவர்க்கு,'' என மெய்யுணர் வதிகாரத்தில் மனிதருக்குக் கூறும் வள்ளுவர் 'ஐந்தவித்தான்' என இறைவனைக் கூறுவது எப்படி? 'ஐந்தவித்தான்' என்னும் பெயரால் கடவுளும் நீத்தாரும் ஒருவரே எனக் காட்டுகிறாரே அது எவ்வாறு பொருந்தும்? நீத்தாராகிய அக்கடவுள் யார்? என்பன போன்ற

11. ச. தண்டபாணி தேசிகர், முன்னுரை, திருக்குறள் உரைவளம், அறத்துப்பால், தருமபுர ஆதீனம், 1950, பக். 3.

12. க. நடேச உடையார், திருக்குறள், திறவுகோல்-2, நீத்தார் பெருமை, சேலம் திருவள்ளுவர் கழகத்தார், 1955, பக். 90-91.

வினாக்களுக்கு விடை கொடுக்கவில்லை. வ.உ.சி. எழுதியுள்ள தடைகளுக்கு முழுமையான விடை காணவியலா நிலையில், நூலி னுள்ளும் பல தடைகள் உள்ளன. இதுகொண்டு நூலைத் தள்ளுவது இயல்வதன்று''[13] எனக் கூறுவது வ.உ.சி. எழுப்பியுள்ள தடைகளுக்கு முழுமையான விடை காணுவது அரிது என்பதையே வெளிப்படுத்துவதாக உள்ளது. ஆயினும், இவர் ஆசாரிய மூர்த்தி யாக மனித உருவில் வந்த ஆலமர் கடவுளை, 'ஐந்தவித்தான்' என்பது குறிக்கின்றது எனக் கூறியிருப்பது, அவருக்குப் பின்னர் ஆய்வில் நுழைபவர்களுக்கு வழிகாட்டியாக அமைந்துள்ளது எனலாம்.

''எனவே, 'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்னும் தொடர், 'தென்னவன்' என மாணிக்கவாசகராலும், 'தட்சிணாமூர்த்தி' என மற்றும் பலராலும் போற்றப்படும் ஆசாரிய மூர்த்தியையே - ஆலமர் கடவுளையே - தென்னெறித் தலைவனையே - குறிக்கும். 'பொய்தீர் ஒழுக்க நெறி' என்பதும் அத்தென்னவன் கூறிய பழந்தமிழ் நான் மறையையே குறிக்கும்''[14] என்று அவர் கூறுங்கருத்து, முழுமுதற் கடவுளையும் அருவத்தை நீத்து ஐம்புல மனிதனாக வந்த கடவுளை யும் திருவள்ளுவர் கூறுகின்றார் என்பதாக அமைந்துள்ளது. மேலும், பொய்தீர் ஒழுக்க நெறி என்பது, ஐம்புல மனிதனாக வந்த கடவுள் அருளிய வேதம் என்பதாகவும் இவர் கருதுகிறார் என்பது தெரிகின்றது.

மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் திருக்குறள் ஆய்வக வெளியீடான (1979) 'குறள் கூறும் சமயம்' என்னும் நூலின் இறுதியில், செல்வி காமாட்சி சீனிவாசன் கண்ட முடிவுரையில், வள்ளுவர் சமண பௌத்த அறக் கருத்துகளைத் தழுவியிருத்தல் கூடும் எனவும், சைவமும் வைணவமும் பிற்பட்ட காலத்தவை எனவும் ஆரியம், வேதம், உபநிடதம் போன்ற இவைகளின் கருத்துகளை ஏற்றுக்கொள்ளவில்லை எனவும், பழந்தமிழ்க் கருத்தைப் பெரிதும் தழுவி எழுதினார் எனவும் யூதர்களுடனும் கிறித்தவர்களுடனும் அவருக்குத் தொடர்பிருந்திருத்தல் கூடும் எனவும், அறிவியல் சார்ந்த ஒரு கடவுட் கொள்கையை உருவாக்க யூதமும் கிறித்தவமும் உதவியிருத்தல் கூடும் என்றும் முடித்திருக் கிறார் (பக். 217 - 220).

காமாட்சி சீனிவாசன் அவர்களின் 'குறள் கூறும் சமயம்' என்னும் நூலைப்பற்றி தி. முருகரத்தினம்,

---

13. க. நடேச உடையார், திருக்குறள் திறவுகோல்-2, நீத்தார் பெருமை, சேலம் திருவள்ளுவர் கழகத்தார், 1955, பக். 94.

14. மேற்படி- பக். 5.

''வள்ளுவர், தம் சமயமாகக் கூறும் சமயம் எது என ஆராய்தல் இந்நூலின் நோக்கம். இந்திய மண்ணில் அன்று வழங்கி மறைந்து போன சமயங்களுள்ளும் எச்சமயத்தையாவது வள்ளுவர் சார்ந் திருப்பாரா என ஆராய்வதும் இவ்வாராய்ச்சியில் அடங்கிவிடுகிறது. திரு காமாட்சி சீனிவாசன் இக்கருத்துகளை அகலமாகவும் ஆழமாக வும் ஆராய்ந்துள்ளார்கள். ஆனால், அவர்களால் வள்ளுவர் சமயத்தைக் காண இயன்றதா? இந்திய மண்ணில் வழங்கிய எந்தச் சமயமும் வள்ளுவர் சமயமாக அவர்களுக்குத் தோன்றவில்லை. நாம் அறிந்த எந்தச் சமயத்தின் கருத்துகளோடும், வள்ளுவர் கருத்துகள் முழுமையாக ஒத்துவரவில்லை. பல சமய கருத்துகளுக்கு மாறான கருத்துகளும் திருக்குறளில் காணக்கிடக்கின்றன. ஆதலால், திருக்குறள் ஒரு புதிராக இருக்கிறது''[15] எனக் கூறு கின்றார்.

அதே முன்னுரையில், வள்ளுவர்தம் சமயக் கருத்துகளை ஒருதலையாகத் துணிய இயலாமைக்குப் பாயிரத்தின் பல கருத்துகள், தீர்வுபடாமல் சிக்கல் தருவனவாக அமைந்திருப்பதை முருகரத்தினம் கீழ்க்காணுமாறு கூறுகின்றார்:

''வள்ளுவருடைய கடவுள்பற்றிய கருத்துகள் பெரும்பாலான வற்றைப் பாயிரத்தின் முதல் அதிகாரத்தில் மட்டுமே காண முடிகிறது. வான் சிறப்பு ஏன், எதற்கு என்பது இன்னும் நமக்குப் பிடிபடவில்லை. அறத்துப்பால் முழுவதும் அறன்வலியுறுத்தப் பாயிரத்தில் 'அறன் வலியுறுத்தல்' என ஓர் அதிகாரத்தின் தேவை யும் தெளிவுபடவில்லை. 'துறவு'ம் 'கூடா ஒழுக்க'மும் பின்னர் நீத்தார் பெருமையே பேச, அதற்கு முன்னர் ஓர் அதிகாரம் தேவையா என்னும் வினா எழாமல் இல்லை. இன்ன பிற காரணங் களால், திருக்குறளின் பாயிரம் பின்னம் இடம்பெற்றதோ என்னும் ஐயம் நிலவுகிறது. இது தீராதவரையில் வள்ளுவர் தம் சமயக் கருத்துகளை ஒருதலையாகத் துணிதல் இயலாது. இப்பாயிரத்தில் பல கருத்துகள் தீர்வுபடாமல் சிக்கல் தருகின்றன.''[16]

திருக்குறள் பாயிரம் பிற்சேர்க்கையோ என என்னும் வ.உ.சி. யின் கருத்துவழியில் தோன்றிய ஐயம் நீங்குவதற்கு, வழியுண்டா எனப் பார்ப்போம்.

---

*15.* காமாட்சி சீனிவாசன், குறள் கூறும் சமயம், மதுரை காமராசர் பல்கலைக் கழகம், *1979*, பக். *89*.

*16.* மேற்படி, *1979*, பக். *89*.

"கடவுள் வாழ்த்து தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் திருவுள்ளத் தெழுந்த ஞானவல்லியின் முகமெனத் தகும்; மெய் யுணர்தல் அத்திருமகளின் அகமாகும்."[17] அகத்தையும் முகத்தை யும் ஒப்பிட்ட வ.உ. சிதம்பரம் பிள்ளை, 'மெய்யுணர்'தலில் கடவுளுக்குக் கூறியுள்ள இலக்கணங்களையும், கடவுள் வாழ்த்தில் கடவுளுக்குக் கூறியுள்ள இலக்கணங்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இரண்டு அதிகாரங்களையும் இயற்றியவர் ஒருவரல்லர் என்பது நன்றாக விளங்கும்"[18] எனக் கூறுகின்றார். அகமும் முகமும் வெவ்வேறு மனிதர்களுடையவையாக இருக்க இயலுமா என்னும் வினா எ கின்றது. உண்மை காண மெய்யுணர்தல், கடவுள் வாழ்த்து இவ்விரண்டு அதிகாரங்களிலுள்ள கடவுளின் இலக் கணங்களை ஒப்பிட்டுக் காண்போம்.

### மெய்யுணர்தலில் கடவுள் இலக்கணம்

இவ்வதிகாரத்தில் கடவுளைக் குறிப்பிட வள்ளுவர், 'பொருள்'[19] 'மெய்'[20] 'மெய்ப்பொருள்'[21] 'உள்ளது'[22] 'சிறப்பு'[23] 'செம் பொருள்'[24] என்னும் பெயர்களை ஆளுகின்றார். இவற்றுள் 'மெய்,' 'பொருள்' ஆகிய இரண்டும் 'மெய்ப்பொருளில்' அடங்கும். 'சிறப்பென்னும் செம்பொருள்' என்பதில் 'சிறப்பு', 'செம்பொருளில்' அடங்கிவிடுகின்றன. 'மெய்ப்பொருள்,' 'செம்பொருள்' என்பன பொருளின் தன்மையை விளக்குவதால், எஞ்சுவது பொருளே. இப்பொருள் என்றும் உள்ள பொருளாகையால், 'உள்ளது' என்பதில் பொருளும் அடங்கிவிடுகிறது. ஆகவே, இவ்வதிகாரம் என்றும் 'உள்ளதை' உணர்வதன் இன்றியமையாமையை எடுத்துக் காட்டுவதாகும். உள்ளதை உணர்தலே மெய்யுணர்தல் ஆகின்றது. உள்ளதை உணர்ந்த உயர்ந்தோராகிய வள்ளுவனாரின்,

---

17. க. வஜ்ஜிரவேல் முதலியார், திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே, திருவருள் தவநெறி மன்றம், மதுரை, 1953, பக். 72

18. வ.வு.சி., உரைப்பாயிரம்,திருவள்ளுவர் திருக்குறள் அறத்துப்பால் விருத்தியுரை, 1935, உரைப்பாயிரம்.

19. திருக்குறள், 353.

20. ,, 354.

21. ,, 355.

22. ,, 357.

23. ,, 353.

24. ,, 353.

"உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து
அலகையா வைக்கப் படும்"[25]

என்னும் கூற்றும் எண்ணிப் பார்க்கத் தக்கது. இறைவன் என்றும் உள்ள ஆதியும் அந்தமுமானவன்; செம்பொருளாயும் மெய்ப் பொருளாயும் விளங்குபவன் அவனே என்பவை, அவனைப்பற்றிய விளக்கங்களாக அமைந்துள்ளன.

கடவுள் வாழ்த்தில் 1. ஆதிபகவன், 2. வாலறிவன், 3. மலர் மிசை ஏகினான், 4. வேண்டுதல் வேண்டாமை இலான், 5. இறைவன், 6. ஐந்தவித்தான், 7. தனக்குவமையில்லாதான், 8. அறவாழி அந்தணன், 9. எண்குணத்தான் என்னும் ஒன்பது பெயர்களால் கடவுள் குறிக்கப்படுகின்றார்.

மெய்யுணர்தலில் கடவுளைக் குறிப்பிடுங்கால் உணரக்கூடிய உணர்ச்சிப் பொருளாக, 'உள்ளது,' 'மெய்ப்பொருள்,' 'செம் பொருள்', 'சிறப்பு' என்னும் பெயர்களால் மட்டுமே குறிப்பிடு கின்றார் திருவள்ளுவர். உயர்திணை ஆண்பால் ஒருமை விகுதி யைப் பயன்படுத்தி, உருவகத் தலைவனாகக் காட்டவில்லை.

ஆனால், கடவுள் வாழ்த்திலோ, ஆதியந்தமாக உள்ளதை 'ஆதிபகவன்' என்றும், வாலறிவாக உள்ளதை 'வாலறிவன்' எனவும் இவ்வாறே ஒன்பது உயர்திணை ஆண்பால் ஒருமை விகுதி யிட்டு, உருவகப்படுத்தி வணங்குகின்றார் வள்ளுவர். இவற்றுள் 'ஐந்தவித்தான்' என்பதில் ஐம்புலனையுடைய மனிதனாகவே உருவகப்படுத்துவதாகக் காணப்படுகின்றது.

ஆகவே, மெய்யுணர்தலில் கூறப்படும் இறைவன், உணரக் கூடிய உணர்ச்சிப் பொருளாகவும், கடவுள் வாழ்த்தில் கூறப்படும் இறைவன் வெளியே கூறக்கூடிய உருவகப் பொருளாகவும் காணப் படுகின்றான். இவ்வகையில் இரு அதிகாரங்களிலும், இறைவன் இருவேறு வகையில் கூறப்படுகின்றான் எனலாம். இருவேறு வகையாகக் கூறப்படுவதால், இரண்டு அதிகாரங்களை இயற்றி யவர்கள் வேறுபட்டவர்கள் எனக் கூறலாமா? அவ்வாறு கூறு வதற்கு இயலாது. ஏனெனில், மெய்யுணர்தலைக் கூறும் வள்ளுவர், அதற்கு முந்திய அதிகாரமாகிய 'துறவு' அதிகாரத்தின் இறுதிக் குறட்பாவில் 'பற்றற்றான்' என இறைவனை உருவகப் படுத்திக் கூறுகின்றார். அத்துடன் மெய்யுணர்தலுக்கு அடுத்த

25. திருக்குறள், 850.

அதிகாரமான 'அவா அறுத்தலுக்கு' அடுத்துள்ள 'ஊழ்' அதிகாரத்தில், இறைவனை 'வகுத்தான்' என உருவகப்படுத்திக் கூறுகின்றார். ஆகவே, வள்ளுவர், இருவகையிலும் கூறுகின்றவர் என்பதை மெய்யுணர்தலை யொட்டிய அதிகாரக் குறட்பாக்களே உறுதிப்படுத்துகின்றன. மெய்யுணர்தல் அதிகாரம் துறவறவியல் துறவு, அவா அறுத்தல் ஆகிய அதிகாரங்களுக்கு இடையே, அதிகார முறைப்படி வைக்கப்பட்டுக் கடவுள் வாழ்த்துடன் இணைந்த கருத்துகளைக் கூறுவதேயாகும் என்பதில் ஐயமில்லை. ஆகையால், இரண்டுக்கும் இடையேயுள்ள ஒற்றுமை மிக மிக நெருக்கமானதாகும்.

கடவுளை ஒருவன் உளமார உணர்தலே மெய்யுணர்தலாகும். உணர்ந்த அம்மெய்ப்பொருளை வாயார வாழ்த்த வார்த்தைகளைத் தேடுங்கால், உருவகச் சொற்கள் உருவாகின்றன. அவ்வுருவகச் சொற்களால் கடவுளின் தன்மைகளையும் தானடைந்த பயன்களையும் விளக்கப் புகுகின்றான்.

ஆகவே, உணர்ச்சிப் பொருளான இறைவனை, உருவகப் படுத்திக் கூறுவதால் இரண்டும் வேறுபட்டவையல்ல. அந்நிலையில் மெய்யுணர்தலும் கடவுள் வாழ்த்தும் இணைந்தவையே. இவ்விரு அதிகாரங்களிடையே கருத்து விளக்கத்தில் ஒற்றுமை காணப்படின் இரண்டு அதிகாரங்களையும் வள்ளுவரே இயற்றியுள்ளார் எனக் கொள்ளலாம். கருத்துகளையும் சொற்களையும் நோக்குவோம்.

| **மெய்யுணர்தல்** | | **கடவுள் வாழ்த்து** |
|---|---|---|
| இருள் நீக்கி இன்பம் பயக்கும் | — | இருள் சேர் இருவினையும் சேரா. |
| மெய்ப்பொருள் காண்பதறிவு | — | கற்றதனாலாய பயன் நற்றாள் தொழல் |
| வானம் நணிய துடைத்து | — | நிலமிசை நீடு வாழ்வார். |
| மாசறு காட்சியவர் | — | மாணடி சேர்ந்தார். |
| மற்றீண்டு வாரா நெறி | — | பொய்தீர் ஒழுக்க நெறி. |
| பிறப்பென்னும் பேதைமை நீங்க | — | பிறவிப் பெருங்கடல் நீந்த. |
| கற்றீண்டு ... தலைப்படுவர் | — | கற்றதனாலாய பயன். |
| ஐயுணர் வெய்தியக் கண்ணும் | — | ஐந்தவித்தான் நெறி. |

இவை இரண்டு அதிகாரங்களுக்கும் இடையேயுள்ள ஒருமித்த கருத்தாழத்தைப் புலப்படுத்துகின்றன. இக்கருத்தாழத்தையும் ஒத்த சொல்லமைப்பையும் உற்று நோக்குங்கால், இவை ஒருவரால் மட்டுமே இயற்றப்பட்டவை எனக் கொள்ளுவதற்கு நம்மை ஏவுகின்றன.

மேலும், இரண்டு அதிகாரங்களின் பயன்களை எடுத்து இணைத்துப் பார்த்தால், அவைகளும் மிக இணைந்த ஒற்றுமையுடையனவாகவே காணப்படுகின்றன.

பயன்

| மெய்யுணர்தல் | கடவுள் வாழ்த்து |
|---|---|
| வையத்தின் வானம் நணியதாதல் | — நிலமிசை நீடு வாழல். |
| இருள் நீங்கி இன்பம் பயத்தல் | — இருள்சேர் இரு வினையும் சேராதிருத்தல். |
| நோய் சாராதிருத்தல் | — யாண்டும் இடும்பையில்லாதிருத்தல். |
| நோய் கெடல் | — மனக்கவலை மாற்றல். |
| மாணாப் பிறப்பு நீங்கல் | — பிறவிப் பெருங்கடல் நீந்தல். |

மேலே கண்ட முறைப்படி இரண்டு அதிகாரங்களையும் ஒப்பிட்டு, இரண்டிலும் கடவுளுக்குக் கூறியுள்ள இலக்கணங்களை நோக்குங்காலும் மிக நெருங்கிய ஒற்றுமையே கிடைக்கின்றது.

அப்படியானால், வ. உ. சிதம்பரம் பிள்ளை, ''ஒப்பிட்டுப் பார்த்தால் இரண்டு அதிகாரங்களையும் இயற்றியவர் ஒருவர் அல்லர் என்பது நன்றாக விளங்கும்'' என ஆணித்தரமாகக் கூறக் காரணம் என்ன என்பதை நாம் ஆழ்ந்து பார்க்குங்கால், கடவுள் வாழ்த்தில் ஒரு குறட்பாவும் மெய்யுணர்தலில் ஒரு குறட்பாவும் தமக்குள் முற்றிலும் முரண்பட்டனவாக உரையாசிரியர்களுடைய உரைப்படி காட்சியளிக்கின்றன. மெய்யுணர்தலிலுள்ள,

> ''ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
> மெய்யுணர் வில்லா தவர்க்கு''[26]

---

26. திருக்குறள், 354.

என்னும் குறட்பாவுக்கு விளக்கம் கொடுக்குங்கால், ''ஐயுணர் வெய்தியும் பயனின்றெனவே, ஐயுணர் வடக்கியும் பயனின்றாம் மெய்யுணரா வழி என்பது தானே பெறப்படும். ஆகவே, புலன்களை அடக்கி அவற்றால் அறியப்படுவனவெல்லாம் அறிந்தாலும், மெய் யுணர்ச்சியின்றேல் பயனின்றாம்''[27] எனக் கூறுகின்றார்.

கடவுள் வாழ்த்திலுள்ள,

''பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்''[28]

எனும் குறட்பாவுக்கு விளக்கம் கொடுக்குங்கால், 'ஐந்தவித்தான்' என்பதற்கு ஐம்புலனையும் அடக்கியவன் அல்லது ஐம்புலனைப் பழித்தவன் எனப் பொருள் கூறுகின்றனர்.

ஐம்புலன்களையும் அடக்கிய மனிதன் பயனற்றவன்; அதற்கு மேலும் பல படிகளில் ஏறி, இறைவனை உணராவிடில் பயனில்லை எனக் கூறும் வள்ளுவர், இறைவனையே ஐம்புலன்களையும் அடக் கியவன் எனக் கூறுகின்றார் என்பது ஏற்றுக்கொள்ள இயலா மாறு பட்ட கருத்தாகுமன்றோ? அத்துடன் கடவுளைக் குறிக்கப் பயன் படுத்தும் 'ஐந்தவித்தான்' என்பதை, மனிதனாகிய நீத்தாரைக் குறிக்கப் பயன்படுத்தியிருப்பதும், ஐந்தவித்தான் யார் என்றால், மனைவியின் நிமித்தம் இந்திரனைச் சபித்த அகலிகையின் கணவனும் இல்லறத்தானுமாகிய கௌதம முனிவன் என்பதும், ஒன்றுக்கொன்று முற்றிலும் முரண்பட்ட கருத்துகளாகும். ஐந் தவித்தான் யார்? 1. கடவுளா? 2. நீத்தாரா?

ஐம்புலன்களையும் அடக்கியவன் என்பது கடவுளுக்குப் பொருந்துமா? நீத்தார் துறவியானால், இல்லறத்தானாகிய அகலிகையின் கணவன் கௌதமனை நீத்தாராகிய ஐந்தவித்தான் என்பது பொருந்துமா? துறவியானால் துறவியாகிய மனிதனை, செம்பொருளாகிய இறைவனாக வள்ளுவர் கூறுவாரா? அகல் விசும்புளார் கோமான் இந்திரனே சான்றாகத் தன் ஆற்றலை வெளிக்காட்டிய ஐந்தவித்தான் யார்? என்பன ஆராய வேண்டிய வையாய் உள்ளன.

---

27. நாகை. சொ. தண்டபாணிப்பிள்ளை;

28. திருக்குறள், 6.

திருக்குறளுக்கு உரை கண்ட ஆசிரியர்களில் ஐந்தவித்தானைப் பற்றிப் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்த அறிஞர் சிலர், கீழ்க் காணுமாறு கருத்துத் தெரிவித்துள்ளனர்:

1. ''காலமும் வருங்கால ஆராய்ச்சிகளுமேதாம் ஒருவேளை (ஐந்தவித்தானைப்பற்றிய) அப்பழங்கால மரபை நமக்குக் கட்புலப் படுத்தவேண்டும்'' (க. அம்பாத்துரையார்).

2. ''ஆயினும் ஐந்தவித்தானைப்பற்றி ஆசிரியர் கருதிய கதை ஒன்றிருத்தல் வேண்டும் – அது இன்று அறியப்படவில்லை'' (பாவாணர்).

3. ''The word 'ஐந்தவித்தான்' is intriguing and rather jarring, not to say inappropriate, if literally interpreted as some commentators and translators have done with reference to God the Almighty.

If applied to Mahavira or Lord Buddha or to Jesus Christ, its literal meaning, namely one who has scotched or scorched one's five senses, might hold good. But used with reference to God the Supreme, it will be absurd, nay blasphemous.' (Thiruvachaka Mani, Tirukkural Translation, pp. 282-283).

ஆகவே, வள்ளுவர் கூறும் ஐந்தவித்தானைப்பற்றித் தெளிவாக வரலாற்றுச் சான்றுகளுடன் அறிந்துகொண்டாலன்றி, ஐந்தவித் தானைக் கூறும் கடவுள் வாழ்த்தையும் நீத்தார் பெருமையையும் புரிந்துகொள்ள இயலாது.

வள்ளுவர் கூறும் 'ஐந்தவித்தான்' மகாவீரரையோ புத்தரையோ இயேசுகிறிஸ்துவையோ குறிக்கலாம். முழுமுதல் இறைவனைக் குறித்தல் இயலாது என்னும் கருத்து எண்ணிப் பார்க்கத் தக்கது.

சமண சமயத்தை உருவாக்கிய மகாவீரரும், பௌத்த சமயத்தை உருவாக்கிய புத்தரும் கடவுள் கருத்தை ஏற்றுக்கொண்டவர்கள் அல்லர் என்பதும், இயேசுகிறித்து கடவுள் கொள்கையைக் கூறி யிருப்பதுடன், அவர் மனிதனாக வந்த கடவுள் எனக் கிறித்தவர் களால் நம்பப்படுகின்றவர் என்பதும் எண்ணிப் பார்க்கத் தக்கன. வள்ளுவருக்குக் கடவுள் கோட்பாடு உடன்பாடு என்றால், வள்ளுவர் கூறும் ஐந்தவித்தான் இயேசுகிறித்துவுக்குப் பொருந்தும் என்னும்

கருத்து மேற்கண்ட விளக்கத்திலிருந்து பெறப்படுவதாக அமைந்துள்ளது.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத் திருக்குறள் ஆய்வக வெளியீடான 'திருக்குறளும் விவிலியமும்' என்னும் நூல் "பொறிவாயில் ஐந்தவித்தான்' என்னும் தொடரோ, கிறிஸ்தவ இறையியற் கொள்கைக்கே மிக ஏற்புடையதாகும். அங்கு அது எவ்வித இடர்ப்பாடுமின்றிப் பொருந்தும்''[29] எனக் கூறுகின்றது.

இக் கருத்துகள் மேலும் ஆயத் தக்கன. விவிலியத்துடன் ஒப்பிட்டு ஆய்ந்து, மேலே கூறப்படும் கருத்துச் சரியானதா என்பதைப் பின்னர் பார்ப்போம்.

'ஐந்தவித்தான்' என்னும் தொடர் பாயிரத்திலுள்ள கடவுள் வாழ்த்திலும் நீத்தார் பெருமையிலும் (6,25) கூறப்பட்டிருக்கின்றபடியால், ஐந்தவித்தானைப்பற்றித் தெளிவு ஏற்படும்பொழுது, பாயிரத்தில் கடவுள் வாழ்த்தும், நீத்தார் பெருமையும் எவ்வாறு இணைகின்றன என்பதற்கான விளக்கம் கிடைக்கலாம்.

**வான்**

கடவுள் வாழ்த்துக்கும் நீத்தார் பெருமைக்கும் இடையே, வள்ளுவர் வான் சிறப்பைக் கூறுவது ஏன் என்னும் ஐயம் எழுகின்றது.

"மழையைச் சிறப்பிற்றணிப்பாருமில்லை; வறப்பிற்றருவாருமில்லாகையால், வான் சிறப்பைக் கூறுவதால் பயன் ஒன்றும் இல்லை''[30] என வ.உ.சி. கூறுகின்றார்.

"'கடவுளுக்கு அடுத்த நிலையில் 'கருமேகம்' வாழ்த்தப்படுகிறது. தமிழிற்கூட, மற்ற இலக்கியங்களிலும், புராணங்களிலும் இவ்வழக்கு இல்லையெனவே தோன்றுகின்றது. மற்ற மொழிகளிலும் கடவுள் வாழ்த்தின் பின் வானைச் சிறப்பிக்கும் வழக்க

---

29. செல்வி காமாட்சி சீனிவாசன், 'திருக்குறளும் விவிலியமும்' மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம், 1979, பக். 327.

30. வ.வு.சி.,

31. மு. கோவிந்தசாமி, குறள் மனம், பாரிநிலையம்; 1958, சென்னை, பக். 15.

மில்லையெனவே தோன்றுகிறது'', [31] என மு. கோவிந்தசாமி கூறு கின்றார்.

திருவள்ளுவர், தம் நூலின் முதற்பகுதியாம் பாயிரத்தினுள், கடவுள் வாழ்த்திற்கு அடுத்து, வான் சிறப்பை வைத்துள்ளார். இதன் மூலம் திருவள்ளுவர் கொள்கையை நாம் உற்று நோக்கின், கடவுளுக்கு அடுத்த சிறப்பைப் பெறும் தகுதி வானுக்கு உண்டு என்றாகிறது. வான்சிறப்பிற்கு அடுத்து நீத்தார் பெருமை விளங் குவதால், வள்ளுவர் பெருமை படுத்தும் நீத்தாரினும் சிறப்புப் பெறும் தகுதி வானுக்கு உண்டு எனலாம்.

வள்ளுவர் பாயிரமாகிய முதல் நான்கு அதிகாரங்களுள், உயர் திணை ஆண்பால் ஒருமை விகுதியால் கடவுளையு நீத்தாரையும் சுட்டுவதுடன், 'ஐந்தவித்தான்' என்னும் பெயரால் கடவுளும் நீத் தாரும் ஒன்றானவர்களே என்பதையும் தெளிவுபடுத்துகின்றார். ஐந்தவித்தான் என்னும் நிலையில் கடவுளும் நீத்தாரும் ஒன்றே. எனவே, கடவுளுடன் இணைந்த நீத்தாரினும் சிறப்புப் பெறும் 'வான்' எது என்னும் வினா எழுகிறது.

'வான் சிறப்பு' என்பதன் கீழுள்ள பாக்களை நோக்கினால், அவற்றுள் வள்ளுவர் பெய்துள்ள மழை, புயல், விசும்பின் துளி, எழிலி என்னும் சொற்களால் வான் சிறப்பு என்பது, மழையைச் சிறப்பித்துக் கூறும் பகுதியே என உரையாசிரியர் எண்ணினர் என்பது தெரிகிறது. ஆனால், கடவுளுக்கும் நீத்தாருக்கும் இடையே மழை வர வேண்டிய தேவை என்ன என்பதை எண்ணிப் பார்த்த சிலருக்கு, வான் சிறப்பு என்பது மழையை மட்டுமே கூறும் பகுதி எனக் கொள்ள இடம் தரவில்லை என்பது அவர்களுடைய விளக்கங்களால் விளங்குகின்றது.

இவ்வதிகாரத்தை ஆய்ந்த அறிஞர் பெருமக்களுக்கும், இவ் வையம் தோன்றாமல் இல்லை. அவர்களும் இவ்வதிகாரத்தினால் விளக்கிக் காட்டப்படும் பொருளைத் தெளிவாய்க் கூறவியலா நிலையில், திகைத்து நிற்பதாகவே காணப்படுகிறது. மிகச் சிலரே இவ்வதிகாரத்தினால் சுட்டப்படும் உட்பொருளை நுணுகி ஆராய்ந்து, அதன் அருகே சென்றுள்ளனர் எனக் கூறலாம். ஆயினும், வள்ளுவரின் உள்ளக் கொள்கையை அறியவியலா நிலையில், அவர்களும் அதைத் தெளிவாக 'இதுதான் இதன் பொருள்' எனத் துணிந்து கூறவியலாத நிலையில் நிற்கின்றனர்.

எனவே, 'வான்சிறப்பு' அதிகாரப் பொருத்தம் உரைக்கும் உரையாசிரியர், அறிஞர் பெருமக்கள் இவர்களின் கருத்துகளை முறையே நோக்குவோம்.

### 1. பரிமேலழகர்

அஃதாவது, அக்கடவுளது, ஆணையான் உலகமும் அதற்கு உறுதியாகிய அறம், பொருள், இன்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய மழையினது சிறப்புக் கூறுதல். அதிகார முறைமையும் இதனாலே விளங்கும்.

### 2. பரிதியார்

பூலோகத்திலுள்ள தன்ம தானஞ் செய்யும்போது, மழையின்றி நடவாது; அங்ஙனம் நடக்கில் வான்சிறப்பு வேண்டும் என்றவாறு.

### 3. மணக்குடவர்

வான்சிறப்பானது, மழையினது தலைமை கூறுதல். இது கடவுட் செய்கைத் தாதலான், அதன் பின் கூறப்பட்டது. இஃது ஈண்டுக் கூறியது என்னையெனில், பின் உரைக்கப்படுகின்ற இல்லறமும் துறவறமும் இனிது நடப்பது மழையுண்டாயின் என்பதற்குப் போலும். அன்றியும் காலத்தின் பொருட்டுக் கூறினார் எனினும் அமையும்.

### 4. காலிங்கர்

(முதற் குறட்பாவின் விளக்கத்தினுள்) இனி, மற்று இக் கடவுள் வணக்கமும் வான் சிறப்பும் துறவறம் இல்லற முதலாகிய எனைத் தொழுக்கத்திற்கும் இன்றியமையாப் பண்பினவாகலின், இவற்றின் பின்னர்,அவ்விருவகை ஒழுக்கத்திற்குத் தொகைநிலைப் பாயிரம் உணர்த்துகின்றாராதலால், அவற்றுள் முன்னர், அவ் வீட்டு நெறிக்கியல்பாகிய துறவு நெறிப்பாயிரம் அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

### 5. புலவர் குழந்தை

வான்—மழை. வான் சிறப்பு—மழையினது சிறப்புக் கூறுதல். அறம், பொருளின்பமாகிய உலகியல் நடத்தற்கேதுவாகலின், மழை முப்பாற்கும் பொதுவாயிற்று. மழையின் சிறப்புணர்ந்து அதன் பயன் கொண்டு வாழ்தல் இதன் பயன்.

6. தேவ நேயப் பாவாணர்

அஃதாவது, இறைவனருட்கு அடுத்தபடியாக, அவன் ஏற்பாட்டின்படி உலக நடப்பிற்கும் அறம் பொருளின்பப் பேற்றிற்கும் இன்றியமையாத துணைக் காரணமாகிய மழையின் சிறப்பைக் கூறுதல்.

7. டாக்டர் மு. வரதராசனார்

''வாழ்க்கையைக் கெடுக்க வல்ல வறுமையின் கொடுமையைப் பலமுறை எண்ணி எண்ணியே கடவுள் வாழ்த்தையடுத்து, வான் சிறப்பைக் கூறியுள்ளார்... திருவள்ளுவர் காலத்தில் மழை இல்லையானால் வாழ்வு இல்லை. இதுவே காலத்தால் நேர்ந்துள்ள வேறுபாடு. இந்த வேறுபாடு உணர்ந்தே திருவள்ளுவரின் கருத்தை உணர முற்பட வேண்டும்.''[32]

8. புலவர் வே. த. அர்ச்சுனனார்

வான் என்பது மேகம் அல்லது மழையாகும்,....உயிர்தோறும் வியாபித்திருக்கும் ஆண்டவனைப் போலவே, உலகத்தின் எல்லாப் பொருள்களாக உருவாகித் தானுமோருணவுப் பொருளாய் நிற்கும் பெருமை, இம்மழை யொன்றற்கே உரியதெனக் கூறல் மிகையாகாது. ஓரறிவு முதலாய் ஆறறிவு வரையிலுள்ள உயிர்கட்குச் சத்துள்ள உணவை, விதவிதமாகத் தந்து காக்கும் உயர்வையுடையது. மழை நீரால் உலகத்தில் பல காரியங்கள் நடைபெற்று வருகின்றன.''[33]

9. குருகுலத் திருக்குறள் பீடம் அழகரடிகள்

'வான்சிறப்பு' அதிகாரத்தில், மழையை அமிழ்தம் என்று ஆசிரியர் கூறுகிறார்.... ஊற்று நீர், ஆற்று நீர், கடல் நீர் முதலியவற்றிற்கு இல்லாத அமிழ்தத் தன்மை, வான நீராகிய மழைக்கு மட்டும் இருப்பதைப் பார்த்தால், வான்வெளியிற் கலந்து விளங்கிக் கொண்டிருக்கும் மிக நுட்பமாகிய ஒரு முழுமுதற் பொருளின் அமிழ்தத் தன்மை, அ.'.தாவது நிறைவேற்றுத் தன்மை, மழையிற் கலந்து வருகின்றதென்பது ஆழ்ந்து கவனிக்குமிடத்துப் புலப்படும்.''[34]

---

32. மு. வரதராசனார், வள்ளுவர் வாய்மொழி, பக். 40-41.

33. வே. த. அர்ச்சுனனார், திருக்குறள் இடைப்பாயிரமும் நூற்பாயிரமும், பக். 63.

34. அழகரடிகள், திருக்குறள் அறம், பக். 235-236.

10. நாகை சொ. தண்டபாணிப் பிள்ளை

அஃதாவது, மழையினது சிறப்புக் கூறுதல். முற்றறிவுடைய இறைவனை முதலாகவுடைய இவ்வுலகம், சிற்றறிவுடைய உயிர்களும் அறிவற்ற சடமுமாக உள்ளது. சத்தாகிய இறைவனைச் சதசத்தாகிய உயிர்கள் அசத்தாகிய சடத்தைக் கருவியாகக் கொண்டு அறிகின்றன. அவ்வாறு அறிவதற்கும், 'அவனருளாலே அவன்றாள் வணங்கி' என்றபடி, கடவுளின் அருள் விளக்கம் இன்றியமையாது வேண்டப்படுதலின், முதற்கண் கடவுள் வாழ்த்துக்கூறி, அதையடுத்து ஈண்டு, அக்கடவுளை அறிதற்குக் கருவியான அசத்தின் பாற்பட்டு, ஆக்கவும் அளிக்கவும் அழிக்கவும் வல்ல ஆற்றலை, ஓராற்றாற் கடவுளோடொப்ப இயற்கையிற் கொண்ட மழையினது சிறப்பைக் கூறுகின்றார். அசத்தைக் கொண்டு சத்தை அறியும் சதசத்தான உயிர்களுட் சிறந்த நீத்தாரது பெருமையை இதனை அடுத்துக் கூறுவர். அதையடுத்து, சதசத்தால் அறியப்படும் சத்தோடு ஒற்றுமையுடைய அறத்தினது வலிமை இனைத்தெனக் கூறுவர்.

11. பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார்

கடவுள் வாழ்த்து அதிகாரத்துக்குப் பின், மழையைக் கடவுளாக உருவகித்து, அம்மழை உருவில் கடவுள் வாழ்த்தைத் தொடர்வது 'வான்சிறப்பு' என்னும் இவ்வதிகாரம்.

கடவுளது இன்ப வடிவின், அன்புருவின் சின்னம் மழை (ப. 387). இறைவாழ்த்து அதிகாரத்தில் கடவுளின் பண்பாற்றல்களை யெல்லாம் தொகுத்துரைத்த வள்ளுவர், இந்த வான்சிறப்பு அதிகாரத்தில் வெளிப்படையாக மழைச்சிறப்புமட்டுமே கூறுகின்றாரானாலும், உண்மையில் அவர் முதற்பொருள் மழையை வருணிப்பதன்று; கடவுளின் கருணையாற்றலை வகுத்துரைப்பதேயாகும் (ப. 390).

12. எம். சுப்பிரமணிய பிள்ளை

கடவுளுடைய தண்ணருளைக் குறிப்பதற்கு, மழையே சிறந்த அறிகுறியாக இருக்கின்றது. மழைச் சிறப்புக் கூறுதல், திருவருட் சக்தி வணக்கங் கூறுதலாக முடிகின்றது.

13. ப. அருணாசலம்

கடவுள் வாழ்த்தையடுத்து வான்சிறப்புக் கூறுவர் இறைவன் உயிர்களிடத்தில் கொண்ட அருட் செயலாக மழையைக்

கூறுவர். அவன் அருளின் வடிவம் என்றும் மழையைக் கூறலாம். திருவெம்பாவை, மழையில் உமாதேவியைக் காண்கிறது. இறைவன் அருளையே சித்தாந்தம் தேவியாகக் கூறும். திருப் பாவையும் இறைவன் அருட்கோலத்தை மழையில் காண்கிறது (குறளின் செய்தி, பக். 26, 27).

மேலே நாம் கண்ட உரையாசிரியர், ஆய்வாளர் ஆகியோரின் கருத்துப்படி 'வான்சிறப்பு' என்பது, மழையைமட்டும் சிறப்பித்துக் கூறும் பகுதி - மழை வாழ்த்துடன் கடவுளின் கருணையாற்றலையும் தன்னகத்தே கொண்ட பகுதி, என்னும் இருவிதக் கொள்கையுண் டென்பது விளங்குகிறது. இவ்விருவிதக் கொள்கைகளுள் சரியானது எது என்பது ஆராய வேண்டியதாயுள்ளது.

கடவுள் வாழ்த்திலும் நீத்தார் பெருமையிலும் கூறப்பட்டுள்ள ஐந்தவித்தானைப்பற்றித் தெளிவில்லாத காரணத்தாலும், இவ் விரண்டு அதிகாரங்களுக்கிடையேயுள்ள 'வான்சிறப்பு' மழையைச் சிறப்பிக்கும் அதிகாரம் என்று கூறப்படுகின்ற காரணத்தாலும்' முதல் மூன்று அதிகாரங்கள் திருவள்ளுவரால் இயற்றப்பட்டவை அல்ல என்று வ.உ.சி. கருதுகின்றார்.

வ.உ.சி. யின் கருத்தை ஏறத்தாழத் தமிழறிஞர் பலரும் மறுக் கின்றனர். ஆனால், முதல் மூன்று அதிகாரங்களைப்பற்றிய சிக்கல், இன்றுவரை முழுமையாகத் தீர்க்கப்படவில்லை.

''இன்ன பிற காரணங்களால் திருக்குறளின் பாயிரம் பின்னம் இடம் பெற்றதோ என்னும் ஐயம் நிலவுகின்றது. இது தீராத வரையில் வள்ளுவர்தம் சமயக் கருத்துகளை ஒருதலையாகத் துணிதல் இயலாது. இப்பாயிரத்தில் பல கருத்துகள் தீர்வுபடாமல் சிக்கல் தருகின்றன,,[35] என்பது திருக்குறள் ஆய்விலேயே இன்று வரை சூழ்ந்து நிற்கும் அறிஞர் பெருமக்களின் கருத்தாகும்.

வள்ளுவர்தம் சமயக் கருத்துகளை ஒருதலையாகத் துணிவ தற்குப் பாயிரத்திலுள்ள சிக்கல்கள் தீர்க்கப்பட்டாக வேண்டும்.

**இயல்புடைய மூவர்**

சிக்கல் பாயிரத்தோடு நின்று விடவில்லை. பாயிரம் முடிந்து நூலின் தொடக்கத்தேயுள்ள முதல் அதிகாரத்தின் முதல் குறட்பா வாகிய,

---

35. *முருகரத்தினம், முன்னுரை, குறள் கூறும் சமயம், மதுரை காமராசர் பல்கலைக் கழகம், 1979, பக். 10.*

''இல்லாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை''

என்னும் குறட்பாவையும் அதன் உரைகளையும் ஆய்ந்த திரு. வி. க. கீழ்க்காணுமாறு கூறுகின்றார் :

''இங்கே ஒரு சிக்கல் உள்ளது. அது 'மூவர்க்கும்' என்னும் சொல்லைப்பற்றியது. 'மூவர்க்கும்' என்பதுபற்றிப் பலவிதக் கருத்துகள் வெளிவந்துள்ளன. உண்மை காண அறிஞர் முயலல் வேண்டும்.''

''ஆசிரியர் உள்ளத்தைக் காண்டல் அருமையாகவே தோன்று கிறது. எவரை உளங்கொண்டு ஆசிரியர் 'மூவர்க்கும்' என்று அருளினாரோ தெரியவில்லை. இதுபற்றி யான் பலமுறை நினைத் ததுண்டு. என் உள்ளத்தில் எத்தனையோ பொருள்கள் தோன்றித் தோன்றி மறைந்தன. திருவள்ளுவர் கூறிய 'மூவர்' என்னை எங்கெங்கோ ஈர்த்து ஈர்த்து அலைத்தனர்.''[36]

இக்குறட்பாவுக்கு யானறிந்த அளவில் இதுவரை பன்னிரண்டு விளக்கங்கள் வெளிவந்துள்ளன. அவைகளை முறையாக நோக்கினால், இல்வாழ்வான் என்பவன் நல்லாற்றின் நின்ற துணையாக நிற்கும் இயல்புடைய மூவர் என்பவர்:

1. பிரம்மச்சாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி.
2. தாய், தந்தை, மனைவி.
3. பெற்றோர், மனைவி, மக்கள்.
4. பெற்றோர், பிள்ளைகள், உடன்பிறந்தோர்.
5. உறவினர், நண்பர், ஏழைகள்.
6. மாணவர், தொண்டர், அறிவர்.
7. வருகுறட்பா குறித்த மூவர்.
8. சேர சோழ பாண்டியர்.
9. ஊர் மன்றங்களில் மூவேந்தரென வீற்றிருந்த மூன்றறவோர்.
10. பார்ப்பான், அரசன், வணிகன்.

---

36. திரு.வி. கலியாண சுந்தரனார், திருக்குறள் விரிவுரை, (அறத்துப் பால் - இல்வாழ்க்கை இயல்), சாது அச்சுக் கூடம், சென்னை, 1959; பக். 443.

11. அற இயல்புடைய மூத்தோராகிய இருமுதுகுரவர்.
(மூவர் - மூத்தோர்)

12. அறவோர், ஒழுக்கத்து நீத்தார், அந்தணர்.

என, இவ்வாறு பல்வேறு விளக்கங்கள் தோன்றக் காரணம், திருக்குறள் பாயிர அதிகாரங்களாகிய முதல் நான்கு அதிகாரங்களும் முடிந்து, நூல் தொடங்கும் முதற் குறட்பாவிலுள்ள 'மூவர்' என்னும் தொகைச் சொல்லேயாகும். தொகைக்கு ஏற்ற வகையைக் காண்பதிலேயே இவ்வளவு இடர்ப்பாடுகளும் தோன்றியுள்ளன. 'மூவர்' என்னும் தொகைச் சொல்லுடன், இணைந்துள்ள 'இயல்புடைய' என்னுந் தொடர் ஒருவகையில், வகையைக் காண்பதற்கு உதவுகின்றது.

''இயல்பு - இயற்கை. இயற்கை என்பது தன் எண்ணம், தன் முயற்சி இல்லாமலே வருவது. இதற்கு மாறுபட்டதே செயற்கை என்பது. இயற்கை என்பது தன்னோடு ஒற்றுமையுடையது. செயற்கை என்பது தன்னிற் பிரிதாயது''[37] என்பார் சிவலிங்கனார். ஆகவே, இங்கே குறிக்கப்பட்டுள்ள மூவரும் எவ்விதச் செயற்கையும் இன்றி இயல்பாகவே ஒன்றுபட்ட மூவராவர்.

'இயல்பு' என்பதை வள்ளுவர் தம் நூலுள், 'இயல்பினான் இல்வாழ்க்கை,'[38] 'வேந்தர்க் கியல்பு,'[39] 'நிலத்தியல்பு,'[40] 'இனத்தியல்பு,'[41] 'தாழ்ந்த இயல்பு,'[42] 'அற்கா இயலபு'[43] எனப் பல்வேறிடங்களில் பயன்படுத்தியுள்ளார்.

இயல்புடைய மூவர் என்பது, இயல்பாகவே ஒன்றுபட்ட மூவரைக் குறிக்கும் என்றாகிறது. இல்வாழ்வான் துணையாக நிற்கும், இயல்பாகவே ஒன்றுபட்ட மூவர் யார் என்பதே இப்போது எழுந்துள்ள வினா.

---

37. ஆ. சிவலிங்கனார், செந்தமிழ்ச் செல்வி, தொகுதி-24. பக். 178.
38. திருக்குறள், 47.
39. ,, 382.
40. ,, 452.
41. ,, 452.
42. ,, 903.
43. ,, 333.

இதற்கு விடையாகப் பழைய உரையாசிரியர்களாகிய பரிமேலழகர், மணக்குடவர், பரிதியார், காலிங்கர் ஆகியோர், இல்வாழ்வானோடு தொடர்புடைய பிரமச்சாரி, வானப் பிரஸ்தன், சந்நியாசி ஆகிய மூவரையும் குறிக்கின்றனர்.

பரிமேலழகர் இம்மூவரையும் குறித்த போதிலும், அதுவள்ளுவர் உள்ளக் கருத்திற்குப் புறம்பானதே என்பதை உணர்ந்தவராய், ''இவருள் முன்னையிருவரையும் பிறர் மதம் மேற்கொண்டு கூறினார்'' என விளக்கம் கொடுக்கின்றார். இதற்குக் குறிப்புரை வழங்கிய வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார், ''திருள்ளுவர், 'இல்லறம்,' துறவறம்' என இருவகை ஆசிரமமாகவே வகுத்துக் கொண்டாராதலால், மற்றையிரண்டாசிரமத்தையும் கூட்டி 'மூவர்க்கும்' என்றது, பிறர் மதத்தை அங்கீகரித்த தாயிற்று'' எனக் கூறுகின்றார்.

இக்கருத்தினைச் சிவலிங்கனார், திரு.வி.க., அப்பாத்துரையார், தேவநேயப் பாவாணர், புலவர் குழந்தை முதலிய பலரும் மறுக்கின்றனர். மறுத்துரைப்பதற்கு அவர்கள் கொடுக்கும் காரணங்களாவன:

1. வள்ளுவர் தம் நூலின் தொடக்கத்தே, அறத்தை இல்லறம், துறவறம் என்று இரண்டாகப் பகுத்துள்ள தம் கொள்கைக்கு மாறாக வடமொழிக் கொள்கைக்கேற்ப, பிரம்மச்சரியம் முதலான நான்காகக் கொண்டார் என்பது ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று.

2. பிரம்மச்சாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி ஆகிய மூவரில் காணப்படும் சந்நியாசிக்கும், அடுத்த குறட்பா கூறும் துறந்தார்க்கும் வேற்றுமை இல்லை. ஆகவே, இக்குறட்பா குறிக்கும் மூவர் துறந்தாராகிய சந்நியாசியோடு இணைந்த பிரம்மச்சாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி அல்லர்.
அடுத்து வருகின்ற,

2. தாய், தந்தை, மனைவி.
3. பெற்றோர், மனைவி, மக்கள்.
4. பெற்றோர், பிள்ளைகள், உடன்பிறந்தோர்.

என்னும் உரை மயிலை சிவமுத்து, சிவலிங்கனார் போன்றோரால் கொள்ளப்படுகின்றன. இவர்கள் இல்வாழ்வோடு

இணைந்த அவனது உறவினங்களை இணைத்து நோக்கு கின்றனர். இவன் தோன்றுவதற்குக் காரணமான பெற்றோர், இவனுடன் இணைந்த மனைவி, உடன்பிறப்புகள், இவனால் பிறப் பிக்கப்படும் பிள்ளைகள் ஆகிய மூன்று இணைப்புகளை நோக்கி, இயல்பாகவே இவனுடன் இணைந்துள்ள இம்மூவர்க்கும் இவன் துணை எனக் கூறுகின்றனர்.

இவ்வுரையும் திரு. வி. க., அப்பாத்துரையார் முதலியவர் களால் மறுக்கப்படுகின்றது. அவர்கள் கொடுக்கும் காரணம், பெற்றோர், மனைவி, மக்கள், சகோதரர்கள், யாவரும் வள்ளுவர் பின்னர்க் குறிக்கும் 'ஒக்கலில்' அடங்கி விடுகின்றனர். ஒக்கல் உறவினர்களைக் குறிப்பது. இவர்கள் யாவரும் உறவினர்களே யாவர். ஆகவே, ஒக்கலில் அடங்காத இல்வாழ்வோடு இணைந் துள்ள இயல்புடைய அவரைக் காண வேண்டும் என்பர்.

''மூவரைத் தாய், தந்தை, மனைவி என்றும், பெற்றோர், மனைவி, மக்கள் என்றும் கொள்வதும் பொருத்தமாகத் தோன்ற வில்லை. என்னை? பின்னே 'தென்புலத்தார்' என வரூஉங் குறட்பாவில் 'ஒக்கல்' இருத்தலான் என்க. 'ஒக்க'லுள் பெற்றோர் முதலியோர் அடங்குதலை ஓர்க. 'ஒக்க'லுக்கு வேறு பொருள் காண முயல்வது வீண்''[44] என்பர் திரு.வி.க., அவர்கள். இவ்வாறே,

5. உறவினர், நண்பர், எழைகள்.
6. மாணவர், தொண்டர், அறிவர்.

போன்ற உரைகளும் இலக்குவனார் முதலியோரால் கூறப்படு கின்றன. இதிலுள்ள உறவினர் பின்னர் வருகின்ற ஒக்கலில் அடங்கி விடுகின்றனர். மாணவர், தொண்டர், அறிவர் என்பன இன்னும் பின்னர் கூறப்படுகின்ற எண்மரில் அடங்குவர் எனினும், இல்வாழ்வானோடு இணைந்துள்ள இயல்பாகவே மூவராக விளங்கும் தன்மையோடு இணைந்தவராகக் கொள்ளக்கூடியவர் அல்லர்.

7. வருகுறட்பா குறித்த மூவர்

இவ்வுரையைச் சிவலிங்கனார் கீழ்க் காணுமாறு மறுக்கின்றார்.

---

44. திரு. வி. கலியாண சுந்தரனார், திருக்குறள் விரிவுரை, (அறத்துப்-பால் - இல்வாழ்க்கை இயல்), சாது அச்சுக்கூடம், சென்னை, 1959; பக். 442-443.

''துறந்தார் முதலியவர்களையே முதற்குறளில் மூவர் என்றாராயின், அடுத்து வரும், 'தென்புலத்தார் தெய்வம்'.... என்னும் குறளில் வரும் ஐவரையும் சேர்த்து, முதற் குறளில் 'இயல்புடைய எண்மர்' என்று கூறியிருக்க வேண்டும் வள்ளுவர். அன்றியும் மூவர்க்குக் கொடுக்கப்பட்ட 'இயல்புடைய என்னும் அடைமொழியையும் நாம் நன்குணர வேண்டும்.''[45]

கா. அப்பாத்துரையாரும் இவ்விளக்கத்திற்கு உடன்படவில்லை.

''மூவர் என்பது வருகுறட்பாவில் குறித்த மூவரையே தொகுத்துரைத்ததாகக் கொண்டனர். இது சிறப்புரை அன்று.''[46]

மேலே கண்ட இருவருடைய மறுப்புரையும், ஏற்றுக்கொள்ளத் தக்கனவாகவேயுள்ளன. காரணம் 'இயல்புடைய மூவர்' இயல்பிலேயே ஒன்றிணைந்த மூவராகவுள்ளனர். துறந்தார், துவ்வாதார், இறந்தார் ஆகிய மூவரிடம் அத்தகைய இயல்பிலேயே ஒன்றிணைந்த தன்மையைக் காண இயலவில்லை. அத்துடன் இம்மூவருக்கும் 'துணை' என்றுமட்டும் கூறும் வள்ளுவர் 'இயல்புடைய மூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை' என வேறுபடுத்திக் காட்டுகின்றார்.

8. சேர சோழ பாண்டியர்.

9. ஊர் மன்றங்களில் மூவேந்தரென வீற்றிருந்த மூன்றறவோர்.

இவ்விரண்டு விளக்கங்களுள் முதல் விளக்கம் புலவர் குழந்தையினுடையது. இரண்டாம் விளக்கம் திரு. வி. க. வினுடையது.

இவ்விரு விளக்கங்களையும் சிவலிங்கனார், அப்பாத்துரையார் போன்றோர் மறுத்துள்ளனர். இல்வாழ்வான் என்பது தமிழனை மட்டும் குறிப்பதன்று, ஆகவே, தமிழ்நாட்டுத் தலைவர்களை இணைத்துக் கூறுவது சிறப்புடையதாகத் தெரியவில்லை. திரு. வி. க. தம் உரையை முடிந்த முடிபாகவும் கூறவில்லை. எதுவுமே இணையாக் காரணத்தால், இதை இணைத்துப் பார்க்கின்றார்.

---

45. சிவலிங்கனார், செந்தமிழ்ச் செல்வி, தொகுதி-24, பக். 178

46. கா. அப்பாத்துரையார், மணிவிளக்கவுரை-11, முதல் பதிப்பு, பக். 46.

தமிழ்நாட்டிலுள்ள சேர சோழ பாண்டியர்களும் இல்லறத் தார்களே. ஆகவே, அவர்களோடு இணைந்த இயல்புடைய மூவர், வேறு மூவரேயாவர் எனலாம்.

10. பார்ப்பான், அரசன், வணிகன் ஆகியோரே இயல்புடைய மூவர் என்பது தேவநேயப் பாவாணர் அவர்களுடைய உரையாகும்.

இது ஆரியர்களுடைய நால் வருணப் பாகுபாட்டுடன் இணைந் ததாகவுள்ளது. இக்கொள்கை தமிழ்ச் சமுதாயத்திற்குப் பொருத்த மானது அன்று. 'இல்வாழ்வான்' என்பது பார்ப்பன இல் வாழ்வான், அரச இல்வாழ்வான், வணிக இல்வாழ்வான், வேளாள இல்வாழ்வான் ஆகிய நால்வகையையும் சேர்த்தே குறிக்கும். நான்கும் தொழில் காரணமாக வேறுபட்டவையேயன்றி வேறில்லை. இல்வாழ்வான் என்பது, உழவுத் தொழில் செய்பவனை மட்டுமே குறிக்கப் பயன்படுவது அன்று. உழவுத் தொழில் வேறு இல்வாழ்க்கை வேறு. இவ்வுரையையும் பல்வேறு அறிஞர்கள் மறுத்துவிடுகின்றனர்.

11. அற இயல்புடைய மூத்தோராகிய இருமுதுகுரவர்.

மூவர் என்பதற்கு மூத்தோர் எனப் பொருள்கொண்டு கூறப்பட் டுள்ளது. மூவர் வேறு மூத்தார் வேறு எனத் தகுந்த இலக்கண விளக்கங்களுடன் இக்கொள்கையும் மறுக்கப்பட்டுவிடுகின்றது. மேலும், இருமுதுகுரவர் 'ஒக்கலில்' அடங்கிவிடுகின்றனர். ஆகவே, இயல்புடைய மூவர், வேறு மூவரையே குறிப்பதாகின்றது.

12. அறவோர், ஒழுக்கத்து நீத்தார், அந்தணர்.

''இயல்புடைய மூவர் என்பது இங்கே, முப்பால் வாழ்வினைத் தோன்றாத் துணைகளாய்ப் பின்னின்று இயக்குவிக்கும் பண்பினை யுடைய முப்பால் முதல்வர்களாகிய மூவரைக் குறித்தது. முப்பால் களிலும் தோன்றும் துணைகளாக முன்னின்று இயக்கும் தலைவர் களையும் பண்புகளையும் வள்ளுவர் முறையே, அறவாழ்வை உள் நின்று இயக்கும் துறவோர், பொருள் வாழ்வை உள்ளூர நின் றியக்கும் ஒழுக்கத்து நீத்தார், இன்ப வாழ்வை உள்ளூர நின் றியக்கும் அந்தணர் என்று வகுத்தனர். கடவுள் பண்புடைய இம் முதல்வர் மூவர்க்கும் உலக வாழ்வில் ஆதாரமாய் உதவுபவன் இல் வாழ்வானே என்று இக்குறட்பா, அவன் சிறப்புக் கூறிற்று''[47] என அப்பாத்துரையார் விளக்கம் கொடுக்கின்றார்.

47. கா. அப்பாத்துரையார், மணிவிளக்கவுரை-2.

இவருடைய விளக்கம் மற்றவர்களுடைய விளக்கத்திலிருந்து மாறுபட்டு விளங்குகின்றது. இயல்புடைய மூவரை இவர், கடவுட் பண்புடையவர் எனக் கூறி, இக்குறட்பாவுக்கு விளக்கம் முந்தைய அதிகாரங்களாகிய, பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங்களில் தேடுகின்றார்,

''ஒழுக்கத்து நீத்தார் பொருட்பாற் பாயிர அதிகாரமாகிய ஒழுக்கத்து நீத்தார் அதிகாரத்தில் விளக்கப்பட்டனர்.''

''அந்தணர் அந்தண்மைப் பண்பே, இன்பத்துப்பால் பாயிர அதிகாரமான வான் சிறப்பில் மழை முகிலாகச் சுட்டப்பட்டது''

என்று, அவர் கொடுக்கும் விளக்கங்கள், பாயிரத்துடன் 'இயல் புடைய மூவரை' இணைக்கின்றன.

கடவுளை அறவாழி அந்தணன் எனக் குறிக்கின்றார் வள்ளுவர். ஆயினும், இவருடைய உரையிலும் நமக்கு நிறைவு ஏற்பட்டதாகத் தெரியவில்லை. துறவோர், ஒழுக்கத்து நீத்தார், அந்தணர் ஆகிய மூன்று பெயர்களுமே 'நீத்தார் பெருமை' அதிகாரத்தில் காணப்படுகின்றன. 'இயல்புடைய மூவர்' என்பதற்குத் தெளிவான விளக்கம் இல்லை.

பரிமேலழகர் கடவுள் வாழ்த்தின் தொடக்கத்தே,

''இவ்வாழ்த்து ஏற்புடைக் கடவுளை என அறிக. என்னை?

சத்துவ முதலிய குணங்களால் முன்றாகிய உறுதிப்பொருட்கு, அவற்றான் மூவராகிய முதற்கடவுளரோடு இயைபுண்டாகலான், அம்மூன்று பொருளையுங் கூறலுற்றார்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமையாகலின் இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படக் கூறினாரென உணர்க''[48] எனக் கூறுகின்றார்.

''இடிக்குந் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்'' -447

என்னும் குறட்பாவில் அரசனுக்குக் கீழ்ப்பட்டவர்களும் அவனுக்குத் துணையாவது போன்று, தனக்குவமையில்லாக் கடவுளுக்கு எதுவும் தேவையில்லையாயினும், உலகம் நிலை நிற்பதற்குக் காரணமான மக்கள் பெருக்கத்திற்கு, நல்லாற்றின் நின்ற

48. திருக்குறள் தெளிவுரை, பரிமேலழகர் உரை.

துணையாக விளங்குகின்ற இல்வாழ்வானை, இயல்புடைய மூவராகிய கடவுளுக்குத் துணை என வள்ளுவர் கூறுகின்றாரோ என்பதும் எண்ணிப் பார்க்கத் தக்கது.

கடவுளையும் நீத்தாரையும் 'ஐந்தவித்தான்' (6,25) என்னும் நிலையில் ஒருவராகக் கூறுகின்றார் வள்ளுவர். ஒருவரானாலும் அருவக் கடவுள், உருவக் கடவுள் ஆகிய இருவேறு நிலைகள் கூறப் படுவதால், அருவமாக இருக்கும் தனக்குவமையில்லாக் கடவுளைக் கடவுள் வாழ்த்திலும் ஐம்புல மனித உருவை ஏற்று, அருவத் தன் மையை நீத்த உருவக் கடவுளை நீத்தார் வாழ்த்திலும் அருவக் கடவுளுக்கும் உருவக் கடவுளுக்கும் இடையே செயல்படும் கடவுளின் அருள் சக்தியை வானாக உருவகித்து வான்சிறப்பிலும் வாழ்த்து கின்றார் வள்ளுவர் எனலாம்.

ஆகவே, முதல் மூன்று அதிகாரங்களும் ஒரே கடவுளின் மூன்று வேறுவகைப்பட்ட நிலைகளை வாழ்த்திச் சிறப்பித்துப் பெருமைபடுத்தி, மூவொருவராக விளங்கும் அறவாழி அந்தண னாகிய கடவுள் (8) மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஐந்தவித்த அறவோனாக விளங்கி, ஒழுகிக் காட்டிய அறத்தை (30) வலியுறுத்தி நான்காம் அதிகாரத்தில் கூறிப் பாயிரத்தை முடித்து, நூலைத் தொடங்குவதால் கடவுள், வான், நீத்தார் ஆகிய முதல் மூன்று அதிகாரங்களிலும் விரித்துக் காட்டிய கடவுளின் தன்மைகளைத் தொகுத்து, 'இயல்புடைய மூவர்' என வள்ளுவர் கூறியுள்ளார்.

பரிமேலழகர் கடவுள் வாழ்த்தை மூவராகிய முதற் கடவுளரை வாழ்த்தும் வாழ்த்தாகக் கருதுகின்றார்.

மூவராகிய முதற்கடவுளர் எனப் பரிமேலழகர் கூறக் காரண மென்ன? திருக்குறள் தோன்றிய காலத்தில், மூவராய முதற் கடவுளர் என்ற கருத்து உண்டா என்பன எண்ணிப் பார்க்கத் தக்கன. சிவன், விஷ்ணு, பிரம்மா ஆகிய மூவருமே பரிமேலழகர் கூறும் மூவராய முதற்கடவுளர் என்பதில் ஐயமில்லை.

நாம் முன்னர் பார்த்தவாறு மூவராகிய முதற்கடவுளர் என்னும் கொள்கை, வடமொழி வேதத்தைச் சார்ந்தது அன்று. கடவுள் மறுப்புக் கோட்பாட்டையுடைய சமண பௌத்த சமயங்களிலிருந்தும் தோன்றியிருக்க இயலாது.

ஆரிய வேதங்கள், சமண பௌத்த சமயங்கள் இவைகளைத் தவிரச் சங்க காலத்தில் தமிழகத்தில் பரவியிருந்த சான்றோர் சமயமாகிய கிறித்தவ சமயத்துடன், நாம் இவைகளை ஒப்பிட்டு நோக்கலாம்.

முன்னர் நாம் ஆய்ந்ததில் யூத சமயத்தில் கடவுள், ஆவி, வார்த்தை என்பவற்றின் தொடர்ச்சியாகவே கிறித்தவத்தில் கடவுள், மகன், பரிசுத்த ஆவி என்னும் கோட்பாடு தோன்றியது. இக்கோட்பாடு உலகில் மற்றப் பாகங்களுக்குப் பரவும் பொழுது அப்பன், அம்மை, மகன் எனக் கொள்வதற்கும் தனித்தனியான மூன்று ஆண் கடவுளர் எனக் கொள்வதற்கும் வாய்ப்புண்டு என்பதையும், யூத கிறித்தவ அடிப்படையில் தோன்றிய இசுலாமிய சமயமும் கிறித்தவத்தின் மூவொரு கடவுள் கோட்பாட்டை, கடவுள் மனிதனாவார் என்பதை ஏற்றுக்கொள்ள இயலாத நிலையில் தோன்றியதையும், கடவுள் தனித்தனி மூன்று பேர் ஆக இருக்கின்றனர் என எண்ணக் கூடிய வாய்ப்பு கிறித்தவத்தில் உண்டு என்பதையும் பார்த்தோம்.

மூவராகிய முதற்கடவுளர் என்னும் பரிமேலழகர் கூற்றில் 'முதல்' என்னும் சொல் தெரிவிக்கும் கருத்து யாது என்பது ஆழ்ந்து ஆராயவேண்டிய ஒன்று. இவைகளைக் குறித்து நாம் தெளிவாக அறிந்துகொள்ள வேண்டுமானால், பரிமேலழகர் காலத்திற்கு முன்னும் திருவள்ளுவர் காலத்திற்குப் பின்னும் உள்ள இடைக்காலத்தில், தமிழகத்தில் எழுந்த மூவராய முதற் கடவுளரைப் பின்பற்றி எழுந்த சமய வரலாற்றை நோக்குவோம்.

மூவொரு கடவுள் என்னும் கோட்பாட்டை உருவாக்கி, உலகுக்குக் கொடுத்த பெருமை கிறிந்தவத்தையே சாரும். காண இயலா நிலையில் அருவமாக விளங்கும் இறைவன், ஐம்புலன் களையுடைய மனித உருவை ஏற்று, இப்பூமியில் வனிதனாகப் பிறந்து, மக்கள் யாவருக்கும் நல்வழி காட்டும் நற்குருவாக விளங்கினான் என்பதும், கடவுள் மனிதனாகப் பிறப்பதற்கும் மனிதர்கள் மனிதனாக வந்த கடவுளாகிய நற்குருவோடு இணைக்கப்படுவதற்கும், கடவுளின் அருள்சக்தி காரணமாக விளங்குகின்றது என்பதும் விளக்கப்பட்டு 1. அருவக்கடவுள் 2. கடவுளின் அருட்சக்தி 3. உருவக்கடவுள் ஆகிய மூன்று நிலைகளில் ஒரே இறைவனாகிய கடவுள் செயல்படுகின்றார் என்பதும் உலகிற்கு விளக்கிக் காட்டப்படுகின்றது.

இறைவனின் இந்த மூன்று நிலைகளையும் விளக்கியே வள்ளுவர் கடவுள் வாழ்த்து, வான் சிறப்பு, நீத்தார் பெருமை ஆகிய மூன்று அதிகாரங்களையும் இயற்றியுள்ளார் எனலாம்.

வரலாற்று மனிதனாகிய இயேசு கடவுளா என்னும் வினாவுக்கு, அவர் கடவுளின் முழுமையை விளக்கிக் காட்டி நிற்கும் முழு மனிதன் என்பது, கிறித்தவத்தின் விடையாகிறது. இயேசுவில் முழு மனிதனையும் முழுக் கடவுளையும் கிறித்தவம் காணுகின்றது.

அவ்வாறே வள்ளுவரும் 'ஐந்தவித்தான்' என்னும் நிலையில், கடவுளின் முழுமையையும் (6) மனிதனின் முழுமையையும் (25) விளக்கிக் காட்டுகின்றார்.

'ஐந்தவித்தான்' கடவுளா மனிதரா என்னும் வினாவுக்குக் கிறித்தவத்தின் வழி நின்று, 'ஐந்தவித்தான்' கடவுளின் முழுமையைக் காட்டுபவரும் அவரே; அதே நேரத்தில் மனிதனின் முழுமையைக் காட்டுபவரும் அவரே என விளக்கம் கொடுத்தாக வேண்டியுள்ளது.

ஒரே கடவுளை யூதம் கடவுள், ஆவி, வாக்கு என்னும் மூன்று பெயர்களால் விளக்கிக் கூறுகிறது. அதையே கிறித்தவம் தந்தை பரிசுத்தாவி, மகன் என்று காட்டுகிறது. வள்ளுவம் கடவுள், வான். நீத்தார் எனக் குறிக்கின்றது.

| சமயம் | இறைவன் | | |
|---|---|---|---|
| யூதம் | இறைவன் | ஆவி | வாக்கு |
| கிறித்தவம் | தந்தை | ப. ஆவி | மகன் (கிறித்து) |
| வள்ளுவம் | கடவுள் | வான் | நீத்தார் |
| சைவம் | அப்பன் (சிவன்) | அம்மை | மகன் |
| சாக்தம் | சிவன் | ‡சக்தி | மகன் |
| கௌமாரம் | சிவன் | சக்தி | ‡குமரன் |
| காணாபத்தியம் | சிவன் | சக்தி | ‡கணபதி |
| வைணவம் | சிவன் | ‡விஷ்ணு | பிரமன் |
| சௌரம் | சிவன் | விஷ்ணு | ‡ஐயப்பன் |

கிறித்து = கிறித்தவம்

சிவன் = சைவம்

சக்தி = சாக்தம்

குமரன் = கௌமாரம்

கணபதி = காணாபத்தியம்

விஷ்ணு = வைணவம்

ஐயப்பன் = சௌரம்

# 5. சைவசித்தாந்த சாத்திரங்கள்

## முதற்கடவுளர் மூவர்

சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு. சைவம், வைணவம்பற்றிய கொள்கைகள், சங்க இலக்கியங்களில் மிகுதியாகக் காணப்படவில்லை. ஆதலால், சங்க காலத்திற்குப் பின்னரே சைவம், வைணவம் ஆகிய சமயங்கள் முழு உறுப்பெற்று வளரத் தொடங்கின என்பது புலனாகின்றது. கடவுள், ஆவி, வார்த்தை என்று மூவகையாகக் கூறக்கூடிய, ஓரிறைக் கோட்பாடுடைய யூத சமயத்திலிருந்து அப்பன், பரிசுத்த ஆவி, மகன் என்று மூவொரு கடவுளாகக் கூறக்கூடிய கிறித்தவம் தோன்றி, மற்ற இடங்களுக்குப் பரவியது என்பதையும், திருவள்ளுவர் தமது பாயிரத்தில் 'ஐந்தவித்தான்' என்னும் சொல்லால் கடவுளையும் நீத்தாரையும் ஒன்றாக்கிக் கடவுள், நீத்தார் ஆகிய இருவர்க்கிடையே, வானைச் சிறப்பித்துப் பாடிக் கடவுள், வான், நீத்தார் ஆகிய மூவொரு நிலையைக் குறிப்பிடுகின்றார் என்பதையும், அந்த மூவொரு நிலையையே, பாயிரத்தை முடித்து நூலைத் தொடங்கும்போது 'இயல்புடைய மூவர்' எனக் கூறுகின்றார் என்பதையும் பார்த்தோம்.

வள்ளுவரின் கடவுள் வாழ்த்து, முதற்கடவுளர் மூவருக்கும் பொதுப்படக் கூறப்பட்டதென்பது பரிமேலழகரின் கருத்து.

முதற்கடவுளர் மூவரென்பது சிவன், விஷ்ணு, பிரம்மன் ஆகிய மூவரையும் குறிக்கும் என்பது யாவருமறிந்ததே.

பிரம்மன், விஷ்ணுவின் உந்திக் கமலத்திலிருந்து தோன்றியவர் என்னும் கருத்தின்படி பிரம்மன், விஷ்ணுவோடு ஐக்கியமாகி விடுகிறார்.

சிவனை வணங்குகிறவர்கள் சைவர்கள் எனவும் விஷ்ணுவை வணங்குகிறவர்கள் வைணவர்கள் எனவும் கூறுப. இருபெரும் சமயங்களும் மும்மூர்த்திகளாகிய முதற்கடவுளர் மூவரிலிருந்து எழுந்தன.

அப்பன், பரிசுத்தாவி, மகன் என்பவற்றில் அப்பன், மகன் என்பன குடும்ப உறவுப் பெயர்கள் என்பதாலும் அப்பனிலிருந்து மகன் தோன்றுவதற்குக் காரணமாய் இருப்பவள் குடும்பத்தில் அம்மையாக இருப்பதாலும் பரிசுத்தாவியை அம்மையென்று சொல்லலாம் என்ற நிலையில் அப்பன், அம்மை, மகன் என்ற நோக்கில் சைவம் வளர்ச்சி பெற்றது.

பரிசுத்த ஆவியை 'அம்மை' என்று வழங்குவது விவிலியத்திற்கு முரண்பட்ட கருத்தாகும். 'பரிசுத்தாவி' பெண் என்று கூறப்படாமல் இயேசுகிறிஸ்து 'பரிசுத்தாவி'—யினாலே உற்பத்தியானார்[1] என்பது விவிலியத்தின் கோட்பாடு. பரிசுத்த ஆவியானவர் பெண்தன்மை கொண்டவர் எனக் கூறினால் பரிசுத்த ஆவியானவர் 'ஆண் தன்மை கொண்டவர்' என்கிற எதிர்க் கோட்பாடு எழுவதற்கு வாய்ப்புண்டு. இந்த இரண்டு கோட்பாடுகளின் அடிப்படையில் நாம் சைவம், வைணவத்தை நோக்கும்பொழுது, பரிசுத்த ஆவி பெண் (சக்தி) என்னும் நிலையில் குமரன், பிள்ளையார் என்று இரு பிள்ளைகளும் கூறப்படுவதை நோக்கலாம். அம்மைக்கு இரு குழந்தைகள் என்னும் நிலையில், அப்பன் சிவனாகவே விளங்குகிறார். அதேபோன்று விஷ்ணுவுக்கு பிரமன், ஐயப்பன் ஆகிய இரு குழந்தைகள் என்கிற நிலையில், விஷ்ணுவின் கணவனாகச் சிவன் கூறப்பட்டிருப்பது ஆழ்ந்து நோக்கத் தக்கது. தந்தை, மகன், பரிசுத்த ஆவி என்னும் நிலையில், சிவன் தந்தையாகவும் அம்மை பரிசுத்த ஆவியின் பெண் தன்மையாகவும் விஷ்ணு பரிசுத்த ஆவியின் ஆண் தன்மையாகவும் காட்டப்படுவதுடன், மகனாகிய இயேசு கிறித்துவின் நான்கு தன்மைகளில், தீமையை வென்றவர் என்கிற தன்மையை விளக்கிக் குமரக் கடவுளும் இறந்து உயிர்பெற்றவர் என்னும் தன்மையை விளக்கிப் பிள்ளையாரும் சூரியனைப்போன்ற ஒளிமயமானவர் என்கிற தன்மையை விளக்கி ஐயப்பனும் உலகப்படைப்புக்குக் காரணமானவர் என்னும் தன்மையை விளக்கிப் பிரம்மனும் காட்டப்படுகின்றனர். இவ்வாறு ஏழு கடவுளர்கள் பெயர்கள் கூறப்பட்டுள்ள போதிலும், இவை ஓரிறைக் கோட்பாட்டையுடைய யூத சமயத்தில் இருந்து எழுந்த கிறித்தவ சமயத்தின் விளக்கங்களாகவே காணப்படுகின்றன.

**அறுவகைச் சமயங்கள்**

பிரம்மனுக்குக் கோயிலோ பிரம்மனை வணங்க ஆட்களோ ஏற்படாத வகையில் வைணவத்தோடு அது இணைக்கப்பட்டுவிட்டது. ஒரே கடவுளின் ஆறு தன்மைகளை விளக்கி,

---

1. லூக். 1:35, மத். 1:18.

| | | |
|---|---|---|
| சிவன் | — | சைவம் |
| சக்தி | — | சாக்தம் |
| விஷ்ணு | — | வைணவம் |
| குமரக் கடவுள் | — | கௌமாரம் |
| கணபதி | — | காணாபத்தியம் |
| ஐயப்பன் | — | சௌரம் |

ஆகிய ஆறுவகைச் சமயங்களும் எழலாயின. இந்து சமயத்தில் வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டையுடைய கடவுள் சமயமாக விளங்குபவை, இவ்வறுவகைச் சமயங்கள் என்பது ஆழ்ந்து நோக்கத் தக்கது.

இவ்வறுவகைச் சமயங்களுள், பரிசுத்த ஆவியின் பெண் தன்மையைச் சிறப்பித்துச் சொல்லும் சைவம், சாக்தம், கௌமாரம், காணாபத்தியம் ஆகிய நான்கும் ஒரு பிரிவாகவும், பரிசுத்த ஆவியின் ஆண் தன்மையைச் சிறப்பித்துக் கூறும் வைணவம், சௌரம் ஆகிய இரண்டும் மற்றொரு பிரிவாகவும் சைவம்,வைணவம் என்கிற இரு பெரும் பிரிவுக்குள் அடங்கி, முதல் நான்கும் சிவனுக்குச் சிறப்புக் கொடுத்தும், மற்றவை இரண்டும் விஷ்ணுவுக்குச் சிறப்புக் கொடுத்தும் சைவம், வைணவம் என்னும் பெயரில், இரு பெரும் சமயங்களாக எழலாயின.

இயேசுவின் நற்செய்தி தமிழகத்திற்கு வருமுன்னர், பழந்திராவிடப் பண்பாட்டில், கொற்றவை போன்ற தெய்வங்களுக்கு ஆடு, கோழி பலியிடப்பட்ட நிலை, இன்றுவரை தொடர்ந்து வருவதை நடைமுறையில் காணலாம். பழந்திராவிட மக்களிடையே சிறு தெய்வங்களுக்கு ஆடு, கோழி முதலியன பலியிடும் முறை தமிழகத்தில் தொடர்ந்து நிலை பெற்றுள்ளது.

பழந்திராவிட சமயத்திலிருந்து சிறு தெய்வப் பெயர்களைப் பயன்படுத்தி, அவர்களுடைய தெய்வக் கோட்பாட்டை ஓரிறைக் கோட்பாட்டிற்கு உயர்த்தி, இயேசுவின் நற்செய்தி போதிக்கப்பட்ட காரணத்தால், முருகன் போன்ற பழந்திராவிடத் தெய்வப் பெயர்கள், வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டையுடைய இயேசுவின் நற்செய்தியில் இணைக்கப்பட்டுள்ளன. இதனால், சங்க இலக்கியங்களில் காணப்படும் முருகனுக்கு ஆடு, கோழி பலியிடும் முறை உண்டு என்பதும், பின்னர் எழுந்த சிவ மைந்தனாகிய முருகனுக்குப் பலியிடும் வழக்கம் இல்லையென்பதையும் நாம் அறியலாம்.

தத்துவங்களை விளக்க உவமை, கதை, புராணம் முதலியவை எழுந்ததால், அவற்றின் பயனாக ஓரிறைக்கோட்பாடு தமிழகத்தில் படிப்படியாகப் பலதெய்வக் கோட்பாடு நிலையை அடைந்துள்ளது எனலாம். இயற்கை நெறிக் காலத்திற்குப் பிற்பட்ட இப்பல தெய்வக் கோட்பாடுகளை, நாம் ஆழ்ந்து நோக்கும்பொழுது, குடும்ப உறவுப் பெயர்களால் பின்னிப் பிணைக்கப்பட்டிருக்கும் இவை யாவும் தந்தை, மகன், என்னும் குடும்ப உறவுப் பெயர்களையுடைய கிறித்தவச் செல்வாக்கினால் விரிவுபட்டவையே என்பது நன்கு புலனாகும்.

சைவம், வைணவம் இரண்டும் எழுச்சி பெறுவதற்குக் காரணமான பக்தி இயக்கக் காலத்தின் தொடக்க நிலையில் வாழ்ந்த,சைவ வைணவப் பெரியோர்களின் பாடல்கள், சிவனையும் விஷ்ணுவையும் ஒரே கடவுளாகக் காட்டுவது எண்ணிப் பார்க்கத்தக்க குறிப்பாகும்.

**ஈமப்புறங்காட்டில் இறைவனின் திருநடனம்**

பக்தி இயக்கத்தின் தொடக்க காலத்தில் வாழ்ந்த முதலாழ்வார் மூவரும் காரைக்கால் அம்மையாரும் பேய், பூதம் என்று பொது மக்களால் கூறப்பட்டுள்ளனர்.

பக்தி இயக்கத்தைத் தொடங்கி வைத்த பெருமை, வணிக சமூகத்தைச் சாரும். காரைக்காலம்மையார் ஈமப்புறங்காட்டிலே இறைவனுடைய நடனத்தைக் காணுகிறார்.

சைவமும் வைணவமும் பின்னர் தனித்தனிச் சமயங்களாகப் பிரிந்தபோதிலும், அவற்றின் தொடக்கம் ஒரே சமயமே என்பதும், ஒரே அடிமரத்திலிருந்து தோன்றிய கிளைகளே இவ்விரு சமயங்கள் என்பதும் இவ்விரு சமயங்களின் வரலாற்றை நோக்கினால் புலப்படும்.

இவ்விரு சமயங்களின் எழுச்சிக்குக் காரணமான முன்னோடிகளாய், சைவத்தில் பேயுருவினர் என்று கருதப்பட்ட காரைக்காலம்மையாரும், வைணவத்தில் பேய், பூதம் எனப்பட்ட முதலாழ்வார்களும் விளங்குகின்றனர்.

இவர்கள் பேய், பூதம் என்று மற்றவர்களால் நினைக்கப்பட்டதற்குக் காரணம், ஈமப்புறங்காடாகிய கல்லறையிலே இறைவனைக் கண்டதுதான். கல்லறையிலே இறைவனுடைய கருணை வெளிப்

பட்டதைக் கண்டு மகிழ்ந்தார் காரைக்காலம்மையார். ஈமப்புறங் காட்டை இறைவனுடைய நடன அரங்காகக் காணத் தொடங்கி விட்டார். ஈமப்புறங்காடு இறைவனுடைய கருணையை வெளிப் படுத்தும் கோயிலாகக் காட்சி தந்தது.

காரைக்கால் அம்மையாரின் இந்நிலையை ஆ. வேலுப்பிள்ளை "பயந்த சுபாவமுள்ளவர் என்று சாதாரணமாகக் கணிக்கப்படும் தமிழ்நாட்டுப் பெண்மணிகளுள் ஒருவர், தமிழ் மக்களை நீண்ட காலமாகப் பயமுறுத்தி வந்த ஈமப்புறங்காட்டை, இறைவனுடைய நடன அரங்காகக் காணத் தொடங்கிவிட்டார். ஈமப்புறங்காடு, எல்லாம் வல்லவனும் அடியார்க்கெளியவனும் கருணைக்கடலுமான இறைவனுடைய கோயிலாகக் காட்சிதரத் தொடங்கியதும், வாழ்க் கையில் ஓர் ஒளி, நம்பிக்கை சுடர்விட ஆரம்பித்தது"[2] எனக் கூறுகிறார்.

காரைக்காலம்மையாரும் முதலாழ்வார்களும் ஒரே இறை வனையே பாடினார்கள் என்பதை அவர்களுடைய பாடல்களே நமக் குக் காட்டுகின்றன.[3]

"அரன்நா ரணன் நாமம் ஆன்விடையுள் ளூர்தி
உரைநூல் மறையுரையும் கோயில் வரைநீர்
கருமம் அழிப்பளிப்பு கையதுவேல் நேமி
உருவம் எரி கார்மேனி அன்று"

"இடம்மால் வலம்தான் இடப்பால் துழாய்
வலப்பால் ஒண் கொன்றை
வடமால்; இடம்துகில் தோல்வலம்,
ஆழி இடம் வலம்மாண்;
இடமால் கரிதால் வலம்சேது;
இவனுக் கெழில்நலஞ்சேர்
கூடமால், இடம், வலம் கொக்கரை
யாம் எங்கள் கூத்தனுக்கே"[4]

---

2. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், 1969, பக். 76.

3. பொய்கையாழ்வார், முத. திருவந். 5.

4. -சேரமான் பெருமான் நாயனார், பொன்வண்ணத்தந்தாதி, பாடல். 6

"தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால் - சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்
கிரண்டுருவும் ஒன்றா யிசைந்து"[5]

உருவமற்ற அன்புள்ள இறைவனின் அன்பை வெளிக் காட்ட, இறைவனை அப்பனாகவும் அம்மையாகவும் காணத் தொடங்கி, இறைவன் ஆணும் பெண்ணும் இணைந்த உருவினன் என்கிற கருத்தில், ஹரிஹர மூர்த்தி வடிவில், அன்பாகிய சிவனையும் அம்மையாகிய திருமாலையும் ஒரே உருவில் ஒன்றாகக் கண்டனர்.

"பிறைதங்கு சடையானை வலத்தே வைத்துப்
பிரமனைத்தன் னுந்தியிலே தோற்று வித்து"[6]

இதுவே பின்னர்ப் பக்தி இயக்கமாக வளர்ந்து சைவம், வைணவம் என்னும் இரண்டு தனிச் சமயங்களாகிவிட்டன என்பதை வேலுப்பிள்ளை "காரைக்காலம்மையாரும் முதலாழ்வார்களும்பாடிய பாடல்களை நோக்கும்போது, சிவனையும் திருமாலையும் ஒரே உருவச் சிலையில் அமைக்கும் ஹரிஹரர் என்னும் மூர்த்தியை, அவர்கள் வணங்கித் துதிப்பது தெரியவருகிறது. ஆனால், வெகு விரைவிலேயே இவ்வியக்கம் சைவம், வைணவம் என்னும் இரண்டு தனிச் சமயங்களாகிவிட்டது"[7] எனக் கூறுகிறார்.

அம்மை அப்பராகிய ஹரிஹர மூர்த்தி வடிவில், அடியாருக்கு எளியனும் கருணைக்கடலுமான இறைவன், கல்லறையாகிய ஈமப் புறங்காட்டில் காட்சி தந்ததை இவர்கள் கூறியதால், பொதுமக்கள் இவர்களைப் பேய், பூதம் என இகழ்ந்திருப்பர். பக்தி இயக்கத்தைத் தொடங்கிய இவர்கள், அக்கால மக்களின் கண்களில், அவ்வாறே காணப்பட்டனர் எனக் கூறுகின்றார் வேலுப்பிள்ளை.

"முதலாழ்வார் மூவருக்கும் வழங்கிய இயற்பெயர் மறைந்து விட்டன. பொய்கை, பூதம், பேய் என்ற பெயர்கள் இவர்களுக்கு அக்காலச் சாதாரண மக்கள் வழங்கிய பெயர்களாக இருக்க வேண்டும். காரைக்காலம்மையாரும் 'பேய்' எனப்படுகிறார். பக்தி இயக்கத்தைத் தொடங்கியவர்கள், பிறர் கண்களில் எவ்வாறு தென் பட்டார்கள் என்பதற்கு இது சான்று."[8]

5. - பேயாழ்வார், மூன். திருவந். 63
6. - திருமங்கையாழ்வார், பெரியதிருமொழி, 3-ஆம் பத்தில் 9
7. ஆ. வேலுபிள்ளை, மேற்படி, பக். 73
8. மேற்படி, பக். 102.

பக்தி இயக்கத்தைத் தோற்றுவித்தவர்கள் அக்கால மக்கள் கண்களுக்கு மிக இழிவாகக் காணப்பட்ட போதிலும், ஈமப்புறங் காட்டில் கண்ட இறைவனின் காட்சி அவர்களுக்கு ஒரு புத்தொளி யைக் கொடுத்து, அது இன்று இந்தியா முழுவதையும் ஒளிர்வித்துக் கொண்டு இருக்கிறது,

கிறித்தவ சமயத்தின் தோற்றமும் ஈமப்புறங்காட்டில் என்பது, எண்ணிப் பார்க்கத் தக்கது. இயேசுவை விரும்பாதவர்கள் அவரைச் சிலுவையில் கொன்று ஈமப்புறங்காட்டில் அடக்கம் செய்ததோடு நிறைவுகொண்டனர். அவரைப் பின்பற்றிய அடியவர்களும், தங்கள் நம்பிக்கைகள் எல்லாம் வீண்போயின என எண்ணினர்.

ஆனால், ஈமப்புறங்காடு, இறைவன் வெற்றி நடம் புரியும் இடமாக அமைந்தது. இயேசுவின் வெற்றி ஈமப்புறங்காட்டிலே வெளிப்பட்டது; சாவை வென்றார். இயேசுவின் உயிர்த்தெழுதல் மூலமாக, உலகம் முழுவதிலும் நீக்கமற நிறைந்திருக்கும் சாவு, ஈமப்புறங்காட்டிலே வெற்றிகொள்ளப்பட்டது என்பது கிறித்தவ நம்பிக்கை.

கொலைக்களத்திலே இருந்த சிலுவையும் ஈமப்புறங்காட்டிலே இருந்த கல்லறையும் கிறித்தவர்களின் புனிதச் சின்னங்களாக மாறின.

யவன வணிகக் கோலத்திலே இந்தியாவுக்கு வந்த தோமா, ஈமப்புறங்காட்டில் இறைவனடைந்த வெற்றியைத் தமிழகத்திலே பரப்பினர். வணிகர் குலத்தில் தோன்றிய காரைக்காலம்மையார், அதே கருத்தை மக்கள் மத்தியிலே பரப்பியுள்ளார்.

கொலைக்களத்தையும் ஈமப்புறங்காட்டையும் புனிதச் சின்ன மாகச் சொன்னவர்களை மக்கள் பேய், பூதம் என்று கூறியது இயல்பே.

இயேசுவின் உடலை உண்பதாகவும் இயேசுவின் இரத் தத்தைப் பருகுவதாகவும் உள்ள பாவனை முறை, கிறித்தவத்தில் ‘திருவிருந்து’ அல்லது ‘நன்மை பெறுதல்’ என்பதன்மூலம் நிறை வேற்றப்படுகிறது. இது கேட்பதற்கு அருவருப்பாகவும் மனித இரத்தத்தைப் பருகி, மனிதப் பிணத்தைத் தின்னும் பேய், பூதம் எனத் தவறாக நினைப்பதற்கு இடங்கொடுப்பதாகவும் உள்ளது.

பாலத்தீனத்தைச் சுற்றியிருந்த நாடுகளில் வாழ்ந்த ஆதி கிறித்தவர்களையும் மற்றவர்கள் இவ்வாறு தவறாக நினைத்து, இகழ்ந்த நிலையும் துன்புறுத்திய நிலையும் அங்குள்ள ஆதி கிறித்தவ வரலாற்றில் காணப்படுகின்றன.

தமிழகத்தில் படிப்படியாக இயேசுவின் நற்செய்தியிலிருந்து புறப்பட்ட சமயங்கள் செல்வாக்குப் பெறலாயின.

### ஆரியர் ஆதிக்கம்

இயேசுவின் நற்செய்தியைத் தமிழகத்திற்குக் கொண்டுவந்த தோமா, தமிழர்களால் கொல்லப்படாமல், 'பிராமணர்களால் கொல்லப்பட்டார்' என்ற குறிப்புச் சிந்தனைக்குரியது. வடபுலத்திலிருந்து தமிழகத்தில் பரவிய வேள்விக் கோட்பாட்டையுடைய ஆரியர் நாகரிகத்திற்கும், மேல்புலத்திலிருந்து தமிழகத்தில் பரவிய வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டையுடைய யவனக் கருத்திற்கும் இருந்த போட்டியில், தோமா கொல்லப்பட்டதும் தோமாவுக்குப் பின்னர் யவனக் கருத்துகளின் செல்வாக்கால் வளர்ந்த சைவ வைணவ சமயங்கள் வெற்றி பெற்றதும் எண்ணிப் பார்க்கத் தக்கன.

சைவ வைணவ சமயங்கள் பரவுவதற்குக் காரணமாயிருந்த 63 நாயன்மார்கள், 12 ஆழ்வார்கள் ஆகியோர், தமிழ்நாட்டிலிருந்து மட்டுமே தோன்றியவர்கள் என்கிற குறிப்பு ஆழ்ந்த சிந்தனைக் குரியது. சைவ, வைணவ சமயங்கள் வடநாட்டிலிருந்து தென் னாட்டிற்குப் பரப்பப்பட்டவையல்ல. தென்னாட்டில் தோன்றி வடநாட்டிற்குப் பரவியவை. சைவ, வைணவ சமயங்களின் தொகுப்பு நூல்களாக விளங்கும் பன்னிரு திருமுறையும் நாலாயிர திவ்யபிரபந்தமும் தமிழ்மொழியில் 'மட்டும்' தோன்றியவை என் பதும், வடமொழிக்கும் இவைகளுக்கும் தொடர்பில்லை என்பதும் ஆழ்ந்து நோக்க வேண்டிய கருத்துகளாகும்.

சைவ, வைணவ சமயக் கருத்துகள் முதலிலே தமிழகத்தில் தோன்றிப் பின்னர் மற்ற இடங்களிலும் பரவும்படியாகத் தமிழ்ப் பெரியோர்களால், வடமொழியிலும் எழுதப்படலாயின. இச்சமயங் களுக்கு மூலம், தமிழ் மொழியேயன்றி வடமொழியன்று. தமிழ் மொழியிலிருந்து வடமொழிக்குச் சென்ற கருத்துகளேயன்றி, வட மொழியிலிருந்து தமிழுக்கு வந்த கருத்துகள் அல்ல.

வடமொழியிலிருந்து வடவர் ஆதிக்கத்தால் இக்கருத்துகள் தென்மொழியில் பரவின என்னும் தவறான கருத்து, இன்றுவரை நிலவுவதற்குக் காரணம் என்ன என்பது எண்ணிப் பார்க்கத் தக்கது.

இந்த நோக்கில் நாம் சைவ வைணவ வரலாற்றை நோக்கும் போது, நமக்குச் சில குறிப்புகள் தென்படுகின்றன.

வைணவ சமயத்தில் பிற்காலத்தில் ஏற்பட்ட வடமொழி ஆதிக் கத்தை எதிர்த்து, நாலாயிரத் திவ்யபிரபந்தத்தைப் பாராட்டும் தென்கலையினர் எழுந்த காரணத்தால், வைணவம் தென்கலை, வடகலை என இரண்டாகப் பிரிந்தபோதிலும், வைணவத்தில் தமிழின் சிறப்பு குறைக்கப்படவில்லை.

ஆனால், சைவமோ வடமொழி ஆதிக்கத்திற்கு முழுவதுமாக உட்படுத்தப்பட்டுவிட்டது. அவ்வாறு சைவத்தை வடமொழி ஆதிக் கத்திற்கு உட்படுத்திய பெருமை, திருஞானசம்பந்தரையே சாரும்.

சைவம், வைணவம் ஆகிய இரண்டில், தமிழ்ச் சமயம் எனவும் தென்னாட்டுச் சமயமெனவும் தென்னாடு உடைய சிவனைப் போற்றும் சமயம் எனவும் சைவம் சொல்லப்படுகிறது. வைண வத்தை நோக்கும்பொழுது, சைவத்தைவிட, வடநாட்டினரை அணைத்துச் செல்லும் சமயமாகவும் வடநாட்டு இதிகாசங்களாகிய இராமாயணம், மகாபாரதம் இவைகளில் கூறப்படும் வீர புருஷர்களை அவதாரப் புருஷராக ஏற்றுக்கொண்ட சமயமாகவும் காணப்பட்ட போதிலும்,[9] வடவர்களுக்கு முற்றிலும் அடிமைப் படாத சமயமாக அது விளங்குகிறது எனலாம். இன்றும் இறைவன் திருமேனி நகர்வலம் வருங்கால், வைணவத்தில் விஷ்ணுவிற்கு முன்பாகத் தமிழ் செல்கின்றது. விஷ்ணுவிற்குப் பின்பாகவே வட மொழி வருகிறது. ஆனால். சைவத்திலோ, சிவனுக்கு முன்பாக வடமொழியும் சிவனுக்குப் பின்னால் தமிழும் வரக்கூடிய நிலையே காணப்படுகிறது.

---

9. விஷ்ணுவின் பிள்ளைகளாகக் காட்டப்படும் பிரம்மன், ஐயப்பன் இவர்களுக்கும் வீர புருஷர்களாக இருந்து அவதார புருஷர்களாக நினைக்கப்படுகின்ற இராமர், கிருஷ்ணர் இவர்களுக்கும் பிறப்பில் வேற்றுமை கூறப்பட்டிருப்பது எண்ணிப் பார்க்கத் தக்கது. இராமன், கிருஷ்ணன் என்பவர்களுடைய தந்தையர் உலக மனி தர்கள். பிரம்மன், ஐயப்பன் இவர்களுடைய தந்தையர் முழு முதற் கடவுளாக எண்ணப்படும் சிவன். இராமனும் கிருஷ்ணனும் அவதார புருஷர்க்ளாக ஏற்றுக்கொள்ளப்பட்டாலும் பரிசுத்த ஆவி யின் ஆண் தன்மையாகிய விஷ்ணுவின் அருள் பெற்றவர்க்ளாகவே கூறப்பட்டுள்ளனர். பிரம்மன் ஐயப்பனைப் போன்று விஷ்ணு வினால் பெற்றெடுக்கப்பட்டவர்களாக கொள்ளப்பட்டவர்அல்லர்.

சைவம், தென்னாட்டுச் சமயம் - தமிழர் சமயம் என உரிமை பாராட்டிக் கொண்டாலும், வடவர் ஆதிக்கத்திற்கு முழுமையாக உட்பட்டுவிட்ட சமயமாக விளங்குகிறது. நாம் முன்னர்ப் பார்த்த படி, இதற்குக் காரணம் திருஞானசம்பந்தரும் அவர் வழிவந்த வட மொழியாளர்களுமே ஆவர்.

திருஞானசம்பந்தர் பாடிய தேவாரப் பாடல்கள், முதல் மூன்று திருமுறைகளாக பன்னிரு திருமுறையில் வைக்கப்பட்டுள்ளன. அதன்பின் அப்பருக்கும் மற்றவர்களுக்கும் இடம் கொடுக்கப் பட்டுள்ளது.

இந்நிலைக்குக் காரணம் என்ன என்பது எண்ணிப் பார்க்கத் தக்கது.

வேள்விக் கோட்பாட்டையுடைய ஆரிய நாகரிகத்திலிருந்து எழுந்த வைதீக சமயம் அதனை எதிர்த்து எழுந்த வேள்வி மறுப்புக் கோட்பாட்டையுடைய சமண பௌத்த சமயங்களின் முன் நிற்க இயலாமல் வீழ்ச்சியடைந்த காரணத்தால், கிறித்தவ நூற்றாண்டையொட்டி வடநாட்டிலிருந்து விடுபட்டுத் தென்னாட்டிற்கு வந்து சேர்ந்தது எனலாம்.

அசோகருக்குப் பிற்பட்ட காலங்களில், வட இந்தியா முழுவதும் பௌத்த சமயம் பரவி இருந்ததும் தென்னாட்டில் சைவ வைணவ எழுச்சிக்கு முன்னர் பல்லவரும் பாண்டியரும் சமணர்களாய் இருந்த மையும் சான்றாகும்.

தென்னாட்டிலும் தோமாவின் நற்செய்தியின் பயனாக எழுச்சி யடைந்த திராவிடர்களிடையே, ஆரிய வைதீகம்[10] செல்வாக்குப் பெற இயலவில்லை. வேள்வி மறுப்புக் கோட்பாட்டையுடைய சமண பௌத்த சமயங்களை எதிர்த்து நிற்க, வேள்விக் கோட்பாட் டையுடைய ஆரிய வைதீக சமயத்தால் இயலா நிலையில், வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டையுடைய இயேசுவின் நற்செய்தி, திராவிட சமயங்களாக வலிமையோடு எழத் தொடங்கியது.

---

10. வைதீகம் வேதத்தை அடிப்படையாகக் கொண்டது. ஆரிய வேதங் களாகிய ரிக், யசுர், சாமம் அதர்வணம் இவைகளைக் கொண்டது ஆரிய வைதீகம். கிறித்தவ வேதத்தை அடிப்படையாகக் கொண்டது கிறித்தவ வைதீகம்.

"ஒதுக்கப்பட்டுக் கிடந்த வடநாட்டு வைதீக மதம், பௌத்த சமண மதங்களைப் போன்று செல்வாக்குப் பெற முயன்றது. செல்வாக்குப் பெற வேண்டுமானால் இவ்விரண்டு மதங்களையும் அடக்கி ஒடுக்க வேண்டும். இம்மதங்களை அடக்கி ஒடுக்க வைதீக மதத்திற்கு ஆற்றலும் ஆண்மையும் இல்லை. ஆற்றலும் ஆண்மையும் பெற வழி யாது? ஒரே ஒரு வழிதான் உண்டு. அவ்வழி யாது எனின், தமிழர் வழிபட்டு வரும் திராவிட மதத்துடன் வைதீக மதமும் கலந்துகொண்டு, பொதுமக்களின் ஆதரவைப் பெறுவதுதான். இதைச் செய்ய வைதீக மதம் முற்பட்டது. நீரில் மூழ்கி உயிர் இழக்கும் தருவாயிலிருக்கும் ஒருவனுக்கு, ஏதேனும் பற்றுக்கோடு கிடைக்குமாயின், அதனை அவன் எவ்வாறு இறுகப் பற்றிக் கொள்வானோ அவ்வாறே, அழியுந் தருவாயிலிருந்த வைதீக மதம், திராவிடமதத்தின் தெய்வங்களாகிய முருகன், கொற்றவை, சிவன், திருமால் முதலிய தெய்வங்களை ஏற்றுக்கொண்டது.

ஏற்றுக்கொண்டதோடு நில்லாமல், திராவிட வைதீகத் தொடர்பை உறுதிப்படுத்திக் கொள்ளும்பொருட்டுத் திராவிட தெய்வங்களுக்கும் வைதீக தெய்வங்களுக்கும் புதிய தொடர்பையும் உறவுகளையும் கற்பித்துக்கொண்டது.

இவைகளுக்கு ஏற்ற முறையில் புதிது புதிதாகப் புராணங்கள் கற்பித்து எழுதப்பட்டன. இவ்வாறெல்லாம் திராவிட மதமும் வைதீக மதமும் ஒன்றோடொன்று கலக்கப்பெற்றுத் திராவிடமும் வைதீகமும் அல்லாமல் இரண்டும் கலந்ததோர் புதிய மதமாக மாறிற்று. இவ்வாறு புதிதாகத் தோன்றிய மதம்தான் 'இந்து மதம்' என்பது'[11] என மயிலை சீனி வேங்கடசாமி கூறுகிறார்.

ஆரியர்கள் திராவிட மதத்தை ஏற்றதற்குக் காரணம், மேலே சீனி வேங்கடசாமி அவர்களால் தெளிவாகக் கூறப்படுகிறது. திராவிட சமயத்தின் சிறந்த - உயர்ந்த கொள்கைகளை விரும்பி, ஆரியர்கள் திராவிட சமயத்திற்குள் வரவில்லை. வேள்வி மறுப்புக் கோட்பாட்டையுடைய திராவிட சமயங்களைச் சமண பௌத்தர்களுக்கு எதிரான ஆயுதங்களாகப் பயன்படுத்தவே, அவர்கள் திராவிட சமயங்களை ஏற்றனர்.

இந்த நிலையைச் சைவ சமய வரலாறு நமக்குத் தெளிவாகக் காட்டுகிறது. சைவ சமயம் தமிழ் மக்களால் போற்றப்பட்டு எழுச்சி

---

11. மயிலை சீனி வேங்கடசாமி, சமணமும் தமிழும், பக். 58-59.

யடைந்து, தமிழராகிய திருநாவுக்கரசரால், பல்லவ மன்னன் சைவ னாக்கப்பட்டபோது, அரசாங்க சமயமாக அது உயர்ந்தது. இதன் எதிரொலியாகத் தமிழக மக்கள் அணி அணியாகச் சைவ சம யத்தைச் சார்ந்தனர்.

**வன்முறையாளர்**

இந்த எழுச்சியைத் தங்களுக்கு ஆதரவாகப் பயன்படுத்தும் பொருட்டு, ஆரியர்களின் பிரதிநிதியாகத் திருஞானசம்பந்தர் செயல்பட்டதை, நாம் சைவ சமய இலக்கிய வரலாற்றில் காணுகின் றோம்.

தமிழராகிய திருநாவுக்கரசர், பல்லவ மன்னனைச் சமணத்தி லிருந்து சைவத்திற்கு மாற்றியபோது, தமக்கு இழைக்கப்பட்ட துன்பங்களையெல்லாம் இறைவன் அருளால் பொறுத்துக்கொண்டு, அரசனுக்கோ மற்றவர்க்கோ எவ்விதத் தீமையும் செய்யாமல், அவர்களை மனமாற்றம் அடையும்படி செய்து, மதமாற்றத்தை நடத்தினார்.

ஆனால், திருநாவுக்கரசருக்குப் பின்னால் தமிழகத்தில், எழும்பிய எழுச்சியைப் பயன்படுத்த விரும்பிய ஆரியராகிய திருஞானசம்பந்தர், தன்னைத் தமிழன் என்று கூறி உரிமை பாராட்டிக்கொண்டும், தமிழ்மொழி சிறப்பானது என்று கூறிக் கொண்டும், வன்முறையை ஆயுதமாகக் கொண்டு, பாண்டிய நாட்டில் சமண சமயம் சார்ந்திருந்த எண்ணாயிரம் தமிழர்களைக் கழுவிலேற்றி, பாண்டிய நாட்டை மதம் மாறச் செய்தார். திருஞான சம்பந்தர் சைவ சமய வளர்ச்சிக்குப் பாடுபட்டாரா அல்லது ஆரிய நாகரிக எழுச்சிக்குப் பாடுபட்டாரா என்னும் நோக்கில் நாம் பார்க்கும்போது, அவர் சைவ சமய வளர்ச்சிக்குப் பாடுபட்டார் என்பதை விட, சைவ சமயத்தைப் பயன்படுத்தி ஆரிய எழுச்சிக்குப் பாடுபட்டார் என்பதே கிடைக்கும் விடையாக இருக்கிறது. எவ் வாறெனில்.

''வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லி அமணொடு தேரரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே''

''வேட்டு வேள்விசெய் யும்பொரு ளைவிளி
மூட்டு சிந்தை முரட்டமண் குண்டரை
ஓட்டி வாதுசெய் யத்திரு வுள்ளமே''

''அந்த ணாளர் புரியும் அருமறை
சிந்தை செய்யா அருகர் சிரங்களை
சிந்த வாதுசெ யத்திரு வுள்ளமே''[12]

என்கிற பாடல்கள் மூலம், மேற்கண்ட கருத்து தெளிவாகின்றது.

''ஞானசம்பந்தர் பாடிய பாக்களில் சமண பௌத்தர்கள் சைவ சமயத்தின் பகைவர்கள் என்றோ சைவசமயத்தைப் பழிக்கின்றவர்கள் என்றோ எங்கும் பாடவில்லை. வேள்வியை எதிர்ப்பவர்கள், அந்தணாளர்க்கு அடிமையாகாதவர்கள் என்பன போன்ற குற்றச்சாட்டுகளையே சமண பௌத்தர்பேரில் சாடிப்பாடியுள்ளார். எனவே, ஞானசம்பந்தரின் குறிக்கோள் வேத வேள்வியைப்பரப்புவதேயன்றிச் சைவ சமயத்தைப் பரப்புவதன்று என்பது தெளிவு. இவ்வுண்மையைச் சமயக் கண்கொண்டு பாராது, வரலாற்றுக் கண் கொண்டு ஆராயும் அறிஞர்களும், நேர்மையுள்ளம் படைத்த புலவர்களும் ஒருமுகமாக ஒப்புக்கொள்வார்கள் என்பது திண்ணம். மேலும், சைவ சமயம், வேத வேள்வியை ஏற்றுக் கொண்டுள்ளதாகவும் தெரியவில்லை. ஞானசம்பந்தர் பொருள் திரட்டிப் பசுக்களைக் கொன்று, ஆங்காங்கு வேள்வி புரிந்ததையும் அக்கொலை வேள்வியைத் தில்லைவாழ் சிவபெருமானும் அடியார்களும் ஆதரித்ததாகவும்,

''பரப்பை படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்பும்
சிறப்பர் வாழ் தில்லை''

எனப் பாடியுள்ளார். இப்பரிதாபச் செயலைக் கண்டு, தில்லை திருவாய்மொழி பாடிய புலவர்,

''பெரிதாய முக்தியைப் பல்லோர்க்கருளும் நற்பிள்ளை பெற்றும்
அரிதாய பொன்கொண்டு சீர்காழி அந்தணனாம் கிழவன்
பரிதாபமின்றிப் பசுவதைத்தான் என்ன பாவம் அந்தோ
எரிதாங்கி நின்றஎன் அப்பனே....''

என வருந்திப் பாடிக் கண்டித்துள்ளார்.

இப்பாடலில் உள்ள கருத்தை ஆராயின், ஞானசம்பந்தர் சிவபெருமான் பேரில் பழிசுமத்தியும்,பக்திமார்க்கப் பிரச்சாரம் எனக் காட்டிக் கொண்டும் சைவசமயத் தமிழர்களின் ஆதரவோடு, வேத வேள்

12. 3-ஆம் திருமுறை, திருவாலவாய் பதிகம்.

வியைப் பரப்பிவரும் மறைமுகமான சதியே என்பதைக் கலங்கரை விளக்கம்போல் காட்டுகிறது[13] என்பார் ஜீவபந்து ஸ்ரீபால்.

இதைப் பெரியபுராண ஆசிரியரான சேக்கிழாரும் திருஞான சம்பந்தருடைய வரலாற்றைத் தொடங்கும்போது, ''வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க புனிதவாய் மலர்ந்த''[14] தன்மையைத் தெளிவாகக் கூறுகின்றார். வேதநெறியைப் பரப்புவதற்குச் சைவ சமயம் திருஞானசம்பந்தருக்கு ஒரு துணைக் கருவியாகப் பயன்பட்டது.

திருஞானசம்பந்தர் இதற்குப் பயன்படுத்திய முறை, மிகக் கொடுமையானது என, ஜீவபந்து டி. எஸ். ஸ்ரீபால் கீழ்க்காணுமாறு கூறுகிறார்.

''திருஞானசம்பந்தர், தாமே செய்ய விரும்பும் பாடலைக் கேளுங்கள்:

''மண்ணகத்திலும்.................................
பெண்ணகத் தெழிற் சாக்கியப் பேயமண்
தெண்ணற் கற்பழிக்கத் திருவுள்ளமே''

வேதவேள்வி வெறி, சமண பௌத்தப் பெண்களைக் கற்பழிக்க வேண்டுமெனத் துணிகின்றது. உலகிலுள்ள மனித குலம் அனைத்தும் பழிக்கும் அநாகரிக விலங்குச் செயலை-ஒழுக்கக் கேட்டை-சமூக விரோதக் கொடுமையைப் புரிய இறைவனை வேண்டுகிறார் ஞானசம்பந்தர். எந்த நாட்டிலும் எந்த மொழியிலும் எந்தக் கவிஞரும் இத்தகைய இழி செயலைப் பாடி, நூல்களை எழுதவில்லை. அய்யகோ! தமிழ் நூலிலே காணும் துர்ப்பாக்கியம் ஏற்பட்டுள்ளது.''[15]

''இன்னும் சீர்காழியில், ஆண்டுதோறும் ஏப்ரல் திங்கள் ஞானசம்பந்தரின் திருமுலைப்பால் விழா நடைபெறுவதாகவும், அவ்விழாவில் 'சமணப் பெண்களை.........' என இசையோடு கூவி

13. ஜீவபந்து டி.எஸ்.ஸ்ரீபால்,தமிழகத்தில் ஜைனம்,ஸ்வஸ்தி ஸ்ரீலஷ்மி சேனா பாட்டாரராக் பாட்டாசார்ய வர்ய மகாசுவாமிகள் ஜைன மடம், கோல்பர்; 1975, பக். 55-56.

14. திஞானசம்பந்த மூர்த்தி நாயனார் புராணம், பாடல் 1.

15. ஜீவபந்து டி.எஸ்.ஸ்ரீபால்,தமிழகத்தில் ஜைனம்,ஸ்வஸ்தி ஸ்ரீலஷ்மி சேனா பாட்டாரராக் பாட்டாசார்ய வர்ய மகாசுவாமிகள் ஜைன மடம்; கோல்பர், 1975; 60-61.

சொல்லொணா வார்த்தைகளால் பெண்களின் தலைமுதல் கால்வரை ஒவ்வொரு அங்கத்தையும் குறிப்பிட்டுப் பாடுவதாகவும், அதைப்பார்த்துக் கேட்டுத் தாம் கண்ணீர்விட்டு அழுததாகவும் ஜீவபந்து ஸ்ரீபால் தம் நூலில் கூறுகிறார்.[16]

அவர் மேலும், திருஞானசம்பந்தரைப்பற்றி, ''உலகோர் பழிக்கும் இக்கூடா ஒழுக்கத்தைத் திருநாவுக்கரசர் தம் தேவாரத்தில் பாடியுள்ளாரா?சுந்தரர் பாடல்களில் இடம் பெற்றுள்ளதா?இல்லை! இல்லை! திருஞான சம்பந்தரே கூசாமல், குலுங்காமல் பச்சைத் தமிழில் பாடி வைத்துள்ளார். வேத வேள்வியில் ஞான சம்பந்தருக்குள்ள வேட்கையும் பற்றுமே இது பழி, இது பாவம் என்பவற்றை அறியவொட்டாமல், அவர் அறிவைப் பகைமை இருள் சூழ்ந்துகொண்டது. ஞானசம்பந்தரின் செயல்களையும் கூற்று களையும் ஆழ்ந்தறிந்த சுந்தரர், அவைகள் குற்றங்களென்றே பாடியுள்ளார்.

''நற்றமிழ் வல்ல ஞான சம்பந்தன்
....... ........ ........ ........
குற்றம் செய்யினும் குணமெனக் கருதும்
கொள்கை கண்டு''

என்னும் சுந்தரர் தேவாரத்தில் அறியலாம்''[17] என்பார் ஜீவபந்து ஸ்ரீபால்.

சீர்காழி விழாவைப் போலவே மதுரையிலும். சமணர்களைக் கழுவேற்றிய விழாக் கொண்டாடப்படுகிறது. ''திருஞானசம்பந்தர் பாண்டிய அரசனை, அவனது கோப்பெருந்தேவி, மந்திரி ஆகியோரின் உதவியால், சைவனாக்கிய கதை யாவரும் அறிந்ததே. அன்று எண்ணாயிரம் சமணர்களைக் கழுவேற்றிய மகிழ்ச்சியைக் காட்டுவதற்கு, இப்பொழுதும்கூட மதுரைக் கோயிலில் விழாக் கொண்டாடுகின்றார்கள்''[18] என இளங் குளம் குஞ்சன் பிள்ளை கூறுகின்றார்.

''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்

---

16. ஜீவபந்து டி. எஸ். ஸ்ரீபால், தமிழகத்தில் ஜைனம், ஸவஸ்தி ஸ்ரீலக்ஷ்மி சேனா பாட்டாராக பாட்டாசார்ய வர்ய மகா சுவாமிகள் ஜைனமடம், 1975, பக். 60, 62.
17. மேற்படி பக். 63.
18. கே. ஏ. நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்திய வரலாறு, 2-ஆம் பதிப்பு, ப. 413. மேற்கோள்: பண்டைய கேரளம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1970, மொழிபெயர்ப்பு, இயேசுதாசன், 1970, பக். 188.

அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே''
(திருமந்திரம், 257)

எனக் கூறும் திருமூலரின் வாக்குப்படிச் சைவ சமயம் அன்பாகிய சிவனை வணங்கும் அன்புச் சமயம் ஆகும். சைவ சமயத்தை முதல் முதல் அரசாங்க சமயமாக்கிய திருநாவுக்கரசரின் வழியில் நோக்கும் பொழுது, பிறருக்குத் தீமை செய்யாத அன்புச் சமயமாகவே அது காணப்படுகின்றது.

ஆனால், அரசாங்க ஆதரவு பெற்ற அச்சமயத்தினுள் திருஞான சம்பந்தர் வந்து சேர்ந்தவுடன், அது வன்முறைச் சமயமாக மாற்றப் பட்டிருப்பதை நாம் காணுகின்றோம்.

தமிழர் தாழ்த்தபட்டமை

திருஞானசம்பந்தர் வரவால், தமிழர் எண்ணாயிரம்பேர் கழுவி லேற்றப்பட்டதுடன், தமிழராகிய திருநாவுக்கரசரும் இழிவுபடுத்தப் பட்டார். திருமறைக்காட்டில் கோயில் கதவைத் திறந்து மூடுவதில், இறைவன் ஆரியனுக்கும் தமிழனுக்கும் வேறுபாடு காட்டியதாகவும், திருநாவுக்கரசர் இறைவனைக் காண விரும்பியபொழுது, ஆரியரான திருஞானசம்பந்தர் காட்டத் தமிழராகிய திருநாவுக்கரசு காண வேண்டுமெனவும், திருஞானசம்பந்தர் பல்லக்கைத் திருநாவுக்கரசு சுமந்ததாகவும் சேக்கிழாரால் குறிக்கப்பட்டிருக்கும் குறிப்புகள், தமிழர் திட்டமிட்டுத் தாழ்த்தப்பட்டனர் என்பதைக் காட்டுகின்றன.

தலைமைப் பதவியைப் பெறுவதற்கு எக்கொடிய செயலையும் துணிந்து செயல்படுத்தும் தன்மை, ஆரிய சூழ்ச்சிக்கு உண்டு என்ற கருத்தே இதில் வெளிப்படுகிறது.

சைவம், ஆரிய சூழ்ச்சிக்கு உட்பட்டுவிட்டபடியால், சைவ சமய எழுச்சிக்குக் காரணராயிருந்த திருநாவுக்கரசராகிய தமிழர், மனம் நொந்த நிலையில் சைவ சமயத்தில் நிலைத்திருக்க இயலாமல், மீண்டும் சமண சமயத்திற்குச் செல்லவேண்டிய நிலை ஏற்பட்ட தாகவும், இதனைக் கண்டு சீற்றமுற்ற சைவர்கள் அவரைக் கொன்றதாகவும் ஒரு செய்தி கூறப்படுகிறது.

சைவராகப் பிறந்து வளர்ந்த அப்பர், சமண சமயத்தில் சேர்ந்து, பின்பு சைவராக மாறிச் சைவ சமய மறுமலர்ச்சியில் முக்கியப்பங்கு வகித்துக் கைலாசம் சேர்ந்தார் எனப் பெரியபுராணம்

கூறும். இங்ஙனமின்றி, "சமணராகப் பிறந்து வளர்ந்த அப்பர், இடையில் சைவ சமயத்தைச் சேர்ந்து சைவ எழுச்சிக்குக் காரணமாக இருந்தார் எனவும், பின்பு சமணத்திற்குத் திரும்பினார் எனவும், அதனாற் பொறாமை கொண்ட சைவர் அவரைக் கொன்றுவிட்டா ரெனவும் சமணர் கூறுவர்" எனத் 'தென்னிந்திய சமண ஆராய்ச்சி' என்கிற ஆங்கில நூல் கூறுகிறது.[19]

அன்று தொடங்கி இன்றுவரை பிராமணர்கள், சைவ சமயத்தின்மீது ஆதிக்கம் செலுத்தியபோதிலும், சைவக் கொள்கையின்மீது பற்றோ, சைவக் கடவுளின்மீது உறுதியான நம்பிக்கையோ அவர்களுக்கு இல்லை. ஆரிய வைதீகரான திருஞான சம்பந்தர், வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டையுடைய சைவ சமயத்தின் கொள்கைக்கு மாறாக, பசுக்கொலையுடன் கூடிய யாகமாகிய ஆரிய வேள்விக் கோட்பாட்டையே ஆதரித்துள்ளார். ஆரிய வேள்வி செய்ய விரும்பிய, அவருடைய தந்தையார் சிவபாத இருதயருக்குத் திருவாவடுதுறையில் ஆயிரம் பொற்காசுகளை அள்ளிக் கொடுத்துள்ளார் என்பன, திருஞானசம்பந்தர் ஆரிய வைதிகத்திலிருந்து சைவத்திற்கு மதம் மாறியது, சிறந்த நோக்கத்தால் அன்று என்பதை தெளிவுபடுத்துகின்றது. அவர்கள் சைவக் கொள்கைகளைத் தங்களுக்கேற்ப திரித்துக் கூறுவதற்கு வழிவழியாகப் பல்வேறு முறைகளிலும் முயன்று வெற்றிபெற்று வந்துள்ளனர். சைவசித்தாந்தம், அவர்களால் வெறுக்கப்படக் கூடிய ஒன்றாக இன்றுவரை கருதப்பட்டு வருகின்றது.[20]

திருஞானசம்பந்தர் தொடங்கி வைத்த செயலாகிய ஆரிய மயமாக்கும் முயற்சி, படிப்படியாகத் திட்டமிட்ட செயல்பாட்டால் வளர்ச்சி பெற்று வந்தது.

---

19. M. S. Ramaswamy Ayyangar, Studies in South Indian Jainism; P. 154, Note : 2.

20. "No standard work on the Hindu Systems of metaphysics published so far has ever devoted a considerable chapter to this School of Siddhanta; and if ever a work has here and there sought to recognise it, the treatment of the subject has been tardy, halting and defective, not to say disproportionately insufficient. I cannot help feeling sometimes that there must be a conspiracy of silence behind this invariable indifference to this School."

- K. M. Balasubramaniam, Saiva Siddhanta, Annamalai University, 1959, P. XI.

தமிழர்கள் தாழ்ந்தவர்கள் எனவும் ஆரியர்கள் உயர்ந்தவர்கள் எனவும் தமிழ் மக்களை நம்ப வைக்கும் முயற்சி நெடுக நடந்து வந்துள்ளது. அந்த முயற்சியில் ஈடுபட்டவர்கள் எல்லோரும், வன்முறையை ஆயுதமாகப் பயன்படுத்திய திருஞானசம்பந்தருக்கே முதலிடம் கொடுத்தனர்.

திருமுறைகளைத் தொகுத்த நம்பியாண்டார் நம்பியும், 63 நாயன்மார்களின் வரலாற்றைப் பாடிய சேக்கிழாரும், எந்த நோக்கில் செயல்பட்டனர் என்பதை நாம் பார்க்கும்பொழுது, ''சம்பந்தரைப்பற்றி ஆறு பிரபந்தங்கள் பாடிய நம்பியாண்டார் நம்பி, அப்பரைப்பற்றி ஒன்றே பாடியுள்ளார். பெரியபுராணம் பாடிய சேக்கிழார் அறுபத்து மூன்று தனியடியாரையும் ஒன்பது தொகையடியாரையும் பாட எடுத்துக்கொண்டபோதும், நூலிற் பெரும்பகுதியைச் சம்பந்தருக்கே ஒதுக்கினார். நூலிற் பாதியைச் சம்பந்தருக்கும்,மற்றப் பாதியைப் பிறருக்கும் ஒதுக்கியுள்ளார் என்று கூற்று எழத்தக்க விதத்தில், அவர் சம்பந்தருக்கு முக்கியத்துவம் அளித்துள்ளார்.''[21]

**வழிவழி வடவர்**

''சமயக்குரவருள் முதல்வராகிய அப்பரும், சந்தான குரவருள் முதல்வராகிய மெய்கண்ட தேவரும், தமிழகத்திற் சைவத்தை நிலைநாட்டும் முயற்சியை இருவேறு காலங்களில், இருவேறு வகைகளில் ஆரம்பித்து வைத்தவர்கள். அப்பரைத் தொடர்ந்து சம்பந்தராகிய பிராமணர் பணிபுரிந்தது போலவே, மெய்கண்டாரைத் தொடர்ந்து அருணந்தி சிவாசாரியாராகிய பிராமணர் பணி புரிகிறார். பிற மதக் காய்வு, சம்பந்தரில் அதிகம் காணப்பட்டது போலவே, பிறமதக் கண்டனம் அருணந்தி சிவாசாரியாரிற் காணப் படுகிறது.''[22]

சமயக் குரவர்களில் முதல்வரான அப்பருக்கு ஏற்பட்ட நிலை, சந்தான குரவர்களில் முதல்வரான மெய்கண்டாருக்கும் ஏற்பட்டது. முதலில் மெய்கண்டாரை எதிர்த்த அருணந்தி சிவாசாரியார், பின்னர் மெய்கண்டாருக்கு மாணவராயினர் எனவும், மெய்கண்டார் இளமையிலேயே இறந்து போனார் எனவும் சொல்லப்படுகின்ற நிலைகள் எண்ணிப் பர்க்கத் தக்கன.

---

21. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், பக். 85.

22. மேற்படி, பக். 124.

மெய்கண்டார் எழுதிய சிவஞானபோதத்திற்குச் செய்யுள் நடையில் உரைகண்டவர்களே, அருணந்தி சிவாசாரியாரும் உமாபதி சிவாசாரியாரும் ஆவர். உரையாசிரியர்களாகிய இவர்களுடைய உரைகளின் பயனால், இவர்களுக்குப் பின்னர் வந்த சிவாக்கிரகயோகி, அதிவர்ணாச்சிரம சிவாக்கிரயோகி எனப் பெயர் பெற்றுத் தாம் செய்த 'சிவநெறிப் பிரகாசம்' என்னும் நூலில் தமிழராகிய மெய்கண்டாரை, வேண்டுமென்றே புறக்கணித்து மற்ற ஆரியர்களைச் சிறப்பித்துள்ளார்.

சிவஞானபோதம், வடமொழியின் மொழிபெயர்ப்பு என்ற கருத்தையும் ஆரியர்கள் திட்டமிட்டுப் பரப்பினர்.

''சிவாக்கிரயோகி வடமொழிச் சிவஞானபோதத்திற்குப் பாடியமும் சிவஞானசித்தியார்க்கு உரையும் செய்திருப்பினும், தம் சந்தானம் வேறாயிருத்தலின் சதாசிவாசாரியார் முதலான குரவர்க்கு வணக்கம் சொல்லியதுபோல, மெய்கண்டாராதி குரவர்க்கு வணக்கஞ் சொல்லிற்றிலர் போலும்'' என அனவரத விநாயகம்பிள்ளை கூறுகின்றார்.[23]

சமயக் குரவர்களில் தமிழரான திருநாவுக்கரசர் முதல்வரா யிருந்தபோதிலும், ஆரியரான திருஞானசம்பந்தருக்கே முதலிடம் கொடுக்கப்படும் வழக்கு ஏற்பட்டது. சைவசித்தாந்தத்தை எழுதிய ஆசிரியர்களில் சிறப்பானவரும், சித்தாந்த கருத்துகள் முழுமையும் உள்ளடக்கிச் சித்தாந்தத்தை முழுமைப்படுத்தியவரும் தமிழருமான மெய்கண்டார், சிவாக்கிரயோகி போன்ற ஆரியர்களால் புறக் கணிக்கப்பட்டதுடன், மெய்கண்டாரின் நூல் வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட ஒன்றே என்ற கருத்தும் திட்டமிட்டுப் பரப்பப்பட்டுள்ளது.

இன்றும், சைவத் திருக்கோயிலின் கருவறையினுள் ஆரிய ருக்கும் வடமொழிக்கும் உள்ள உயர்வு தமிழருக்கும் தமிழ் மொழிக்கும் இல்லை. ஆரியர்களுடைய திட்டமிட்ட சூழ்ச்சி வெற்றி யடைந்து, தமிழர்கள் தாழ்த்தப்பட்ட நிலையில்-அடிமைப்படுத்தப் பட்ட நிலையில் உள்ளனர்.

---

*23.* க. அனவரதவினாயகம்பிள்ளை, சிவநெறிப் பிரகாசம் (சிவாக் கிரயோகிகள் அருளியது), சென்னைப் பல்கலைக் கழகம், 1936 முன்னுரை, ப. *15*.

**சித்தர்கள்**

சித்தாந்தத்தைக் கொள்கையாகவுடைய சித்தர்களாகிய தமிழர்கள், மேலே கண்ட ஆரியர்களுடைய சூழ்ச்சியை உறுதியாக எதிர்த்து நின்றார்கள்.

இயேசுவின் நற்செய்தியின் பயனால், திராவிட சமயமாகத் திராவிடப் பண்பாட்டின் அடிப்படையில் எழுந்த சைவத்தை, ஆரியர்கள் தங்களுக்கு ஏற்றவாறு வளைத்தும் திருத்தியும் ஆரிய வைதீகத்திற்கு அடிமைப்படுத்த முயன்றபோது, அதைப்பொறாமல் மறுத்தெழுந்தவர்களே சித்த மரபினராவர். இடைக்காலத் தமிழர் சமுதாயத்தில், தமிழர்களை அடிமைப்படுத்துவதற்கு ஆரியர்கள் எடுத்த முயற்சிகளால், ஆரியர்களை அடிபணிந்தவர்களுக்கு உயர் சாதிப் பட்டமும், ஆரியர்களை எதிர்த்தவர்களுக்குத் தாழ்ந்த சாதி முத்திரையும் கிடைத்தன. சித்தர்கள் ஆரியக் கொள்கையை எதிர்த்து நின்ற காரணத்தால், ஆரியர்களாலும் ஆரியர்களுக்கு அடிமைப்பட்டவர்களாலும் தாழ்ந்த சாதியினர் எனத் தள்ளப் பட்டனர். வன்முறையைக் கருவியாகக்கொண்ட ஆரியர்கள் தமிழ் அரசர்களுக்கு, தங்களுக்கு அடுத்த உயர்சாதிப் பட்டம் கொடுத்துத் தங்களோடு இணைத்துக்கொண்ட காரணத்தால், எதிர்த்தவர்களை ஒழித்துக் கட்டுவது அவர்களுக்கு மிக எளிதாக இருந்தது.

இதன் காரணமாக ஆரியர்களை எதிர்த்தவர்கள், காடுகளிலும் குகைகளிலும் வாழவேண்டிய கட்டாய நிலை ஏற்பட்டது. காடுகளிலும் குகைகளிலும் வாழ்ந்த சித்தர்களின் செல்வாக்குப் பொது மக்களிடையே பெருகிய காரணத்தால், சித்தர்களை அழிக்கும் படியாகப் பிராமணர்கள், தங்களை ஆதரித்த அரசர்களைத் தூண்டினர். பிராமண ஆதரவாளர்கள், சித்தர்கள் வாழ்ந்த குகைகளைத் தேடி, அக்குகைகளை இடிக்கவும் அங்கு வாழ்ந்தவர்களைக் கொல்லவும் தொடங்கினர். பிராமண ஆதரவாளர்களுக்கும் பொது மக்களுக்கும் நடந்த இக்கலகம் 'குகை இடி கலகம்' என்னும் பெயரில் கல்வெட்டுகளால் குறிக்கப்படுகின்றது.[24]

---

24. "Saiva tradition as preserved in Periapuranam has memories of mutts organised by Appar and other non-Brahman Saiva saints. These were their spiritual homes. When the temple cult came to be codified and conventionalised with the help of Gauda Brahmins and other north Indian Saivites during the Chola revival the mutt became the necessary adjunct of the temple presided over by Brahman for regulating and supervising the rituals. Slowly the objection to non-Brahmans renouncing the world and

இடைக்காலச் சமுதாயத்தில், நாம் மூன்று பகுதியினரான மக்களைக் காண்கின்றோம். அவர்கள் பிராமணர்கள், பிராமண ஆதரவாளர்கள், பிராமண எதிர்ப்பாளர்கள் என்பவராவர்.

**பிராமணர்கள்**

'ரிக்' போன்ற வேதங்களே மிக உயர்ந்தவை எனவும், அவற்றைப் படிக்கும் தகுதி பிராமணர்களுக்கே உண்டு எனவும், அவ்வேதங்களில் இருந்தே தமிழகத்தில் பரவியிருந்த கடவுள் நம்பிக்கை-கோயில் வழிபாடு முதலியனயாவும் தோன்றியன எனவும், தமிழர்கள் அவ்வேதங்களைப் படிப்பதற்கோ தொடுவதற்கோ கேட்பதற்கோ பார்ப்பதற்கோ அருகதையுள்ளவர்கள் அல்லர் எனவும், வேத மொழியாகிய வடமொழியே தெய்வமொழி எனவும் தமிழர்களை, நம்பும்படியாகக் கட்டாயப்படுத்தினர். அவர்களுடைய சூழ்ச்சியை ஏற்க மறுத்தவர்களை, எவ்விதத்திலும் ஒழிக்க அரசாங்க ஆதரவுடன் பல வழிகளைக் கையாண்டனர்.

**பிராமண ஆதரவாளர்கள்**

அரசாங்கம் பிராமணர்களுக்கு உட்பட்டுவிட்ட காரணத்தால், பிராமணர்களின் வன்முறைக்கு எதிர்த்து நிற்க ஆற்றாது, பிராமணர்களின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்ட கூட்டம், தமிழகத்தில் உருவாகத் தொடங்கியது. பழைய நூல்களுக்கெல்லாம், பிராமணர்களுக்கு உயர்வு கற்பித்து, பிராமணர்களால் எழுதப்பட்ட உரைகளையும் விளக்கங்களையும் புராணங்களையும் அவர்கள் ஒப்புக்கொள்ளத் தொடங்கினர். பிராமணர்களை எதிர்த்தவர்கள் அடையும் துன்பங்களையும், பிராமணர்களை ஆதரித்தவர்களுக்கு ஏற்படும் சமுதாய உயர்வுகளையும் கருத்தில் கொண்டு, தமிழ்ச் சமுதாயத்தில் பெரும்பகுதியினர், பிராமண ஆதரவாளர்களாக மாறத் தொடங்கினர். இந்த மாற்றம் படிப்படியான மனமாற்றத்

---

becoming the heads of mutts came to be established. The non-Brahman ascetics had to resort to caves and their mutts came to be known as 'KUGAI'. When the member and power of these non-Brahman mutts increased the orthodox people inspired a group of their followers to raze to ground these non-Brahman mutts and this is mentioned as KUGAI IDI KALAGAM in inscriptions of the reign or Kulotunga III.

—The notes on the Tamil Plutarch, Prof. T. P. Meenaksh sundaran.

Quoted by: N. C. Kandaiya Pillai, History of Hinduism, The Progressive Printers, Madras-1, P. 108.

தால் மட்டும் ஏற்பட்டது அன்று. சோழர் காலத்தில் ஏற்பட்ட கொடுமையான இனக் கலவரங்களாலும் அடக்குமுறைகளாலும் இவை நடைமுறைப்படுத்தப்பட்டன என்பதை கல்வெட்டுகள் குறிக்கின்றன.

சைவக் கோயில்கள் யாவும் பலவந்தமாகப் பிராமணர்கள் ஆதிக்கத்திற்கு உட்படுத்தப்பட்டுவிட்டபடியால், சைவக் கொள்கைகள் யாவும் பிராமணர்களுக்கு ஏற்றபடி வளைத்து எழுதப்பட்டன. வடமொழிக்கும் பிராமணர்களுக்கும் உயர்வு கொடுத்து எழுதப்பட்ட விளக்கங்களே சிறந்தவை என்று ஏற்றுக்கொள்ளப்பட்ட நிலையில், சைவ சமயத்தையும் சைவசித்தாந்தத்தையும் வளர்த்த தமிழர்களும் அவர்கள் எழுதிய நூல்களும், குறையுடையன என்பதைப் பிராமண ஆதரவாளர்களாகிய தமிழர்கள் ஏற்றுக்கொள்ள வைக்கப்பட்டனர். இவர்கள் சுயசிந்தனையற்றவர்களாகச் சொல்வதைச் சொல்லும் கிளிப் பிள்ளைகளாகப் பிராமணர்கள் கூறும் விளக்கங்களே வழிவழி மரபு விளக்கங்கள் என்பதை, வலிந்து மூளையில் கொண்டவர்களாக ஆக்கப்பட்டனர். பிராமணர்களுக்கு அடிமைகளாக-ஆதரவாளர்களாக இவர்கள் செயல்பட்ட காரணத்தால், பிராமணர்களை எதிர்த்த தமிழர்களைவிட இவர்களுடைய உலக வாழ்க்கை, செல்வாக்கு உடையதாகக் காணப்பட்டது. பிராமணர்களை எதிர்த்தவர்களை அடக்குவதற்குப் பிராமணர்களுக்கு இவர்கள் கருவிகளாகப் பயன்பட்டனர். இக்காரணத்தால், இடைக்காலத்தில் பிராமணர்களால் ஏற்படுத்தப்பட்ட சாதிப் பிரிவுகளில், இவர்கள் பிராமணர்களைத் தாங்கும், பிராமணர்களுக்கு அடுத்த நிலையைப் பெற்றனர்.

**பிராமண எதிர்ப்பாளர்கள்**

"தூய தனித் தமிழினத்தவரிடையே மிகவும் உயர் மதிப்புக்குரியவர்கள் அறிவர் அல்லது சித்தர்களே. அவர்கள் காலத்தின் மூன்று கூறுகளையும்—அதாவது இறந்த காலம், நிகழ் காலம், வருங்காலம் மூன்றையும் அறிந்தவர்களாகக் கருதப்பட்டனர். அவர்கள் ஒதுங்கிய சமய வாழ்வு வாழ்ந்ததால், பெரு நகரங்களுக்கு வெளியிலேயே தங்கியிருந்தனர். பார்ப்பார் ஆடல் நங்கையருடனும் கூத்தியருடனும் ஊடாடத் தயங்கவில்லை. காதலரிடையே தூதுவராகச் செல்லவும் தயங்கவில்லை. ஆனால், அறிவர்கள் இவற்றிலிருந்து முற்றிலும் விலகியிருந்தனர்."[25]

---

25. வி. கனகசபை, 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம், பக். 196 197.

''தமிழரிடையே நிலவிய சாதியமைப்பின்படி பஞ்சமர், நால் வருணத்துக்குப் புறம்பான வருணத்தார். சித்தர்களைப் 'பஞ்சமர் நிலையில் உள்ளோர்' என்று கூறுவது உற்று நோக்கத் தக்கது. சுருங்கக் கூறின் வைதீக சமய எல்லைக்கு அப்பாற்பட்டவர்கள் என்று கருத்துக் கூறப்படுகிறது. வைதீக சமயங்களின் கோபாவேசத்திற்குக் காரணம் எமக்குத் தெரிந்ததே. இடைக்காலச் சமுதாயம் வேதவாக்கை மூலாதாரமாய்க் கொண்டு, வருணாசிரம தருமத்தின் அடிப்படையிற் கட்டியெழுப்பப் பட்டிருந்தது. வேத வழக்கொடு மாறுபடும் எதுவும் ஆக்குரோசத்துடன் கண்டிக்கப்பட்டது. சித்தர்களோ அடிப்படையையே கோடாரிகொண்டு வெட்டினர்.''[26]

''பெரும்பாலான சித்தர்கள், சங்கரரின் ஒருமைவாதத் தத்துவத்தையும் இந்துக்களின் விக்கிரக வழிபாட்டையும் எதிர்த்து மறுத்தவராகவே காணப்படுகின்றனர். இவ்வாறு சித்தர்கள் வைதீக சமயத்தை எதிர்த்து நிற்கவும், வைதீக நெறியினரும் அவர்களைத் தள்ளி வைத்தனர். மிகச் சமீபகாலம் வரை சைவ சித்தாந்திகளும், சித்தர் நூல்களை விலக்கி வைத்திருந்தனர்.''[27]

''பதினெண் சித்தர் பாடல்கள் சில வைதீகச் சமயத் தத்துவங்களைக் கண்டிப்பனவாக அமைகின்றன.......மொழி நடைகொண்டு நோக்கும்பொழுது, சித்தர் பாடல்களுட் பெரும்பாலன, தத்துவ நெறிக் காலத்தில் தோன்றியிருக்க வேண்டும் என்பது தெளிவாகின்றது. தமிழ்நாட்டுச் சித்தர் குழுவுக்குத் திருமூலர் முதல்வராகலாம் என்பது, தாயுமானவர் பாடல்களிலிருந்து தெரியவருகிறது. 'மனித குலம் அனைத்தும் ஒரே இனம்' என்ற சித்தர்களின் கொள்கை, வைதீகர்களின் வருணாச்சிரமக் கோட்பாட்டுக்கு எதிரிடையாகிறது...... சித்தர் பெயர்களை நோக்கும்போது, சித்தர் மரபு நீண்டகாலமாக நாட்டில் இருந்து வந்திருக்க வேண்டும் என்று தெரியவருகிறது. தத்துவநெறிக் கால இறுதியிற் சித்தர் மரபு வழிக் கருத்துகள், காலத்தின் தேவையை ஒட்டி, இலக்கிய வடிவம் பெற்றிருக்கலாம்.''[28]

சைவ சித்தாந்த சாத்திரம் பதினான்கினுள்ளும் மூலசாத்திரங்கள் எனக் குறிப்பிடும் பெருமை பெற்றவை, திருவுந்தியாரும் சிவஞானபோதமுமே ஆகும். திருவுந்தியாருக்கு விளக்கமாகத் திருக்

26. Dr. க. கைலாசபதி ஒப்பியல் இலக்கியம், ப. 188.

27. மேற்படி, பக். 187-189.

28. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப. 143.

களிற்றுப்படியார் ஏற்பட்டது. சிவஞான போதத்திற்கு விளக்கமாக மீதியுள்ள சாத்திர நூல்களும் ஏற்பட்டன. 14 சாத்திர நூல்களில், காலத்தாலும் மூலக் கருத்தாலும் முதன்மை பெற்றது திருவுந்தியார். திருவுந்தியாரை எழுதிய திருவியலூர் உய்யவந்ததேவர், பஞ்சம வருணத்தார் எனக் கூறப்படுகின்றார். சித்தாந்த சாத்திரத்தின் முதல் நூலை எழுதிய இவரும் இவருடைய மாணவரும் சந்தான குரவர்களில் சேர்க்கப்படவில்லை. திருக்களிற்றுப்படியார் எழுதிய இவருடைய மாணவரான திருக்கடவூர் உய்யவந்ததேவர், சிதம்பரம் சென்று அந்நூலை அரங்கேற்ற விரும்பியபொழுது, சிதம்பரத்தில் உள்ள பிராமணர்கள் அதை ஏற்றுக்கொள்ளாமல், அந்நூலைக் கையில் வாங்கி வீசி எறிந்ததாகவும், வீசியெறியப்பட்ட நூல் கோயில் படிகளில் விழ, கோயில் படிகளிலுள்ள கல்யானை, அதன் சிறப்பை உணர்ந்து, தன்னுடைய துதிக்கையால் அந்நூலைத் தூக்கி இறைவன் திருமுன் வைத்தமையால், அந்நூல் 'திருக் களிற்றுப்படியார்' எனப் பெயர் பெற்றதாகவும் கூறப்படும் நூல் வரலாறு, அந்நூலின் மேல் அந்தணர்களுக்கு ஏற்பட்ட கோபத்தைக் காட்டுகிறது. ''பதின்மூன்றாம் நூற்றாண்டில், சிதம்பரத்தின் கிழக் கெல்லையில் உள்ள கொற்றவன்குடி என்னும் ஊரில் வாழ்ந்தவ ரான உமாபதி சிவாசாரியார் என்பவர், தில்லை மூவாயிரவரில் ஒருவர். அவர் சைவ சித்தாந்த உண்மைகளை உணர்ந்து அவற்றுள் தோய்ந்திருந்தவர். ஆதலின், தில்லைத் தீட்சிதர்கள் அவரைக் குலத்தினின்றும் விலக்கி ஒதுக்கி வைத்தனர் எனக் கூறுவர்.''[29]

மேலே கண்ட குறிப்புகளின் வழி, சைவ சித்தாந்தக் கருத்துகள், தில்லையில் சைவசமயத் தலைமைப் பீடத்திலிருந்த இடைக் காலப் பிராமணர்களால், வெறுக்கப்பட்டன என்பது விளங்குகிறது.

சைவசித்தாந்தக் கருத்துகளை முதன்முதலில் தமிழகத்தில் வழங்கியவரும், சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கில், முதல் நூலாகிய திருவுந்தியாரை இயற்றியவருமான திருவியலூர் உய்ய வந்ததேவர், பஞ்சம சாதியைச் சேர்ந்தவர் என்ற குறிப்பும், சைவ சித்தாந்த மூலநூல்கள் பிராமணர்களால் வெறுக்கப்பட்டவை என்ற குறிப்பும், சைவசித்தாந்த நூல்களுக்கு அடிப்படையாய் விளங்கிய வர்கள் சித்தர்களே என்னும் கருத்தை உறுதிப்படுத்துகின்றன.

---

29. கே. கே. பிள்ளை, *தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும்*, தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, *1972*, ப. 355.

நாயன்மார்கள் காலத்தில் தொண்டை நாட்டில், திருநாவுக்கரசராகிய தமிழரால், சைவ சமயம் அரசனுடைய சமயமாக உயர்வடைந்து செல்வாக்குப் பெற்றபோது, அந்தச் செல்வாக்கைத் திருஞானசம்பந்தராகிய பிராமணர், வேள்வி செய்யும் வடமொழி வேத நெறி தழைத்தோங்கப் பயன்படுத்தித் தமிழராகிய திருநாவுக்கரசரையும் இழிவுபடுத்தியதைப் போன்று,சந்தானகுரவர்கள் வாழ்ந்த தத்துவநெறிக் காலத்தில், சித்தர் மரபில் வந்த திருவியலூர் உய்ய வந்த தேவர், மெய்கண்டார் முதலிய தமிழர்களால் உருவாக்கப் பட்ட சைவசித்தாந்த தத்துவத்தின் காரணமாகப் பொதுமக்களிடையே சித்தர்களுக்கு ஏற்பட்ட செல்வாக்கை அறிந்த பிராமணர்கள், சித்தர்களின் செல்வாக்கைக் குகை இடி கலகத்தின் மூலம் ஒழித்துச் சித்தர்கள் இயற்றிய சித்தாந்த நூல்களுக்கும், பிராமணர்களுக்கு உயர்வு கற்பிக்கும் விளக்கங்களையெழுதி, வடமொழியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதே சைவசித்தாந்த சாத்திரம் என்ற மாயையையும் பரப்பிச் சிவஞானபோதம், வடமொழியிலுள்ள இரௌரவ ஆகமத்திலுள்ள பாவ விமோசனப் படலத்தின் மொழிபெயர்ப்பு என்றும் தமிழ் மக்களை நம்ப வைத்தனர்.

இந்த நம்பிக்கையின் அடிப்படையிலேயே தமிழராகிய சிவஞான முனிவர், சிவஞானபோதத்திற்கு உரை எழுதும்பொழுது, மெய்கண்டாரின் சிவஞானபோதம் வடமொழியின் மொழிபெயர்ப்பு எனவும், சித்தாந்த சாத்திரங்களைக் கீழ் சாதியினர் படிக்கக் கூடாது எனவும் எழுதும் நிலை ஏற்பட்டது.[30]

சைவசித்தாந்த சாத்திரத்தை விளக்க முற்பட்ட 'சிவநெறிப் பிரகாச' ஆசிரியர் சிவாக்ரயோகி என்னும் பிராமணர், சித்தாந்த சாத்திரங்களை எழுதிய திருவியலூர் உய்யவந்த தேவர், மெய் கண்டார் ஆகியோரை, அவர்கள் தமிழர்கள் என்ற ஒரே காரணத் திற்காகப் பெயரைக்கூடச் சுட்டாமல் ஒதுக்கியமையையும், சித்தாந் தத்தைப் பின்பற்றியவர்களிடையே பிராமணத்துறவி உயர்ந்தவன், தமிழ்த்துறவி தாழ்ந்தவன் என்னும் வேறுபாடு கற்பித்திருப்பதும், சித்தர்களாகிய தமிழர்கள் ஏற்படுத்திய கொள்கை, பிராமணர் களால் அடிமைப்படுத்தப்பட்டமையையே காட்டுகிறது.

இன்றும் பிராமணர்கள் காட்டிய விளக்க உரையே சிறப்பான தெனக் கொண்டுள்ள பிராமண ஆதரவாளர்களுக்கும் தாயுமானவர்,

---

30. ''இழிகுலத்தோர் தத்துவஞானத்திற்கு உரியர் அல்லர் என்பது பெறப்பட்டது.'' சிவஞான முனிவர், சிவஞானமுனிவர் விளக்கம், சூத்திரம் 8, முதல் அதிக்ரண உதாரண வெண்பாவின் விளக்கம்.

இராமலிங்க சுவாமிகள் போன்ற சித்தர் மரபிலே வழிவழியாக வருகின்றவர்களுக்கும் கருத்து வேறுபாடும் கொள்கை வேறுபாடும் காணப்படுகின்றன.

''சித்தாந்த சைவத்திற்கும் சித்தர் சைவத்திற்கும் வேறுபாடுண்டு. திருமந்திரத்தில் சித்தாந்த சைவத்திற்கு உடன்பாடில்லாத கருத்துகள் சிலவும் உளவென்பர். இன்றைய சித்தாந்த பண்டிதர் சிலர், தேவாரத் திருவாசகங்களைப் பிரமாணமாகக் கொள்ளும் அளவிற்குத் திருமந்திரத்தைப் பிரமாணமாகக் கொள்ளாமையைப் பலரும் அறியாவிடினும், சிலராவது அறிவர். தாயுமானவரை ஒப்புக்கொள்ளாத சித்தாந்த வித்தகர்களும் உண்டு. (வறட்டுச்) சித்தாந்தம் அவர்கள் உள்ளத்தில் அவ்வளவு ஊறிக் கிடக்கிறது''[31] என்பது ஊரன் அடிகளின் கருத்து.

சைவசித்தாந்தக் கருத்துகள் ஆகமங்களையோ உபநிடதங்களையோ மூலமாகக் கொண்டு விளங்குவனவாகும் என்னும் கூற்றுக்கே இடமில்லை என்பதும் வாசகர்கள் கவனிக்கற்பாலது. சுருங்கக் கூறின் சைவ சித்தாந்தக் கருத்துகள், பண்டைக்காலத் தமிழ் மக்களின் சமய வாழ்க்கையினைக் கட்டிக் காப்பாற்றி வந்த கற்றூண்கள் என்று கூறினால், அது மிகையாகாது.''[32]

அகத்தியர் முதல் இராமலிங்க அடிகளார் ஈறாகச் சித்த மரபு தமிழகத்தில் வழிவழியாகப் பேணப்பட்டு வந்துள்ளது. அகத்தியர் சித்தர்களில் ஒருவராகக் கருதப்பட்டுள்ளமை எண்ணிப் பார்க்கத் தக்கது. அகத்தியர் பெயரால் ஒரு கொள்கைவழிக்கூட்டம் வழி வழியாக இருந்து வந்தமையை இது புலப்படுத்துகிறது.

அகத்தியர் வெளிநாட்டிலிருந்து தமிழகத்திற்கு வந்த முனிவர் எனவும் தமிழுக்கு முதல் இலக்கணநூல் எழுதியவர் எனவும் சொல்லப்படுகின்றது.

இயற்கைநெறிக் காலமாகிய சங்க காலத்தில், இயேசு பெருமானின் நற்செய்தியைத் தமிழகத்தில் பரப்பியவர்கள் பிற்காலத்தில் மேலை நாட்டிலிருந்து தமிழகம் வந்த வீரமாமுனிவரைப் போன்று தமிழ்மொழி வளர்ச்சிக்குப் பாடுபட்டிருப்பர் என்பதில்

31. ஊரன் அடிகள், *வள்ளலார் மறைந்தது எப்படி?*, 1976, முன்னுரை, பக் VI, VII.

32. முத்துராமன், *சைவசித்தாந்தம்*, 1975, ப. 9.

ஐயமில்லை. அகஸ்டஸ் என்னும் யவனப் பெயருக்கும் அகத்தியர் என்னும் தமிழ்ப்பெயருக்கும் நெருங்கிய ஒற்றுமை காணப்படுவதும், அகத்தியர் 'குடம் (மேற்கு) முனிவர்' என்று கூறப்படுவதால், மேற்கிலுள்ள எருசலேமிலிருந்து வந்திருத்தல்கூடும் என்பதும், கடலைக் குடித்தவர் என்பது, நீண்ட கடல் பிரயாணத்தை மேற் கொண்டு, தமிழகத்தில் கால் வைத்துக் கடலை வென்றிருத்தல் வேண்டும் என்பதும்,பஞ்சம சாதியினராகக் கருதப்படும் சித்தர்களில் ஒருவராக அகத்தியர் கூறப்படுவதால், ஆரியர்களுக்கு மாறுபட்ட இயேசுபெருமானின் நற்செய்தியோடு இணைந்தவர் என்பதும் எண்ணிப் பார்க்க வேண்டிய குறிப்புகளாக விளங்குகின்றன.

ஞானசிகாமணி என்பவர், அகத்தியர் கிறித்தவரே என்னும் நோக்கில், 'அகத்தியர் ஞானம்'[33] என்னும் பெயரில் நூல் ஒன்று வெளியிட்டுள்ளார். அதில் இந்த நோக்கில் பல கருத்துகள் கூறப் பட்டுள்ளன.

திருக்குறளை எழுதிய திருவள்ளுவரும் பஞ்சம சாதியில் சேர்க்கப்பட்டிருப்பது இங்கு நோக்கத் தக்கது.

இயேசு பெருமானின் நற்செய்தி தமிழர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டுத் திராவிடப் பண்பாட்டோடு பரவிச் சைவம், வைணவம் என இரு பெரும் சமயங்களாக அது எழுந்தபோது, ஆரியர்களின் ஆதிக்கம் இவைகளைப்பற்றிப் பிடித்தது. ஆரியர் களின் ஆதிக்கத்தை எதிர்த்த சைவர்கள் சித்தர்கள் எனவும் ஆரிய மொழியின் ஆதிக்கத்தை எதிர்த்த வைணவர்கள் தென்கலையினர் எனவும் பெயர் பெற்றனர். பன்னிரு திருமுறைகளில் திருமூலர் எழுதிய திருமந்திரம் ஆரியரின் ஆதிக்கத்தை எதிர்த்து எழுந்த தாகும்.

சித்தர்களுடைய பாடல்களும் ஆரிய ஆதிக்கத்தை வன்மையாக எதிர்ப்பதுடன், உருவ வழிபாட்டை,

நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே
சுற்றிவந்து முணமுணென்று சொல்லுமந்த்ர மேதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள்ளி ருக்கையில்
சுட்டசட்டி சட்குவங் கறிச்சுவைய றியுமோ.[34]

---

33. டாக்டர் வி. ஞானசிகாமணி-அகத்தியர் ஞானம். ஞானோதயம், சென்னை-1981.

34. சிவ வாக்கியர்-520.

என்றும், பிறவிச் சுழற்சிக் கோட்பாட்டை,

கறந்தபால் முலைப்புகா கடைந்தவெண்ணெய் மோர்ப்புகா
உடைந்துபோன சங்கினோசை யுயிர்களு முடற்புகா
விரிந்தபூ வுதிர்ந்தகாயு மீண்டுபோய் மரம்புகா
இறந்தவர் பிறப்பதில்லை யில்லையில்லை யில்லையே,[35]

என்றும் வன்மையோடு மறுப்பனவாகவும் உள்ளன. இந்து சமயத்திற்கு அடிப்படையானவை உருவவழிபாடும் பிறவிச் சுழற்சிக் கோட்பாடும் என்போர் கருத்தை உடைப்பனவாகச் சித்தர்களுடைய கோட்பாடு அமைந்துள்ளது,

கிறித்தவம் எந்த நாட்டில் பரவினாலும், எவ்வளவு இழிவாக ஒதுக்கப்பட்டிருந்த போதிலும், அதன் இரு கண்களாகக் கல்வித் தொண்டும் மருத்துவத் தொண்டும் விளங்குவதை வரலாற்றில் நாம் அறிய இயலுகிறது. அதே நிலையில் தமிழகத்திலும் சித்தர்கள் இழிசாதியினர் என ஒதுக்கப்பட்டபோதிலும், வன்முறையை ஆயுதமாகக் கொண்டவர்களால் வேட்டையாடப்பட்ட போதிலும், புறக்கணிக்கப்பட்ட மக்கள் மத்தியிலே கல்வித் தொண்டையும் மருத்துவத் தொண்டையும் ஆற்றி வந்துள்ளனர். அதனால்தான், தத்துவ நெறிக்காலத்தில் எழுந்த சித்தர்களுடைய பாடல்கள் யாவும், ஆழமான உயர் கருத்துகளைக் கொண்டிருந்தபோதிலும், புறக்கணிக்கப்பட்ட மக்கள்மத்தியிலே, அவர்களுடைய கல்வித்தொண்டின் பயனாக எழுந்த காரணத்தால், மிக எளிய நடையிலே அமைந்துள்ளன. சித்தர்கள் ஆற்றிவந்த மருத்துவத் தொண்டின் பயனால் வளர்ந்த சித்த மருத்துவம், இன்றுவரை எளிய மக்களுக்குப் பயன்படும் ஒன்றாக அமைந்து விளங்குகிறது.

உயர்மட்ட மக்கள், பிராமண ஆதரவாளர்களாய் ஆக்கப்பட்டுவிட்ட காரணத்தால், தமிழர்களின் பழைய சிந்தனை ஓட்டத்திலிருந்து விலகி, ஆரிய சிந்தனைக்கு அடிமைப்பட்டுத் தங்களை ஆரியர்களுக்கு அடிமைகளாக எண்ணுவதில் பெருமையடைந்து, தங்கள் சகோதரர்களாகிய மற்றத் தமிழர்களை, இழிவானவர்களாக எண்ணத்தொடங்கிய பேய் வாழ்க்கைக்கு உள்ளாயினர்.

இத்தகைய வாழ்க்கை உள்ளவர்களுக்கு மத்தியிலே நிலைபெற்றிருப்பவைதாம் சைவசித்தாந்தக் கருத்துகள்.

பன்னிரு திருமுறையில், பிராமணர்களை எதிர்த்தெழுந்த திருமந்திரம் இடம்பெற்றுள்ளதற்குக் காரணம், திருமுறை கண்டசோழனாக எண்ணப்படுகின்ற முதல் இராசராசன் எனலாம்.

---

35. சிவவாக்கியர்-48.

தமிழகத்தின் பெரும் பகுதியை, நீண்டகாலம் ஆண்ட வட மொழி ஆதரவாளர்களான பல்லவர்களிடமிருந்து சோழநாட்டை மீட்டுத் திரும்பவும் தமிழர் ஆட்சியை நிலைநிறுத்திய பெருமையும், தமிழர் ஆட்சியைப் பல்வேறு நாடுகளுக்குப் பரப்பிய பெருமையு முடையவன், முதல் இராசராசசோழன் ஆவான். அவன் காலத்தில் தமிழர் எழுச்சியடைந்ததுடன், தமிழும் தமிழ்ச் சமயமும் எழுச்சி யடைந்தன எனலாம்.

தமிழ்ச் சமயமாகிய சைவத்தை வளர்த்த அடியவர்களின் பாடல்கள் தொகுக்கப்படவும், இராசராசன் மிக முயன்று கட்டிய தஞ்சைப் பெருங்கோயிலில் அவை ஓதப்படவும் ஒழுங்குகள் செய்யப் பட்டன. இராசராசன் காலத்தில் சைவம் புத்துயிர் பெற்றது. தமிழ்ச் சைவம் புத்துயிர் பெறுவதை விரும்பாத ஆரியர்களிடமிருந்து,தமிழ்ச் சைவப் பாடல்களைப் பலவந்தமாகப் பெற வேண்டிய நிலை இராச ராசனுக்கு ஏற்பட்டதைத் தில்லையில் அடைபட்டுச் சிதலுக்கு இரை யாகிக்கொண்டிருந்த மூவர் முதலி பாடல்ஏடுகளைத் தில்லைவாழ் அந்தணர்களிடமிருந்து வலுக்கட்டாயமாகப் பறித்து வரநேர்ந்த சூழலால் நாம் அறியலாம். மூவரால் பாடப்பட்ட பாடல்களில் எத்துணையோ பாடல்கள் அழிக்கப்பட்டன அல்லது அழிந்தன. இடைச் செருகல்கள் ஏராளமாய் நடந்திருப்பதற்கும் இடமுண்டு. ஆயினும், தமிழனுடைய ஆட்சியில் தமிழுக்குச் சிறப்பிடம் ஏற்பட்ட மையால், பன்னிரு திருமுறை உருவாவதற்கு வழியேற்பட்டது என லாம்.

இராசராசன் ஆட்சிக் காலத்தில், ஓர் அதிகாரத்திற்குப் பத்துக் குறட்பாக்களையுடைய திருக்குறளையும், ஒரு பதிகத்திற்குப் பத்துச் செய்யுட்களைக் கொண்ட திருநாவுக்கரசு பாடல்களையும் ஒட்டி, பத்துத் திருமுறைகளே தொகுக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்று நம்ப இடமுண்டு. ஏனெனில், ஆரிய மொழிக்கே அடிமைப் பட்டு நிற்கும் சேக்கிழாரின் கருத்திற்கு மாறுபட்ட சித்தர் நெறியைக் கொண்ட திருமந்திரம், திருமுறையில் ஒன்றாக சேர்க்கப்படக்கூடிய காலச் சூழலில், திருமுறை தொகுக்கப்பட்டது என்பதை இது காட்டுகிறது,

திருமுறை தொகுத்தவராக நம்பியாண்டார் நம்பி பெயர் கூறப்படுகின்ற காரணத்தாலும், நம்பியாண்டார் நம்பியால் எழுதப்பட்ட நூல்கள் பதினோராம் திருமுறையில் இடம்பெற்றுள்ள காரணத்தாலும், நம்பியாண்டார் நம்பி காலத்திற்குப் பின்பே பதினோராம் திருமுறையும் பன்னிரண்டாம் திருமுறையும் இணைக்கப்பட்டன என எண்ண இடமேற்படுகிறது.

தமிழ் வேதம் என்று கூறத்தக்க சிறப்புடைய பெரியவர்களின் அருள் வாக்குகளைத் தொகுத்த ஒருவர், தாம் எழுதிய நூல்களையும் அவற்றொடு இணைத்துக்கொண்டு, பதினோராம் திருமுறை என்று அதற்குப் பெயரிட்டார் என எண்ணுவதற்கு,அதிக வாய்ப்பு இல்லை.

திருமுறைகண்ட சோழன் ஆணையினால், நம்பியாண்டார் நம்பி திருமுறைகளைத் தொகுக்கவும், திருநீலகண்ட யாழ்ப்பாணர் வழியில் வந்த பெண்ணொருத்தி, பண்களுக்குப் பண்ணடைவு செய்யவும் (திருமுறைகண்ட புராணம், பாடல் 32) ஏவப்பட்டனர். இந்தச் சூழலை நாம் பார்க்கும்போது, இராசராச சோழன் தஞ்சைப் பெரியகோயிலைக் கட்டி முடித்து, தேவாரம் பாடுவதற்கு ஓதுவார்களை நியமிப்பதற்கு ஆயத்தமாகத் தமிழகத்தார் பழந் திருப்பாடல்கள் தொகுக்கப்பட்டமையும், அவைகளுக்குப் பண் அமைக்கப்பட்டமையும் நமக்கு விளங்குகிறது. பத்துத் திருமுறைகளின் தொகுப்பு இராசராசன் காலத்தில் நிறைவுற்றிருக்கலாம்.

இத்தொகுப்பு வேலைகளுக்குச் சைவ சமயப் பற்றுக்கொண்ட அந்தணர்களும் பயன்பட்டிருத்தல் இயல்பே. நம்பியாண்டார் நம்பி இத்தொகுப்பு வேலைக்குப் பயன்படுத்தப்பட்டார் என்ற நிலையும் அவர் இத்தொகுப்பில் எத்தகைய கண்ணோட்டத்தைக் கொண்டிருந்தார் என்பதையும் அவருடைய பாடல்கள் நமக்கு விளக்குகின்றன.

''திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணிமாலை, கோயில் திருப்பண்ணியர் விருத்தம், திருத்தொண்டர் திருவந்தாதி, ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, ஆளுடைய பிள்ளையார் திருச்சபை விருத்தம், ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக் கோவை, ஆளுடைய பிள்ளையார் திருவுலாமாலை, ஆளுடைய பிள்ளையார்திருக்கலம்பகம் ஆளுடையபிள்ளையார் திருத்தொகை, திருநாவுக்கரசர் ஏகாதசமாலை என்னும் பத்து நூல்களைப் பாடியிருக்கின்றார்.[36]

அவர் எழுதிய நூல்களில், வன்முறையை ஆயுதமாகக் கைக்கொண்டு, வேள்விக்கொள்கையுடைய வேதநெறி தழைத்தோங்குவதற்கு, தன்னைத் தமிழன் என்று உரிமை பாராட்டிக்கொண்டு, சமண சமயம் சார்ந்த தமிழர்களை அழிப்பதற்குச் சைவத்தைப் பயன்படுத்திய திருஞானசம்பந்தரை வாழ்த்தியே பெரும்பகுதி நூல்களைச் செய்துள்ளார். ''இவற்றுள், ஆறு நூல்கள், ஆளுடைய

---

36. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, சைவ இலக்கிய வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1978, ப. 444.

பிள்ளையார் என்னும் திருஞானசம்பந்தரையே பொருளாகக் கொண்டு எழுந்துள்ளமையின், நம்பியாண்டார் நம்பிகட்குத் திருஞானசம்பந்தர்பால், தனித்த முறையில் பேரன்புண்டென்பது, தெளியத் தோன்றுகிறது'' என ஔவை சு. துரைசாமிப் பிள்ளை தமது சைவ இலக்கிய வரலாறு என்னும் நூலில் கூறுகின்றார்.[37]

தமிழனாகிய திருமுறைகண்ட சோழனுடைய ஆதரவில், தமிழ் நாட்டில் தமிழ்மொழியில் தோன்றிய, அன்பு நெறியாகிய சைவத் திருப்பாடல்களைத் தொகுப்பதற்குக் கிடைத்த சந்தர்ப்பத்தை, ஆரியர்கள் எந்த நோக்கில் பயன்படுத்தினார்கள் என்பதற்கு, இது ஒரு நல்ல சான்று எனலாம்.

பார்ப்பனர்களைக் கோயில்களில் பூசை செய்ய விடக்கூடாது. விட்டால் அது அரசர்களுக்கு ஆபத்து - நாட்டிற்கு ஆபத்து[38] என்ற கொள்கையுடைய திருமூலரின் திருமந்திரத்தை ஆதரிக்கும் தமிழ் அரசனுடைய பணியில், பார்ப்பனர் ஒருவர் ஈடுபடுத்தப்பட்டமை யால் தமிழராகிய திருநாவுக்கரசு வேண்டுமென்றே இழிவுபடுத்தப் பட்டுள்ளமை கோயில் பூசை செய்வதற்கு மட்டுமன்றி, எந்தத் துறையில் பார்ப்பனர்கள் நுழைந்தாலும் தமிழர்களுக்கு ஆபத்து என்பதையே நமக்குக் காட்டுகிறது.

நம்பியாண்டார் நம்பிக்கும் சேக்கிழாருக்கும் பின்னர் வந்த வர்கள், பத்துப்பகுதிகளாக இருந்த திருமுறையை நம்பியாண்டார் நம்பியுடன் மேலும் 11 பேர் எழுதிய நூல்களைச் சேர்த்து 11-ஆம் திருமுறை எனவும் சேக்கிழார் இயற்றிய பெரியபுராணம் 12-ஆம் திருமுறை எனவும் இணைத்தனர்.

### தத்துவ நெறிக் காலம்

சங்கரரின் அத்வைதமும் இராமானுசரின் விசிஸ்டாத்வைதமும் மாத்வரின் துவைதமும் மெய்கண்டாரின் சைவசித்தாந்தமும் ஒரே ஊற்றுக் கண்ணில் இருந்து புறப்பட்ட ஒரே ஆற்றின், பல்வேறு கிளைப் பெயர்களாகும்.

---

37. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை, சைவ இலக்கிய வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1978, ப. 444.

38. திருமந்திரம் 519.

„பேர்கொண்ட பார்ப்பான் பிரான்தன்னை அர்ச்சித்தாற்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமுமாம் என்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே.''

சமய ஆச்சாரியர்கள் எனக் கூறப்படும் மேலே கண்ட நால்வரும்,திராவிட நாட்டில்,சிறப்பாகத் தமிழகத்தில் தோன்றியவர்கள் ஆவர். மாத்வர் கன்னட நாட்டில் தோன்றியவராயினும்,அவர் பின்பற்றிய வைணவ சமயம் தமிழகத்தில் இருந்து எழுந்ததாகும்.

சங்க காலத்தில் 'சான்றோர் சமயம்' என்ற பெயரில் விளங்கிய கிறித்தவம், பக்தி இயக்கக் காலத்தில் சைவம், வைணவம் என இரண்டாகப் பிரிந்ததன் காரணமாகச் சைவர்களாகிய சங்கரரும் மெய்கண்டாரும், அத்வைதத்தையும் சைவசித்தாந்தத்தையும் அருளிச் செய்ய, வைணவர்களாகிய இராமானுசரும் மாத்வரும், விசிஸ்டாத்வைதத்தையும் துவைதத்தையும் அருளிச் செய்த தன்மை, தத்துவநெறிக் காலத்தில் தத்துவங்களின் வளர்ச்சியைக் காண்பிக்கிறது.

மேலே கண்ட நால்வரில் ஒருவரே தமிழர். மற்ற மூவரும் தமிழ்த் தத்துவத்தை ஏற்றுக்கொண்ட ஆரிய நாகரிகத்தையுடைய ஆரியப் பார்ப்பனர் ஆவர்.

ஆரியராகிய திருஞானசம்பந்தர், சைவ சமயத்தை ஆரியர் வேதநெறி தழைப்பதற்குப் பயன்படுத்தியது போன்றே, கோயில் வழிபாட்டையுடைய திராவிட சமயங்களாகிய சைவம், வைணவம் இவற்றின் கொள்கைகளை, ஆரிய வேதங்களோடு இணைக்க இவர்கள் முயன்றனர். இவர்களுடைய முயற்சியைப்பற்றி, ''சங்கருடைய ஒருமைக் கொள்கை, உபநிடதங்களிலிருந்து தோன்றியதாகலாம். ஆனால், அவருடைய கடவுட் கொள்கை வேதத்தைச் சேர்ந்தது அன்று. இராமானுசர், மாத்வர் இவர்களின் முறைகளில் மூலபாடங்கள் வேதத்திலிருந்து எடுக்கப்பட்டவை. அவற்றிற்கு அவர்கள் கூறும் பொருள்கள் எல்லாம், பிற்காலக் கோயில் வழிபாட்டுச் சமயத்தையும் ஆகமங்களையும் அடிப்படையாகக் கொண்டவை''[39] என இந்திய அரசாங்கத்தால் அமைக்கப்பட்ட ஆய்வுக்குழு கூறுகிறது.

39. ''I cannot help feeling sometimes that there must be a conspiracy of silence behind this invariable indifference to this school.

I wish my suspicions were proved unfounded. If an inexplicable prejudice were to be ruled out as the cause of this comparative blackout of the Saiva Siddhanta, an Ineradicable ignorance of it must be posited. In any general enumeration of the Hindu Darsanas Saiva Siddhanta is never mentioned in the same breath with the Advaits; the Visishtadvaita and the Dvita. No official

மேலே கண்ட நால்வரில் மூவர் ஆரியராய் இருப்பதால், அவர்கள் பாராட்டப்படுவதைப் போன்று, தமிழராகிய மெய் கண்டாரும் அவர் கண்ட சைவசித்தாந்த நெறியும் பாராட்டப்படுவதில்லை. மெய்கண்டாரும் சைவசித்தாந்த நெறியும் இருட்டடிக்கப் பட்டுப் புறக்கணிக்கப்பட்டு உள்ளதாகவும் வலிந்து ஆரியத் தொடர்பைக் கூறும் மற்ற மூவரையும் போன்று இவர் இந்து சமயத்தைச் சார்ந்தவர்களால் ஏற்றுக் கொள்ளப்படவில்லை எனவும் வருந்துகின்ற வருத்தம் சைவப் பெருமக்களிடம் உள்ளது.[40]

சைவ சித்தாந்தத்தை மற்ற இந்துக்கள் யாவரும் புறக் கணிக்கின்ற நிலையில், பிற்காலத்தில் இந்தியாவில் பரவிய ஐரோப்பிய வழிக் கிறித்தவம், சைவ சித்தாந்தத்தையே மற்ற இந்திய தத்துவங்கள் அனைத்தையும்விடச் சிறப்பாகப் போற்றிப் பாராட்டுகின்றது எனச் சைவர்கள் பெருமிதத்தோடு குறிப்பிடு கின்றார்கள்.[41]

(1) சைவசித்தாந்தம் மற்ற இந்துக்களால் வெறுக்கப்படும் கொள்கை என்பதாலும்(2) 14 சாத்திரங்களின் முதல் நூலாகிய

---

recognition has been accorded to Saiva Siddhanta within the orthodox fold of Darsanas which rnclude only the latter three schools. This is a painful fact which, I am afraid has not as poignantly hurt the Saiva Siddhantias as it ought to."

- K.M. Balasubramaniam; Spacial Lectures on Saiva Siddhanta, The Annamalai University, 1959, pp, XI-XII.

40. இராதாகிருஷ்ணன், பதிப்பாசிரியர் குழுத்தலைவர். கீழை மேலை நாடுகளின் மெய்ப்பொருள் இயல் வரலாறு. தொகுதி-1, அண்ணா மலைப் பல்கலைக் கழகம், 1970, பக். 43.

41. "According to the Rev. W. Goudie 'there is no school of thought and no System of Faith that comes to us with anything like the claims of the Saiva Sidhantha. As a system of religious thought; as an expression of faith and life, the Saiva Siddhanta is by far the best that South India Possesses'.Not content with this Eulogy the Reverend gentleman goes a step further and avers: "Indeed, It would not be rash to include the whole of India and to maintain that judged by its intrinsic merits, the Saiva Siddhanta represents the high-water-mark of Indian Life."

-K.M. Balasubramaniam, Special Lectures on Saiva Siddhanta, Annamalai University, 1959, P.XI.

திருவுந்தியார், தீண்டாத சாதியினர் எனப்படும் பஞ்சம வருணத் தாரால் இயற்றப்பட்டது என்பதாலும் (3) பஞ்சமரின் மாணவர் எழுதிய திருக்களிற்றுப் படியார் சிதம்பரக் கோயில் பிராமணரால் வீசியெறியப்பட்டதென்பதாலும், (4) சந்தானக் குரவரில் இவர்கள் இருவரும் சேர்க்கப்படாமல் திட்டமிட்டு வேண்டுமென்றே விடப் பட்டதாலும், (5) இவர்களின் வழியில் வந்து, சைவ சித்தாந் தத்தின் முழுமையை எடுத்துக் காட்டிய மெய்கண்டார், பிராமண ராகிய சிவாக்கிரயோகியால் வேண்டுமென்றே பாராட்டப்படாமல் விடப்பட்டதுடன் இவருடையது மொழி பெயர்ப்பு என்ற கருத்து பரப்பப்பட்டமையாலும் (6) மெய்கண்டாரின் வழியைப் பின்பற்றி யமைக்காகப் பிராமணராகிய சிதம்பரம் உமாபதி சிவாசாரியார் சாதியிலிருந்து தள்ளி வைக்கப்பட்டமையாலும் (7) இன்றுவரை சைவசித்தாந்தம், மற்ற இந்தியக் கொள்கைகளால் ஒதுக்கப் பட்டுச் சதி செய்யப் படுவதாகச் சைவர்கள் உணர்வதாலும், (8) பிற்காலத்தில் தமிழகத்திற்கு வந்த ஐரோப்பிய கிறித்தவர்களால், இந்தியக் கொள்கைகளில் இதுவே சிறந்தது எனப் பாராட்டு வதாலும் (9) திருக்குறளும் சைவ நூல்களும் மேலை மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு, மற்ற நாட்டிலுள்ள கிறித்தவர்களும் அவற்றைப் படிப்பதற்கு வழி வகுக்கப்பட்டமையாலும் ஐரோப்பியர் வருகைக்கு முற்பட்டதும், தோமையரால் தமிழகத்தில்-திராவிட நாட்டில் பரப்பப்பட்டதுமான இந்துக் கிறித்தவமாக இது ஏன் இருக்கக் கூடாது என்னும் எண்ணத்தை நமக்குத் தோற்று விக்கிறது.

இதைச் சரியாகப் புரிந்து கொள்ளும்படியாக விவிலியம், திருக் குறள், சைவ சித்தாந்தம் மூன்றையும் இப்போது ஒப்பிட்டு ஆய்வோம்.

# 6. ஒப்பாய்வு-1

## 1. புலால் மறுத்தல்

ஐரோப்பியப் பண்பாட்டின் விளைவாக ஏற்பட்ட, பிற்கால இந்தியக் கிறித்தவர்களின் உணவு முறையைப் பார்த்துக் கிறித்தவத்திற்கும் புலால் மறுத்தலுக்கும் தொடர்பில்லை என நினைக்கும் அன்பர்கள் உண்டு.

புலாலை முக்கிய உணவாகக் கொண்ட, ஐரோப்பாவிலிருந்து இந்தியாவிற்கு வந்து நற்செய்திப் பணியாற்றிய பிற்காலக் கிறித்தவர்களுள்ளும், இராபர்ட் டி. நோபிலியும், கான்சுடன்டைன் ஜோசப் பெசுகியும் முறையே தத்துவப் போதகர், வீரமாமுனிவரெனப் பெயர்களை அமைத்துக் கொண்டு புலால் மறுத்து வாழ்ந்தனர்.

சமண சமயத்தில், சிறியவர் முதல் முதியோர் வரை எல்லோருமே புலால் மறுத்து வாழவேண்டுமென்ற கட்டாயமுண்டு. புலாலுண்ணுகிற எவரும் சமணராய் இருத்தல் இயலாது.

இந்த வற்புறுத்தல், உலகில் தோன்றிய வேறு எந்தச் சமயத்திலுமில்லை. கிறித்தவமும் இதற்கு விதி விலக்கன்று. அதே நேரத்தில் புலாலுண்டேயாகவேண்டும் என, வேள்விக் கோட்பாட்டுச் சமயங்கள் வற்புறுத்துகின்றன. வைதிகம், பழம் திராவிடம், யூத சமயம் போன்றவை வேள்விக் கோட்பாட்டை வற்புறுத்தும் சமயங்களாகும். அச்சமயங்களைச் சார்ந்தவர்கள் அச்சமயக் கொள்கைகளின்படிப் புலால் மறுத்து வாழ்தல் இயலாது.

கிறித்தவமோ,வேள்வி மறுப்புக்கோட்பாட்டோடு ஒருவகையில் இணைந்த வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டுச் சமயமாதலால், கிறித்தவத்தில் சமயத்தின் பெயரால் உயிர்க் கொலை செய்யவோ புலாலுண்ணவோ வழியே இல்லை.

ஆகவே, உயிர்க்கொலை செய்வதையும் புலாலுண்ணுவதையும், தடைசெய்யும் கடவுள் மறுப்புக் கோட்பாடுடைய சமண பௌத்த

சமயங்களைப் போன்று கிறித்தவம், கடவுட்கோட்பாடு-வேள்வி நிறைவேற்றக் கோட்பாடு இவற்றின் அடிப்படையில், வேள்வியையும் புலாணுணவையும் சமயத்திலிருந்து நீக்கிவிட்டது.

ஆனால், அன்றாட வாழ்க்கையில் மக்கள் அனைவருக்கும் பொதுச்சட்டமாகச் சமண சமயத்தைப் போன்று, கிறித்தவம் புலால் மறுத்தலைக் கட்டளையிடவில்லை.

இத்தகைய நிலைமையினால், துருவப் பகுதிகளில் வாழும் எசுகிமோக்களும் லாப்லாந்தியர்களும் சமண சமயத்தைப் பின்பற்ற இயலாது. சமயத்தின் பெயரால் நடைபெற்ற கொலையையும் புலாணுணவையும் நீக்கிவிட்ட கிறித்தவத்தைப் பின்பற்ற இயலும். விவிலியம் கூறும் புலால் மறுத்தலுக்கும் சமண சமயம் கூறும் புலால் மறுத்தலுக்கும் மிகுந்த வேறுபாடு உண்டு.

ஓரறிவுடைய நெல் முதல் ஆறு அறிவுடைய மனிதன் ஈறாக, உயிர்கள் யாவும் சமம் என்பது சமண சமயக் கொள்கை. இக்கொள்கையின்படி விலங்குகளைக் கொல்லக் கூடாது என்பதுடன் விதை, தானியம், புற்பூண்டு இவைகளையும் கொல்லுவது தவறாகும். ஓரறிவுடைய விதை, புற்பூண்டுகளை உண்ணாமல் எந்த மனிதனும் உயிர் வாழ்தல் இயலாது என்பது யாவரும் ஏற்றுக் கொள்ளக் கூடியது. இதனாலேயே, சமண சமயத்தில் எதையும் உண்ணாமல் நாற்பது நாள் 'சல்லேகனை' என்னும் நோன்பிருந்து உயிர் விடுதல் (தற்கொலை) சிறப்பாகவும் மிக உயர்ந்ததாகவும் போற்றப்படுகின்றது.

கிறித்தவம் எல்லா உயிர்களையும் சமமாகக் கருதவில்லை. கடவுளின் சாயலாகப் படைக்கப்பட்ட மனிதன், படைப்புகளில் சிறந்தவன் என்பது கிறித்தவ நம்பிக்கை. மனிதனைப் படைப்பதில் கடவுள் அதிகக் கவனம் செலுத்தினார் எனவும், மனிதன் ஒருவனுக்கே ஆன்மா உண்டு எனவும் கிறித்தவம் நம்புகிறது. மனிதனோடு மகிழ்ச்சியாக இருக்கும்படியாகவும் மனிதனுடைய ஆட்சிக்கு அடங்கியிருக்குமாறும் மற்ற விலங்குகள் யாவும் படைக்கப்பட்டன.

இறைவனும் மனிதனும் உயிரினங்களும் ஏகமாய் மகிழ்ந்திருப்பதே, ஏதேன் வனத்தின் இன்பநிலை எனக் காட்டப்படுகிறது.

இறைவன் மனிதனையும் விலங்குகளையும் மற்றவைகளையும் படைத்ததன் நோக்கம் இதுவே. விவிலியத்தில் இதுவே முதல் நிலை.

"பின்னர் கடவுள்: நமது சாயலாகவும், பாவனையாகவும் மனிதனைப் படைப்போமாக, அவன் கடல் மீன்களையும், வானத்துப் பறவைகளையும், மிருகங்களையும், பூமி முழுவதையும் பூமியின்மீது அசைவன, ஊர்வன யாவற்றையும் ஆளக்கடவன் என்றார். இவ்வாறு கடவுள் மனிதனைத் தமது சாயலாகப் படைத்தார். தெய்வச் சாயலாகவே அவனைப் படைத்தார். ஆணும் பெண்ணுமாக அவர்களைப் படைத்தார். கடவுள் அவர்களை ஆசீர்வதித்து, நீங்கள் பலுகிப் பெருகிப் பூமியை நிரப்பி அதனைக் கீழ்ப்படுத்துங்கள். கடல் மீன்களையும், வானத்துப் பறவைகளையும், பூமியின்மீது அசைந்து உலாவும் உயிரினங்கள் அனைத்தையும் ஆண்டுகொள்ளுங்கள் என்றார். மேலும் கடவுள் இதோ பூமியின்மீது விதை தரும் புற்பூண்டுகள் எல்லாவற்றையும், தத்தம் இனத்தின்படி தம் விதைகளைக் கொண்டிருக்கும் வித விதமான மரங்களையும் உங்களுக்கு உணவாகத் தந்துள்ளோம்; மேலும் பூமியில் உயிர்வாழும் விலங்குகள், வானத்தில் பறக்கும் பறவைகள், உயிரோடு பூமியில் அசையும் எல்லாவற்றிற்கும் அதே புற்பூண்டுகளை உணவாகக் கொடுத்தோம் என்றார். அதுவும் அப்படியே ஆயிற்று. அப்போது கடவுள் தாம் படைத்த எல்லா வற்றையும் நோக்கினார். அவை எல்லாமே மிகவும் நன்றாய் இருந்தன."[1]

## இரண்டாம் நிலை

மனிதன் கடவுளின் கட்டளையை மீறினான்.[2] பாவம் உலகில் நுழைந்தது. அதனால் மரணமும் உலகில் நுழைந்தது. உலகில் ஓர் உயிர் மரணமடைந்த காரணத்தால், அதன் தோல் அவர்களுக்கு ஆடையாகக் கொடுக்கப்பட்டது.[3] இதைத் தொடர்ந்து கொலையும் பூமியில் நுழைந்தது. ஆதாமின் மக்களில் மூத்தவன் இளையவனைக் கொன்றான்.[4] அதைத் தொடர்ந்து புலால் உணவும் பூமியில் நுழைந்தது.[5] நோவா பேழையிலிருந்து இறங்கியபோது, புலா லுணவு உண்ணுகிறவனாக மாறியிருந்தான். மனிதர்களும் விலங்கு களும் அன்போடு பழகிய நிலை மாறி, மனிதர்களுக்கும் விலங்கு களுக்கும், விலங்குகளுக்கும் விலங்குகளுக்கும் பகையுண்டாயிற்று. ஒன்றையொன்று கொன்று சாப்பிடுவனவாக மாறின.[6]

1. ஆதியாகமம், 1:26-31.
2. மேற்படி, 3:6.
3. மேற்படி, 3:21.
4. மேற்படி, 4:8.
5. மேற்படி, 9:3.
6. ஆதியாகமம், 9: 1-7.

தான் தின்பதைக் கடவுளுக்குப் படைக்க விரும்பிய மனிதன், தான் உணவுக்காகக் கொல்லும் விலங்குக் கொலையைக் கடவுள் அங்கீகரிக்குமாறு வேண்டினான்.

மனிதனுடைய இதயச் சிந்தனைகள், இளமை முதல் தீவினை யிலே நாட்டங்கொண்டு இருக்கும் நிலைக்காக வருந்தி, இயேசு கிறித்துவின் சிலுவைப் பலியின் மூலமாக உலகை மீட்டுக் கொள்வதை உளங்கொண்ட கடவுள், அதற்கு முன் அடையாளமாக விளங்கிய, கடவுளின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிதலோடு கூடிய இத்தகைய பலிகளை ஏற்றுக்கொண்டார்.

"அன்றியும், மிருகங்களும், பூமியின்மேல் ஊர்வனவாகிய எல்லா உயிர்களும் இனம் இனமாகப் பெட்டகத்தைவிட்டு வெளியே வந்தன. பின் நோவா ஒரு பீடத்தைக் கட்டிக்கொடுத்தான். ஆண்டவர் அவற்றை நறுமணமுள்ள பரிமளமாக ஏற்றுக்கொண்டு நாம் இனி மனிதன் பொருட்டுப் பூமியை ஒருபோதும் சபிக்க மாட்டோம். ஏனென்றால், மனிதனுடைய இதய சிந்தனைகள் இளமை முதல் தீமையின் மீதே நாட்டம் கொண்டுள்ளன. ஆதலால், இப்பொழுது செய்ததுபோல் இனி நாம் உயிரினங்கள் யாவையும் மறுமுறை அழிக்கமாட்டோம். பூமி இருக்குமட்டும் விதைப்பும் அறுப்பும் குளிரும் வெப்பமும் கோடைக்காலமும் குளிர்காலமும், இரவும், பகலும் ஒழிவதில்லை என்று திருவுளம்பற்றினார்."[7]

நோவா பேழையிலிருந்து இறங்கியவுடன் கடவுளுக்குப் பலி யிட்டான். இங்கே ஒரு குறிப்பு ஆழ்ந்து எண்ணிப் பார்க்கத் தக்கது. கடவுள் அவனைப் பலியிடும்படி கூறினாரா என்னும் வினாவுக்கு, தெளிவாக 'இல்லை' என்றே பதில் கொடுக்க வேண்டியதாயிருக் கிறது. நோவா புலால் உண்ணத் தொடங்கியது எங்கே என்னும் வினாவுக்கு, 'ஓராண்டு முழுவதும் தண்ணீரிலே மிதந்துகொண் டிருந்த பேழையில்' என்னும் பதிலைத் தவிர வேறு விடை சொல்ல வழியில்லை. ஏனெனில், பேழையில் ஏறுவதற்கு முன்னால், மனிதர்கள் விலங்குகளைக் கொன்றதாகவோ புலால் உண்ட தாகவோ விவிலியத்தில் குறிப்பு இல்லை. ஓராண்டு முழுவதும் பேழையிலிருந்தபொழுது, உணவுப் பற்றாக் குறையினால், மனிதன் விலங்குகளைக் கொன்று தின்னத் தொடங்கினான் என்றே எண்ண வேண்டியுள்ளது. அதனால்தான் பேழையிலிருந்து இறங்கியவுடன் விலங்கைக் கொன்று பலியிட்டான்.

---

7. *ஆதியாகமம், 8: 19-22.*

ஆதாமின் கீழ்ப்படியாமையின் விளைவு, நோவாவில் நிறைவுறுகின்றது. இயேசு கிறித்துவின் கீழ்ப்படிதல் நிறைவின் முன்னோட்டம், நோவாவில் தொடங்குகிறது. இதுவே புலால் உணவும் பலியும் சந்தித்த நிலையாகும். புலால் உணவு கீழ்ப்படியாமையின் விளைவு. பலி கீழ்ப்படிதலின் தொடக்கம். இந்த இரண்டையும் இணைக்கும் பாலமாக நோவாவின் பலி விளங்குகிறது.

கீழ்ப்படியாமையின் விளைவாகிய புலாலுணவும், கீழ்ப்படிதலின் விளைவாகிய பலியும் நோவாவால் இணைக்கப்படுகின்றன. ஆதாமின் கீழ்ப்படியாமையினால் உலகத்தில் நுழைந்த புலாலுணவு, இயேசு கிறித்துவின் கீழ்ப்படிதலாகிய பலியினால், உலகை விட்டு நீங்குவதற்கு வாய்ப்பைப் பெறுகிறது. ஆகவே, புலால் உணவு என்பது கீழ்ப்படியாமையாகிய பாவத்தின் விளைவு என்பதும், அது இயேசு கிறித்துவின் கீழ்ப்படிதலாகிய பலியினால் நீக்கப்படுகிறது என்பதும், விவிலியத்தில் விளக்கப்படுகிறது.

"காளை மாடுகள், ஆட்டுக் கடாக்கள் இவற்றின் இரத்தம் பாவங்களைப் போக்க முடியாது."[8]

"ஒவ்வொரு குருவும் நாள்தோறும் இறைப்பணி ஆற்றுகையில் திரும்பத் திரும்ப அதே பலிகளை ஒப்புக்கொடுத்துவிட்டு வருகின்றனர். அவையோ பாவங்களை ஒருபோதும் போக்கிவிட இயலாதவை."[9]

"ஒரே முறையில் எக்காலத்துக்குமே ஒப்புக்கொடுக்கப்பட்ட இயேசுகிறித்துவினுடைய உடலின் பலியால் நாம் பரிசுத்தராக்கப் பட்டோம்."[10]

"ஒரே ஒருவனின் (ஆதாம்) குற்றம் எல்லா மனிதருக்கும் தண்டனைத் தீர்ப்பாய் முடிந்ததுபோல ஒரே ஒருவரின் (இயேசு கிறித்து) ஏற்புடைய செயல், எல்லா மனிதருக்கும் வாழ்வளிக்கும் விடுதலைத் தீர்ப்பாய் மலர்ந்தது. ஏனெனில், ஒரு மனிதனின் கீழ்ப்படியாமையால் அனைவரும் பாவிகளாவதுபோல், ஒருவரின் கீழ்ப்படிதலால் அனைவரும் இறைவனுக்கு ஏற்புடையவர்களாவார்கள்."[11]

---

8. -எபி. 10 : 4.
9. -எபி. 10 : 11
10. -எபி. 10 : 10.
11. உரோ. 5: 18-19.

**மூன்றாம் நிலை**

நோவாவினால் தொடங்கப்பட்ட பலியும் புலால் உணவும் பின் வருவதற்கு முன்னடையாளமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட போதிலுங் கூட, உயிர்க்கொலையும் புலாலுணவும் மறைமுகமாகக் கண்டிக்கப் படுதல் விவிலியத்தின் மூன்றாம் நிலையாகும்.

புலால் உண்டே ஆகவேண்டும் என விரும்புகிறவர்களுக்கு, 'ஊர்ந்து செல்லுவனவற்றை உண்ணக் கூடாது' எனத் தடை விதிக்கப் படுகிறது.

''பூமியின்மேல் ஊர்கிற உயிர்களெல்லாம் உங்களுக்கு வெறுக்கத் தக்கனவாய் இருக்கக் கடவன. அவற்றை உண்ண லாகாது. அவை நான்கு காலால் நடந்தாலும் சரி, வயிற்றால் நகர்ந்தாலும் சரி, கால்கள் உடையனவாயினும் சரி அல்லது தரையில் ஊர்ந்தாலும் சரி, அவ்வித உயிர்களை நீங்கள் உண்ண வேண்டாம். ஏனென்றால் அவை வெறுக்கத் தக்கனவாய் இருக் கின்றன. உங்கள் ஆன்மாக்களை அசுத்தப்படுத்தாதீர்கள்.'' [12]

ஊர்ந்து செல்லுவனவற்றை உண்ணக்கூடாது என விலக்கிய துடன், மிருகங்களும் சுத்த மிருகங்கள், அசுத்த மிருகங்கள் என இரண்டாகப் பிரிக்கப்பட்டு, அசுத்த மிருகங்களை உண்ணக்கூடா தென்னும் கட்டளையும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

''நீங்களும் அசுத்தமான விலங்குக்கும், சுத்தமான விலங் குக்கும், அசுத்தமான பறவைக்கும், சுத்தமான பறவைக்கும் வேறுபாடு காணக் கற்றுக்கொள்ளுங்கள். நான் உங்களுக்குத் தீட்டாக எண்ணச் சொல்லி விலக்கின மிருகங்களாலும், பறவை களாலும், மண்ணில் நடமாடுகிற எவ்வகை மிருகங்களாலும் உங்கள் ஆன்மாவை அசுத்தப்படுத்தாதீர்கள்.''[13]

சுத்த மிருகங்கள், அசுத்த மிருகங்கள் என்னும் பாகுபாடு எதன் அடிப்படையில் அமைந்துள்ளது என்று நோக்கினால், அது பிரிக்கப் பட்டதற்கான அடிப்படை நோக்கத்தைப் புரிந்துகொள்ளலாம்.

மற்ற விலங்குகளைக் கொன்று தின்னாத - செடி, கொடி, புல், பூண்டுகளாகிய இயற்கை உணவையே உண்டு, அன்போடு நடந்து

12. லேவி. 11: 41-45.

13. லேவி. 20: 25-26.

கொள்பவைகளாகிய-ஏதேன் தோட்டத்து இயல்பைக் கொண்டவை 'சுத்த மிருகங்கள்' எனக் கொள்ளப்படுகின்றன. இறைவனுக்குப் பலிப்பொருளாக இவைகளே ஏற்றுக்கொள்ளப்படுகின்றன.

இதன்வழி இறைத்தொண்டு புரிவதற்கு, ஏதேன் தோட்ட இயல்புள்ள அன்புள்ளம் கொண்ட, இயற்கையுணவு உண்ணும் மனிதர்களே ஏற்றவர்கள் என்னும் கருத்து மறைமுகமாக வற்புறுத்தப்படுகிறது.

மற்ற உயிரினங்களைக் கொன்று தின்னும் மிருகங்கள் அசுத்த மானவை என ஒதுக்கப்படுகின்றன. மிருகங்களைப் பிரிப்பது போன்று, மனிதர்களையும் பிரிக்க இப்பாகுபாடு பயன்படும்.

சுத்தமான மிருகங்களிலும் தானாகச் செத்தவைகளை உண்ண வேண்டா எனக் கூறுவதன் வாயிலாகப் புலாலுணவு இன்னமும் கட்டுப்படுத்தப்படுகிறது.

''தானாய் இறந்து போனதொன்றையும் உண்ணலாகாது.''[14]

உயிர்க்கொலை செய்வது தவறு. அது பாவத்தின் விளைவு எனக் காட்டப்பட்டபோதிலும், உயிர்க்கொலை செய்து உண்டேயாக வேண்டும் என்று இருக்கிறவர்களுக்கு, 'இரத்தத்தை உண்ணக் கூடாது' எனத் திட்டவட்டமான கட்டளை கொடுக்கப்படுகிறது.

''எவனேனும் இரத்தத்தை உண்டிருந்தால், அவன் ஆன்மாவிற்கு எதிராக நாம் நமது முகத்தை நிலைப்படுத்தி அவனைத் தன் இனத்திலிருந்து அழிவுண்டுபோகச்செய்வோம். ஏனென்றால், உடலின் உயிர் இரத்தத்தில் அமைந்துள்ளது.''[15]

மனிதனைப் பார்த்து, 'மனிதனே! நீ உயிரைக் கொல்லாதே' எனக் கெஞ்சுவது போலவும், உயிர் இரத்தத்தில் உள்ளது ஆகையால், இரத்தத்தை உண்டால் நீ நிச்சயமாய் அழிக்கப் படுவாய் எனக் கண்டிப்பதைப் போலவும் காணப்படுகிறது.

---

14. ''தானாய் இறந்து போனதொன்றையும் உண்ணலாகாது'' உபாகமம், 14-21.

15. லேவியரா. 17: 10-11.

**நான்காம் நிலை**

உயிர்க்கொலை செய்வது கடவுளுக்குத்தானே! கடவுளுக்குப் பலியிடுவதற்காகவே உயிர்க்கொலை செய்ய வேண்டியிருக்கிறது, எனச் சாக்குப் போக்குக் கூறுகிற நிலைக்கு விவிலியம் கூறும் பதில், ''நாம் விரும்புவது பலியை அன்று; அன்பையே நாம் விரும்புகின்றோம்; தகனபலிகள் நமக்கு வேண்டுவதில்லை; கடவுளை அறியும் அறிவே நாம் விரும்புவது''[16] என்பதாகும்.

''ஆயிரக்கணக்கான ஆட்டுக்கடாக்கள் மேலும், எண்ணெய் பெருக்கெடுத்தோடும் பத்தாயிரம் ஆடுகள் மேலும் ஆண்டவர் விருப்பங் கொள்வாரோ? மனிதா! நல்லது எது என உனக்குக் காட்டியிருக்கிறாரே. நீதியோடு நடத்தல், அன்பு கூர்தல், உன் கடவுள் முன்னிலையில் தாழ்ச்சியோடிருத்தல் இவையன்றி வேறெதை ஆண்டவர் உன்னிடம் கேட்கிறார்.''[17]

ஆண்டவரே! பலிகளில் நீர் இன்பம் கொள்ளுவதில்லை. தகனபலி கொடுத்தாலும் அதை நீர் ஏற்பதில்லை. இறைவா! நான் உமக்குச் செலுத்தவேண்டிய பலி நொறுங்கிய உள்ளமே: தாழ்வுற்று நொறுங்கிய உள்ளத்தை நீர் புறக்கணிப்பதில்லை.''[18]

ஆண்டவர் தகனபலிகளையும் வேறு பலிகளையுமா ஆசிக்கிறார்? அதைவிட 'மனிதன் ஆண்டவரின் குரல் சத்தத்திற்குக் கீழ்ப்படிய வேண்டும்' என்று ஆசிக்கிறாரன்றோ? பலிகளைக் காட்டிலும் கீழ்ப்படிதலே மேலானது.''[19]

கீழ்ப்படியாமையின் விளைவாகவே மரணம் வந்தது. மரணம் வந்தமையால் கொலை நடைபெற்றது. கொலையின் தொடர்ச்சியாகப் புலால் உணவு பிறந்தது.

கொலையும் புலாலுணவும் பலியில் இணைக்கப்பட்டன. கீழ்ப்படிதலை வெளிக்காட்டவே பலி உலகில் தோன்றி, அது கடவுளாலும் பின்வருவதற்கு முன்னடையாளமாக ஏற்றுக்கொள்ளப் பெற்றது. கீழ்ப்படிதல் இல்லாத பலி, கடவுளுக்கு உகந்ததன்று

---

*16. ஓசி. 6:6.*

*17. மீகா. 6: 6-8.*

*18. சங். 51: 16-17.*

*19. 1 சாமு. 15:22.*

என ஒதுக்கப்பட்டது. ஆதாமின் கீழ்ப்படியாமையின் காரணமாக உலகில் தோன்றிய பலியும் புலாலுணவும், இயேசுபெருமானின் கீழ்ப்படிதலால் உலகைவிட்டு நீக்கப்பெற்றமை இதற்கு அடுத்த ஐந்தாம் நிலையாகும்.

**ஐந்தாம் நிலை**

கீழ்ப்படியாமையாகிய பாவத்தின் விளைவுகளான மரணம், கொலை, புலால் முதலியன கீழ்ப்படிதலாகிய எக்காலத்துக்குமுரிய பலியினால் நீக்கப்படுகின்றன.

''கடவுள் தன்மையில் விளங்கிய (கிறித்து) அவர், கடவுளுக்கு இணையாயிருக்கும் நிலையை விடாமல் பிடித்துக்கொண்டிருக்க வேண்டியதொன்றாகக் கருதவில்லை. ஆனால், தம்மையே வெறுமையாக்கி அடிமையின் தன்மை பூண்டு, மனிதருக்கு ஒப்பானார். மனித உருவில் தோன்றி, தம்மைத் தாழ்த்திச் சாவை ஏற்கும் அளவுக்கு - அதுவும் சிலுவைச் சாவையே ஏற்கும் அளவுக்குக் கீழ்ப்படிந்தவரானார்.''[20]

''பலிகள், காணிக்கைகள், தகனபலிகள், பாவப்பரிகாரப் பலிகள் இவற்றையெல்லாம் நீர் விரும்பவில்லை. இவை உமக்கு உகந்தவையாய் இல்லை என்று முதலில் கூறுகிறார். பின்பு இதோ உமது திருவுளத்தை நிறைவேற்ற வந்துவிட்டேன் என்கிறார். பின்னையதை நிலைக்கச் செய்ய முன்னையதை எடுத்துவிடுகிறார். இந்தத் திருவுளத்தால், ஒரே முறையில் எக்காலத்துக்குமே ஒப்புக் கொடுக்கப்பட்ட இயேசு கிறித்துவினுடைய உடலின் பலியால் நாம் பரிசுத்தமாக்கப்பட்டோம்.''[21]

இயேசு கிறித்துவின் பலியினால், பரிசுத்தராக்கப்பட்டுள்ள மக்கள் கீழ்ப்படியாமையால், ஏதேன் தோட்டத்திலிருந்து விரட்டப் பட்ட நிலையிலிருந்து மாறி மரணம், கொலை, புலால் அற்ற ஏதேன் தோட்ட நிலைக்குத் திரும்பும் வாய்ப்பைப் பெற்றுள்ளனர்.

''ஒரே ஒருவரின் (ஆதாம்) குற்றம் எல்லா மனிதருக்கும் தண்டனைத் தீர்ப்பாய் முடிந்தது போல, ஒரே ஒருவரின் (இயேசு கிறித்து) ஏற்புடைய செயல் எல்லா மனிதருக்கும் வாழ்வளிக்கும் விடுதலைத் தீர்ப்பாய் மலர்ந்தது. ஏனெனில், ஒரு மனிதனின் கீழ்ப் படியாமையால், அனைவரும் பாவிகளாவதுபோல், ஒருவரின் கீழ்ப்

---

*20. பிலிப். 2:1-8.*

*21. எபி. 10: 8-10.*

படிதலால், அனைவரும் இறைவனுக்கு ஏற்புடையவர்களா வார்கள்.[22]

ஆதாமின் கீழ்ப்படியாமையாகிய பாவத்தால் ஏற்பட்ட மரணம், கொலை, புலால் உணவு ஆகிய மூன்றிலிருந்தும் இயேசு கிறித்துவின் கீழ்ப்படிதலாகிய பலியால், முழு விடுதலை உறுதி செய்யப் பட்டுள்ளது.

ஆகவே, அவரை ஏற்றுக்கொண்டவர்களுக்கு, உயிர்களைக் கொலை செய்ய வேண்டிய அவசியமோ பலியிட வேண்டிய அவசியமோ புலால் உண்ண வேண்டிய அவசியமோ இல்லாது நீங்கியது. இவ்வகையில் பலியிட வேண்டிய பழைய உடன்படிக்கை யிலிருந்து நீங்கிக் கொலை,பலி,புலால் அற்ற புதிய உடன்படிக்கை ஏற்பட இயேசுகிறித்துவின் பலி காரணமாயிற்று.

''முந்தின உடன்படிக்கையின் காலத்தில் செய்யப்பட்ட குற்றங்களிலிருந்து மக்களை விடுவிக்கக் கிறித்து இறந்தார். இங்ஙனம் சாவொன்று நிகழ்ந்துள்ளதால், அழைக்கப்பட்டவர்கள் புதிய உடன்படிக்கையால், வாக்களிக்கப்பட்ட முடிவில்லா உரிமையைப் பெற முடிந்தது. இவ்வகையில் அவர் புதிய உடன் படிக்கையின் இணைப்பாளராக இருக்கிறார்.''[23]

கிறித்துவின் வழியில் புதிய உடன்படிக்கையாகிய பலியை ஏற்றுக்கொண்டு, கிறித்துவின் அடியாராக மாறியவர்கள், உயிர்க் கொலை செய்து பலியிட வேண்டிய அவசியமோ பலியிட்டதை உண்ணும்-புலால் உணவு கொள்ள வேண்டிய அவசியமோ இல்லாமல் நீங்கினர். ஆகவே, கிறித்தவ சமயத்தைச் சார்ந்த எவரும், சமயத்தின் பெயரால் உயிர்க்கொலை செய்து பலியிடவோ புலால் உண்ணவோ இடமில்லாதபடி கிறித்து அவர்களை விடுதலை யாக்கிவிட்டார் என்பது கிறித்தவ நம்பிக்கை.

கிறித்தவர்கள் மரணம், கொலை, புலால் மூன்றும் இல்லாத ஏதேன் தோட்ட இன்ப வாழ்க்கை நடத்துவதற்கு, எவ்வித இடையூறுமில்லை. அவ்வாறு அவர்கள் வாழவேண்டும் என்பதே விவிலியத்தின் விளக்கமாகவும் இருக்கின்றது. பரிசுத்தராவதற்கு அழைக்கப்பட்டவர்கள், பரிசுத்த வாழ்வு வாழவேண்டும் அன்றோ?

---

22. உரோ. 5:18-19.

23. எபி. 9:15.

"முன்பு நீங்கள் அறியாமையில் உழன்றபோது உங்கள் நடத்தை, இச்சைகளுக்கு ஏற்றதாய் இருந்தது. அப்படி நடவாமல், உங்களை அழைத்த இறைவன் பரிசுத்தராய் இருப்பதுபோல, நீங்களும் உங்கள் நடத்தையில் முற்றும் பரிசுத்தராயிருங்கள். ஏனெனில், யாம் பரிசுத்தர். ஆகவே, நீங்களும் பரிசுத்தராய் இருங்கள்"[24] என எழுதப்பட்டிருக்கிறது.

கிறித்துவைப் பின்பற்றுகிறவர்கள், தங்கள் நடத்தையில் முற்றும் பரிசுத்தராய் விளங்குவது எவ்வாறு? இதுவே ஆறாம் நிலை.

**ஆறாம் நிலை**

"உங்களை அழைத்த இறைவன் பரிசுத்தராயிருப்பது போல, நீங்களும் உங்கள் நடத்தையில் முற்றும் பரிசுத்தராயிருங்கள்."[25]

இயேசு கிறித்து, இவ்வுலகில், மிக எளிய குடும்பத்தில் பிறந்து, மிக எளிய மக்களிடையே வாழ்ந்தார். அவரைப் பின் பற்றிய மக்களில் பெரும்பகுதியினர், மீன் பிடிக்கும் தொழில் செய்த செம்படவர்கள். இயேசு கிறித்து பிறந்து வாழ்ந்த யூத குல மக்கள், இறைவனுக்குப் பலியிட்டுப் புலால் உண்ணக் கூடிய வர்கள். ஆகவே, அவர் வாழ்ந்த சூழலில் இருந்த மக்கள், மீன் உணவையும் புலால் உணவையும் சாதாரணமாக உண்டு வாழ்ந் தனர், இயேசு கிறித்து கூறிய உவமையிலும் அவர் மக்களுக்கு அளித்த உணவிலும் இந்தச் சாதாரண உணவுகளை அவர் நீக்க வில்லை. ஐந்து அப்பம் இரண்டு மீனைக் கொண்டு ஐயாயிரம் பேர்களுக்கு உணவளித்தார்.

ஆனால், ஒரு குறிப்பு இங்கு ஆழ்ந்து நோக்கத் தக்கது. அவர் இந்த உலகத்தில் உயிர் வாழ்ந்த காலத்தில், சிலுவை மரணம் வரை, மீன் உணவையோ புலால் உணவையோ உண்டதாக யாதொரு குறிப்பும் இல்லை. ஒவ்வொரு யூதனும் 'பஸ்காப் பண்டிகை'யைக் கொண்டாடும் பொழுது, புலால் உண்டேயாக வேண்டும் என்பது யூத மரபு. ஆனால், இயேசு கிறித்து தம்முடைய மாணவர்களோடு, மேல் வீட்டறையில் 'பஸ்கா' உணவை உட்கொண்டபொழுது, புலால் உண்டதற்கான குறிப்பே இல்லாதது எண்ணிப் பார்க்கத் தக்கதாய் உள்ளது.

24. 1 பேதுரு 1:14-16.

25. 1 பேதுரு 1:15.

'இது என் உடல்', 'இது என் இரத்தம்' என அவர்கள் நினைவு கூரும்படியாக அவர்களுக்கு அவர் கற்பித்தபொழுதும், அப்பமும் திராட்ச ரசமும் அங்கே இருந்தனவாகச் சொல்லப்படு கின்றனவேயல்லாமல், யூத மரபுப்படி ஆட்டுக் குட்டியின் புலால் உணவு அங்கே குறிக்கப் படாதது ஆழ்ந்து நோக்க வேண்டுவதா யுள்ளது. இதிலிருந்து அவர் வாழ்ந்த காலத்தில், தம்மைச் சுற்றி வாழ்ந்த எளிய மக்களின் அன்றாட வாழ்க்கையில், அவர் தலை யிடாமல், தாம் புலால் மறுத்த வாழ்க்கை உடையவராக வாழ்ந் திருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகின்றது.

யூத மரபுப்படி பலியிடப்படும் விலங்கு, மற்ற உயிர்களைக் கொன்று தின்னும் 'அசுத்த மிருக' மாயில்லாமல், புலால் உணவற்ற சுத்த மிருகமாய் இருக்க வேண்டும். அக்கொள்கைக் கிணங்க, சுத்த மிருகத்தின் இடத்தில் பலியான இயேசு கிறித்துவும், புலால் உணவு இல்லாத வாழ்க்கை உடையயராகவே வாழ்ந்திருத்தல் வேண்டும் என்று கொள்ளத் தக்கதாயிருக்கின்றது.

அவரைப் பின்பற்றிய மாணவர்கள், அவர் வாழ்ந்த பொழுது, அவர் கூறியவைகளை முழுமையாகப் புரிந்து கொள்ள இயலா நிலையில் இருந்தனர். "என் உடலை உண்டு, என் இரத்தத்தைப் பானம் பண்ண வேண்டும்" என்று அவர் கூறிய பொழுது, அதைப் புரிந்து கொள்ள இயலாமல் பலர் அவரை விட்டு விலகிப் போய் விட்டனர். "நீங்களும் போய்விட மனதாயிருக்கின்றீர்களோ"? என்று அவர் தமக்கு நெருக்கமாயிருந்த மாணவர்களை வினவ வேண்டிய நிலை ஏற்பட்டது. அவரைப் பின்பற்றிய மாண வர்களும், அவர் உலக முழுவதையும் மீட்க வந்த ஆண்டவர் என்பதை அறிந்து-உணர்ந்து பின்பற்றினார்கள் என்று சொல் வதற்கு இயலாது. அவர் அந்த நாட்டின் அரசராகக்கூடும் என்றும், தங்களுக்குச் சிறந்த பதவி கிடைக்கும் என்று எதிர் பார்த்தும், அவரைப் பின்பற்றினர் எனலாம்.

அதனால், அவர்களுக்குள் தங்களில் யார் பெரியவன்? என்ற போட்டி அடிக்கடி ஏற்படலாயிற்று. அவர் முன் குறித்தவாறு ஏற்ற காலத்தில் சிலுவை மரணத்தை அடைந்த பொழுது, அவரைப் பின்பற்றியவர்கள் பயந்து - ஒளிந்து மறைந்துவிட்டனர். அவர் சிலுவையில் அறையப்பட்டபொழுது ஒரு சிறு கிளர்ச்சிகூட எழுந்ததாகக் குறிப்பு இல்லை.

ஆகவே, அவருடைய சிலுவை மரணம் வரையுமுள்ள அவருடைய வாழ்க்கை, சாதாரண எளிய மக்களுக்கிடையே வாழ்ந்த வாழ்க்கையாகும். அவர்களுடைய உள்ளத்தில் அவர்கள்

ஏற்றுக் கொள்ளக்கூடிய வகையில், அப்போதைக்கப்போது கருத்துகளை வெளியிட்டு வந்தாரேயன்றி, அவர்களுடைய உணவுப் பழக்கத்தில் தலையிட வேண்டிய நிலைமை ஏற்பட்டதாகத் தெரியவில்லை.

இயேசு கிறித்துவின் உயிர்த்தெழுதலுக்குப் பின்னர், தங்கள் மேல் பரிசுத்த ஆவி பொழியப்பட்ட காரணத்தால், கோழைகளெல்லாரும் வீரர்களாக யாறினதாகப் பார்க்கிறோம். உலக வரலாறும் சமய வரலாறும் மாற்றம் அடைவதை ஆவியின் அருள் பெற்றோர் உணரலாயினர். இயேசு கிறித்துவின் சிலுவைப் பலியால், பாவ நீக்கம் பெற்றுப் புது வாழ்வைத் துய்க்கும் இன்ப நிலை, இயேசு கிறித்துவின் உயிர்த்தெழுதலுக்குப் பின்னர் ஏற்பட்டதே அன்றி, இயேசு கிறித்து வாழ்ந்த காலத்தில் அவரோடு வாழ்ந்த மக்களிடத்தில் நாம் இதை எதிர்பார்க்க இயலவில்லை.

யூதாசு காட்டிக் கொடுத்ததும், பேதுரு மறுதலித்ததும் தோமா நம்ப மறுத்ததும் பரிசுத்த ஆவி அருளப்படுவதற்கு முற்பட்ட செயல்களாகும். இந்த மூவரும் அவரோடு இருந்த முக்கிய மாணவர்கள். ஆகவே, கிறித்துவின் வாழ்க்கை, கிறித்தவ சமய வாழ்க்கை இவ்விரண்டையும் இணைக்கும் பாலமாக அமைவது பரிசுத்த ஆவியானவர் அருளப்பட்டமையே ஆகும்.

''பரிசுத்த ஆவி உங்கள்மேல் வரும்போது, அவரது வல்லமையைப் பெற்று எருசலேமிலும் யூதேயா முழுவதிலும் சமாரியாவிலும் மண்ணுலகின் இறுதி எல்லை வரைக்குமே, நீங்கள் என் சாட்சிகளாயிருப்பீர்கள்''[26] என்றார்.

இதன்படி பரிசுத்த ஆவியைப் பெற்ற ஒருவரே, வல்லமையோடு கிறித்துவுக்குச் சான்றாக விளங்க இயலும் என்றாகிறது. பரிசுத்த ஆவியைப் பெற்று வல்லமையோடு சான்று கூறும் கூட்டத்தில், பல்வேறு நிலையிலிருந்த மக்கள் வந்து இணைந்தனர். அவர்களுடைய ஆவியின் வளர்ச்சி, எல்லோருக்கும் ஒரே அளவாக இருந்தது என்று சொல்ல இயலாது. ஆவியில் மிக வளர்ச்சி பெற்றவர்களும், ஆவியில் குழந்தைகளும் ஒன்றாய் இணைந்தனர். ஆதித்திருச்சபையில் இயேசு கிறித்துவின் உயிர்த்தெழுதலுக்குப் பின்னர், பரிசுத்த ஆவியைப் பெற்று வளர்ந்து வந்த அவர்களுக்கிடையே ஒரு கருத்து வேறுபாடு எழுந்தது.

---

26. அப். 1:8.

கொலை, புலால் அற்ற ஏதேன் தோட்டத்து இயற்கை உணவாகிய மரக்கறி உணவுகளையே, உண்ணவேண்டுமென்று ஒரு கூட்டம் முயன்றது. பிறிதொரு கூட்டம், அப்படி நினைத்தவர்களை அலட்சியப்படுத்தியது. மரக்கறி உணவுகளையே உண்டவர்களை அற்பமாக எண்ணினர். இவ்வுணவு வேறுபாட்டு வகை பற்றிக் கருத்துத் தெரிவிக்குமாறு தூய பவுலடிகளிடம் முறையிட்டுக் கொண்டனர். அவர்களுடைய முறையீட்டுக்குத் தீர்ப்பாக அமைந்திருப்பதே உரோமர் பதினான்காம் அதிகாரம் ஆகும். இவ்விரு பிரிவுகளில், 'புலால் உண்பவர்கள், புலால் உண்ணாத பிரிவினர் நிமித்தம், புலால் மறுத்து வாழ்வதே நல்லது' என்ற அவருடைய முடிவுரை நோக்கத்தக்கது. மொத்தத்தில் இவ்வதிகாரம், புலால் மறுத்தல் நல்லது எனப் புலால் உண்கின்றவர்களுக்கு அறிவுரை கூறுவதாக அமைந்துள்ளது. எந்த ஒரு சிறிய செயலிலும் மற்றவர்களுக்கு இடறலாய் இருக்கக் கூடாது என்பதைப் பவுல் கீழ்க் காணுமாறு கூறுகின்றனர்:

''நாம் சொல்வது: நீங்கள் உண்டாலும் குடித்தாலும் எதைச் செய்தாலும், எல்லாம் கடவுளின் மகிமைக்கெனச் செய்யுங்கள். யூதருக்கோ கிரேக்கருக்கோ கடவுளின் திருச்சபைக்கோ இடைஞ்சலாய் இராதீர்கள். நானும் அவ்வாறே அனைத்திலும் அனைவருக்கும் உகந்தவனாய் இருக்க முயலுகிறேன். எனக்குப் பயன் தருவதை நாடாமல், பலரும் மீட்படையும்படி அவர்களுக்குப் பயன் தருவதையே நாடுகின்றேன்.''[27]

''நீ உண்ணும் உணவு உன் சகோதரன் மனத்தைப் புண்படுத்தினதால், நீ அன்புநெறியில் நடப்பவன் அல்லன். அற்ப உணவை முன்னிட்டு அவனை அழிவுறச் செய்யாதே. அவனுக்காகக் கிறித்து உயிர் துறக்கவில்லையா? ஆகவே, உங்களுக்கு நன்மையாய் இருப்பது பிறருடைய பழிச்சொல்லுக்கு இடந்தராதிருப்பதாக. ஏனெனில், கடவுளின் அரசு உணவிலும் பானத்திலும் அடங்கியில்லை. கடவுளின் அரசு என்பது, நீதியும் அமைதியும் பரிசுத்த ஆவியில் துய்க்கும் மகிழ்ச்சியுமே. இத்தகைய உள்ளத்தோடு கிறித்துவுக்கு ஊழியஞ் செய்கிறவனே, கடவுளுக்கு உகந்தவன்; மக்கள் மதிப்புக்கு உரியவன். ஆகையால், அமைதிக்கு வழியாய் இருப்பதை நாடுவோமாக. ஒருவர் ஒருவர்க்கு, ஞானவளர்ச்சி தருவதைக் கடைப்பிடிப்போமாக. உணவின்பொருட்டுக் கடவுளின் வேலையைத் தகர்க்கத் துணியாதே. யாவும் தூயவைதாம். ஆனால், இடைஞ்சலுக்கு இடந்தருமானால், உண்பவனுக்கு யாவும் தீயவையே.

27. *1 கொரி 10:31-33.*

உன் சகோதரனுக்கு இடைஞ்சலாயிருக்குமாயின், புலால் உண்பதையோ மது குடிப்பதையோ அதுபோன்ற வேறெதையும் செய்வதையோ செய்யாமல் விடுவது நல்லது.''[28]

இதில் சிலருக்கு ஐயம் ஏற்படலாம். புலால் உண்பது பாவமா? புலால் உண்ணாமலிருந்தால் நல்லது; அவ்வளவுதானே. இதை யெல்லாம் ஏன் வற்புறுத்த வேண்டும்? விசுவாசத்தாலே வரும் உறுதியான மனநிலைதானே முக்கியம் என்று எண்ணலாம். அப்படிப்பட்டவர்களுக்கு விவிலியம் கூறுவது என்ன?

''விசுவாசத்தால் வரும் உறுதியான மனநிலை உனக்கிருந் தால், அதை உன்னோடு வைத்துக்கொள். அது கடவுளுக்குமட்டும் தெரிந்திருக்கட்டும். செய்வது நல்லதென முடிவு செய்தபின், அதைச் செய்யும்போது மனசாட்சியின் குற்றச்சாட்டுக்கு ஆளாகா தவன் பேறுபெற்றவன். நல்லதோ கெட்டதோ என்னும் தயக்கத்தோடு ஒருவன் உண்பானாகில், அவன் தண்டனைத் தீர்ப்புப் பெற்றுவிடுவான். ஏனெனில், அச்செயல் விசுவாசத்தால் வரும் உறுதியான மனநிலையோடு செய்யப்படவில்லை. உறுதி யான மனநிலையோடு செய்யப்படாததெல்லாம் பாவமே.''[29]

'பாவமே' என்று விவிலியம் கூறியிருப்பது எண்ணிப் பார்க்கத் தக்கது. எது பாவம்? நல்லதோ கெட்டதோ என்று தயக்கத்தோடு உண்பது பாவம். தயக்கம் ஏன் வருகிறது?

''உன் சகோதரனுக்கு இடைஞ்சலாயிருக்குமாயின், புலால் உண்பதையோ மது குடிப்பதையோ அதுபோன்ற வேறெதையும் செய்வதையோ செய்யாமல் விடுவது நல்லது''[30] என்பதை அறிந்த பின்னரும்,புலாலின் சுவையை விட்டுவிட மனமற்று, 'அதை விட்டுத் தான் ஆகவேண்டுமா? விடுவது நல்லது என்று தானே கூறப்பட் டிருக்கின்றது' என்னும் மனப்போராட்டத்தோடு ஒருவன் உண்ணத் தொடங்கினால், அது பாவம் என்று தீர்க்கப்படுகின்றது.

வேறோர் இடத்தில், வேறொரு சூழ்நிலையில் பவுல் கீழ்க் காணுமாறு முடிவு எடுக்கின்றார்:

''ஆகையால், நான் உண்ணும் உணவு என் சகோதரனுக்கு இடறலாயிருக்குமாயின், சகோதரனுக்கு இடறல் ஆகாதபடி நான் ஒருபோதும் புலால் உண்ணவே மாட்டேன்.''[31]

---

28. உரேரமர் 14:15-21.
29. உரோமர் 14:22:23.
30. உரோ. 14:21.
31. 1 கொரி. 8:13.

இதன்படி பவுல் தம் வாழ்க்கையில் நடந்தார் என்று நாம் நம்பலாம்.

ஆதித் திருச்சபையில் புலால் மறுத்து வாழவேண்டும் என்ற கொள்கை இருந்தது. இக்கொள்கை திருச்சபையில் உருவாவதற்குக் காரணம் இயேசு கிறித்துவின் சிலுவைப் பலியினால் ஏற்பட்ட பின் விளைவு ஆகும். 'உயிர்களைக் கொன்று பலியிட்டுப் புலால் உண்டே ஆகவேண்டும்' என்ற பழைய யூதசமயத்திலிருந்து, இயேசு கிறித்து பலியாகிவிட்டதால், உயிர்களைக் கொன்று பலியிட்டுப் புலால் உண்ண வேண்டிய அவசியமில்லை என்ற கிறித்தவ சமயம் தோன்றியதுடன், அன்றாட வாழ்க்கையிலும் உயிர்க்கொலை, புலால் உணவு இவைகளை நீக்கிய ஒரு கூட்ட மக்கள் எழுந்தனர். இவர்களுடைய செல்வாக்கு மற்றவர்களையும் பாதித்தது. இப்பாதிப்புப் படிப்படியாகப் புலால் மறுத்தல் வாழ்க்கைக்கு, மற்றவர்களையும் இட்டுச் செல்லுதல் இயல்பு.

**சில விளக்கங்கள்**

இயேசு உயிர்த்தெழுந்த பின்னர், தேனையும் மீனையும் தம் சீடர்கள் கையினின்று பெற்று உண்டதாகக்[32] கூறப்பட்டிருக்கின்றது.

உயிர்த்தெழுந்த இயேசு, அவர்கள் நடுவே நின்று ''உங்களுக்குச் சமாதானம்'' என்றவுடன் அவர்கள் கலங்கிப் பயந்து, ஓர் ஆவியைக் காண்கின்றதாக நினைத்தார்களே அன்றி, அவரை அவர்கள் நம்பவில்லை. அவர் அவர்களை நோக்கி, ''நீங்கள் ஏன் கலங்குகிறீர்கள்? உங்கள் இருதயங்களில் சந்தேகங்கள் எழும்புதல் என்ன? நான்தான் என்று அறியும்படி என் கைகளையும் என் கால்களையும் தொட்டுப் பாருங்கள். நீங்கள் காண்கிறபடி எனக்கு மாம்சமும் எலும்பும் உண்டாயிருக்கிறதுபோல, ஓர் ஆவிக்கு இராதே'' என்று சொல்லி, அவர் தம் கைகளையும் கால்களையும் அவர்களுக்குக் காட்டிய போதிலும் அவர்கள் அப்போதும் நம்ப இயலாதிருந்த காரணத்தால், ''உங்களிடத்தில் புசிக்கிறதற்கு ஏதாவது உண்டா?'' என்று அவர் வினவினார். இந்த நிலையில், தம்மை அவர்களுக்கு உயிர்த்தெழுந்தவராகக் காட்டவேண்டிய கட்டாயச் சூழலில் ஏதாவது ஒன்றைத் தின்று காட்ட விரும்பினார்.

அவர்கள் பழைய பிரமிப்பு நிலையிலேயே என்ன செய்கிறோம் என்பதை அறியாத நிலையில், அவருக்குப் பொரித்த மீன் கண்டத்

---

32. லூக். 24:42-43.

தையும் தேன்கூட்டுத் துணிக்கையையும் கொடுத்தார்கள். 'அவர் அவைகளை வாங்கி அவர்களுக்கு முன்பாகப் புசித்துக் காட்டினார்' என விவிலியம் குறிக்கின்றது.

அவர்கள் கொடுத்தவைகளில் தேன்கூட்டுத் துணிக்கையை மட்டும் அவர் புசித்து இருக்கலாம். அல்லது மீனையும் தேனையும் சேர்த்துப் புசித்துக் காட்டியுமிருக்கலாம். இங்கே கலங்கி நின்ற சீடர்களுக்குத் தம்மை உயிருள்ளவராகக் காட்டவேண்டிய கட்டாய விருப்பத்தில், தம்மைத் தொட்டுப் பார்க்கும்படி கூறியும், மற்றும் பல விதங்களில் முயன்றும் அவர்கள் சந்தேகத்தைப் போக்க இயலாமல், தம்மை உயிருள்ளவராகக் காட்டுவதற்கு, அவர்கள் கொடுத்தவைகளை வாங்கித் தின்றுகாட்டவேண்டிய சூழ்நிலையில், செயல்பட்டுள்ளார் எனலாம்.

''வாய்க்குள் நுழைவது மனிதனை மாசுபடுத்துவதில்லை. வாயிலிருந்து வெளிவருவதே மனிதனை மாசுபடுத்தும்.''[33]

இயேசுபெருமானின் மாணவர்கள், கைகழுவாமல் உண்டதைக் கண்ட பரிசேயர்கள், அவர்களைக் குறை கூறினார்கள். கை கழுவாமல் சாப்பிடும்பொழுது, கையிலுள்ள அழுக்கு உணவோடு வாய்க்குள்ளே செல்லுவதற்கு வாய்ப்புண்டு. இது அவர்களை அறியாமலே உள்ளே செல்லக்கூடிய ஒன்றாகும்.

இதனால் ஏற்படும் பாதிப்பைவிட, தீய எண்ணத்தால் தோன்றும் தீமையான பேச்சு, செயல் இவைகளே அதிகப் பாதிப்பை ஏற்படுத்தும். கை கழுவாமல் சாப்பிடுவதால் யாரும் மாண்டுபோய்விடுவதில்லை. ஆனால், தீய உள்ளத்தினின்று புறப்படுபவை, எத்தனையோ அழிவுகட்குக் காரணமாய் அமைந்துவிடுகின்றன. இவைகளை விளக்கிக் காட்டவே உள்ளே போவதொன்றும் தீட்டுப்படுத்தாது; உள்ளத்தினின்று புறப்படுவதே தீட்டுப்படுத்தும் எனக் கூறினார்.

**அடித்துப் புசி**

கொர்நேலியு வீட்டிற்குக் கடவுள் பேதுருவை அனுப்புவதற்கு ஆயத்தமாக, அவனுக்கு ஒரு தரிசனத்தைக் கொடுக்கின்றார்.[34] அதிலே 'அடித்துப் புசி' என்று அவனுக்குக் கட்டளை கொடுக்கப்

33. *மத்யேயு 15:11.*

34. *அப். 10:10-16.*

படுகின்றது. அதன்படி 'உலகிலுள்ள எல்லா மிருகங்களையும் கொன்று உண்ணலாம்' என்று சிலர் எண்ணுகின்றனர்.

அத்தரிசனத்தின் பொருளை ஆழ்ந்து எண்ணிப் பார்க்கும் பொழுது, அத்தரிசனம் கொடுக்கப்பட்ட நோக்கம் தெளிவாக விளங்கும். யூதர்கள் வழக்கத்தின்படி, பேதுருவும் அவரைச் சார்ந்தவர்களும், மிருகங்களில் தீண்டத்தகாத அசுத்த மிருகங்கள் இருப்பதைப் போல, மனிதர்களிலும் தீண்டத்தகாத அசுத்த மனிதர்கள் இருப்பதாக நம்பிக்கொண்டிருந்தனர். அந்த நம்பிக்கையை உடைத்துக் கடவுளுக்கு முன், மனிதர் யாவரும் சமமானவர்களே; அவர்களுக்குள் ஏற்றத்தாழ்வு இல்லை என்பதைப் பேதுருவுக்கு விளக்குவதற்காக, தேவதூதன் மூலமாகக் கொர்நேலியுவுடன் பேசிய கடவுள், தரிசனத்தின் மூலமாகப்[35] பேதுருவுக்கு உணர்த்தினார். உணர்த்தப்பட்ட பேதுரு, கடவுள் உணர்த்தியவாறே கடவுளுக்குக் கீழ்ப்படிந்து, கொர்நேலியு வீட்டிற்குச் சென்றான். பேதுருவின் சொற்பொழிவைக் கேட்ட கொர்நேலியு வீட்டார், பரிசுத்த ஆவியைப் பெற்றதைக்கண்ட பேதுரு, அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்து, அவர்களையும் திருச்சபையின் மந்தையில் ஒன்றாகச் சேர்த்ததையும், பேதுரு கண்ட தரிசனம் நிறைவுற்றதையும் அதே அதிகாரத்தில் நாம் காண்கிறோம்.

'தேவன் சுத்தமாக்கினவைகளை நீ தீட்டாக எண்ணாதே,' 'அடித்துப் புசி' என்ற வார்த்தைகள் பேதுருவின் உணவிற்காகச் சொல்லப்பட்டவை அல்ல. திருச்சபையின் ஐக்கியத்திற்காகச் சொல்லப்பட்டவை ஆகும்.

விவிலியத்திலுள்ள ஏழு நிலைகளில், ஆறாவது நிலையே இயேசு கிறித்துவின் உயிர்த்தெழுதலுக்குப் பின்னர், அவருடைய இரண்டாம் வருகை வரை நடைபெறும் நிலையாகும். முதல் ஐந்து நிலைகளும், இயேசு கிறித்துவின் உயிர்த்தெழுதலுக்கு முற்பட்ட நிலைகள். ஏழாம் நிலை இறுதி நிலை. ஏழாம் நிலைக்கு மனிதர்களை ஆயத்தப்படுத்தும் நிலையும் இந்நிலையே. ஆயத்தப்படும் மனிதர்களிடையும் ஆவியின் வளர்ச்சியில் பல படிகள் இருப்பதும் இயல்பே. பல்வேறு படியிலுள்ள மக்கள் யாவரும், உண்பதிலும் குடிப்பதிலும் ஒன்று போலிருக்கவேண்டும் என்று எதிர் பார்த்தல் இயலாது. திருச்சபையின் மக்களிடத்திலே, ஆவியைப் பெற்றுக்கொண்டவர்களிடம் பேசுவது போலப் பேச

---

*35. அப். 10:19.*

இயலாமல், கிறித்தவ வாழ்க்கையில் குழந்தைகளைப் போலப் பாவித்துக் கெட்டியான உணவைப் போன்ற உபதேசத்தைக் கொடாமல், எளிதில் செரிக்கக்கூடிய பாலுணவு போன்ற உபதேசத்தைக் கொடுக்கவேண்டிய நிலைக்குப் பவுல் இருந்ததை அவருடைய கடிதங்களால் நாம் அறிகின்றோம்.

''சகோதரர்களே, ஆவியைப் பெற்றுக்கொண்டவர்களிடம் பேசுவது போல உங்களிடம் பேச முடியவில்லை. ஊனியல்பு உள்ளவர்கள் போலவும், கிறித்தவ வாழ்க்கையில் குழந்தைகளைப் போலவும் உங்களைப் பாவித்துப் பேச வேண்டியதாயிற்று. உங்களுக்கு நான் ஊட்டியது பால் உணவே; கெட்டியான உணவன்று. அதை உண்ண முடியாதிருந்தீர்கள். இப்போதுங்கூட முடியாமல் தான் இருக்கின்றீர்கள். ஏனெனில், இன்னும் ஊனியல்பு உள்ளவர்களாகவே இருக்கிறீர்கள்''[36]

ஆதித் திருச்சபையில் யூத மக்களிடையே - நடைமுறையில் தீண்டத்தகாத பிராணிகளைத் தொடாதிருத்தல், உண்ணத் தகாத உணவுகளை உண்ணாதிருத்தல், பண்டிகைகள், மாதப் பிறப்புகள், ஓய்வு நாள்கள் இவைகளைக் கைக்கொள்ளுதல் முதலானவைகளைக் குறித்துப் பலவிதமான கட்டுப்பாடுகள் இருந்தன. அந்த யூதக் கட்டுப்பாடுகளை அப்படியே கிறித்தவத்திலும் சிலர் நுழைக்க முயன்றனர். யூதரல்லாதவர்கள் கிறித்தவத்தை ஏற்றுக் கொண்டு திருச்சபையில் சேர்க்கப்பட்ட பொழுதும், இத்தகைய கட்டுப்பாடுகளை, அவர்கள்மீது திணிக்க முயன்றவர்களைக் கண்டிக்க வேண்டிய கட்டாயச் சூழல் ஏற்பட்டது. ஏனெனில், இது தேவையில்லாத வீணான பாரத்தை ஏற்றுவது ஆகும். இயேசு கிறித்துவின் சிலுவை மரணத்திற்குப் பின், அவை யாவும் பொருளற்றனவாகிப் பயன் அற்றுவிட்டன. ஆகவே, அவை விவிலியத்தில் கண்டிக்கப்படுகின்றன.

எனவே, உணவு பானம் குறித்தோ, திருவிழா அமாவாசை ஓய்வுநாள் குறித்தோ உங்களை யாரும் குறைகூற விடாதீர்கள். இவையெல்லாம் வர இருந்தவற்றின் வெறும் நிழலே. உண்மைப் பொருளோ கிறித்துவின் உடல்தான். போலித் தாழ்ச்சியையும், வான தூதர்களை வணங்குவதையும் விரும்புகின்ற எவரும் உங்களைக் கண்டனம் செய்ய விடாதீர்கள். இவையெல்லாம் விரும்புவோர் போலிக் காட்சிகளை அடிப்படையாக வைத்து, உலக சிந்த

---

*36. 1 கொரிந்தியர், 3:1-3.*

னையால் வீண் இறுமாப்புக் கொண்டு, தலையாயிருப்பவரோடு உள்ள தொடர்பை விட்டுவிடுகின்றனர். கிறித்துவின் செயலால் தான் உடல் முழுமையும் மூட்டுகளாலும், தசை நார்களாலும் இறுக்கிப் பிணிக்கப்பட்டு ஒன்றாய் இணைந்து கடவுள் விரும்பும் வளர்ச்சி பெறுகின்றது.

கிறித்துவோடு நீங்கள் இறந்து, உலகப் பூதங்களின் பிடியிலிருந்து விடுதலை அடைந்தீர்கள் அல்லவா? அப்படியானால் இன்னமும் இவ்வுலக வாழ்க்கையே வாழ்வது போல், அதன் விதிகளுக்கு உங்களைக் கட்டுப்படுத்திக் கொள்வதேன்? 'இதைத் தொடாதே' அதைச் சுவைக்காதே, இதில் கை வைக்காதே' என்று தடுக்கிறார்கள். அவ்வாறு தடுக்கப்படும் பொருள்கள் பயன்படுத்துவதால் அழிந்து விடுபவையல்லவா? இவையனைத்தும் மனிதருடைய கட்டளைகளும் படிப்பினைகளுமே. மனிதர்களே வகுத்துக் கொண்ட வழிபாடு, போலித் தாழ்ச்சி, உடல் ஒறுத்தல் முதலியவற்றைக் கொண்டுள்ளதால், இப்படிப்பினைகள் ஞானம்போல் தோன்றலாம். ஆனால், அவற்றிற்கு மதிப்பேதும் இல்லை.[37]

பவுல் தம்முடைய கடிதங்களில், திருமண வாழ்க்கையைப் பற்றிச் சில கருத்துகளைக் கீழ்க்காணுமாறு வெளியிடுகின்றார்:

"மணமாகாதவர்களுக்கும் கைம்பெண்களுக்கும் நான் சொல்லுவது: நான் இருப்பதுபோல அவர்களும் இருந்துவிடுவதுதான் நல்லது."[38]

"மணமாகாத ஒருவன், தான் இருக்கும் நிலையில் இருந்து விடுவதே நல்லது."[39]

"நீங்கள் கவலைக்கு ஆளாகாதவர்களாய் இருக்க வேண்டுமென நான் விழைகின்றேன். மணமாகாதவன் ஆண்டவர்க்குரியதில் கவலையாய் இருக்கிறான். அவரை எவ்வாறு மகிழ்விக்கலாம் என்ற நினைவாகவே இருக்கிறான். மணமானவனோ, உலகத்துக்குரியதில் கவலையாய் இருக்கிறான். மனைவியை எவ்வாறு மகிழ்விக்கலாம் என்ற நினைவாகவே இருக்கிறான். இவ்வாறு பிளவுபட்டதொரு நிலையில் அவன் இருக்கிறான்."[40]

---

37. கொலோசே, 2:16-23.

38. *1* கொரி. 7:8.

39. ,, 7:26.

40. ,, *7:32-33.*

மேலே கண்ட பவுலின் கருத்து, திருச்சபையிலுள்ள அனைவ ராலும் கட்டாயமாக ஏற்றுக்கொள்ளக் கூடிய கட்டளையன்று' கட்டளையாக்கினால், அது திருச்சபையை அழிப்பதாகவே முடியும். அவ்வாறே உணவுப் பழக்கத்திலும், திருச்சபையின் மக்கள் யாவ ருக்கும் பொதுவான கட்டளையாக எதையும் கொடுக்கக் கூடாது. அப்படிக் கட்டளையிடுபவர்கள், கிறித்துவின் மக்களாயிருத்தல் இயலாது. ஆதித்திருச்சபையில் இப்படிப்பட்ட கட்டளையை வற்புறுத்தியவர்கள் கண்டிக்கப்படுகின்றனர்.

''விவாகம் பண்ணாதிருக்கவும், விசுவாசிகளும் சத்தியத்தை அறிந்தவர்களும் ஸ்தோத்திரத்தோடே அனுபவிக்கும்படி, தேவன் படைத்த போஜன பதார்த்தங்களை விலக்கவும் வேண்டுமென்று, அந்தப் பொய்யர் கட்டளையிடுவார்கள்''[41] என விவிலியத்தில் கண்டிக்கப்படுகிறது.

ஆகவே, விசுவாசிகள் யாவருக்குமுரிய பொதுக் கட்டளையாக இது இருத்தல் இயலாது என்பது தெளிவு. பொதுக் கட்டளை யாக்கப்படுமானால், திருச்சபையில் திருமண உறவே அற்றுப்போய். ஒரே தலைமுறையில் திருச்சபையே அழிந்து போகும். அதே போன்று, சில உணவுகளைத் தவிர்க்க வேண்டுமென்று கட்டளை யிட்டால், அக்கட்டளை உணவுகளைத் தவிர்க்க இயலாத நாட்டிலுள்ள மக்கள் யாவரும், திருச்சபையை விட்டு நீங்குமாறு செய்யும்; அல்லது அவர்களுடைய உடல், அழிவுக்கு உட்பட்டு அவர்கள் அழியவேண்டிய நிலையைத் தோற்றுவித்துவிடும். ஆகவே, இப்படிப்பட்டவை நாட்டுக்கு நாடு வேறுபடும்.

பொதுமக்களுக்குரிய கட்டளை வேறு. குருக்களுக்குரிய கட்டளைவேறு. குருக்கள் மேல் சுமத்தும் பாரத்தைப் பொது மக்கள் மேல் சுமத்த இயலாது.

கண்காணியானவன் குற்றம் சாட்டப்படாதவனாயும்,............ புறம்பானவர்வர்களால் நற்சாட்சி பெற்றவனாயும் இருக்க வேண்டும்.[42] நீ உண்டிப் பிரியனாயிருந்தால், உன் தொண்டை யிலே கத்தியை வை.[43] மதுபானப் பிரியரையும் மாமிசப்

41. தீமோ. 4:2-3.

42. *1 தீமோ 3:2-7.*

43. *நீதி. 23:2.*

பெருந்தீனிக்காரரையும் சேராதே.[44] கடவுள் அரசு, உண்பதையும் குடிப்பதையும்சார்ந்ததன்று.அது தூயஆவியானவரால் உண்டாகும் நீதியும் சமாதானமும் மகிழ்ச்சியுமாய் இருக்கிறது.[45] "நீங்கள் உண்டாலும் குடித்தாலும் வேறெதைச் செய்தாலும், எல்லாவற்றையும் கடவுளின் மாட்சிமைக்கென்றே செய்யுங்கள்."[46] "சகோதரனுக்கு இடறல் ஆகாதபடிக்கு, நான் ஒருபோதும் புலால் உண்ணவே மாட்டேன்.[47]

"இறுதியாக சகோதரர்களே, உண்மை எதுவோ கண்ணியமானது எதுவோ நீதி எதுவோ தூயது எதுவோ இனியது எதுவோ எதெல்லாம் நற்பண்புடையதோ, எதெல்லாம் புகழ்ச்சிக்குரியதோ, அவற்றையே மனதில் கொள்ளுங்கள்."[48]

ஏதேனின் இன்பநிலையில், ஆதாமின் கீழ்ப்படியாமையாகிய பாவத்தில்-உலகில் நுழைந்த மரணம்-கொலை-புலாலுணவு ஆகிய மூன்றும், சிலுவை மரணம்வரை தம்மைக் கீழ்ப்படிதலுக்கு உட்படுத்திய இயேசு கிறித்துவின் புண்ணியத்தால் வெற்றிகொள்ளப்பட்டு, இயேசு கிறித்துவின் புண்ணியங்களை ஏற்றுக்கொண்டு, அவருக்குக் கீழ்ப்படியும் மக்களுடைய வாழ்க்கையிலிருந்து படிப்படியாக நீங்குவதால், கீழ்ப்படிதலின் பிள்ளைகள் புதிய ஏதேனாகிய பரிசுத்த மலையைச் சேரும் வாய்ப்பைப் பெறுகின்றனர். கடவுளின் பரிசுத்த மலையின் தன்மையை விளக்குவதே விவிலியத்தின் ஏழாம் நிலையாகும். அந்த நிலைக்காகக் கீழ்ப்படிதலின் பிள்ளைகள் ஆயத்தமாக்கப்படுகின்றனர். ஆதாமின் பாவத்தால் படைப்பு முழுவதும் பாதிக்கப்பட்டது.[49] இயேசு பெருமானின் சிலுவை மரணத்தால், படைப்பு முழுமைக்கும் விடுதலைச் செய்தி அறிவிக்கப்படுகிறது.[50]

விடுதலைச் செய்தியைப் பெற்ற மக்கள் மீட்புக்குள் சேர்க்கப்பட்ட போதிலும், மீட்பு முழுமை பெற, அவர்கள் தவித்துக்கொண்டிருக்கிறார்கள். படைப்பனைத்தும் மீட்புக்காகத் தவித்துக்கொண்டிருக்கிறது.

---

44. *நீதி. 23:20.*
45. *உரோமர்;* 14:17.
46. *1 கொரி. 10:31-33.*
47. *1 கொரி.* 8:13.
48. *பிலிப்.* 4:8.
49. *ஆதி. 3:17.*
50. *மாற்.* 16:15

''படைப்பு முழுவதும் பயனற்ற நிலைக்கு உட்பட்டுள்ளது. தானே விரும்பி அப்படி உட்படவில்லை. அதை உட்படுத்தினவரின் விருப்பத்தால் அப்படி உள்ளது. எனினும், அது நம்பிக்கையற்ற நிலையில் இல்லை. படைப்பனைத்துமே அழிவுக்கு அடிமைப்பட்டிருக்கும் நிலையிலிருந்து விடுபட்டு, கடவுளின் பிள்ளைகளுக்குரிய மகிமையும் விடுதலையும், பெற்றுக்கொள்ளும் நம்பிக்கை கொண்டுள்ளது. இந்நாள்வரை படைப்புப் பொருள் அனைத்தும், ஒருங்கே பேறுகால வேதனையுற்றுத் தவிக்கின்றது என்பதை நாம் அறிவோம். படைப்பு மட்டுமன்று; முதற்கனியாகத் தேவ ஆவியைக் கொண்டுள்ள நாமும், இறைமக்களாக்கப்படும் நாளை எதிர் நோக்கி - அதாவது நம் உடல் விடுதலையாக்கப்படும் நாளை எதிர் நோக்கித் தவித்துக்கொண்டிருக்கிறோம். மீட்பு நமக்குக் கிடைத்து விட்டது. எனினும், மீட்பு இனிவரும் என்ற நம்பிக்கையில் வாழ்கிறோம்.[51]

ஆகவே, மீட்பு முழுமையடைய, படைப்பு முழுவதும் தவிப்பதுடன், மீட்கப்பட்ட பிள்ளைகளும் தவித்தாகவேண்டியதிருக்கிறது. இந்தத் தவிப்புகள் யாவும் நீங்கிப் படைப்பனைத்தும் மனிதர்கள் உட்பட, முழுமையான மீட்புக்குள் மகிழ்ந்து வாழும் நிலையே, ஏழாம் நிலையாகும். முழுமையான மீட்பே படைப்பிற்கெல்லாம் கூறப்படும் நற்செய்தியாகும். மீட்பு முழுமையடையும்பொழுது அங்கே மரணம், கொலை, புலாலுணவு மூன்றும் இல்லாமல் மறையும்.

**ஏழாம் நிலை**

''இதோ கடவுளின் இல்லம் மனிதரிடையே உள்ளது. அவர்களோடு அவர் குடிகொள்வார். அவர்கள் அவருக்கு மக்களாயிருப்பர். கடவுள் தாமே அவர்களோடு இருப்பார். அவர்களுடைய கண்ணீரனைத்தையும் துடைத்து விடுவார். இனிச் சாவில்லை; புலம்பலில்லை; அழுகையில்லை; நோவில்லை; முன்னிருந்தவை மறைந்து போயின.''[52]

''இதோ புதிய வானத்தையும் புதிய பூமியையும் நாம் படைக்கிறோம். முன்னையவை நினைவில் இருக்க மாட்டா.

51. உரோ. 8:20-24.

52. வெளி. 21:3-4.

எண்ணத்திலும் தோன்ற மாட்டா. நாம் படைக்கப் போவதைக் குறித்து நீங்கள் என்றென்றும் மகிழ்ந்து எக்களிப்பீர்கள்.''[53]

''அந்நாளில் செம்மறியோடு ஓநாய் தங்கியிருக்கும். வெள்ளாட்டுக் குட்டியோடு சிறுத்தைப்புலி படுத்துறங்கும். கன்றும் சிங்கமும் ஒன்றாய் மேயும். சிறுபிள்ளை ஒன்று அவற்றை நடத்தும். பசுவும் கரடியும் கூடி மேயும். பசுவின் கன்றும் கரடிக் குட்டியும் ஒன்றாய் இளைப்பாறும். சிங்கமும் எருதைப்போல் வைக்கோல் தின்னும். பால் குடிக்கும் குழந்தை விரியன் பாம்பின் வளையில் விளையாடும். பால் மறந்த பிள்ளை கட்டுவிரியன் வளையில் தன் கையை விடும். நம் பரிசுத்த மலையெங்கும் தீங்கு செய்வதோ கேடு விளைவிப்பதோ யாதுமிராது. ஏனெனில், தண்ணீர் கடலை நிரப்பியிருப்பதுபோல், ஆண்டவரைப்பற்றிய அறிவு நாட்டை நிரப்பும்.''[54]

''நாம் பரிசுத்தராய் இருப்பதுபோல, நீங்களும் பரிசுத்தராய் இருங்கள்'' எனக் கட்டளையிடும் கடவுளின் பரிசுத்த மலையெங்கும், தீங்கு செய்பவரோ கேடு செய்பவரோ யாருமிலர் எனக் கூறப் பட்டுள்ளது.

பிற உயிர்களைக் கொன்று உயிர் வாழும் அசுத்த மிருகங்களான சிங்கம், புலி, ஓநாய், கரடி, விரியன் முதலியன தங்கள் தீய இயல் பிலிருந்து மாறி, சுத்த மிருகங்களாகிப் பசு, எருது, வெள்ளாடு, செம்மறி இவைகளுடன் மகிழ்ந்து விளையாடும் தன்மையைப்பெற்று விடுகின்றன. ஒரு சிறு குழந்தை அவைகளை நடத்தலாம்.

அங்கே மரணம், கொலை, புலாலுணவு இவைகளுக்கு இட மில்லை. எருதைப்போல் வைக்கோல் தின்னும் சிங்கமே அங்கு உண்டு. அவை யாரையும் துன்புறுத்த மாட்டா; கொலை செய்ய மாட்டா.

அவ்வாறே அங்கு இடம்பெறும் மனிதர்களும் தீய உள்ளம் மாற்றம் அடைந்து, தூய உள்ளம் பெற்றுக் கொலை, மரணம், புலாலுணவு அற்ற தூய உணவை உட்கொள்ளுபவராகவே காட்டப்படுகின்றனர்.

---

53. ஏசா. 65:17-18.

54. ,, 11:6-9.

பாவத்தின் விளைவு - கொலை செய்தல், புலால் உண்ணல் எனக் கூறும் விவிலியம், பாவம் தோன்றுவதற்கு முன்னரும் பாவத்திலிருந்து மீட்கப்பட்ட பின்னரும் உள்ள, இரு நிலைகளாகிய விவிலியத்தின் முதலாம் நிலை, ஏழாம் நிலை ஆகிய இரண்டிலும்- கொலை, மரணம், புலால் உணவு இல்லாத மகிழ்ச்சியான முக்தி நிலையைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

விவிலியக் கொள்கையின்படி பாவ மீட்படைந்து, நற்செய்திப் பணியாற்றும் தொண்டர்கள்-கொலை செய்தல், புலால் உணவு உண்ணுதல் இவை இரண்டிலுமிருந்து விடுதலை பெற்றவராகக் காட்டப்படுகின்றனர்.

மேலே நாம் எடுத்துக்காட்டுகளாகக் காட்டிய விவிலியத்தின் புதிய ஏற்பாட்டுப் பகுதிகள், புலாலை முக்கிய உணவாகக் கொண்ட பாலஸ்தீனத்தைச் சுற்றியுள்ள நாடுகளில் வாழ்ந்த கிறித்தவர்களுக்குப் புனித பவுல் எழுதிய கடிதங்களாகும்.

அவ்விடங்களிலேயே இவ்விதம் வற்புறுத்தப்பட்டிருக்குமானால், இந்தியாவில் சமண சமயத்தின் செல்வாக்குப் பெற்ற தமிழகத்தில், தோமாவும் அவர் வழியினரும் எவ்விதத்தில் அதிகமாக வற்புறுத்தியிருப்பர் என்பது எண்ணிப் பார்க்கத்தக்கது. தோமா வழியில் தோன்றிய சமயங்களிலும், நூல்களிலும் அவர் வற்புறுத்திய புலால் மறுத்தலை, நாம் அதிகமாகக் காணலாம் அன்றோ?

**திருக்குறள்**

இந்தியச் சமயங்களுள், திருக்குறளுக்கு முன்பு தோன்றிய சமயங்களும், திருக்குறளுக்குப் பின்பு எழுந்த சமயங்களும் திருக்குறளை உரிமை பாராட்டுகின்றன. திருக்குறளையும் கிறித்தவத்தையும் ஒப்பிட்டு, நூல்கள் வெளிவருவதற்கு முன்னர், திருக்குறளை உரிமை பாராட்டிய சமயங்களிடையே சைவத்திற்கும் சமணத்திற்கும் அதிகப் போட்டி இருந்தது எனலாம். திருவள்ளுவருக்குச் சைவசமயச் சின்னங்கள் அணிவித்துச் சைவ அன்பர்கள் மகிழ்ச்சியடைந்தனர். இன்றும் அந்த நிலை நிகழ்கிறது எனலாம்.

20-ஆம் நூற்றாண்டில், கிறித்தவத்தோடு ஒப்பிட்டு நூல்கள் தோன்றும்வரை, திருக்குறளின் உட்கிடக்கை சைவசித்தாந்தமே என்ற நிலை இருந்துவந்ததாகவும், கிறித்தவ ஒப்பாய்வுக்குப் பின்னர், அந்நிலை மாறியுள்ளதாகவும் தி. சு. சத்தியம் தமது ஆய்வேட்டில் கூறுகிறார்.

''இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் திருக்குறளின் உட்கிடக்கை சைவசித்தாந்தமே என்று எழுந்த ஆய்வுப் போக்கு, இன்றைய காலகட்டத்தில் கிறித்தவமே திருக்குறளின் உட்கிடக்கை என்ற கருத்துப் போக்கைப் பெற்று முடிந்துள்ளது.''[55]

கிறித்தவத்திற்கும் திருக்குறளுக்கும் சைவ சித்தாந்தத்திற்கும் அடிப்படைக் கருத்தில், அதிக வேறுபாடு இல்லையென்பதை நாமறிவோம்.

'தனக்குவமை யில்லாதான்', 'வகுத்தான்', 'உலகியற்றியான்' முதலிய தொடர்களால் தெளிவாக முழுமுதல் இறைவனைக் குறிப்பிடும் திருக்குறளை, கடவுள் மறுப்புக் கோட்பாட்டையுடைய சமண சமயம் சார்ந்த நூலென அறிஞர் சிலர் கருதுவதற்கு முக்கியக் காரணமாய் இருப்பவை, திருக்குறளிலுள்ள புலால் மறுத்தல், கொல்லாமை ஆகிய அதிகாரங்களே ஆகும். சமண சமயம் கூறும் கொல்லாமை - புலால் மறுத்தலுக்கும் வள்ளுவர் கூறும் கொல்லாமை - புலால் மறுத்தலுக்கும் உள்ள அடிப்படையான வேற்றுமைகளை, இதுவரை யாரும் ஆழ்ந்து நோக்கிக் கூறியதாகத் தெரியவில்லை.

(1) சமண சமயத்தில், இல்லறத்தார், துறவறத்தார் என்னும் வேறுபாடு இல்லாமல், அச்சமயம் சார்ந்த யாவருமே புலால் மறுப்பு வாழ்க்கையுடையவர்களாகவே இருத்தல் இன்றியமையாததாகும்.

(2) ஆனால், வள்ளுவரோ பொது அறம் கூறும் இல்லறத்தில் கொல்லாமை, புலால் மறுத்தல் இவைகளைக் கூறாது சிறப்பு அறம் கூறப்படும் துறவறவியலில் இவ்விரு அதிகாரங்களையும் கூறியுள்ளார்.

(3) சமண சமயத்தில், உயிர்களைக் கொலை செய்யும் வேள்வி தவறான ஒன்றாகக் கருதப்பட்டது. ஆனால், திருக்குறளிலோ 'நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும்' (328) என்பதிலும், 'அவி சொரிந்து ஆயிரம் வேட்டலின்' (259) என்னும் குறட்பாவிலும் வேள்வியின் உயர்வு மறுக்கப்படவில்லை. ஓரளவு ஏற்றுக் கொள்ளப்படுகிறது என்றே சொல்லலாம். இறைவன் பொறி வாயில் ஐந்தவித்துவிட்டபடியால், இனி வேள்வி தேவையில்லை என்னும் சிறப்புக் கருத்தே கொல்லாமை, புலால் மறுத்தல் ஆகிய

---

55. - தி. சு. சத்தியம், இருபதாம் நூற்றாண்டில் திருக்குறள் ஆராய்ச்சியின் வளர்ச்சி, டாக்டர் பட்டத்திற்கான ஆய்வேடு, *1979, ப. 192.*

இவ்விரு அதிகாரங்களிலுள்ள மேற்கண்ட இரு குறட்பா கருத்து களின் வழியாக வலியுறுத்தப்படுகின்றன எனலாம். ஆகவே, நாத்திகக் கொள்கையுடைய சமண சமயம் கூறும் கொல்லாமை-புலால் மறுத்தலுக்கும், வேள்வியின் சிறப்பினை ஏற்றுக்கொண்டு இனி வேள்வித் தேவையில்லை எனக் கூறும் கிறித்தவ சமயத்தின் வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டிற்கும் மிக நெருங்கிய தொடர்புகள் காணப்படுகின்றன.

''தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது ஊனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்'' - (251)

''பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு'' - (252)

''படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்காது ஒன்றன்
உடல்சுவை உண்டார் மனம்'' - (255)

''அருளல்லது யாதெனில் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல்'' - (254)

என்னும் திருக்குறளின் 'புலால் மறுத்தல்' அதிகாரத்தில் உள்ள முதல் நான்கு குறட்பாக்களும், இறைவனுடைய அருளை மக்கள் பெற்றுக்கொள்வதற்குத் தான் ஒரு வாய்க்காலாக விளங்கி, அருளாட்சி செய்யக்கூடிய நற்பொறுப்பிலிருக்கும் துறவியொருவன், பிறர் நலம் நோக்காது தன் ஊன் பெருக்கற்காகவும், வாய்ச்சுவைக் காகவும், மன விருப்பத்திற்காகவும் அருளாட்சிக்கு மாறுபட்டுப் புலாலை உண்பது தவறு என்று, தக்க ஆதாரத்துடன் கண்டிக் கின்றன.

கடவுள் மனிதனையும் இவ்வுலகையும் படைத்தகாலை, ஊன் உண்ணும்படியாக அவனைப் படைக்கவில்லை. உயிரினங்களை அவன் ஆண்டுகொண்டு, மகிழ்ச்சியாக இருக்கும்படியாகக் கொலை, மரணம், புலால், முதலியன அற்ற ஊன் உண்ணாத இயற்கை யுடையவனாக அவனைப் படைத்தார். ஆனால் அவனோ, தன்னு டைய இயற்கை நிலையிலிருந்து பிறழ்ந்து, தீவினையாகிய செருக்கை மேற்கொண்ட காரணத்தால், தீமையில் வீழ்ந்து கொலை, மரணம், புலால் முதலியவைகளைத் தன் வாழ்விலே கொண்டவனாக மாறி, தீவினையாகிய சேற்றில் மாட்டிக்கொண்டு துன்பத்தில் ஆழ்ந்தான் என்பதை,

''உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு'' - (255)

(அளறு - சேறு) என்னும் குறட்பாவின் வழி திருவள்ளுவர் விளக்கிக் காட்டுகின்றார்.

வாய்ச் சுவைக்காகத் தின்னும்பொருட்டே உயிர்கள் கொல்லப் படுகின்றன என்பதையும் (256), பிற உயிர்க்குத் துன்பம் கொடுத்தே புலாலை உண்ண வேண்டியிருக்கிறது என்பதையும் (257), இறைவன் திருக்காட்சியைப் பெற்றவர்கள் ஊனை உண்ண மாட்டார்கள் என்பதையும் (258) கொல்லாமல் புலாலை மறுத்து வாழ்கின்ற மனிதன் ஆண்டுகொள்ளும்படியாகவும், அவனுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும்படியாகவும் படைக்கப்பட்ட உயிர்களெல் லாம் கைகூப்பித் தொழும் என்பதையும் 'புலால் மறுத்தல்' அதிகா ரத்தில் இறுதி ஐந்து குறட்பாக்களும் விளக்கிக் கூறுகின்றன.

அதே போன்று இறைவன் திருப்பணிக்காக எல்லாவற்றையும் துறந்து,துறவிவாழ்க்கை வாழும்-கொலை செய்ய அவசியமில்லாத-வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டையுடைய சமயம் சார்ந்த துற வியொருவர், பிற உயிரைக் கொன்றேயாகவேண்டிய எவ்விதக் கட்டாயத்திலும் அகப்பட்டுக்கொள்ளாக் காரணத்தால், அவர் வாழ் வின் நோக்கத்தையும், 'யாதொன்றும் கொல்லாமை சூழும் நெறி யின்' சிறப்பையும் வள்ளுவர் கொல்லாமை அதிகாரத்தில் தெளி வாகக் காட்டியுள்ளார் எனலாம்.

'ஐந்தவித்தான்' உலகில் தோன்றுவதற்கு முன்னர், கடவு ளைத் தொழுதுகொண்டவர்கள் யாவரும், உயிர்களைப் பலியிடு வதன் வாயிலாகக் கொலைசெய்யும் நெறியையே பின்பற்ற வேண்டியிருந்தது. 'இறைவனடி சேராதான் பிறவிப் பெருங்கடல் நீந் தான்' எனத் தெளிவான கடவுட்கோட்பாட்டையுடைய திருக்குறள், வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டையும், வேள்வி நிறைவேற்றக் கோட்பாடாகிய கொல்லாமை சூழும் நெறியாக விளங்கும் ஐந்தவித் தானின் பொய்தீர் ஒழுக்க நெறியையும் 'நல்லாறு' எனச் சிறப்பிக் கின்றது.

''நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி'' (324).

ஐந்தவித்தானின் பொய்தீர் ஒழுக்க நெறியாகிய கொல்லாமை சூழும் நெறியை ஏற்றுக்கொள்ளாதவர்கள், கடவுளை வணங்கிய

போதிலும்,கொலையின்புன்மையைத் தெரிந்தவர்களாகிய இவர்கள் நோக்கில் எவ்வாறு காணப்படுகின்றனர் என்பதை வள்ளுவர்,

"கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து" — (329)

எனவும், துறவு மேற்கொண்டவர்களிலெல்லாம், கொலையை நீக்கிய-கொல்லாமையாகிய வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டுத் துறவியே தலைமையானவனாக விளங்குகின்றான் என்பதை வள்ளுவர்,

"நிலைஅஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலைஅஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை" — (325)

எனக் கூறுகின்றார். ஏனெனில், மற்ற உயிர்க்கும் செந்தண்மை பூண்டு, தன்னுயிரை நீக்கிய ஐத்தவித்தானாகிய ஒழுக்கத்து நீத் தார்வழி இவன் நிலை நிற்கின்ற காரணத்தாலும், விவிலியம் கூறும் ஏழாம் நிலைக்கு மக்களை ஆயத்தம் செய்யும் காரணத் தாலும், தன்னுயிர் நீப்பினும் தான் பிறிது இன்னுயிர் நீக்கும் வினையை இவன் செய்ய இயலாது என்பதை,

"தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை" — (327)

என வள்ளுவர் கூறுகின்றார்.

கடவுளை வணங்கும் துறவியர்களில் இத்தகைய கொல்லாமை சூழும் நெறியை, வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டுச் சமயமாகிய கிறித்தவ சமயமும் அதைச் சார்ந்து எழுந்த சமயங்களும் மட்டுமே பின்பற்ற இயலுமேயன்றி, மற்றவர்கள் கைக்கொள்ள இயலாது என்பது இங்கு ஆழ்ந்து நோக்கத் தக்கது.

'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் குறட்பாவின் வழி, பிறருக்காகப் பொறிவாயில் ஐந்தவித்ததின் அடையாளமாகிய நீலமணி மிடற்று அண்ணலாம் சிவனைப் பின்பற்றும் சைவத்திலும் விவிலியம், திருக்குறள் ஆகிய மறைகளிலும் புலால் மறுத்தல் - கொல்லாமை வற்புறுத்தப்படுகின்றது எனலாம்.

**சைவம்**

**சைவ சமய நாயன்மார்களில் மிக முற்பட்டவர் எனக் கருதப் படுபவரும், இறைவன்மீது அளவிலா அன்பை வெளிக்காட்டிய வருமான கண்ணப்ப நாயனார், தாம் சுவைத்துப் பார்த்துத்**

தேர்ந்த பன்றி இறைச்சியை இறைவனுக்கு ஊட்டிய அன்பின் பெருக்கையும், சிறுத்தொண்ட நாயனார் எனப் புகழப்படும் பரஞ் சோதியார், இறைவனுக்குத் தாம் பெற்ற பிள்ளையையே கறி சமைத்து ஊட்ட முற்பட்ட தீவிரப் பக்தியையும் பெரியபுராணம் வியந்து பாராட்டுவதில், அடியவர்களின் செயல்களில் கொலை, புலாலுணவு இருக்கின்றனவே என்று குறைகூறும் நோக்கு இல்லை. விவிலியம், திருக்குறள்வழி 'மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத் தறன்' என்னும் கருத்தே சைவத்தில் ஆழப்பதிந்துள்ளது எனலாம்.

சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கில், முதல் சாத்திரமாகிய திருவுந்தியாரின் ஆசிரியரான திருவியலூர் உய்யவந்ததேவர், ஆட்டி றைச்சி விற்கும் வாணிபம் செய்து வந்ததாகச் சொல்லப்படுகிறது. அவருடைய மாணவரான திருக்கடவூர் உய்யவந்த தேவர், ஆட்டி றைச்சி வாணிகம் செய்பவரிடத்திலா பெரு உண்மைகளை அறியப் போகின்றோம் என்று எழுந்த ஐயத்தை குருவே நீக்கி அருளிய தாகக் கூறப்பட்டுள்ளது. மேலே கண்டவைகளின் வழி, உள்ளம் சீர்திருந்துதல் முக்கியமேயன்றி, உணவு இரண்டாம் நிலையை உடையது என்னும் கருத்து வலியுறுத்தலை நாம் காணலாம்.

விவிலியமும் திருக்குறளும், பொதுமக்களுக்குப் புலால் மறுத் தலையோ கொல்லாமையையோ வற்புறுத்தவில்லை. ஆனால், இறைவனுக்கென்று தம்மை அற்பணித்து வாழும் இறைத்தொண்டு புரிபவர்கள் அருளாட்சியைச் செவ்வனே செய்வதற்காகக் கொலை, புலால் அற்றவர்களாக வாழவேண்டும் என எதிர்பார்க்கப்படு கின்றனர். இந்த எதிர்பார்த்தல் சைவ சமயத்திலும் தெளிவாக நிறைவேற்றப்பட்டுள்ளமையைச் சைவசமய வரலாறும் நடை முறைகளும் நமக்கு வெளிக்காட்டுகின்றன.

சைவ சமயத்தைச் சார்ந்த அன்பர்களில் பொது மக்களாக வாழ்கின்றவர்கள் பலர் புலால் உண்ணுகின்றவர்களாகவே இருக் கின்றனர். இறைத்தொண்டு புரியும் பணியில் ஈடுபட்டுள்ள பிராம ணர்கள், தங்கள் பழைய ஆரிய வைதீகக் கொள்கையாகிய கொலை வேள்வியையும் புலால் உணவையும் கைவிட்டு, விவிலிய திருக்குறள் நெறிப்படி, புலால் அற்றவர்களாக வாழ்கின்றனர்.

சமண சமயத்திலிருந்து சைவ சமயத்திற்கு மதம் மாறிக் கூட் டம் கூட்டமாக வந்த புலால் மறுத்த வாழ்க்கையுடைய கூட்டத் தினர், தங்கள் பழைய வழக்கத்தின்படியே புலால் உணவற்றவர் களாக இன்றும் தனிச்சாதியாக வாழ்கின்றனர்.

இந்த நிலை, விவிலிய திருக்குறளின் வழி, தமிழகத்தில் எழுந்த பக்தி இயக்கச் சமயங்களாகிய சைவம், வைணவம் இரண்டிற்கும் பொருந்தும்.

புலால் மறுத்தலின் நன்மையை வற்புறுத்திக் காட்டும் விவிலியப்பகுதியில், ''நல்லதோ கெட்டதோ என்ற தயக்கதோடு ஒருவன் உண்பானாகில், அவன் தண்டனைத் தீர்ப்புப் பெற்றுவிட்டான். ஏனெனில், அச்செயல் விசுவாசத்தால் வரும் உறுதியாள மனநிலையோடு செய்யப்படவில்லை. உறுதியான மனநிலையோடு செய்யப்படாததெல்லாம் பாவமே''[56] என்ற பகுதியில் 'பாவமே' எனவும், 'தண்டனைத் தீர்ப்புப் பெற்றுவிட்டான்' எனவும் புலால் உணவைப் பற்றிக் கூறப்படுகிறது. விவிலியத்தின் வழியில் வந்த திருக்குறள் புலால் உண்ணுகின்றவன், துன்பச் சேற்றிலிருந்து விடுபட இயலாது என்பதை வற்புறுத்தி,

''உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு'' — (255)

எனக் கூறுகிறது. 'அளறு' என்பதற்குத் திருக்குறளுக்குப் பிற்பட்ட காலத்தில், 'நரகம்' என்னும் பொருள் ஏற்படலாயிற்று.

விவிலியப் பகுதியில் 'பாவமே' எனவும், 'தண்டனைத் தீர்ப்புப் பெற்றுவிட்டான்' எனவும் கூறப்படுகின்ற பகுதிகள், ஊன் உண்ணுகிறவன் நரகத்தில் சேர்க்கப்படுவான் எனக் கொள்வதற்கு இடமளிப்பனவாய் உள்ளன.

விவிலியத்திலிருந்து திருக்குறளுக்குப் பெருகிய இக்கருத்து, பன்னிரு திருமுறைகளில் ஒன்றாகிய திருமந்திரத்தில், கீழ்க்காணுமாறு மேலும் விரிவடைந்துள்ளது.

''பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே.''[57]

''கொன்றி லாரைக் கொலச்சொலிக் கூறினர்
தின்றி லாரைத் தினச்சொலித் தெண்டித்தார்
பன்றி யாப்படி யிற்பிறந் தேழ்நர
கொன்று வார்அரன் ஆணையீ துண்மையே.''[58]

56. உரோ. 14 : 23.
57. திருமந்திரம், 242.
58. திருமந்திரம், 243.

## 2. பிறவிச் சுழற்சிக் கோட்பாடு

வைதீக சமயத்தை எதிர்த்தெழுந்த கடவுள் மறுப்புக் கோட்பாட்டையுடைய சமண பௌத்த சமயங்கள், செல்வாக்கடைவதற்குக் காரணமாய் இருந்தது, அவை உருவாக்கிய பிறவிச் சுழற்சிக் கொள்கையாகும். அக்கொள்கையின்படி எல்லா உயிர்களும் சமமானவை எனவும், உயிர்களின் நல்வினை, தீவினைக்கேற்ப அவைகளுக்கு மறுபிறவிகள் தோன்றுகின்றன எனவும் மனிதன் விலங்காவதோ விலங்கு மனிதனாவதோ அந்தந்த உயிரின் நன்மை தீமைக்கேற்ப மாறிப் பிறக்கின்றன எனவும், வினைகளிலிருந்து விடுபட்ட உயிர்களே பிறவி நீக்கம் பெற்று-விடுதலையடைந்து இறை நிலை அடைகின்றன எனவும் அவை கருதுகின்றன.

இக்கோட்பாட்டின்படி, அவரவர் விடுதலைக்கு அவரவர் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டுமே தவிர, ஒருவருடைய வினையில் பிறிதொருவர் தலையிட இயலாது. கடவுள் என்னும் சக்திக்கும் இக்கோட்பாட்டில் இடமில்லை.

புதிய ஏற்பாட்டுக் காலத்தில் வாழ்ந்த மக்கள், இக்கோட்பாட்டை அறிந்திருந்தனர் என்பதற்குச் சான்றுகள் உள.

''இயேசு போய்க்கொண்டிருக்கும் போது பிறவிக் குருடன் ஒருவனைக் கண்டார். 'ராபீ, இவன் குருடனாகப் பிறந்தது யார் செய்த பாவம்? இவன் செய்த பாவமா? இவன் பெற்றோர் செய்த பாவமா?' என்று அவருடைய சீடர் அவரை வினவினார்.''[59]

இவ்வினாவில், இவன் குருடனாய்ப் பிறந்தது இவன் செய்த பாவமா என்னும் பகுதி, பிறவிச் சுழற்சிக் கொள்கையின் அடிப்படையில் எழுந்தது ஆகும். முந்திய பிறவியில் அவன் செய்த பாவத்தின் பயனாக இப்பிறவியில் பிறக்கும்போதே, குருடனாய்ப் பிறந்தானா என்னும் பொருள் அதில் அடங்கியிருக்கிறது.

மேலும், 'முந்தியப் பிறவியில் எலியாவாக வாழ்ந்தவர், அடுத்த பிறவியில் யோவானாகப் பிறந்து வாழ்ந்து மறைந்தார்' என இயேசுபெருமான் கூறியுள்ளார்.

---

59. அரு. 9:1-2.

"இதோ, பெரியதும் நடுக்கத்துக்குரியதுமான ஆண்டவரின் நாள் வருமுன் இறைவாக்கினர் எலியாசை உங்களிடம் அனுப்புவோம்"[60]

"நீங்கள் ஏற்றுக்கொள்ள விரும்பினால் வரவிருந்த எலியா யோவானே"[61] என்றார் இயேசு.

"நானோ உங்களுக்குச் சொல்லுகிறேன்: எலியா ஏற்கனவே வந்துவிட்டார். அவர்கள் அவரை அறிந்துகொள்ளாமல் தாம் விரும்பியதெல்லாம் அவருக்குச் செய்தார்கள். இவ்வாறே மனுமகனும் அவர்கள் கையால் பாடுபடப்போகிறார் என்றார். அவர் முழுக்கு முனிவர் யோவானைக் குறித்துத் தங்களோடு பேசினார் என்பதை சீடர்கள் அப்போது அறிந்து கொண்டார்கள்"[62]

இது, பிறவிச் சுழற்சிக் கொள்கையோடு இணைந்ததாகக் காணப்படினும், அடிப்படையான வேற்றுமையைக்கொண்டு விளங்குகிறது. எலியா முந்திய பிறவியில் செய்த தீவினை காரணமாக, அடுத்த பிறவியில் யோவானாகப் பிறந்தார் எனக் கொள்ள, விவிலியத்தில் சிறிதும் இடமில்லை. 'இறைவனுடைய சிறந்த அடியாராக வாழ்ந்த எலியா, இறைமகன் இயேசுவிற்கு வழியை ஆயத்தம் செய்வதற்காக யோவானாகப் பிறபிக்கப்பட்டார்' எனக் கூறப்பட்டு உள்ளது.

அப்படியே இயேசு பெருமானிடம், பிறவிக் குருடனைக் குறித்து வினவப்பட்ட வினாக்களுக்கு, "இவன் செய்த பாவமும் அன்று, இவன் பெற்றோர் செய்த பாவமும் அன்று. கடவுளுடைய செயல்கள் இவன் மட்டில் வெளிப்படும் பொருட்டே இப்படிப் பிறந்தான்,"[63] என்ற இயேசு பெருமானின் பதிலில், குருடனுடைய பிறவிக்கு மூன்றாம் காரணம் கூறப்பட்டது. அதுவே கடவுளுடைய திருவுளம் என்பது.

கடவுளின் திருவுளத்திற்கிணங்கவே எலியா, முழுக்கு முனிவர் யோவானாகப் பிறந்தார் எனவும், கடவுளின் திருவுளத்திற்கிணங்கவே இயேசு பெருமானால் குணமாகும்படிக்கு, அந்தப்

---

*60.* மல்கியா 4 : 5.

*61.* மத்தேயு 11 : 14.

*62.* மத். *17 : 12-13.*

*63.* அரு. *9:3*

பிறவிக் குருடன் இவ்வுலகில் குருடனாகப் பிறப்பிக்கப் பட்டான் எனவும் விவிலியம் கூறுகிறது. இந்தக் கடவுளின் திருவுளத்தைத் திருவள்ளுவர் கூறும் 'வகுத்தான் வகுத்த வகையாகிய 'ஊழ்' உடன் இணைந்திருப்பது' புலப்படும்.

எலியா, யோவானாகப் பிறக்க வேண்டும் என இறைவன் வகுத்த வகையை, மல்கியா இறைவாக்கினர் வழியாக, யோவான் பிறப்பதற்கு வெகுகாலத்திற்கு முன்னரே வெளிப்படுத்தப்பட்டது.[64]

இறைவாக்கினர் மல்கியா வழியாக வெளிப்படுத்தப்பட்ட இறைவனின் திருவுளம் நிறைவேறிய தன்மையை "எலியா வந்தாயிற்று"[65] என்று இயேசு பெருமான் வெளிப்படுத்தினார்.

அப்படியே இறைவனின் திருவுளப்படி, இயேசு பெருமான் மனிதர்கள் கையால் பாடுபடப் போவதையும், அதற்கு முன்னரே வெளிப்படுத்துகின்றார். [66]

மனித வரலாற்றில் புகுந்து இறைவன் செயல்படுகின்றார் என்னும் உண்மை, இயேசுபெருமான் வழியாக வெளிப்பட்டது. இறைவனுடைய செயல் திட்டத்தின்படி, 'ஒருவன் மறுபடியும் பிறப்பிக்கப்படலாம்' எனக் கிறித்தவம் நம்புகிறது. இந்த நம்பிக் கைக்கும், சமண பௌத்த சமயங்கள் கூறும் பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கும் தொடர்பில்லை. பிறவிச் சுழற்சிக் கொள்கையில் கடவுளுக்கு இடமில்லை. கடவுள் மனிதனைப் படைத்தார் என்னும் நம்பிக்கைக்கோ மனிதனுக்கு நியாயத்தீர்ப்பும் மோட்ச நரகமும் உண்டு என்னும் நம்பிக்கைகளுக்கோ பிறவிச் சுழற்சிக் கொள்கை யில சிறிதும் இடமில்லை.

மனிதன் தீமையை அடைவதற்குக் காரணம், அவனது முற் பிறவியின் வினைப்பயன் எனப் பிறவிச் சுழற்சிக் கொள்கையும், கடவுளை விட்டுப் பிரிந்த அவனுடைய முன்னோரின் வினைப் பயன் எனக் கடவுள் நம்பிக்கைக் கோட்பாடும் விளக்கம் தருகின்றன.

---

64. மல்கியா. 4:5

65. மத்தேயு. 17:12

66. "எலியா ஏற்கனவே வந்துவிட்டார். அவர்கள் அவரை அறிந்து கொள்ளாமல் தாம் விரும்பியதெல்லாம் அவருக்குச் செய்தார்கள் இவ்வாறே மனுமகனும் அவர்கள் கையால் பாடுபடப் போகிறார்' என்றார் (மத். 17:12).

தீமையிலிருந்து விடுபட வேண்டுமானால், வினைகளிலிருந்து விடுபட வேண்டுமென்று பிறவிச் சுழற்சிக் கோட்பாடும், கடவுளுடைய திருவடிகளைச் சேர்ந்து அவருடைய திருவுளப்படி நடத்தல் வேண்டும் எனக் கடவுள் கோட்பாடும் விளக்கம் கொடுக்கின்றன.

தீமையில் நிலைத்து வாழும் மனிதன், அடுத்து வரும் பிறவிகளில் சுழலுவான் எனப் பிறவிச் சுழற்சிக் கோட்பாடும், இறைவனுடைய நடுத்தீர்ப்புக்குப் பின்பு, இருள்சேர்ந்த இன்னா உலகம் சென்றடைவான் எனக் கடவுள் கோட்பாடும் கருதுகின்றன.

'நன்மை செய்வதும் அடுத்த பிறவியை ஏற்படுத்தக் கூடிய தீமைக்குக் காரணமாவது' என்னும் கொள்கை, கடவுள் மறுப்புக் கோட்பாட்டையுடைய பிறவிச் சுழற்சிக் கொள்கைக்குரியது. இறைவனடி சேர்ந்து, அவன் காட்டும் வழியில் நன்மை செய்வதே கடவுளுக்கு உவப்பானது என்பது, கடவுள் கோட்பாட்டுக்குரியது.

வறுமை என்பது, பிறவிச் சுழற்சிக் கோட்பாட்டில் மறுபிறவியையும், கடவுள் கோட்பாட்டில் மோட்ச நரகத்தையும் குறிப்பதாகும். தமிழகத்தில் ஓரிறைக் கோட்பாடு செல்வாக்குப் பெற்ற பிற்காலத்தில், சமண சமயத்தினர் பெரும்பாலோர், கடவுள் கோட்பாட்டையும் வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டையும் உடைய சமயங்களில் சேர்ந்தபோது, தங்களுடைய பழைய பிறவிச் சுழற்சிக் கோட்பாட்டைக் கடவுள் கோட்பாட்டோடு இணைக்க முற்பட்டனர்.

இந்தக் கலப்புக் கொள்கையின் காரணமாகப் பிற்காலத்தில் வாழ்ந்த உரையாசிரியர்கள், கடவுள் கோட்பாட்டை மட்டுமே உடைய முற்காலச் சான்றோர் எழுதிய நூல்களில் 'பிறப்பு' என்னும் சொல் வரும் இடங்களிலெல்லாம், பிறவிச் சுழற்சிப் பொருள் காண முற்பட்டுள்ளனர். திருக்குறளும் இதற்கு விதிவிலக்கு அன்று.

இக்கலப்புக் கொள்கையின் காரணமாகவே, பிற்கால சமய நூல்களைக் கற்ற கடவுள் கோட்பாட்டையுடைய அறிஞர்களுங்கூட இறப்புக்குப் பின் அடைவது மோட்ச நரகமா? அடுத்த பிறவியா? என்னும் வினாக்களுக்குத் தெளிவான விடை கூறத் தயங்குகின்றனர் எனலாம்.

பிறவிச்சுழற்சிக் கோட்பாட்டின்படி, நன்மை செய்வது அடுத்த பிறவியைத் தோற்றுவிக்கும் தீமையைக் கொண்டுள்ளது. ஆகையால், நன்மை செய்வதும் தவறா என்னும் வினாவுக்கும் கடவுள் நம்பிக்கையுடைய அவர்கள் விடை சொல்லத் தயங்கு கின்றனர்.

இந்தத் தெளிவின்மையின் காரணமாகவே, கடவுள் கோட் பாட்டை மட்டுமே கொண்ட பண்டைய நூல்களின்அடித்தளத்தைத் தெளிவாகப் புரிந்துகொள்ள இயலாத நிலை, நூல் அறிவாளர் களிடையேயும் உள்ளது எனலாம்.

திருக்குறள் உரையாசிரியருள் பெரும்பகுதியினர், வள்ளுவர் பிறவிச் சுழற்சிக் கொள்கையுடையவர் எனக் கருதியே உரை எழுதிச் சென்றுள்ளனர், ஆனால், புலவர் குழந்தை, பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் ஆகிய இருவரும் அதை மறுத்துக் கூறு கின்றனர்.

உரையாசிரியர்களுள் பெரும்பான்மையினர்க் கொள்கையை முதலில் நோக்குவோம். அவர்கள் பிறவிச் சுழற்சிக் கொள்கையே வள்ளுவர்க்கு உண்டு என்பதற்கு ஆதாரவாகக் கொள்ளும் சொற் கள் : 1. எழுமை, 2. எழுபிறப்பு, 3. பிறப்பறுக்கல், 4. பிறவிப் பெருங்கடல் ஆகியனவாகும். அவற்றை முறையே ஆராய்வோம்.

## 1. எழுமை

இச்சொல் திருக்குறள் முழுவதிலும் 5 இடங்களில் பயன்படுத் தப்பட்டுள்ளது. அவையாவன :-

1. ''எழுமை எழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு.'' -107

2. ''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து.'' -126

3. ''ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து.'' -398

4. ''புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யா(து)
இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்.'' -533

5. ''ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக் கழுந்தும் அளறு.'' -835

மேலே நாம் கண்ட ஐந்து இடங்களுள், எழுமையுடன் இணைத்துச் சொல்லப்படும் 'ஒருமை' என்னும் சொல்லை, மூன்று இடங்களில் காண்கின்றோம். ஆகவே, ஒருமையும் எழுமையும் இணைந்து காணப்படுகின்றன. 'ஒருமை' என்பதற்கு 'ஒரு பிறவியில்' எனவும், 'எழுமை' என்பதற்கு 'ஏழு பிறவியில்' எனவும் உரையாசிரியர்கள் பொருள்கொண்டுள்ளனர் என்பது தெளிவாகும்.

'எழு பிறவியில்' என்றால், செத்துப் பிறக்கும் மறுபிறவி ஏழு முறை மட்டுமே உண்டா? இப்பொழுது நாம் பிறந்திருக்கும் பிறவி எத்தனையாவது? இன்னமும் ஏழில் மீதியிருப்பவை எத்தனை? ஏழு முறைக்குப் பின்னர், பிறவி நீக்கம் வந்துவிடுகிறதா என்னும் வினாக்கள் தோன்றுகின்றன. அஃது இடைவிடாது பிறவி நீக்கம் வரும்வரை கணக்கின்றிப் பல ஆயிரமாகத் தோன்றிக்கொண்டிருக்கும் பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கு முரண்பட்டு வருகிறது. ஆகவே, 'எழுமை' என்பதற்கு 'ஏழுவகையான **பிறப்பு**' எனப் பொருள் கூறி,

''ஊர்வ பதினொன்றா மொன்பது மானிடம்
நீர்ப்பறவை நாற்காலோர் பப்பத்தாஞ்—சீரிய
பந்தமாந் தேவர் பதினா லயன்படைத்த
வந்தமில்சீர்த் தாவரநா லைந்து.''

என ஓரறிவுயிர் முதல் தேவர்கள் வரையிலுள்ள, ஏழு வகையான பல்கோடி உயிர்களைக் காரணம் காட்டுகின்றனர்.

'எழுமை' என்னும் சொல், ஏழுவகையான பிறவி என்றே பொருள் கொள்ளப்பட்டுக் கூறப்பட்டுள்ளதா?

நாம் மேலே கண்ட ஐந்து குறட்பாக்களையும் முறையே ஆய்வோம்.

1. ''எழுமை எழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.'' -107

இக்குறட்பாவில் எழுமை எனக் கூறிய வள்ளுவர், மீண்டும் எழுபிறப்பு என்னும் சொல்லைச் சேர்த்து, 'எழுமை எழுபிறப்பும்' எனக் கூறக் காரணம் என்ன? 'எழுமை' வேறு 'எழுபிறப்பு' வேறு

என்றே எண்ண வேண்டியுள்ளதன்றோ? 'எழுமை' என்னும் சொல்லை எழுவகைப் பிறப்பு என்னும் பொருளில் வள்ளுவர் ஆண்டிருப்பாரானால், 'எழுவகைப் பிறப்பு எழுபிறப்பும் உள்ளுவர்' எனக் கூறியதையே மீண்டும் கூறியிருப்பாரா என்பது சிந்திக்கத் தக்கதாம்.

எழுமை, எழுபிறப்பு ஆகிய இரு சொற்களுக்கும், பிறவிச் சுழற்சிக் கொள்கைப்படியே பொருள் கொண்டால், தனக்குச் செய்யப்பட்ட நன்மையை ஆயிரக்கணக்கான பிறவிகளுக்குப் பின்னரும், யாராவது நினைவு கூர்ந்ததாக எங்காவது பிறவிச் சுழற்சிக் கொள்கையில் சொல்லப்பட்டுள்ளதா? சான்று உண்டா? அல்லது அவ்வாறு நினைவு கூர்தல்கூடும் என்னும் கொள்கையாவது உண்டா என்னும் இவ்வினாக்கள் எழுகின்றன.

முற்பிறவி வினையை நினைவுகூர்ந்ததாகச் சமய இலக்கியங்களில் ஒன்றிரண்டு சான்றுகள் காட்டப்பட்டாலும் அவை, இதற்கு நேர் முந்திய பிறவிமட்டுமே தெரிந்ததாகக் கூறப்பட்டுள்ளனவேயன்றி, முன்னர்த் தோன்றிய ஆயிரக்கணக்கான பிறவிகளையும், அப்பிறவிகளில் நிகழ்ந்தவற்றையும் விடாமல் நினைவுகூர்ந்ததாக எங்குமே சான்று இல்லை. ஆகவே, அவ்வாறு நினைவுகூர்வர் என்னும் கருத்து, பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கு முரண்பட்டதாகி விடுகிறது.

மூன்றாவதாக, தங்கள் விழுமந்துடைத்தவர் நட்பை என்றுமே நினைவு கூரக்கூடிய மேலான உள்ளமுடையவர்களுக்கு, ஆயிரக்கணக்கான பிறவிகள் தோன்றக் கூடுமா? அப்படியானால், பிறவி நீக்கம் யாருக்குக் கிடைக்கும் என்பன போன்ற வினாக்கள் எழுகின்றன.

நான்காவதாக, இக்கொள்கை சமயக் கொள்கைக்கு முரண்பட்டு விளங்குவதோடு, நடைமுறைக்கும் முரண்பட்டு விளங்கும் கருத்தாகும். இன்று உலகில் வாழும் பெரியார்களுள் எவராவது ஒருவர்க்கேனும், இதற்கு முந்திய ஆயிரக்கணக்கான பிறவிகளைப் பற்றியும், அப்பிறவிகளில் மற்றவர்கள் தங்களுக்குச் செய்த நன்மைகளைப்பற்றியும், நினைவுகூரக்கூடிய ஆற்றலுண்டா? அவ்வாறு இல்லையானால், வள்ளுவர் கொள்கைப்படி உலகில் வாழ்ந்தவர்கள் எல்லோருமே நன்றி கெட்டவர்கள்தாமா? உலகில் இதுவரை அவ்வாறு ஆயிரக்கணக்கான பிறவிகளைப்பற்றிய நினைவுகூரக்கூடிய யாருமே தோன்றவில்லையானால், செய்ந்

நன்றி யறியக்கூடிய யாருமே உலகில் இதுவரை தோன்றவில்லை; இனிமேலும் தோன்றமாட்டார்கள் என்பது பொருளா? அப்படி யானால், செய்ந்நன்றியறிதல் என்னும் கருத்தே பிழையான தொன்றாகிவிடுகிறதன்றோ?

இனி அடுத்த குறட்பாவை நோக்குவோம்.

2. "ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து." -126

இதற்குப் பரிமேலழகர் கூறும் பொருள்: "ஆமைபோல ஒருவன் ஒரு பிறப்பின்கண் ஐம்பொறிகளையும் அடக்கவல்லானாயின், அவ்வன்மை அவனுக்கு ஏழுபிறப்பின்கண்ணும் அரணாதலை உடைத்து."

ஒரு பிறப்பில் அடக்குதல் பல ஆயிரம் பிறப்புகளிலும் பாதுகாப்பு ஆகும். 'ஐந்தடக்கல்' என்னும் சொல்லால் ஐம்புலன் குறிக்கப்படுகின்றது. 'எழுமை'—ஏழுவகையான பிறப்பு. அஃதாவது, ஒரு புலன் முதல் ஐம்புலன் வரையிலும் படிப்படியாக உள்ள பிறப்புகள்.

"ஐம்புலனை அடக்கியவர்கள், அவ்வைம்புலனில் குறைந்த நான்கு, மூன்று, இரண்டு, ஒரு புலனுடைய உயிராகப் பிறந்தாலும், அவ்வடக்கல் அவர்களுக்குப் பயன்படும். ஆகவே, ஐம்புலனுடைய மனிதனே, நீ இப்பொழுதே அடக்கிப் பழகிக்கொள்."

இக்கருத்துப் பொருந்துமா? பத்தாம் வகுப்பில் பயிலும் ஒரு மாணவனிடம், "இதைத் தெரிந்துகொள். இக்கருத்து உனக்கு இரண்டாம் வகுப்புக்குப் பயன்படும்", என எந்த ஆசிரியராவது கூறுவாரா? அப்படி ஓர் ஆசிரியர் கூறினால், அவருடைய அறிவு நிலையைப்பற்றியே மாணவன் ஐயுறுவான் அன்றோ? 'அடக்கல்'— எதற்குப் பயன்படுகிறது? பிறவிச் சுழற்சிக் கொள்கைப்படி, பிறவி நீக்கத்திற்கன்றோ பயன்படுகிறது?

இங்கு வள்ளுவர், 'அடக்கல்' பிறவி நீக்கத்திற்குப் பயன்படும் எனச் சொல்லுவதற்குப்பதில், பிறவிச் சுழற்சியில் கீழ்நிலைப் பிறவியில் பயன்படும் எனக் கூறுகிறார் என்னும் கருத்துப் பொருந்துமா?

அடக்குதல் கைவரப்பெற்ற ஆறறிவு மனிதனுக்குக் கிடைக்க இருப்பது, பிறவி நீக்கமா? கீழ்நிலைப் பிறப்பா? பிறவிச் சுழற்சிக் கொள்கையுடையாரின் கோட்பாடு என்ன? வள்ளுவர் பிறவிச் சுழற்சிக் கொள்கையுடையவரானால், அக்கொள்கைக்கும் மாறு பட்ட—கேட்டவர்கள் நகைக்கக்கூடிய கருத்தைக் கூறுகின்றாரா? மூன்றாம் குறட்பாவை நோக்குவோம்.

3. ''ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து.'' -398

**பரிமேலழகர்:**

''ஒருவனுக்கு, தான் ஒரு பிறப்பின்கண் கற்ற கல்வி எழுபிறப் பினும் சென்று உதவுதலையுடைத்து.'' இங்கும் எழுபிறப்பினும் என்பது, ஏழு வகையான பிறவியாகிய பல்லாயிரம் பிறவிகளையே குறிக்கிறது. அஃதாவது, ஓரறிவு முதல் தேவர்கள்வரையுள்ள பிறவிகளையே குறிக்கிறது.

இதை விளக்கமாகக் கூறினால், ஒருவன் ஒரு பிறப்பில் கற்ற கல்வியானது, அவன் தேவராக, மிருகமாக, பறவையாக, ஊரும் உயிராக, நீர்வாழ் உயிராக, மரமாக அல்லது புல் பூண்டாக எவ் வகைப் பிறவியில் பிறந்தாலுங்கூட, அஃது அவனைத் தொடர்ந்து சென்று உதவும் என்று பொருள் படுகின்றதன்றோ? அப்படியா னால், நாம் காணும் மரங்களிலே முற்பிறவியில் கற்ற மரத்திற்கும் கல்லாத மரத்திற்குமுள்ள வேற்றுமை என்ன? அவ்வாறே மற்ற உயிரினங்களிலும் முற்பிறவியில் கற்றவற்றுக்கும் கல்லாதவற் றுக்கும் வேற்றுமையுண்டா?

மனிதர்களிலே சிலர், அறிவாளிகளாயும் வேறு சிலர் அறிவில் குறைந்தவர்களாயும் இருத்தலை, ஒப்புமை காட்டக் கருதினால், அங்கு முக்கியக் குறிப்பு ஒன்றை நோக்கவேண்டும். அங்கு அறிவு சிறப்பதற்குத் தன்முயற்சியும் சூழ்நிலையும் பயன்படுகின்றனவே யன்றி, பிறவிச் சுழல் இல்லை. பிறவிச் சுழலாயிருக்குமானால், எழுவகைப்பட்ட உயிரினங்களிலும் இவ்வேற்றுமை நன்கு தெரிய வேண்டும் அன்றோ?

அடுத்தது, மனிதனாகப் பிறந்த ஒருவன் கற்றால், அக்கல்வி அவன் மரமாகப் பிறக்கும் பொழுதும் பயன்படும் என்னும் கருத்துப் பொருந்துமா? கல்வியை வள்ளுவர் இந்த முறையில்தான் வற் புறுத்த வேண்டுமா? கல்வி, பிறவி நீக்கத்திற்குப் பயன்படு

கிறதா? அல்லது பிறவியில் இழிநிலையடைந்து கீழ்ப்பட்ட உயிராகப் பிறப்பதற்குப் பயன்படுகிறதா? அஃதாவது, பிறவிக் கொள்கைப்படி, உயர்நிலையாகிய-ஆறாம் நிலையாகிய மனிதனாகப் பிறந்து, கல்வி கற்ற ஒருவனுக்குக் கீழ்நிலைப் பிறவிகள் ஏற்படுமா?

அப்படி ஏற்படுமானால், அக்கல்வியால் பெறப்படும் பயன்தான் யாது? அஃது எவ்வாறு ஏமாப்பாகும்? ஏமாப்பு ஆகாத ஒன்றை, 'ஏமாப்பு' எனக் கூறியது தவறுதானே?

அடுத்த குறட்பாவை நோக்குவோம்.

''புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யா(து)
இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்'' -538

**பரிமேலழகர் :** ''நீதி நூலுடையார், இவை அரசர்க்குரியன என்று உயர்த்துக் கூறிய செயல்களைக் கடைப்பிடித்துச் செய்க; அங்ஙனம் செய்யாது மறந்தவர்க்கு எழுமையிலும் நன்மை இல்லையாகலான்.''

இக் குறட்பா அரசியலில் இடம்பெறுவதால் அரசனுக்குச் சொல்லப்பட்டதாகக் கொள்ளப்படுகிறது.

மனிதர் யாவருக்கும் பொது அறமுறையுண்டு. அதிலிருந்து ஒருவன் தவறுவானானால், அவன் மனித நிலையிலிருந்தே தவறுபவனாவான்.

ஆனால், உலகில் ஒவ்வொருவருக்கும் அவரவர் ஏற்கும் பதவிக்கேற்ப ஒவ்வொரு கடமையுண்டு. நிர்வாகிக்கு ஒரு கடமையுண்டு; அமைச்சனுக்கு ஒரு கடமையுண்டு; அரசனுக்கு ஒரு கடமையுண்டு. எவன் எக்கடமையிலிருந்து தவறுகிறானோ, அவன் அப்பொறுப்பிலிருந்து தள்ளப்படுவான். இதுவே உலக இயல்பு. அவ்வாறே அரசனுக்குரிய கடமைகளை அவன் போற்றிச் செய்தல் வேண்டும். செய்யாது தவறுவானானால், என்ன ஏற்படும்? அவனுடைய ஆட்சி நிலைபெறாமல் போகும். அவன் அரசனாக நீடிக்க இயலாது. அவன் அரச நிலையிலிருந்து தள்ளப்படுவான். இதுதானே நடக்கக்கூடும்?

இதை விட்டு, அவனுக்குப் பல்லாயிரம் பிறவிகளிலும், அஃதாவது மரம், ஊர்வன, மிருகம் முதலான பிறவிகளிலெல்லாம் நன்மை இல்லை என்னும் கருத்துப் பொருந்துமா?

எழுவகைப் பிறப்பிலும் நன்மை இல்லை என்று கூறமுற்பட்டால், எழுவகைப் பிறப்பிலும் நன்மை பயக்கக்கூடிய ஒன்று உளதா? நன்மை பயக்கக்கூடிய ஒன்று இருக்குமானால், பிறப்பு ஏற்படக் காரணம் என்ன? ஆறறிவு மனிதனாய்ப் பிறந்த ஒருவன், இந்நன்மையையும் பெற்றிருப்பின், அவனுக்குக் கீழ்நிலைப் பிறப்பு ஏன்? அவனுக்கும் கீழ்நிலைப் பிறப்பு உண்டெனில், பிறவி நீக்கம் யாருக்கு என்னும் வினாக்கள் தோன்றி, மேற்கண்ட உரையாசிரியர் கருத்துக்கு முரண்பட்டுவிடுகின்றன.

ஆனால், வள்ளுவர் குறளிலோ தெளிவான விளக்கங்கள் உள்ளன.

'பொச்சாவாமை' என்றும் அதிகாரத்தின் கீழுள்ள இதற்கு அடுத்த குறட்பாவாகிய,

''இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து'' -539

என்னும் குறட்பா, முந்திய குறட்பாவிற்கு விளக்கம் கொடுப்பதைப் போல் அமைந்துள்ளது.

'புகழ்ந்தவை போற்றிச் செய்யாது இகழ்ந்து கெட்டாரை உள்ளுக தாந்தம் மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.'

இகழ்ச்சியின் கெட்டார் என்பதிலுள்ள 'கெட்டார்' யார்? அரச நிலையிலிருந்து தள்ளப்பட்டுக் கெட்டவரா? அல்லது கீழ்நிலை உயிர்களான மரம், பாம்பு, மிருகமாகிக் கெட்டவரா? யாரைப் பார்த்து 'உள்ள' வேண்டும்?

மரமாகவும் பாம்பாகவும் மிருகமாகவும் இருப்பனவற்றைப் பார்த்து உள்ள வேண்டுமா? அல்லது மனிதநிலையிலேயே, மன்னன் நிலையிலிருந்து தள்ளப்பட்டுக் கெட்டாரை நோக்கி உள்ள வேண்டுமா? வள்ளுவர் கூறுவது எவ்வாறு? எது பொருந்தும்? இனி இறுதிக் குறட்பாவை நோக்குவோம்.

''ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக் கழுந்தும் அளறு'' -835

**பரிமேலழகர் :**

''பேதையாயினான் வரும் பிறவிகளிலெல்லாம் தான்புக்கு அழுந்தும் நிரயத்தினை இவ்வொரு பிறப்புள்ளே செய்து கொள்ள வல்லனாம்,';

'எழுமை' என்பதற்கு ,ஏழுவகையான பிறவி' எனப் பொருள் கூறிவந்த பரிமேலழகர், இக்குறட்பாவில் 'வரும் பிறவிகளிலெல் லாம்', என்று கூறியது ஏன்? எழுமையிலுள்ள பகுதியாகிய 'எழு' என்பதற்கு 'ஏழு' என்னும் எண்ணுப் பொருளைக் கொள்ளாது 'எழுகின்ற' என்னும் வினைப் பொருளைக் கொண்டது ஏன்? ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது. அடுத்து அவருடைய விளக்கத்தின் இறுதியில்

''இதனான், அவன் மறுமைச் செயல் கூறப்பட்டது'' எனக் கூறுவதன்மூலம் ஏழு வகைப்பிறப்புக் கோட்பாட்டையும் கைவிடு கிறார் அன்றோ?

இம்மை, மறுமை ஆகிய இருமையில், இம்மை இவ்வுலக வாழ்க்கையைக் குறித்தால், மறுமை இவ்வுலகவாழ்வு முடிந்து,நாம் இறந்த பிறகு அடையப்போகும் நல்லுலகம், தீய உலகம், அல்லது துறக்கம்-நரகம் ஆகிய இரண்டையும்தாமே குறிக்கும்? அவ்வாறு பொருள் கொள்ளாது, இம்மை-இப்பிறப்பு எனவும், மறுமை-மறு பிறப்பு எனவும் பொருள் கொண்டால், இப்பிறப்பிற்கு முன்னைய பிறவி, அதற்கு முந்திய பலகோடிப் பிறவிகள், இப்பிறப்பிற்குப் பின்னர் வரப்போகும் மறுபிறவி, அதற்குப் பின்னரும் வரக்கூடிய பலகோடிப் பிறப்புகள், இவற்றைக் குறிக்கும் சொற்கள் யாவை? அவை யாவற்றையும் அடக்கி இருமை என எவ்வாறு கூறவியலும்? ஆகவே, இருமை என்னும் இச்சொல் பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கு முரண்பட்டதாகும்.

பரிமேலழகர், இவ்வாறு இக்குறட்பாவுக்கு உரை கூறுமிடத்து, இடறலடைவதற்குக் காரணம், இக்குறட்பாவில் சுட்டப்படும், 'எழுமையும் தான்புக்கழுந்தும் அளறு' என்னும் தொடராகும். இங்குப் பரிமேலழகர், தமது பிறவிச் சுழற்சிக் கொள்கையிலிருந்து மாறிக் கடவுள், மோட்சம், நரகம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட கொள்கையின் அடிப்படையில் பொருள் கூறுவது ஏன்? இதைக் குறித்து தேவநேயப் பாவாணர் அவர்கள்,தமது திருக்குறள் மரபுரையில்,

"வரும் பிறவிகளிலெல்லாந் தான் புக்கழுந்தும் நிரயத்தினை, என்றும், 'முடிவில் காலமெல்லாம் தான் நிரயத் துன்பமுடித்தற் கேதுவாங் கொடுவினைகளை' என்றும், பரிமேலழகர் கூறியிருப்பது மிக வரையிறந்திருப்பது. ,எழுவகைப் பிறப்பிலும் அழுந்தும் நர' கென்பது உத்திக்குப் பொருந்தாது." எனக் கூறுகிறார்.

உரையாசிரியர் பரிதியாரும், "ஒரு சன்மத்திலே பேதைக் குணம் பெற்றால், ஏழு சன்மமும் நரகம் புகுவான்" என ஒன்றுக் கொனறு மாறுபட்ட பொருந்தா உரையே கூறினார்.

மறுபிறவியில் எவ்வாறு மோட்சமோ அன்றி நரகமோ தோற்றமளிக்கும்? வருகின்ற பிறவிதோறும் நரகம் என்பது எவ்வாறு பொருந்தும்? வருகின்ற பிறவிதோறும் நரகம் என்றால், அது பொருந்துமா? அவ்வாறு சுட்டுங்கால், அங்கு மறுபிறவிக் கொள்கை கைவிடப்படுகிறதல்லவா?

மறுபிறவிக் கொள்கையில் உறுதியாய் நிலைநின்று, அதையே வள்ளுவர் செய்யுளில் ஏற்றிக் காட்டிவரும் பரிமேலழகருக்கும் இடர்பாட்டை ஏற்படுத்தும் சொல்லாக 'எழுமை' காணப்படுகிறது. 'எழுமை' என்னும் சொல்லுக்கு, 'ஏழுவகைப் பிறப்பு' என்னும் பொருள் பொருந்தவில்லை என்பது பரிமேலழகராலேயே இவ்விடத்தில் ஒப்புக்கொள்ளப்படுகிறது. அப்படியானால்,'எழுமை' என்னும் சொல் வள்ளுவரால் என்ன பொருளில் ஆளப்பட்டுள்ளது?

நாம் மேலே கண்ட ஐந்து குறட்பாக்களுள், மூன்று குறட் பாக்களும் 'எழுமை' என்னும் இச்சொல்லுடன் மைவிகுதியை யுடைய இன்னொரு சொல்லையும் இணைத்தே கூறிகிறார் வள்ளுவர். அச்சொல்லே 'ஒருமை' என்பதாகும்.

ஒருமை, எழுமை ஆகிய இரண்டும் 'மை' விகுதியையுடைய எண்ணுப் பெயர்களாகக் கொண்டால்,

ஒரு = ஒன்றையும், எழு—ஏழையும் உணர்த்துகின்றன. ஒன்று எதைக் குறிக்கும்? எழு எதைக் குறிக்கும்? இவற்றை நோக்கி, 'ஒருமை' என்ன பொருளில் வள்ளுவரால் ஆளப்பட்டிருக்கிறது என்பதை நோக்குவோம்.

## 2. ஒருமை

'ஒருமை' என்னும் சொல் திருக்குறள் முழுவதிலும் நான்கு இடங்களில் மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளது.

1. ''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
   எழுமையும் ஏமாப் புடைத்து.'' -126

2. ''ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
   எழுமையும் ஏமாப் புடைத்து.'' -398

3. ''ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
   தான்புக் கழுந்தும் அளறு.'' -835

4. ''ஒருமை மகளிரே போலப் பெருமையும்
   தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு. -974

மேலே நாம் கண்ட நான்கு இடங்களினுள், மூன்று இடங்களில் 'எழுமை'யுடன் இணைத்தும் ஓரிடத்தில் மட்டும் எழுமையுடன் இணைக்காமல் தனித்தும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதுவரை நாம் பார்த்து வந்தபடி 'எழுமை' என்பதன் பொருள் பொருத்த முடையதாக விளங்காமையால், எழுமையுடன் இணைத்துப் பொருள் கூறப்பட்ட 'ஒருமை'யின் பொருளும் பொருத்தமற்ற தாகவே இருத்தல் வேண்டும் என்றே கருதப்படும். ஆகவே, எழுமையுடன் இணைக்காது தனித்துக் கூறப்படும் குறளையும், அதற்கு உரை யாசிரியர்களால் கூறப்படும் பொருளையும் நோக்குவோம்.

''ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின்உண்டு.'' -974

மேலே நாம் கண்ட நான்கு இடங்களினுள், மூன்று இடங்களில் 'எழுமை'யுடன் இணைத்தும் ஓரிடத்தில் மட்டும் எழுமையுடன் இணைக்காமல் தனித்தும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதுவரை நாம் பார்த்து வந்தபடி 'ஏழுபை' என்பதன் பொருள் பொருத்த முடையதாக விளங்காமையால், எழுமையுடன் இணைத்துப் பொருள் கூறப்பட்ட 'ஒருமை'யின் பொருளும் பொருத்தமற்றதாகவே இருத்தல் வேண்டும் என்றே கருதப்படும். ஆகசே, எழுபையுடன் இணைக்காது தனித்துக் கூறப்படும் குறளையும், அதற்கு உரையாசிரியர்களால் கூறப்படும் பொருளையும் நோக்குவோம்,

"ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு" —974

## ஒருமை மகளிர்

| | | |
|---|---|---|
| பரிமேலழகர் | : | கவராத மனத்தினையுடைய மகளிர். |
| பரிப்பெருமாள் | : | கற்புடைய மகளிர். |
| பரிதியார் | : | குலமகள். |
| காலிங்கர் | : | நெஞ்சு ஒருமைப்பாட்டால் கொண்டானைப் பிழையாத மகளிர். |
| புலவர் குழந்தை | : | ஒருமனப் பெண்டிர். |
| மயிலை சிவமுத்து | : | ஒரே மன உறுதியோடுள்ள கற்புடைய மகளிர். |
| டாக்டர் மு. வ. | : | ஒரு தன்மையான கற்புடைய மகளிர் |
| தேவநேயப் பாவாணர் | : | ஒரே கணவனைக் காதலித்துத் தம் கற்பைக் காத்துக்கொள்ளும் குல மகளிர். |
| சுப்பிரமணியப் பிள்ளை | : | ஒரு நிலையில் மனத்தை வைத்துக் கொள்ளும் கற்புடைப் பெண்டிர். |

மை விகுதி, தன்மையை உணர்த்துகிறது.

தன்மை = நிலை

ஒரு + மை = ஒருமை = ஒருநிலை.

'ஒருமை' என்பதை 'ஒருநிலை' என்னும் பொருளிலேயே வள்ளுவர் ஆண்டுள்ளார் எனத் தெரிகிறது.

ஒருமை மகளிர் = ஒருநிலை மகளிர் ; ஒருமன மகளிர்.

இருமனப் பெண்டிர் = வரைவின் மகளிர்.

"இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு." —920

ஆகவே, 'மை விகுதி' தன்மை அல்லது நிலை இவற்றைக் குறிக்கிறது. 'ஒருமை' ஒரு நிலையைக் குறிப்பதைப் போலவே, 'இருமை' என்பதும் இருநிலைகளை விளக்குவதற்காக வள்ளுவரால் பயன்படுத்தப்பட்டுள்ளது.

" இருமை வகைதெரிந்து ஈண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு." —23

"இருமை என்பது இரண்டன் தொகுதி குறித்த பண்புப் பெயர்."

—மணிவிளக்கவுரை, 1 பக். 601

உடலோடு கூடிய இம்மை நிலை ஒன்று, உடல் இல்லா மறுமை நிலை ஒன்று.

"இம்மை மறுமை என்னும் இரண்டின் தன்மை."

தண்டபாணிப்பிள்ளை உரை, பக். 213

மேலேகண்ட விளக்கங்களிலிருந்து,

ஒருமை = ஒரு தன்மை — ஒருநிலை
இருமை = இரண்டு தன்மை — இருநிலை
எழுமை = ஏழு தன்மை — ஏழுநிலை

எனப் பொருள் கொள்ள வள்ளுவர் குறள் வழி காட்டுகிறது.

ஒன்று, ஏழு என்னும் எண்கள் குறிக்கும் பொருள் என்ன என்பதைக் காண்போம்.

ஒன்றையும் ஏழையும் இணைத்து, வள்ளுவர் கூறும் இடங்கள் இவற்றைத் தவிர, குறளில் வேறிடங்கள் உளவா? நோக்குவோம்.

" ஒருநாள் எழுநாள்போல் செல்லும்சேட் சென்றார்
வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு." —1269

இக்குறட்பாவுக்குப் பரிமேலழகர் கொடுக்கும் உரை:

"'சேணிடைச் சென்ற தம் காதலர் மீண்டுவரக் குறித்த நாளை உட்கொண்டு, அது வருந்துணையும் உயிர்தாங்கி வருந்தும் மகளிர்க்கு, ஒருநாள் பல நாள் போல நெடிதாகக் காட்டும் என்றவாறு."

**"ஏழ் என்பது, அதற்கு மேலாய மிக்க பன்மை குறித்து நின்றது; 'ஒருவர் கூறை எழுவர் உடுத்து' என்றாற் போல."**

பரிமேலழகரின் இவ்வுரையால் 'ஒன்று' —'எழு' என்பன, 'ஒன்று'—'பல' என்னும் பொருளையுடையன என்பது விளங்குகிறது.

காலிங்கர் : எனவே, ஒருநாள்தானே அநேக நாளின் காலம் நீட்டம்கொண்டு.

குழந்தை : ஒருநாள், பலநாள் போல. ஏழ் = பன்மை குறித்தது.

பாவாணர் : ஒருநாளே பலநாள்போல நெடிதாகத் தோன்றும்.

ஆகவே, வள்ளுவர் 'ஒன்று', 'ஏழு' என ஏழ் என்னும் எண்ணைச் சுட்டும் இடங்கள், உண்மையில் அவ்வெண்ணைச் சுட்டாது ஒன்று - பல என்னும் பொருளையே குறித்தமையை நாம் பரிமேலழகர் உரையாலும் மற்றவர்கள் உரையாலும் ஐயத்திற்கிடமின்றித் தெளிவாக அறிகிறோம்.

வள்ளுவர் 'ஏழு' என்னும் சொல்லை, 'பல' என்னும் பொருளில் ஆண்டுள்ள வேறு இடங்கள் குறளில் உண்டா? நோக்குவோம்.

''நெறுநற்றுச் சென்றார்எம் காதலர் யாமும்
எழுநாளேம் மேனி பசந்து'' —1278

''பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துத் தெவ்வோர்
எழுபது கோடி யுறும்.'' —639

மேலே நாம் கண்ட 'எழுநாளேம்', 'எழுபது கோடி' என்பவற்றிலுள்ள 'எழு' என்பது 'ஏழ்' என்னும் எண்ணுப் பொருளை மட்டுமே குறிக்குமென யாருமே கூறவியலாது. கூறினால், அது நகைப்புக்கிடமாகுமன்றோ? உரையாசிரியர்கள் எவ்வாறு கூறுகின்றனர் நோக்குவோம்.

**எழுபது கோடி**

பரிமேலழகர் : 'எழுபது கோடி' என்றது, மிகப் பலவாய எண்ணிற்கு ஒன்று காட்டியவாறு.

குழந்தை : எழுபது கோடி — மிகப் பல.

தேவநேயர் : எழு என்பது நிறைவான எண்ணும், கோடி என்பது பேரெண்ணுமாதலால், எழுபது கோடியென்றது உண்மையில் அதனினும் மிகப் பெரிய தொகையையே.

வள்ளுவரும் தமது நூலை, ஏழு சீர்கள் அடங்கிய குறள் வெண்பா என்னும் யாப்பிலேயே அமைத்தமை எண்ணத் தக்கது.

'ஏழு' என்பது நிறைவான எண்ணைக் குறிக்கும் என்னும் பாவாணர் அவர்களின் கருத்தைக் கிறித்தவர்களின் திருமறையான விவிலியமும் உறுதிப்படுத்துகிறது. அங்கு ஏழு என்னும் எண் பல, அல்லது நிறைவு என்னும் பொருளில் பலபடியாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது.

| | | |
|---|---|---|
| ஏழு அப்பம் | —மத்தேயு, | 15 : 36 |
| ஏழு கூடை | ,, | 15 : 37 |
| ஏழு முறை, ஏழு எழுபது முறை | ,, | 18 : 22 |
| ஏழு சபை—வெளிப்படுத்தல் | ,, | 1 : 4 |
| ஏழு பொன்விளக்கு—வெளிப்படுத்தல் | ,, | 1 : 12 |
| ஏழு விண்மீன்கள் | ,, | 1 : 16 |
| ஏழு ஆவி | ,, | 3 : 1 |
| ஏழு தீவட்டிகள் | ,, | 4 : 5 |
| ஏழு முத்திரை | ,, | 5 : 1 |
| ஏழு கொம்புகள், ஏழு கண்கள் | ,, | 5: 6 |
| ஏழு எக்காளம் | ,, | 8: 6 |
| ஏழு இடிகள் | ,, | 10 : 4 |
| ஏழாயிரம் பேர் | ,, | 11 : 13 |
| ஏழு தலை, ஏழு முடி | ,, | 12 : 3 |
| ஏழு வாதை, ஏழு தூதர் | | 15 : 1 |
| ஏழு பொற்கலம் | ,, | 15 : 7 |
| ஏழு கலைகள் | ,, | 16 : 9 |
| ஏழு மன்னர்கள் | ,, | 16 : 10 |

இதுவரை நாம் காணும் விளக்கங்களிலிருந்து 'ஒன்று'—'ஏழு' என வள்ளுவர் குறிக்கும் இடங்கள் 'ஒன்று'....'பல' என்னும் பொருளையே காட்டுகின்றன என்பதில் எவ்வித ஐயத்திற்கும் இடமில்லை.

ஏழுநாள் — பலநாள்

எழுபதுகோடி — பலகோடி

எழுபிறப்பு — பலபிறப்பு
எழுமை — பலநிலை

நாம் மேலே கண்ட விளக்கங்களிலிருந்து, ஒருமை—எழுமை என்னும் இரு சொற்களும் முறையே ஒரு நிலை—பல நிலை என்னும் பொருளில் ஆளப்பட்டிருப்பதாக அறிகிறோம். இவ்விளக்கம் வள்ளுவர் 'எழுமை' எனக் குறிக்கும் ஐந்து இடங்களுக்கும் பொருந்துமா என்பதனை நோக்குவோம்.

"எழுமை எழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு." —107

பல நிலையுள்ள பல பிறப்புகளிலும் (பிறப்பு என்பது பின்னர் விளக்கப்படும்) தம்முடைய துன்பத்தைப் போக்கி உதவியவரின் நட்பை மறவாமல் போற்றுவர் பெரியோர்.

"ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து." —126

ஒரு நிலையில் ஆமையைப்போல் ஐம்பொறிகளையும் அடக்கியாள வல்லவனானால், அஃது அவனுக்கு அவன் வாழ்வின் பல நிலை(துறை)களிலும் காப்பாகும் சிறப்புடையது.

சிறுவனாயிருக்கும் ஒருவன் அடங்கி ஒழுகுவானாயின், அஃது அவனுக்கு அவன் வாலிபன், கணவன், தந்தை, மாமன், தாத்தா எனத் தோன்றும் பல நிலைகளிலும் பயன்படும். பத்து வயதில் அடங்கிப் பழகிய அடக்கம், அவனது இறப்பு வரை மாறிவரும் பல நிலைகளிலும் பயன்படும்.

"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து." -398

ஒரு நிலையில் தான்கற்ற கல்வியானது, ஒருவனுக்கு அவன் வாழ்வின் பல நிலைகளிலும் காப்பாகும் சிறப்புடையது.

சிறு வயதில் கற்ற கல்வியானது, அவனது வாழ்க்கையின் பல நிலைகளிலும் இறப்புவரை பயன்படுகிறது. ஆனால். பொருள் போன்ற மற்றச் செல்வங்கள் அவ்வாறு பயன்படுவதில்லை. கல்வியும் அடக்கமும் உள்ளத்துச் செல்வங்கள்.

" புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யாது
இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்." -538

சான்றோர் புகழ்ந்து கூறிய செயல்களைப் போற்றிச் செயல் வேண்டும். செய்யாது மறந்து சோர்ந்தவர்களுக்கு, அரசன் என்னும் முறையில் வர இருக்கும் பல நிலைகளிலுமே உயர்வு இல்லை.

" ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக் கழுந்தும் அளறு." —835

பல நிலைகளிலும் தான் புகுந்து அழுந்தக் கூடிய துன்பத்தைப் பேதையானவன், பேதை என்னும் அந்த ஒரு நிலையிலேயே தேடிக்கொள்ளுகிறான்.

தன் வாலிபப் பருவத்தில் பேதையானவன் செய்யும் செயல், அவனது வருங்காலம் முழுவதையும் துன்பமயமாக்கிக் கொள்வதை நாம் காண்கின்றோமன்றோ? தீய உறவில் தம் உடலைக்கெடுத்துக் கொண்டு, துன்பக் குழியில் தாமே விரைந்துவிழும் பேதையான வாலிபர் எத்தனை பேர் !

குழைசேறுள்ள குழியில் அகப்பட்டுக் கொண்டவன் அடையும் துன்பம், இங்குக் காட்டப்பட்டது. தானே புகும் நிலையைப் 'புக்கு' என்னும் சொல்லால் விளக்கினார்.

'அளறு' என்பதற்குத் தம்முடைய பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கும் முரண்பட்டு, 'நிரயம்' எனப் பொருள்கொண்ட பரிமேலழகரின் உரையின் பொருந்தாமையை உள்ளுக. வள்ளுவர், நிரயமாகிய இன்னா உலகைக் குறிக்க இயற்கையாக உள்ள 'இருள்' என்னும் சொல்லையே பயன்படுத்துகிறார் என்பது நோக்கத்தக்கது.

'நிரயம்' என இவ்விடத்தில் பொருள் கொள்ளுவது மோட்ச நரகக் கொள்கைக்கும் பொருந்தாததொன்றாம்.

துன்பத்தைத் தானே வலியச் சென்று அடைதலை, அளறு நிரம்பிய புதைகுழியில் தானே வலியச் சென்று சிக்கிக்கொண்டு துன்பப்படும் தன்மையுடன் ஒப்பிட்டுக் காட்டுகிறார் வள்ளுவர்.

புக்கு, அழுந்தும் என்னும் இருசொற்களும் இதைத் தெளிவுபடுத்துகின்றன.

**பிறப்பு**

'எழுமை' என்னும் சொல்லுக்கு 'ஏழு வகையான பிறப்பு' என்னும் பொருள் இல்லை எனக் கொண்டாலும், வள்ளுவர்க்கு எழுபிறப்புக் கொள்கை உடன்பாடு இல்லை எனக் கொள்ள இயலுமா? பிறப்பில் ஏழு வகையைப் பற்றிய வாதம் இருப்பினும், பல பிறவிக் கொள்கை வள்ளுவர்க்கு உடன்பாடு தானே? ஆகையால்தானே அவர், தம் நூலுள் தெளிவாக எவ்விதக் கருத்து வேறுபாட்டிற்கும் இடமின்றி 'எழுபிறப்பு' என்னும் சொல்லை ஆண்டுள்ளார். 'ஏழ்' என்பது, 'பல' என்னும் பொருளையே உணர்த்துவதற்காகக் கொண்டாலும் 'பல பிறப்பு' என்னும் பொருள் தெளிவாகக் கூறப்படுகின்றதே!

"எழுமை எழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு" -107

என்னும் குறட்பாவில் 'எழுபிறப்பு' தெளிவாகக் கூறப்படுவதோடு,

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார்" —10

என்னும் கடவுள் வாழ்த்துச் செய்யுளினுள் பிறவிப் பெருங்கடலாக உவமிப்பதன் மூலம், பிறவிக் கடலைக் கடப்பது இறைவன் துணையின்றி இயலாது என்பதையும்,

"மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை" -345

என்னும் துறவு அதிகாரச் செய்யுளின்மூலம் பிறப்பறுக்க வேண்டிய தேவையையும் கூறும் வள்ளுவர், பல பிறவிக் கோட்பாடுடையவர் தாமே என்னும் வினாக்கள் எழுகின்றன. அவற்றிற்கான விடைகளை நோக்குவோம்.

மேலே நாம் கண்ட மூன்று குறட்பாக்களிலும், வள்ளுவர் கூறியுள்ள மூன்று தொடர்களையும் எடுத்துக்கொள்ளுவோம்.

1. எழுபிறப்பு.
2. பிறவிப் பெருங்கடல்.
2. பிறப்பறுக்கல்.

இம்மூன்று தொடர்களும் பிறப்பை அடிப்படையாகக் கொண்டு கூறப்பட்டவை.

1. எழுபிறப்பு—பலபிறப்புகள்
2. பிறவிப் பெருங்கடல்—பிறப்பாகிய பெருங்கடல்.
3. பிறப்பறுக்கல்—பிறப்பை அறுத்து விடுதல் அல்லது துண்டித்தல்

பிறப்பை அடிப்படையாகக் கொண்ட மேற்கண்ட மூன்று தொடர்களும், பிறவிச் சுழற்சிக் கொள்கையை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு கூறப்பட்டவையா? பிறப்பு யாருக்கு உண்டு? பிறக்காமல் உலகில் தோன்றியவர்கள் யாரேனும் உளரா?

உலகிலுள்ள யாவருமே பிறந்தவர்கள்தாம். இதில் கருத்து வேறுபாடு யாருக்குமே இருக்கவியலாது. ஆகவே, 'பிறப்பு' எல்லாக் கொள்கையினர்க்குமே பொதுவானதுதான்.

பிறவிச் சுழற்சிக் கொள்கையை ஏற்றுக்கொள்ளாதவர்களும் பிறப்பு, தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வந்துகொண்டிருக்கிறது என்பதை ஏற்றுக்கொள்வர்.

பிறவிச் சுழற்சிக் கொள்கையினர் கூற்றில் பிறப்பு, உடலுக்கு உடல் மாறிக்கொண்டிருக்கிறது என்பர். ஆகவே, பிறப்பு இரு கொள்கையினர்க்குமே பொதுவானதுதான். இருகொள்கையினருமே, இவ்வுலகில் பிறப்பின் மூலமாக மட்டுமேதான் வந்தவர்கள் ஆவர். ஆகவே, 'பிறப்பு' என்னும் சொல்லால் இருவருக்குமே வேற்றுமை இல்லை.

**1. எழுபிறப்பு :—**

பல பிறப்புகள்—இது, பிறவிச் சுழற்சிக் கொள்கையுடையோர், அதை ஏற்றுக் கொள்ளாதவர் ஆகிய இருதிறத்தாருக்குமே பொருந்துவதாகத் தெரிகிறது.

**பிறவிச் சுழற்சி :** பல உடல்களில் பிறக்கும் உயிர்.

**மறுப்பவர் :**—பல பிறப்புகளையுடைய தலைமுறை-பல உயிர்-பல உடல்.

(1) ஒரே உயிர் பல உடல்களில் தோன்றும் பல பிறப்பு.

(2) பல உயிர் பல உடல்களில் தலைமுறைத் தலைமுறையாகப் படிப்படியாகத் தோன்றும் பல பிறப்பு.

**2. பிறவிப் பெருங்கடல் :—**

(1) ஒரே உயிர் பல உடல்களில் தோன்றும் பிறவியாகிய கடல்.

(2) பல உயிர் பல உடல்களில் தலைமுறைத் தலைமுறையாகத் தோன்றும் பிறவியாகிய கடல்.

**3. பிறப்பறுக்கல் —**

(1) ஓர் உயிர் தனக்கு வரப்போகும் அடுத்த உடலாகிய பிறப்பை அறுத்தல்.

(2) தலைமுறையில், தனக்கு அடுத்தபடியாகப் பிறக்கப் போகும் பிள்ளைகளாகிய பிறப்பை அறுத்தல். அஃதாவது துறவறம் மேற்கொள்ளல்.

மேலே நாம் கண்ட விளக்கப்படி, மேலே கண்ட மூன்று தொடர்களும், இரு கொள்கையினர்க்குமே பொதுவாகக் காணப் படுகின்றன.

ஆகவே, இத்தொடர்களை மட்டுமே வைத்துக்கொண்டு வள்ளுவரது கொள்கையை நாம் காணவியலாது. இத்தொடர்களை அவர் ஆண்டுள்ள இடத்தைக் கொண்டு அவ்விடம் முழுமையாகத் தரும் பொருளைக் கொண்டு, வள்ளுவர் உள்ளக் கிடக்கையை நாம் காணவியலும். ஆகவே, இத்தொடர்கள் ஆளப்பட்டுள்ள குறட் பாக்களை முறையே நோக்குவோம்.

## 3. எழுபிறப்பு

இத்தொடர், திருக்குறள் முழுவதுமே இரண்டு குறட்பாக்களில் மட்டும் ஆளப்பட்டுள்ளது.

''எழுமை எழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.'' -107

'தங்களிடத்து ஏற்பட்ட துன்பத்தைத் துடைத்தவர் நட்பினை, நன்றியறிதலுள்ளவர்கள் பல நிலைகளில் தோன்றுகின்ற பல பிறப்புகளிலும், மறவாமல் போற்றுவர்.'

இங்கு நாம் காணவேண்டியது: வள்ளுவர் கூறும் நன்றியறிதலுள்ளவர்கள், பிறவிச் சுழற்சிக் கொள்கைக்குப் பொருத்தமானவர்களா? அல்லது தலைமுறை கொள்கைக்குப் பொருத்தமானவர்களா? இவற்றை ஆய்ந்து காண்போம்.

**பிறவிச் சுழற்சிக் கொள்கைப்படி கொண்டால்,** இந் நன்றியறிதலுள்ளவர்கள், பல பிறவிகளிலும், அஃதாவது ஏழு வகையாக விளங்குகின்ற பல்லாயிரம் பிறவிகளிலும், தங்கள் விழுமந்துடைத்தவர் நட்பினை மறவாமல் போற்றுவர்.

இது பொருந்துமா? ஒரு பிறவியில் ஒருவர் செய்த நன்மையை பல்லாயிரம் பிறவிகளிலும் நினைக்கவியலுமா? நினைக்கக் கூடியவர் இதுவரை உலகில் தோன்றியதுண்டா? இயலாதெனில் இயலாக் கருத்தை வள்ளுவர் கூறுவாரா?

அடுத்து, அவ்வாறு நன்றியறிதலுள்ளவர்களுக்குப் பல பிறவியுண்டா? அவர்களுக்கும் பல பிறவியுண்டானால், பிறவி

நீக்கம் யாருக்கு? இவ் வினாக்களுக்குப் பிறவிச் சுழற்சிக் கொள்கை யின்படி விடை கொடுக்க வியலாது. ஆகவே, வள்ளுவர் கூறும் நன்றியறிதலுள்ளவர்களைப் பிறவிச் சுழற்சிக் கொள்கையில் காணவியலாது. கண்டால் பொருந்தாது எனத்தெரிகிறது. அடுத்த கொள்கையை நோக்குவோம்.

'தலைமுறைக் கொள்கைப்படி கொண்டால், நன்றி யறிதலுள்ளவர்கள் பல நிலைகளில் தோன்றுகின்ற பல பிறப்புகளி லும், அஃதாவது பல தலைமுறைகளிலும் தங்கண் விழுமந்துடைத் தவர், நட்பினை உள்ளுவர்.'

பல நிலைகளில் தோன்றும் பல தலைமுறைகளிலும் நினைப் பர் என்னும் இக்கருத்துப் பொருத்தமுடையதாகத் தோற்றமளிக் கிறது. பாட்டன், தந்தை, மகன், பெயரன் ஆகிய பல தலைமுறை களிலும், பொருளாதாரத்தாலும் பதவியாலும் ஏற்படுகின்ற பல நிலைகளிலும் தங்களுக்கு நன்மை செய்தவர்களை, அஃதாவது தங்களுக்கு ஏற்பட்ட இடுக்கணை நீக்கியவர்களை நினைப்பர். இக் கருத்தையும் செயல்முறையையும் நாம் அன்றாடம் காண்கிறோம் அன்றோ? இலக்கியத்திலும், தம் முன்னோரின் விழுமந்துடைத்த மணிமேகலா தெய்வத்தின் பெயரைத் தன் மகளுக்கு வைத்த-விழு மந்துடைத்தவர் நட்பினை எண்ணிய கோவலன் செய்தியை,

'விஞ்சையின் பெயர்த்து விழுமந் தீர்த்த
எம்குலத் தெய்வப்பெயர் ஈங்கு இடுகஎன
அணிமேகலையார் ஆயிரங் கணிகையர்
'மணிமேகலை' என வாழ்த்திய ஞான்று'

சிலப்பதிகாரம் 15:36-39

எனச் சிலம்பு செப்புகிறது. ஆகவே, நன்றியறிதலுள்ளவர்கள், தலைமுறை தலைமுறையாக எந்த நிலையிலும் (கோவலன் தன் நிலை தவறிப் பொது மகளிடத்து வாழ்ந்த காலையும்) உள்ளுவர் என்பது தெளிவுபடுகிறது.

ஆகவே, இக்குறட்பா தலைமுறைக் கொள்கை மட்டுமே வள்ளு வர்க்கு உண்டு என்பதை எடுத்துக் கூறுகிறது. 'எழு பிறப்பு' என வள்ளுவர் கூறும் இடங்கள், குறட்பா முழுவதிலுமே இரு இடங்கள் மட்டுமே என்பதைப் பார்த்தோம். இப்போது அடுத்த குறட் பாவை நோக்கி வள்ளுவரின் உள்ளத்தை அறிவோம்.

''எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.'' — 62

பழி இல்லாத நல்ல பண்புடைய மக்களைப் பெற்றால், பல பிறப்பிலும் தீயவை தீண்டமாட்டா.

**பிறவிச் சுழற்சிக் கொள்கைப்படி** கொண்டால், நல்ல பிள்ளைகளைப் பெற்றால், பல்லாயிரம் பிறவிகளிலும் பழிபிறங்கா. பிறவிச் சுழற்சிக் கொள்கைப்படி, தந்தையின் செயலுக்கும் மகன் செயலுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. அவரவர் பழவினையே அவரவரை நடத்துவதாகும். ஆகவே, பண்புடைய மக்கள், தகப் பன் வினையை மாற்றவியலும் என்னும் கருத்துப் பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கு முரண்பட்டதாகும்.

பண்புடைய மக்களைப் பெற்ற பண்பாளனுக்குப் பல பிறவி யுண்டா? பிறப்பே தீமையால் வருவதுதானே? மறுபிறப்பிலும் தீயவை தீண்டாத மறுபிறப்பு உண்டா? அவ்வாறு உண்டு எனக் கூறினால், அது பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கு முரண்பட்டதாகு மன்றோ?

ஆகவே, வள்ளுவர் இக் குறட்பாவையும், பிறவிச் சுழற்சிக் கொள்கையின் அடிப்படையில் கூறியிருக்கவியலாது. எனவே, தலைமுறைக் கொள்கை அடிப்படையில் நோக்குவோம்.

**தலைமுறைக் கொள்கை :** பழி பிறங்காப் பண்புடை மக்கட்பெறின், எழுபிறப்பும் அ·.தாவது, பல தலைமுறைகளிலும் தீயவை தீண்டா.

இக் கருத்து, நடைமுறைக்கு ஒத்துவரக்கூடிய நல்ல கருத்தாக விளங்குகிறது. பண்புடைய மக்கள் பிறக்கும் பொழுது பண்புடைய தலைமுறையினர் உருவாகின்றனர். பண்புடைய தலைமுறை யினர் தோன்றுங்கால், பல தலைமுறையிலும் தீயவை தீண்ட வேண்டிய தேவை இல்லை. ஆகவே, பழிபிறங்காப் பண்புடை மக்களைப் பெற்றால், பெற்ற அவனுடைய பரம்பரையினரைப் பல தலைமுறைகளிலும் தீமை அணுகுவதில்லை.

## 4. பிறப்பறுக்கல்

இத்தொடர் குறட்பா நூல் முழுவதிலும் இரண்டு இடங் களில் மட்டுமே ஆளப்பட்டுள்ளது. அவ்விரு இடங்களும் துறவற இயலில் 'துறவு' என்னும் அதிகாரத்தின்கண் உள்ளன. அவற்றை முறையே நோக்குவோம்.

"மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை." —345

பிறப்பைத் துண்டிக்கும் நிலையை அடைந்தவர்களுக்கு, அவர்களுடைய உடம்பும் மிகையான பொருளாகும். ஆகவே, அவர்களுக்கு வேறு தொடர்பு ஏன் வேண்டும்?

இக்குறட்பாவிற்குப் பிறவிச் சுழற்சியின்படி பொருள் கொண்டால், பிறவிச் சுழற்சியில் இடைவிடாது தோன்றும் பிறவியைத் துண்டிக்கும் நிலையை அடைந்தவர்களுக்கு,மற்றத் தொடர்பு ஏன்? அவர்களுக்கு அவர்களுடைய உடம்பும் மிகையான பொருளாகும் எனல் வேண்டும்.

இக்குறட்பா, துறவறவியலின் துறவு அதிகாரத்தைச் சேர்ந்ததாகும். பிறவிச் சுழற்சிக் கொள்கையின்படி, எல்லோருமே பிறவி நீக்கத்துக்காக முயற்சி எடுத்துப் பிறவி நீக்கம் பெறவேண்டும். பிறவி நீக்கம் அடைந்தமையை இறப்பிற்குப் பின்னரே அறியவியலும். உலகில் பிறந்து பிறவிக்குட்பட்டு வாழும் பொழுதே 'நான் பிறவி நீக்கத்தை அடைந்துவிட்டேன்' என யாரும் கூறவியலாது. 'பிறவி நீக்கத்திற்கான முயற்சியில் ஈடுபட்டுள்ளவர்' என்னும் அளவே அவர்களுக்கோ மற்றவர்களுக்கோ அறியக் கூடியதாகும்.

ஆனால், வள்ளுவர் இங்குப் 'பிறப்பறுக்கல் உற்றார்' அஃதாவது, 'பிறவி நீக்கத்தை அடைந்தார்' எனக் கூறுவது பொருந்துமா? 'பிறப்பெடுத்து அதில் வாழ்ந்துகொண்டிருக்கும் பொழுதே, பிறப்பறுக்கல் உற்றார்' என்பது பொருந்தாக் கருத்தன்றோ?

அடுத்தது துறவிகள் மட்டுமே 'பிறப்பறுக்கல் உற்றார்' என்றால், இல்லறத்தார் பிறவிச் சுழலில் சிக்கித் தவிப்பவர்களே என்றாகிறதன்றோ? ஆனால், நூலில் இல்லறம் துறவறம் ஆகிய இரண்டு அறங்களுள், வள்ளுவர் இல்லறத்திற்கே முதலிடம் கொடுத்ததோடு,

> "அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றின்
> போஒய்ப் பெறுவ தெவன்." —46

எனக் கூறிய வள்ளுவர், 'இல்லறத்தார்க்குப் பிறவி நீக்கம் இல்லை', 'துறவறத்தார்க்கே பிறவி நீக்கம் உண்டு' எனக் கூறுவாரா? அவ்வாறு கூறுகிறார் என்பது பொருந்துமா? ஆகவே, இக்குறட்பாவிற்குப் பிறவிச் சுழற்சிக் கொள்கைப்படி பொருள் கண்டால், அது பொருந்தாக் கருத்தாகவே அமைகின்றது. அப்படியானால், தலைமுறைக் கொள்கைப்படி பொருள் காண்போம்.

பிறவியைத் துண்டிக்கும் நிலையை அடைந்தவர்க்கு அஃதாவது மகன், பெயரன் என்னும் பிறவித் தொடர்பு ஏற்படாத வாறு துறவு நிலையை ஏற்றமையால் பிறவி, அஃதாவது பரம்பரை துண்டிக்கப்பட்டு விட்டவர்க்கு, மற்றத் தொடர்ப்பாடு எவன் கொல்? அவர்களுக்கு அவர்களுடைய உடம்புகூட மிகைப் பொரு ளாகவே தோற்றமளிக்கும்.

இங்கு வள்ளுவர் கருத்துக்கு முரண்பாடு இல்லை. இறைவனை இல்லறம், துறவறம் ஆகிய இரண்டு வழிகளாலும் அடையலாம். இரண்டில் இல்லறம் இயல்பானது; முதன்மையானது. ஏனெனில், எந்தத் துறவியுமே இல்லறத்தின் பயனாகத் தோன்றியவனே. இல்லறமே இல்லெனின், துறவறமும் இல்லை. ஆனால், இல்லறத் தான் துறவிலிருந்து தோன்றுபவனல்லன். ஆகவே, இல்லறம் முதன்மையானது. இறைவனால் இயல்பாகப் படைக்கப்பட்டது. பரம்பரையாய் மனிதர் வாழ்வதற்கு அடிப்படையான நிலைக்கள னானது.

ஆகவே, பிறப்பறுக்கல் இல்லாத வழியாகிய இல்லறத்தின் மூலமாகவோ பிறப்பறுக்கல் உற்ற வழியாகிய துறவறத்தின் மூல மாகவோ ஏதாவது ஒரு வழியின் மூலமாக இறைவனை அடைய லாம். பிறப்பறுக்கல் உற்ற வழியாகிய துறவறத்தை மேற்கொண் டவர்களுக்கு, மற்றத் தாய், தந்தை, அண்ணன், தம்பி என்னும் தொடர்ப்பாடு ஏன்? சுற்றத்தாரும் மற்றோரும் அவர்களுக்குச் சமமே. அவர்களுடையஉடம்பும் அவர்களுக்கு மிகையே. ஏனெனில், அவர்கள் உடலுக்குரியவற்றை நோக்காமல் உள்ளம், ஆன்மா விற்குரியவற்றையே நோக்குகிறவர்களாகிறார்கள்.

எனவே, இக்குறட்பாவிற்குத் தலைமுறைக் கொள்கையே சரியான விளக்கமாகிறது. அடுத்த குறட்பாவை நோக்குவோம்.

> ''பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
> நிலையாமை காணப் படும்.'' —349

உலகப் பற்றுதல் நீங்கும்பொழுதே, பிறப்புத் துண்டிக்கப்படும். மேலும், உலகத்தின் நிலையாமையும் தெள்ளென விளங்கிக் காணப்படும்.

இதற்குப் பிறவிச் சுழற்சியின்படி பொருள்கொண்டால், பற்று நீங்கும்பொழுதே பிறவிச் சுழற்சி அறுபடும். மற்று நிலையாமை காணப்படும். இக்குறட்பா பிறவிச் சுழற்சிக் கொள்கையுடை யார்க்கும் வள்ளுவர்க்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்பதைத் தெற்றென விளக்கிக் காட்டும் பாவாகக் காட்சி அளிக்கின்றது. இக்

குறட்பாவிற்கு விளக்கம் கொடுக்குங்கால், பிறவிச் சுழற்சிக் கொள்கையுடைய உரையாசிரியர் அத்தனை பேரும், மிகவும் இடர்ப்பாடு அடைகின்றனர். ஏனெனில், அவர்கள் கொள்கைக்கு முரண்பட்ட கருத்துக் கூறப்படுகிறது. ஆகவே, இதை ஆழ்ந்து நோக்குமுகத்தான் உரையாசிரியர்களை முதலில் நோக்குவோம்.

**பரிமேலழகர் :** ஒருவன் இருவகைப் பற்றும் அற்றபொழுதே, அப்பற்றுறுதி அவன் பிறப்பை அறுக்கும். அவை அறாத பொழுது அவற்றால் பிறந்து இறந்து வருகின்ற நிலையாமை காணப்படும்.

**மணக்குடவர் :** ஒருவன் யாதொரு பொருளோடும் பற்றற்ற பொழுதே அது பிறப்பை அறுக்கும்; அதனை விடாத போது நிலையாமை காணப்படும் என்றவாறு.

இஃது எல்லாப் பற்றினையும் அறுக்கப் பிறப்பு அறும் என்றவாறு.

**பரிதியார் :** மூன்றுவகை ஆசையுந் துறந்தபேர்க்குப் பிறப்பு இல்லை; இதில் ஒன்றிரண்டு துறந்தாலும் பிறப்பு உண்டு; கீழ்ப்படுத்தாது மேற்படுத்தும் என்றவாறு.

**காலிங்கர் :** இங்ஙனமே பற்றற்ற இடத்து, மற்று அப்பொழுதே அப்பற்றுறுதியாகிய துறவு, தன் பிறப்பறுக்கும்; எனவே, முத்தியை எய்தும். மற்று ஏனைய எல்லாம் பற்றோடு வருதலால், அந்தந்தப் பொருள்பற்றி நின்ற நெஞ்சோடும் பிறந்தும் இறந்தும் திரிந்தும் உழல வேண்டுதலால், இந்த நிலையாமையே எப்பொழுதும் காணப்படும் இவனால்; எனவே, எஞ்ஞான்றும் முத்தியின்பம் காணமாட்டான் என்பது பொருள் ஆயிற்று என்றவாறு.

இனி, இவ்வுலகத்து மக்களாய்ப் பிறந்தோரில் சிறந்தோராகிய சான்றோர், முன்னர்த் தம் குலத்தியல்பாகிய இல்லறம் இயற்றிய பின்னர், மற்றதன் பயனாகிய துறவறமியற்றுதற்கு அதனை முனிந்து நீத்துப் போந்து, துறவறம் இயற்றிய பின்னர், இத்துறவறத்தின் பெரும் பயனாகிய முத்தி இன்பத்து முயன்று அமைதல் இயல்பாதலால், இதன் பின்னரே மெய்யுணர்தல் என்னும் பெயரினான் அதனை அறிவிக்கின்றது மேலை அதிகாரம்.

**நாகை சொ. தண்டபாணிப்பிள்ளை:** ஒருவன் பற்றுகள் அற்ற பொழுதே, அப்பற்றுறுதி அவன் பிறப்பை அறுக்கும். அப்பற்றுகள் அறாதபொழுது, அப்பற்றுகளாற் பிறந்திறந்து வருகிற நிலையாமையே பயனாகக் காணப்படும்.

**மயிலை சிவமுத்து:** யான், எனது என்னும் ஆசை நீங்கிய வுடனே, அந்தப் பற்றற்ற நிலை பிறவித் துன்பத்தை ஒழிக்கும். அந்தப் பற்றினை நீக்கிக் கொள்ளாதவர்களிடம் **பிறப்பும் இறப்பும் ஆகிய நிலையாமையே** காணப்படும்.

**சாமி சிதம்பரனார்:** ஆசயற்ற பொழுதே பிறவியை ஒழிக்கும். ஆசையறாதபோது **மாறி மாறி வரும்பிறவித் துன்பம் உண்டாகும்.**

ஆசையற்றால்தான் பிறவி நீங்கும். ஆசை பல பிறவிகளைத் தரும்.

**ஒரு பழைய உரை:** ஒருவன் இருவகைப் பற்றும் அற்ற பொழுதே, அப்பற்றற்றது அவன் பிறப்பை அறுக்கும். பற்று அறாதபோது **பிறவிக்கூடல்** காணப்படும்.

**கவிராஜ பண்டிதர்:** மற்று நிலையாமை காணப்படும் = அந்த ஆசையை விடாதபோது நிலையில்லாததாகிய **பிறவிச் சமுத்திரத்தைக்** காண்பான்.

**வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் குறிப்பு:** மற்று— இங்கே, எதிர்மறையானதை யுணர்த்தியதனால், வினை மாற்றுப் பொருளது, நிலையாமை = யாக்கை நிலையின்மை. நிலையாமை காணப்படும் = பிறப்பொழியாது.

மேலே நாம் கண்ட உரையாசிரியர்களின் விளக்கங்களிலிருந்து நாம் அறிவது என்ன?

**பற்றற்றகண்ணே பிறபறுக்கும்:** இத்தொடரில் 'பிறப்பறுக்கும்' என்பதற்கு உரையாசிரியர்கள் யாவரும் ஒருமித்து, அவர்களுடைய பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கு ஏற்ப, 'பிறப்பு இல்லை', அல்லது 'பிறப்பைத் துண்டிக்கும்' என உரை கூறுகின்றனர். ஆனால், 'பற்றற்றகண்ணே' என்பதிலுள்ள 'பற்று' என்பதற்குப் பரிமேலழகர் 'இருவகைப் பற்று' என்றும், மணக்குடவர் 'யாதொரு பொருளோடும் பற்று' எனவும், பரிதியார் 'மூன்று வகை ஆசை' எனவும், காலிங்கர் 'நல்லுறவு' எனவும், மயிலை சிவமுத்து அவர்கள் 'யான் எனது என்னும் ஆசை' எனவும், சாமி சிதம்பரனார் 'ஆசை' எனவும் பொருள் கூறுகின்றனர்.

ஆகவே, பிறப்பறுப்பதற்கு மூலகாரணமானது எது என்பதில், அவர்களுக்கிடையே கருத்து வேறுபாடு இருத்தலை நாம் அறிகிறோம். இக்கருத்து வேறுபாட்டிற்கான காரணம் என்ன? பிறவிச் சுழற்சிக் கொள்கையில் பிறவி நீக்கத்திற்காகக் கூறப்பட்டிருக்கும்

காரணமும் வள்ளுவர் குறட்பாவிலுள்ளபொருளும் வேற்றுமையுடன் காணப்படுதலே. அவ்வேற்றுமையை நீக்கி, வள்ளுவர் குறட்பா விற்கும் தங்களுடைய பிறவிச் சுழற்சிக் கொள்கைக்குமிடையே, ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாகப் பாலம் அமைக்கின்றனர். ஆகவே, அவர்களுடைய பாலங்கள் வேறுவேறுபட்ட உருவில் காட்சி தருகின்றன.

அடுத்தது 'பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்' என்னும் வள்ளுவரின் தொடர், பிறவிச் சுழற்சிக் கொள்கைக்குப் பொருந்துமா? பிறப்பு எப்போது அறுபடும்?பிறப்பிலிருந்து நீங்கும்போது அன்றோ? பிறந்து வாழ்ந்துகொண்டு பிறவித் தளையின் கட்டில் இருக்கும் ஒருவன், பிறப்பை அறுத்துவிட்டான் என்பது பொருந்துமா? பிறப்புக்குட்பட்ட வாழ்வில் இருக்கும் ஒருவன் பிறவிநீக்கம் பெற்றுவிட்டான் என்பது பொருந்தாக் கருத்தெனக் கண்டோம்.

பொருந்தாததைப் பொருத்த முயற்சிக்கும் பொழுது, இடர்ப்பாடு அடைதல் இயல்பே. அவ்விடர்ப்பாட்டையே உரையாசிரியர் அடைந்துள்ளனர்.

அடுத்தது 'நிலையாமை காணப்படும்' என்னும் தொடராகும். இதிலுள்ள 'நிலையாமை' என்னும் சொல்லைப் பார்ப்போம்.

இதற்குப் பரிமேலழகர் 'பிறந்து இறந்து வருகின்ற நிலையாமை'எனவும், மணக்குடவர் 'பிறப்பு அறா நிலையாமை' எனவும், பரிதியார் 'பிறப்பு உண்டு' எனவும், காலிங்கர் 'பிறந்தும் இறந்தும் திரிந்தும் உழல வேண்டுதலாகிய நிலையாமை' எனவும், நாகை சொ. தண்டபாணிப் பிள்ளையவர்கள், 'பிறந்திறந்து வருகிற நிலையாமை' எனவும், மயிலை சிவமுத்து 'பிறந்திறந்து வருகிற நிலையாமை' எனவும், சாமிசிதம்பரனார் அவர்கள், 'மாறி மாறி வரும் பிறவித் துன்பம்'எனவும், பழைய உரையில் 'பிறவிக் கடல்' எனவும், கவிராஜ பண்டிதர் 'பிறவிச் சமுத்திரம்' எனவும் கூறுகின்றனர்.

இவர்கள் 'நிலையாமை' என்பதற்கு இவ்வாறு பொருள் கொள்ளக் காரணம் என்ன? இவர்களுக்கு இக்குறட்பாவைப் பிறவிச் சுழற்சிக் கொள்கைப்படி பொருள்கொள்ளவியலா நிலையில் ஏற்பட்ட இடர்ப்பாடேயாகும். இக்குறட்பாவிலுள்ள 'நிலையாமை' என்னும் சொல்லுக்கு இவ்வாறு பொருள் கொண்ட உரையாசிரியர்கள், 'நிலையாமை' என்னும் அதிகாரத்திற்கு என்ன விளக்கம் கொடுக்கிறார்கள் என நோக்குவோம்.

**பரிமேலழகர்:** அவற்றுள் நிலையாமையாவது, தோற்றமுடையனயாவும் நிலையுதல் இலவாம் தன்மை.

**மணக்குடவர்:** நிலையாமையாவது, மயக்கத்தினால் 'தான்' என்று நினைத்திருக்கின்ற யாக்கையும், 'தனது' என்று நினைத்திருக்கின்ற பொருளும் நிலை நில்லாமையைக் கூறல்.

**பரிதியார்:** நிலையாமையாவது செல்வம், யாக்கை, இளமை இதுகள் நிலையல்ல என்றவாறு.

**பழைய உரை:** அஃதாவது, தோற்றமுடையன யாவையும் நில்லாது இறந்து போமென்றது.

**நாகை சொ. தண்டபாணிப்பிள்ளை:** தோற்றுவன யாவும் நிலையாத தன்மை.

**சாமி சிதம்பரனார்:** உலகப் பொருள்கள் நிலையற்றவை என்பதை அறிதல்.

மேலே நாம் கண்ட விளக்கங்களிலிருந்து, உரையாசிரியர்கள் 'நிலையாமை' என்னும் இச்சொல்லுக்கு, இரண்டு இடங்களிலும் இருவேறு உரை கூறுவதைக் காண்கிறோம்.

இவ்வாறு இவர்கள் மாறுபட்டுப் பொருள் உரைக்கக் காரணம் 'பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்' என்னும் தொடருக்குப் பின்னர், 'மற்று நிலையாமை காணப்படும்' என்கிற தொடருக்குப் பொருள் கூற அவர்களால் கூடாமையேயாகும். ஏன்? பிறவிச் சுழற்சிக் கொள்கைப்படி, பிறப்பறுக்கலாகிய பிறவி நீக்கம் பெறுதலே இறுதிப்படியாகும். அதற்குப் பின்னர், வேறொன்றும் கூற வேண்டியதில்லை. கூறவும் இயலாது. ஆனால், வள்ளுவர் 'பிறப்பறுக்கும்' என்று கூறிய பின்னர், 'நிலையாமை காணப்படும்' எனவும் கூறுவதால், இது பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கு முற்றிலும் மாறுபட்டு விடுகிறது. ஆகவே, இவ்விடத்தில் வள்ளுவர் கூறும் நிலையாமை எது என்பது உரையாசிரியர்களுக்கு விளங்காக் காரணத்தால், பொருத்தமற்ற முறையில் பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கேற்ற முறையில் 'நிலையாமை' என்னும் முன்னைய அதிகாரத் தலைப்பிற்குக் கொடுத்த விளக்கத்தினும் முரண்பட்ட நிலையில் பொருள் கூறிச் சென்றனர்.

பிறவிச் சுழற்சிக் கொள்கையில் விளக்கம் கூறவந்த உரையாசிரியர்களை, இவ்வளவு திணறுமாறு செய்கின்ற இக்குறட்பாவுக்குத் தலைமுறைக் கொள்கைப்படி பொருள் காண்போம்.

**பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும்:** துறவறத்தை மேற்கொண்டு, இல்லறத்தின்பாற் பற்றினை விட்ட அப்பொழுதே பிறவித் தொடர்ச்சியாகிய மகன், பெயரன் போன்ற பிறப்பு அறுபடும்.

**மற்று நிலையாமை காணப்படும்:** அது தவிர, உறவினர் நிலையாமை, யாக்கை நிலையாமை, பொருள் நிலையாமை, முதலியன அவனுக்கு வெளிப்பட்டுத் தோன்றும்.

இக்குறளில் மூன்று படிகளை வள்ளுவர் விளக்குவதை நாம் காண்கிறோம்.

**முதல்படி:** பற்றற்ற உள்ளம் ஏற்படல்.

**இரண்டாம்படி:** பற்றற்ற உள்ளம் தோன்றியதால், பிறப் பறுத்துத் துறவறத்தை மேற்கொள்ளல்.

**மூன்றாம்படி:** துறவறத்தை மேற்கொண்டமையால், நிலை யாமையை உள்ளபடி உணர்தல்.

தலைமுறைக் கொள்கைக்கிணங்கக் கொண்ட மேற் கண்ட விளக்கம், எளிமையானது. திருக்குறளுக்கு மிகவும் பொருந்துவது. ஆகவே வள்ளுவர், தலைமுறைக் கொள்கையை மட்டுமே யுடைய வர் என்பதை, இக்குறட்பாவும் தெற்றெனக் காட்டி நிற்கின்றது.

## 5. பிறவிப் பெருங்கடல்

> ''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
> இறைவனடி சேரா தார்.'' -10

இறைவனுடைய திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர், பிறவியாகிய பெரிய கடலைக் கடக்கவியலும்; மற்றவர் கடக்க வியலாது.

இங்கு வள்ளுவரால் சுட்டப்படும் 'பிறவிப் பெருங்கடல்' நாம் முன்னர்ப் பார்த்தது போலத் தலைமுறைக் கொள்கையினர், பிறவிச் சுழற்சிக் கொள்கையினர் ஆகிய இரு சாராருக்குமே பொருந்துகிறது.

இரு கொள்கையினர்க்கும் பொருந்தக்கூடிய தொடராகிய 'பிறவிப் பெருங்கடல்,' வைக்கப்பட்டுள்ள இடத்தையும் அது குறிக்கும் பொருளையும் நோக்குவோம்.

இத்தொடர், கடவுள் வாழ்த்து அதிகாரத்தின் இறுதிச் செய்யுளினுள் வைக்கப்பட்டுள்ளது. இதற்கு உரை கூறும் உரை யாசிரியர்கள், தங்களுடைய பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கு ஏற்பப் பொருளுரைத்தனர். இது பொருந்துமா?

தலைமுறைக் கொள்கை, பிறவிச் சுழற்சிக் கொள்கை ஆகிய இவற்றுள், கடவுளை வாழ்த்தும் கொள்கை எது? தலைமுறைக்

கொள்கையே யன்றோ? பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கும் கடவுளுக்கும் தொடர்பு ஏது?

**கலப்புக் கொள்கை**

திருவள்ளுவர் சங்ககாலத்தைச் சார்ந்தவர் என அறிஞர் பெரு மக்கள் முடிவு கட்டுகின்றனர். அப்படியானால், கடவுளைப்பற்றிய சங்ககாலக் கொள்கை என்ன? சங்ககாலத்தில் இங்கிருந்த சமயங் களின் கொள்கைகள் யாவை? திருவள்ளுவர் வாழ்த்தும் ஒரே கடவுள் வணக்கம், சங்ககாலச் செய்யுட்களுள் நாம் காண இயல் கிறதா? திருவள்ளுவர் கூறும் சித்தாந்தங்களைச் சங்ககால இலக் கியங்கள் எவையெவை கூறுகின்றன?

''திருக்குறளை ஆராயும்போது, வள்ளுவரின் சிந்தனை சங்கப்புலவர்களுடைய சிந்தனைகளைக் காட்டிலும் வேறுபாடுடைய தாக - அவற்றினும் பரந்தவொன்றாகத் தோன்றுகிறது.''

''சங்க இலக்கியத்திற்கும் வேறாக, ஒரு புதிய இலக்கிய நெறியினையே வள்ளுவர் பின்பற்றிச் செல்கிறார் எனத் தோன்று கின்றது.''

—ப. அருணாசலம், எம், ஏ., எம். லிட்.,
'குறளின் செய்தி' (முன்னுரை).

மேலே குறித்த குறட்பா, கடவுள் வாழ்த்து அதிகாரத்தினுள் வைக்கப்பட்டுள்ளமையாலும், குறட்பாவினுள் 'இறைவனடி சேராதார் நீந்தார்' எனக் கடவுட் கொள்கையே வற்புறுத்தப் பட்டுள்ளமையாலும் இது பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கு உட்பட்டதன்று.

இங்கு மற்றொரு ஐயம் தோன்ற ஏதுவுண்டு. தலைமுறைக் கொள்கையின்படி ஒருவனைத் தீயஉலகில் சேர்ப்பவை,

1. இவன் முன்னோர் செய்த தீவினையாகிய பிறவிவினை.
2. இவன் செய்த வினையாகிய தன்வினை.

ஆகிய இரண்டு வினைகளுமாகும். நாம் காணும் 'பிறவிப் பெருங் கடல்' பிறவியில் இவனைத் தொடர்ந்து வரும் பிறவி வினையைக் குறிக்குமானால், இவன் செய்த தீவினையாகிய 'தன்வினையை' வள்ளுவர் கூறியிருப்பது எங்கே? இவ்விரண்டு வினைகளையும் நன்கு வேற்றுமை தோன்றும்படியாக வள்ளுவர் கூறியுள்ளாரா? தலைமுறைக் கொள்கையின் இவ் வேறுபட்ட இவ்விருவினை களையும் வள்ளுவர் கூறியிருப்பாரானால், அவற்றை உரையாசிரி

யர்கள் விளக்கவியலாமல் திணறியிருக்கவேண்டுமே? அவ்வாறு அவர்கள் திகைப்படைந்த இடம் எது? ஆகிய இவ்வகை வினாக்கள் எழுகின்றன. உரையாசிரியர்களின் திறமை இங்குத்தான் நன்கு வெளிப்பட்டுத் தோன்றுகிறது.

வள்ளுவர் இவ்விரு தீவினைகளையும் தனித்தனியே கூறுகிறார். தனித்தனியாகக் கூறுமிடங்களில், உரையாசிரியர்கள் அவற்றைத் தனித்தனியாக மடைமாற்றம் செய்துவிடுகின்றனர்.

பிறவியில் தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வரும் ஆதிப்பழியாம் முன்னோர் செய்த வினையாகிய பிறவி வினையை, பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கேற்ப முற்பிறவியில் செய்த தீவினையாகிய பிறவியில் தொடர்ந்துவரும் முற்பிறவித் தீவினை எனக் கூறுகின்றனர்.

**பிறவிச் சுழற்சிக் கொள்கையில் கடவுள் வாழ்த்துக்கு இடமேது?** பிற்காலப் பலசமயக் கலப்புக் கொள்கைக்கேற்ப, பிற்காலத்தில் வாழ்ந்த உரையாசிரியர்கள், கடவுட் கொள்கையையும் இணைத்துக் காட்டிய போதிலும், அவர்களுக்கும் இடர்ப்பாட்டை ஏற்படுத்திய இடம், திருக்குறளின் கடவுள் வாழ்த்தில் உண்டு. பிற்காலக் கலப்புக் கொள்கையின் கடவுள் வாழ்த்திற்கும் முற்காலக் கலப்பற்ற தலைமுறைக் கொள்கையின் கடவுள் வாழ்த்திற்குமுள்ள வேற்றுமையையே இதுசுட்டிக்காட்டிவிடுகிறது.

இவ்வாறு சுட்டிக்காட்டும் கடவுள் வாழ்த்துக் குறட்பாக்கள்:

1. "இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு." —5

2. "அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது." —8

3. "பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார்." —10

மேலே நாம் கண்ட மூன்று குறட்பாக்களுள், இறுதிக் குறட்பாவுக்கு எளிதாகத் தங்கள் பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கேற்ப பொருள் கூறிய உரையாசிரியர்கள், மற்ற இரு குறட்பாக்களுக்கும் தங்கள் கொள்கைக்கேற்ப பொருள் கூறவியலாமல், அல்லல் பட்டிருப்பதை அவர்கள் உரைகளிலேயே நாம் காண்கிறோம்.

இக்கடவுள் வாழ்த்துக் குறட்பாக்களுள் வள்ளுவர் இரண்டு கடல்களைக் கூறியுள்ளார். அவை:

1, பிறவாழி.
2. பிறவிப் பெருங்கடல்.

ஒன்றை ஆழமுடையது என்னும் பொருளில் 'ஆழி' என்றார்.

'ஆழி' என்னும் சொல் நூலில் இருமுறை மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளது. அடுத்த குறட்பா :

''ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்(கு)
ஆழி எனப்படு வார்.'' —989

ஆனால், 'கடல்' என்னும் சொல்லோ 10, 17, 103, 496, 1137, 1164, 1166, 1175, 1200 ஆகிய ஒன்பது இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

ஆழி—ஆழமுடையது;கடல்-ஆழமுடன் பரந்து பட்டது என்னும் பொருளுடையது.

ஆழி, கடல் என்னும் இரண்டும், மேலெழுந்த வாரியாக ஒரே பொருளைக் குறித்தாலும், வள்ளுவர் இவற்றைக் கூறும் முறையில் வேற்றுமையுண்டு எனவே எண்ண வேண்டியுள்ளது,

எவ்வளவு ஆழமுடைய நீர் நிலையாயினும், அதைப் படகு கொண்டு கடக்கும் ஒருவனுக்கு, அதன் பரப்பளவே முக்கியமானது. அவன் கடக்க வேண்டிய தூரம் பரப்பளவிலேயே உள்ளது.

ஆழத்தில் மூழ்கி முத்தெடுக்கும் ஒருவனுக்குப் பரப்பைப்பற்றிக் கவலை இல்லை. அவனுக்கு ஆழமே முக்கியத் தொடர்புடையது.

ஆழி, கடல் என வள்ளுவர் குறிக்கும் இரு இடங்களிலும் 'பிறவாழி நீந்தல்', எனவும் 'பிறவிப்பெருங்கடல் நீந்துவர்' எனவும் நீந்தவேண்டிய பரப்பளவையே முக்கியப்படுத்திக் கூறியுள்ளார்.

மேலும், 'ஆழி' என அடைமொழியின்றிக் கூறியவர், அடுத்ததைக் கூறும்பொழுது'பெருங்கடல்' என அடைமொழியிட்டுக் கூறுகிறார். ஆகவே, இரண்டிடத்தும் அவர் நீந்தவேண்டிய பெருநீர்ப் பரப்பை உவமையில் கொண்டாலும்,அவற்றுக்கிடையே வேற்றுமையுண்டென்பதையும் நுட்பமாக விளக்குகிறார்.

இவ்வேற்றுமையை விளக்க இரண்டு குறட்பாக்களிலும் அவர் பெய்துள்ள முடிவுச் சொற்கள் முக்கியமானவை.

'பிறவாழி நீந்தல் அரிது' எனக் கூறியவர், இறுதி குறட்பாவில் 'நீந்தார்' எனத் திட்டவட்டமாக முடித்து விடுகிறார்.

'அரிது' எனக் கூறுங்கால், மிகுந்த முயற்சி எடுத்துக்கொண்டால் 'எளிது' எனப்பொருள் கொள்ள இடமளிக்கிறது. ஆனால், 'நீந்தார்' என முடித்த பின்னர், எவ்வளவு முயன்றாலும் யாதும் பயனில்லை என்னும் முடிவு தெளிவாகக் குறிக்கப்படுகிறது.

ஆகவே, 1. பரப்பு : ஆழி—கடல்
2. சிறப்பு : ஆழி—பெருங்கடல்
3. முயற்சி : அரிது—நீந்தார்

ஆகிய மூன்று நிலைகளில் பிற ஆழிக்கும் பிறவிப் பெருங்கடலுக்கும் வேற்றுமையுண்டென்பது தெளிவாகிறது.

மேலே நாம் கண்ட சூறிப்புப்படி, வள்ளுவர் குறிக்கும் 'பிறவாழி' வேறு; 'பிறவிப் பெருங்கடல்' வேறு என்றாகிறது. இவை இரண்டையும் கடப்பதற்கு அறவாழி அந்தணன்—இறைவனாக விளங்கும் கடவுளின் தாளாகிய அடிசேர வேண்டும் என்பது வள்ளுவர் கொள்கை.

இங்கே வள்ளுவர் குறிக்கும் பிற ஆழி, பிறவிப் பெருங்கடல் இரண்டும் எவற்றைக் குறிக்கின்றன? உரையாசிரியர்களை நோக்குவோம்.

| | | பிறவாழி | பிறவிப் பெருங்கடல் |
|---|---|---|---|
| பரிமேலழகர் | : | பிறவாகிய கடல்கள். பொருளுமின்பமும் 'பிற'வெனப் பட்டன. | —பிறவியாகிய பெரிய கடல். |
| மணக்குடவர் | : | பிறவாழி, காமமும் பொருளும் பற்றி வரும் அவலம். | —பிறவியாகிய பெரிய கடல். |
| பரிதியார் | : | பாவக்கடல். | —பிறவியாகிய பெரிய பெளவம். |
| காலிங்கர் | : | பிறவிப்பெளவம். | —பிறவியாகிய பெரிய பெளவம். |

| | | |
|---|---|---|
| தண்டபாணி : | பொருளின்பக் கடல்கள். | —பிறவியாகிய பெரிய கடல். |
| பழைய உரை : | பிறவிக்கடல். | —பிறவியாகிய கடல். |
| பாவாணர் : | பிறவாகிய பொருளின்பக் கடல். | —பிறவியாகிய பெரிய கடல். |
| குழந்தை : | பிற கடல்கள். பிற என்றது பொருளையும் இன்பத்தையும் | —பிறவியாகிய பெரிய கடல். பிறவி-வாழ்க்கை. |
| சாமி சிதம்பரனார் : | பொருளும் இன்பமும் ஆகிய வேறு கடல்கள். | —பிறவியாகிய பெரிய கடல். |
| டாக்டர் மு. வ. : | பொருளும் இன்பமுமாகிய மற்றக் கடல்கள். | —பிறவியாகிய பெரிய கடல் |
| எல்லிஸ்துரை : | பாவக் கடல். | |
| கவிராஜ பண்டிதர் : | பிறப்பெனும் கடல். | |
| பன்மொழிப் புலவர் : | பொருள் வாழ்வு, இன்ப வாழ்வு என்ற மற்றிரு பெருங்கடல். | —பிறப்புத் தலைமுறைகளை அலைகளாகக் கொண்ட இன வாழ்வு என்னும் எல்லையற்ற கடல். |

மேலே நாம் கண்ட உரையாசிரியர் கருத்துகளில், 'பிறவிப் பெருங்கடல்' என்னும் தொடருக்கு அவர்களிடையே வேற்றுமை இல்லை. பிறவிச் சுழற்சிக் கொள்கையை ஏற்காத இக்கால உரையாசிரியர்களான புலவர் குழந்தை அவர்கள், க. அப்பாத்துரையார் அவர்கள் ஆகிய இருவர் மட்டுமே, மற்றவர்களுடைய உரைகளினின்று மாறுபட்டுக் கூறுகின்றனர். இவ் விருவர் பொருளுள்ளும், புலவர் குழந்தை அவர்களின் பொருளைவிடப் பன்மொழிப்புலவர் அவர்களின் பொருளே சிறப்புடையதெனலாம். புலவர் குழந்தை அவர்களின் கொள்கைப்படி, பிறவியை

வாழ்க்கை எனக்கொண்டால், பிறவிப் பெருங்கடல் என்பதிலுள்ள 'பெரும்' என்பது தனி வாழ்க்கைக்குப் பொருந்துமா?

" நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு" -336

எனக் கூறிய வள்ளுவர், நிலையாமையாகிய வாழ்க்கையைப் பெருங்கடல் எனக் கூறினார் என்பது பொருந்துமா?

அடுத்துப் பன்மொழிப்புலவர் அவர்கள், 'பிறவிப் பெருங்கடல்' என்பதற்குப் பிறப்புத் தலைமுறையாகிய எல்லையற்ற கடல் எனப்பொருள் கூறியிருப்பது மற்ற உரையாசிரியர்கள் அத்தனை பேரும் காணாத புதுக்கோணமாகும். இக்கோணத்தில் பொருள் கொடுக்கும் முதல் உரையாசிரியர் இவரே எனலாம்.

'பிறவிப் பெருங்கடல்' என்கிற தொடருக்கு இடைக்காலக் கலப்புக் கொள்கையின்படி, பிறவிச் சுழற்சியாகிய பெருங்கடல் — தலைமுறையாகிய பெருங்கடல் என எந்த வகையில் பொருள் கொண்டாலும், அது பொருந்துவதாகவே அமைகிறது. ஆனால், தெளிவான திருவள்ளுவர் கொள்கைப்படி, தலைமுறைக்கொள்கையில் பொருள் கூறும் பன்மொழிப்புலவர் அவர்களின் உரைமட்டுமே பொருந்துவது என்பது, 'இறைவன் அடிசேர்தல்' கூறப்படுவதால் உறுதிப்படும். பண்டைப் பிறவிச் சுழற்சிக் கொள்கையாம் சமண பௌத்தக் கொள்கையில் இறைவன் ஏது? அவனடி சேர்தல் எங்கே?

அடுத்த தொடரைப் பார்ப்போம். 'பிறஆழி.'

இதற்கு உரையாசிரியர்கள், மூவகையாகப் பிரிந்து நின்று உரை கூறுகின்றனர்.

பிறஆழி என்பதைப் பிறவு + ஆழி எனக் கொண்டு, இதுவும் பிறவிக்கடலே எனப்பொருள் கூறியவர்கள் காலிங்கர், பழைய உரைகாரர், கவிராஜ பண்டிதர் ஆகிய மூவருமாவர்.

இது பொருந்துமா?

அறக்கடலாக விளங்கும் இறைவன் அடிசேராதார், பிறவிக் கடலை நீந்துதல் அரிது எனக் கூறியவர், மீண்டும், இறைவன் பாதத்தைச் சேராதவர்கள் பிறவிப் பெருங்கடலை நீந்தமாட்டார்கள் எனக் கூறிய கருத்தையே மீண்டும் கூறுவாரா வள்ளுவர்? நீந்தார் எனத் திட்டமாகக் கூறியவர், அரிது என மயக்கத்திற்கிடமாகக் கூறுவாரா?

உரையாசிரியர்களுள் பரிதியார், எல்லிஸ் ஆகிய இருவரைத் தவிர, மீதி அத்தனை பேரும் கூறும் பொருளை நோக்குவோம்.

'அறவாழி அந்தணன்' என இறைவன் குறிக்கப்படுகின்றமையால், அறக்கடலுக்கு மாறான பிறஆழி அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றனுள் எஞ்சியிருக்கும் பொருள், இன்பம் ஆகிய ஆழி தாமே என எண்ணிப் 'பிறஆழி' என்பதற்குப் பொருள், இன்பம் ஆகிய கடல்கள் எனப் பொருள் கொண்டனர்.

இது பொருந்துமா?

அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றனுள், அறவாழியாக இறைவன் கூறப்படுவதால், எஞ்சிய பொருள், இன்பம் ஆகிய இரண்டும் பிறவாழி என உரையாசிரியர்களால் எண்ணப்பட்டன.

பாயிரத்துடன் அறம், பொருள், இன்பம் என முப்பால் பிரிவை வைத்தவர் திருவள்ளுவர். ஆனால், உறுதிப் பொருள்கள் எனக் கூறப்படுவன அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்குமாகும்.

வீட்டுப்பால் திருக்குறளிலும் உண்டு. அவ்வீட்டுப்பாலே பாயிரம் எனக் கருதுவோரும் உண்டு.

''அதேசமயம், பாயிரமே திருக்குறளோடு நுதலிய பொருளனைத்தையும் முழு மொத்தமாகத் தொகுத்துக் கூறும் முப்பாலேட்டின் ஒரு சிறு மணிப்பதிப்பாகவும் நாலாவது பாலாகிய வீட்டுப்பால் கூறும் பகுதியாகவும் ஏட்டின் அழகுக் கவர்ச்சிமிக்க முன்னுரை, முகப்புரை அடங்கிய நூன்முகமாகவும் திகழ்கின்றது.''

மணிவிளக்கவுரை, 1 பக். 146.

திருக்குறளைப் பாராட்டி எழுந்த நூலாகிய திருவள்ளுவ மாலையில், திருவள்ளுவர் வீட்டுப்பால் உட்பட நான்கு பாலையும் கூறியுள்ளார் என்கிற செய்தியைப் பல பாடல்கள் நமக்கு அறிவுறுத்துகின்றன.

'அறம்பொருள் இன்பம்வீ டென்னும்அந் நான்கின்
திறம்தெரிந்து செப்பிய தேவை.' திரு. மாலை — 8

'பெறலரிய நாலும் மொழிந்த பெருநாவலரே.' ,, — 22

'இன்பம் பொருள்அறம் வீடென்னும் இந்நான்கும்
முன்பறியச் சொன்ன முதுமொழிநூல்.' ,, — 33

'அறம்முதல் நான்கும் அகலிடத்தோர் எல்லாம்
திறமுறத் தேர்ந்து தெளிய.' திரு. மாலை — 38

'தருமம் முதல்நான்கும் சாலும்.' ,, — 43

'அறன்அறிந்தேம் ஆன்ற பொருள்அறிந்தேம் இன்பின்
திறன்அறிந்தேம் வீடு தெளிந்தேம்.' திரு. மாலை — 49

மேலே நாம் கண்ட நரிவெரூஉத் தலையார் பாடிய 33-ஆம் பாடலில், பாயிரமே வீடு எனச் சுட்டியிருப்பதும் நோக்கத்தக்கது. சில பழைய ஏடுகளில், பாயிரம் 'வீட்டு நெறிப்பால்' எனக் குறிக்கப் பட்டிருந்தமையும் அவை விடப்பட்டமையும் மகாவித்வான் தண்டபாணிப் பிள்ளை அவர்களின் குறிப்பால் விளங்குகிறது.

''கடவுள் வாழ்த்து முதலிய நான்கு அதிகாரங்களின் முடிவில் 'வீட்டு நெறிப்பால் முற்றும்' என்னும் தொடர், ஏடுகளில் காணப்படுவதால், அந்த நான்கு அதிகாரங்களையும் வீட்டு நெறிப்பால் எனக் கருதினரோ என்று எண்ண இடந் தருகிறது. ஆசிரியர் குறிக்கோள் அறியக்கூடாமையின் இக் குறிப்பு, எமது உரைவளப் பதிப்பில் விடப்பட்டது.''

— திருக்குறள் அழகும் அமைப்பும் பக். 177 (1969)

எனவே, திருவள்ளுவர் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு உறுதிப் பொருள்களையும் கூறியுள்ளார் என்பது, உறுதி எனலாம். இவ்வுறுதிப் பொருள் நான்கனுள் 'அறவாழி' என இறைவன் குறிக்கப்பட்டதாக உரையாசிரியர்கள் கருதினால், பிற ஆழிகளாகப் பொருள் ஆழி, இன்ப ஆழி, வீட்டு ஆழி ஆகிய மூன்று ஆழிகளையும் வள்ளுவர் கூறியிருக்கவேண்டும்.

'பிற ஆழி நீந்தலரிது' என்கிற தொடருக்குப் பொருள், இன்பம், வீடு ஆகிய மூன்று ஆழிகளையும் நீந்தல் அரிது என உரை கூறினால், அது எவ்வாறு பொருந்தும்? வீட்டையும் ஆழி யாகக் கொண்டால், அதைக் கடந்து செல்லுவது எங்கே? அறவாழி என்பது அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய உறுதிப்பொருட் களுள், அறத்தை மட்டுமே குறிக்குமெனப் பொருள் கொள்ள வியலுமா? அப்படியானால், இறைவன் உறுதிப் பொருள் நான்கிற் கும் தலைவன் அல்லனா? அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய உறுதிப்பொருள் நான்கில், முதல் படியான அறமாக, வள்ளுவர் இங்குக் குறிக்கும் 'அறவாழி' இருக்க வியலுமா? அறம்-மறம் ஆகிய நேர் நேர் எதிர்ப் பொருள் இரண்டனுள், அறவாழியாக விளங்கு

பவன் இறைவன்; இறைவனற்ற செயல்கள் மறமாகக் கருதப்படும் என்னும் எண்ணத்தில், அறவாழி-அறக்கடல்-இறைவன் எனவும், பிறவாழி - மறக்கடல் அல்லது பாவக்கடல் என்றும் பொருள் கூறினர். அங்கும் பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கு இடர்ப்பாடு உண்டு.

எவ்வாறு?

பிற ஆழிக்குப் 'பாவக்கடல்' எனப் பொருள் கொண்டால், வள்ளுவர் பின்னரும் பிறவிப் பெருங்கடல் எனக் கூறுவதால், பின்னர் சொல்லப்படும் பிறவிப் பெருங்கடலுக்கும் அற ஆழிக்கு மாறான பாவக்கடலுக்கும் உள்ள வேற்றுமை என்ன? மறம் என்பது தனியாகத் தோன்றுவதா? பிறவிச் சுழற்சிக் கொள்கைப்படி முற்பிறவி வினைதானே இப்பிறவியை நடத்துவது. இப்பிறவி வினை அடுத்த பிறவியை நடத்தும். ஆகவே, பிறவிச் சுழற்சிக் கொள்கையில் தனியான மறம் ஒன்றும் இல்லையே?

பாவம் எவ்வாறு பிறவிச் சுழற்சிக் கொள்கைக்குப் பொருந்தும்? இறைவன் பாவத்தை நீக்குகிறார் எனக் குறிப்பிட்டுவிட்டால், அங்குப் பிறவிச் சுழற்சிக் கொள்கைக்குச் சிறிதும் இடம் இல்லையே? பிறவிச் சுழற்சிக் கொள்கையில் இறைவன் ஏது? பாவம் ஏது? பாவநீக்கம் ஏது?

அடுத்து இருள்சேர் இருவினையை நோக்குவோம்.

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு." — 5

இக்குறட்பாவில் கூறப்படும் இருவினை எவை? பொதுவாக, 'இருவினை' என்பது நல்வினை, தீவினை ஆகிய இரண்டையும் குறிக்கும் என்னும் கருத்தே ஓங்கி நிற்கிறது. ஆனால், 'இருள்சேர் இருவினை' எனக் கூறப்படும் இப்பகுதிக்கு நல்வினை, தீவினை ஆகிய இரண்டையும் பொருளாகக் கூற இயலுமா?

தீவினை, இருளில் சேர்க்கும் என்பது யாவரும் ஒப்புக்கொள்ளக் கூடிய கருத்து. **நல்வினையும் இருளில்தான் சேர்க்கும் என்கிற கருத்து ஏங்ஙனம் பொருந்தும்?** 'இருள்சேர் இருவினை' என்பதே வள்ளுவர் வாக்கு. இதற்கு இருளில் சேர்க்கும் இருவினை என்பதே பொருளாகும். இருளில் சேர்க்கும் இருவினை எவையாய் இருக்கவியலும்? இருவினை - நல்வினை, தீவினை ஆகிய இரண்டையும் குறிக்குமானால், நல்வினை இருளில் சேர்க்குமா? நல்வினையும் இருளில் சேர்க்குமானால், நல்வினை செய்வதா? வேண்டாவா? நல்வினையே செய்யவேண்டா என்பது

பொருந்துமா ? நல்வினையே செய்யாவிடில், பொதுவாக உரையாசிரியர் கூறும் பிறவிச் சுழற்சிக் கொள்கையின்படி, அதிலிருந்து விடுதலை பெறுவது எவ்வாறு?உரையாசிரியர்களை நோக்குவோம்.

## இருள்சேர் இருவினை

**மகாவித்வான் தண்டபாணிப் பிள்ளை:** அறியாமை சேர்ந்த நல்வினை, தீவினை இரண்டும்.

**பரிமேலழகர்:** மயக்கத்தைப் பற்றிவரும் நல்வினை, தீவினை என்னும் இரண்டு வினையும்.

**மணக்குடவர்:** மயக்கத்தைச் சேர்ந்த நல்வினை, தீவினையென்னும் இரண்டு வினையும்.

பரிதியார்: மும்மல வித்தாகிய பாவம்.

காலிங்கர்: தம் அறியாமையாகின்ற இருள் காரணமாக வந்து இயைகின்ற நல்வினை, தீவினை என்னும் இரண்டு வினைகளும்.

தாமத்தர் : அஞ்ஞானத்தாலுண்டாகும் நல்வினை, தீவினை என்னும் இரண்டு வினைகளும்.

நச்சர்: அஞ்ஞானம் பற்றி எழாநின்ற இருவினைகளும்.

தருமர்: தம் அறியாமையாகின்ற இருள் காரணமாக வந்து இயைகின்ற நல்வினை, தீவினைகள் என்னும் இரண்டு வினைகளும்.

குழந்தை: அறிவின்மையால் உண்டாகும் பெரிய துன்பங்கள்.

கா. அப்பாத்துரையார்: தன்னல மயக்கம் சேர்ந்த நல்வினை, தீவினையாகிய இருவினைகள்.

மயிலை சிவமுத்து : சென்ற பிறப்பில் செய்த வினைகள், இந்தப் பிறப்பில் செய்த தீவினைகள் ஆகிய இரண்டும்.

பால்வண்ணனார்: இருளைத் தருகின்ற நல்வினை தீவினைகள்.

மேலே நாம் கண்டபடி, உரையாசிரியர்களால், புதிதாக ஒரு தொடர் இணைக்கப்படுகின்றது. நல்வினை இருளில் சேர்க்காது என்பதை உணரும் உரையாசிரியர்கள், வள்ளுவர் உள்ளக் கருத்தை உணரக் கூடாமல், அதே நேரத்தில் வள்ளுவர் குறளுக்கும் பொருள் சொல்லவேண்டிய மயக்க நிலையில், 'மயக்கம் காரணமாக வருகின்ற' என்னும் புதிய தொடரை இணைத்துள்ளனர். நல்வினை எத்தனை வகைப்படும்? உரையாசிரியர் கொள்ளுகின்றபடி மயக்கம் காரணமாக வருவது நல்வினையாகுமா? மயக்கமில்லாமல் வருகின்ற நல்வினைக்கும் மயக்கம் காரணமாக வருகின்ற நல்வினைக்கும் உள்ள வேற்றுமை யாது? 'நல்வினை' என்னும் சொல் முக்காலத்திலும் நன்மை பயப்பதைத்தானே பொருளாகக் கொண்டது? அச் சொல்லை 'இருள்சேர்' என்பதோடு இணைக்க வியலுமா? இணைத்தால் அது பொருந்துமா? வள்ளுவரால் இத்துணை அழுத்தமாக வலியுறுத்திக் கூறப்படும் அறக்கருத்துகளை, இருளில் சேர்க்கும் நல்வினை, இருளில் சேர்க்காத நல்வினை எனப் பிரித்துக் கூறவியலுமா? வள்ளுவர் அவ்வாறுதான் கூறுகிறாரா?

பிறவிச் சுழற்சிக் கொள்கையின்படி, திருக்குறளுக்குப் பொருள் கூறவியலாது என்பது விளங்குகிறது. ஆகவே, அதற்கு எதிர் மாறான கடவுள் கொள்கையின் அடிப்படையில் பொருள் காண்போம்.

கடவுளால் படைக்கப்பட்டவனே மனிதன். ஆதியில் படைக்கப்பட்ட ஆணும் பெண்ணும் ஆதிப்பெற்றோர். அவர்களுடைய சந்ததியினரே இன்று இவ்வுலகில் வாழும் மக்கள். இவ்வுலகில் வாழும் மனிதர்களின் முன்னோரும் மனிதர்களே; பின்னோரும் மனிதர்களாகவே பிறப்பர். மனிதனுக்காகவே, மற்றப் படைப்புகளையும் கடவுள் படைத்தார். ஆகவே, படைப்புகளிலெல்லாம் சிறப்புப் பெற்றவனே மனிதன். மனிதனைத் தவிர, மற்ற உயிர்கள் யாவும் அழியக்கூடியவை. ஆனால், இவனோ அழியாமையையுடையவன். எவ்வாறெனில், இவனுக்கு மட்டுமே அழிவில்லா ஆன்மா உண்டு. இதை இவன் கடவுளிடமிருந்து பெற்றுள்ளான். ஆதிமனிதனுக்குக் கடவுளால் கொடுக்கப்பட்ட சிறப்புகள் யாவும், அவனுடைய சந்ததியினருக்கும் உரிமையாகும்படி கடவுள் திட்டம் வகுத்தார்.

எங்ஙனமெனில், அவர்களுக்கு முதன்மையாகத் தந்தது அருள் சக்தியாகும். கடவுளோடு நெருங்கிய நட்புறவை இஃது அவர்களுக்கு அளித்தது. மேலும், வேறு சில வரங்களையும் அவர்களுக்கு அளித்தார்.

1. தெய்வீகமான அறிவு ஒளி.
2. முறை தவறிய உடல் இச்சையின்மை.
3. சாகாமை (நோய், வருத்தம், சாவு இவை இல்லா இன்ப நிலை)

மேற்கூறிய அருள் சக்தியும் இன்ப நிலையும் ஆதிப் பெற்றோருக்கும், அவர்களுடைய சந்ததியினருக்கும் உரிமையாக்க வேண்டும் என்பதே அவர் வகுத்த திட்டம்.

கடவுளிடமிருந்து இவ்வளவு நன்மையைப்பெற்ற ஆதிப் பெற்றோர், கடவுளின் விருப்பத்திற்கு மாறாக நடந்து, தீமையை வரவழைத்துக் கொண்டனர். கடவுள் விருப்பத்திற்கு மாறான செயலாகிய வினையை அவர்கள் செய்து, பழியைப் பெற்ற காரணத்தால், அவ்வினை அவர்களின் சந்ததியினரையும் தொடர்ந்து வருகிறது. இவ்வினை, இறைவனின் அருளுறவையும் வேறு வரங்கள் அனைத்தையும் இழந்த நிலையை ஏற்படுத்தியது. இந்நிலையே ஆதிவினை, அல்லது முன்னோர் வினை என குறிக்கப்படுகிறது. இது பெற்றோரிடமிருந்து பிள்ளைகளுக்கு, அவர்களுடைய பிறப்பிலேயே தொடர்ந்து வரும் காரணத்தால், பிறவிவினை எனவும் வழங்கப்படுகிறது.

அவனவன் செய்யும் தீய செயல் தீவினையாகின்றது. இ∴து அவனவன் வினையாதலால், இது தன் வினை எனப்படும். இவ்விரு வினைகளும் இருளில் சேர்க்கக் காரணம் என்ன? முன்னர் நாம் பார்த்தபடி ஆதிப் பெற்றோர், கடவுளின் கட்டளையை மீறியதால், அருள் நிலையை இழந்து, மருள் நிலையில் வீழ்ந்து தெய்வீக அறிவு ஒளியினின்று மாறுபட்டமையே ஆகும்.

தீய வினை எப்போதும் தீமையாகிய இருளில் சேர்ப்பதாகவே இருப்பதால், தன் வினையாகிய தீவினையும் இருளில் சேர்க்கிறது.

ஆகவே, 1. பிறவியில் தொடர்ந்து வரும் பிறவி வினை.
2. அவனவன் செயலால் ஏற்படும் அறத்திற்கு மாறான

மறவினையாகிய தன்வினை.

இவ்விரண்டு வினைகளும், அவனை இன்னா உலகமாகிய இருளில் சேர்க்கின்றன. இவ்விரு வினைகளும் இடைவிடாது முக்காலத்திலும் செயல்பட்டு வரும் காரணத்தால், 'இருள் சேர் இருவினை எனப் பெயர் பெற்றன.

கடவுளின் அருள் சக்தியாகிய தெய்வீகமான அறிவு ஒளியை, இருவினையின் காரணமாக மனிதர் இழந்தமையால், ஒளிக்கு மாறான இருளை-இருட்கடலையடையும் நிலையையடைந்தனர். இருட் கடல்களாகிய பிறவாழி, பிறவிப் பெருங்கடல் ஆகிய இரண்டையும் நீந்தும் ஒரே வழி, ஐந்தவித்தானாகிய கடவுளை அடைதலேயாம். அவனடி சேராதார் பிறவாழி நீந்தலரிது; பிறவிப் பெருங்கடல் நீந்தார். இருவினையும் இருளில் சேர்க்கும். கடவுளின் சக்தியாகிய அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை, இவ்விருள் சேர்ந்த 'இன்னா உலகம் புகல்.'

இவ்விரண்டு வினைகளிலுமிருந்து, கடவுள் எவ்வாறு விடுதலையைக் கொடுத்தார் என்பதையும் கிறித்தவம் விளக்குகிறது.

கடவுளின் அருள் ஒளியாகிய இன்பத்திலிருந்து, மீறுதலாகிய பாவ வினையால் பிரிக்கப்பட்டு, மருளாகிய இருளுக்கு உட்பட்ட மனிதனைத் திரும்பவும் தம்மோடு இணைக்க எண்ணங்கொண்ட கடவுள், இருளிலுள்ள மனிதனைத்தேடித் தாமே மனித உரு எடுத்து வந்தார். மனிதனுடைய மீறுதலாகிய இருளைத் தாம் ஏற்று, மீறுதலுக்கான கழுவாயை ஏற்றார்; மனிதனின் இருளாகிய துன்பத்தை மனிதனாக வந்த அவர் ஏற்றார்; பொறிவாயில் ஐந்தவித்தார். ஆயினும் ஒளியாகிய அவரை, இருள் பற்றிக்கொள்ளவில்லை; வெற்றி கொண்டார். அகல்விசும்புளார் கோமான் இந்திரனே சான்றாகத் தம் ஆற்றலை வெளிக்காட்டிச் செயற்கரிய செயலைச் செய்து, பிறவிப் பெருங்கடலாகிய இருள் சேர் பிறவி வினையிலிருந்து மக்களுக்கு விடுதலையை ஏற்படுத்தினார். அறவாழி அந்தணனாம் அவ்வைந்தவித்தானாகிய கடவுள், மக்கள் பிறவாழியாகிய தன் வினையிலிருந்து நீங்கும்பொருட்டு, பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டியதோடு 'வான்' மூலமாக ஒழுக்கத்தில் நிலைநிற்கும் ஆற்றலையும் அருளி, இருள் சேர் இருவினைகளிலிருந்தும் விடுதலையைக் கொடுக்கிறார். ஆகவே, அவன் நெறி நிற்கும் மருள் நீங்கிய மாசறு காட்சியவர்க்கு இருள் நீங்கி இன்பம் பயக்கும்.

இப்பிறவி வினையிலிருந்து, ஒவ்வொருவரும் விடுதலை பெற வேண்டிய இன்றியமையாமையையும், அதற்கு வழி இறைவனே என்பதையும் **'மெய்யுணர்தல்'** என்னும் அதிகாரத்திலும் கூறுகிறார்.

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு" —358

உள்ளதாகிய இறைவனை அறிந்து ஆராய்ந்து, உள்ளத்தில் ஏற்று உணர்ந்தால், இப்பிறவி வினையைப்பற்றிப் பின்பு நினைக்கவே வேண்டா.

> ''ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
> பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.'' —357

ஆகவே, அறத்திற்கு மாறாகிய மறக்கடலாகிய தன்வினை, பிறவிப் பெருங்கடலாகிய பிறவி வினை ஆகிய இருள்சேர் இருவினையிலிருந்தும், விடுதலையைக் கொடுப்பவன் இறைவனே. அவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு, இருளில் சேர்க்கும் இவ்விருவினைகளும் சேர்வதில்லை.

> ''இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
> பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.'' —5

இதுவரை 'இருள்சேர் இருவினை' என்பதிலுள்ள 'இருவினை' என்பதற்கான விளக்கத்தை நோக்கினோம். பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கும் வள்ளுவர் குறளுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்பது நன்கு விளங்குகிறது.

வள்ளுவர்க்குக் கடவுள் கொள்கை உடன்பாடு என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை. கடவுளுடன் முரண்பட்ட பிறவிச் சுழற்சிக் கொள்கையுடைய ஊழிற்கும் வள்ளுவர் இங்குக் கூறுகின்ற ஊழிற்கும் வேற்றுமையுண்டா என்பதே நம் வினா.

'ஊழ்' என்னும் சொல்லுக்குப் பழவினை மட்டும் பொருள் அன்று.

உலக முடிவு, குணம், பூர்வ கன்மம், நியமம், பகை, முடிவு, முறை, விதி, வெயில் என்னும் பிற பொருட்களும் அதற்குண்டு. இவற்றுள், முறை என்னும் பொருள், இங்கு மிகவும் பொருந்துவதாகத் தெரிகிறது. கடவுள் இவ்வண்டம் முழுவதையும் ஒரு முறையில் இயக்கிக்கொண்டிருக்கிறார். இறைவன் உலகை இவ்வாறு இயக்கும் நிலையை, இறைக்கொள்கையுடையோர் இயற்கைத் திட்டம் அல்லது இயற்கை விதி (Law of Nature) என்று வழங்குவர்.

கடவுள் கொள்கையில் கூறப்படும் இயற்கை விதியாகிய ஊழுக்கும் பிறவிச் சுழற்சிக் கொள்கையில் கூறப்படும் பழவினைக் கொள்கையாகிய ஊழுக்கும் சில அடிப்படை வேற்றுமையுண்டு. பழவினைக் கொள்கையில் உயிரற்ற பொருட்களின் மாற்றத்திற்குத்

தனிக் காரணம் கூற இயலாது. நாம் வாழும் இவ்வுலகச் சுழற்சிக்கும் அதன் சீரான திட்டமிட்ட இயக்கத்திற்கும் இவ்வுலகுடன் தொடர்புடைய மற்ற கிரகங்களின் இயக்கம், இப்பேரண்டத்தின் இயக்கம், இவற்றிற்கும் தெளிவான காரணம் கூறவியலாது, உயிரினங்களின் மாற்றத்திற்கு மட்டுமே, பழவினைக் கொள்கையில் விளக்கம் கொடுக்கப்படுகிறது. ஆனால், கடவுள் கொள்கையிலோ ஒவ்வோர் அணுத் துகளின் இயக்கத்திற்கும் காரணம் கூறப்படுகிறது.

'அவனன்றி ஓர் அணுவும் அசைவதில்லை' அசைவது மட்டுமென்ன? அவை தோன்றுவதற்கும் 'அவனே' காரணமாவான். 'அவன்' விதித்த வழியே எல்லாம் செயல்படுகின்றன. அவன் அத்தனைக்கும் விதித்திருக்கும் அவ் விதியே முறை, ஊழ் ஆகும். கடவுளால் இத் திட்டமிட்ட மிகப் பெரிய விதியாகிய முறையைக் குறிப்பதே 'ஊழ்' ஆகும்.

ஊழ் என்னும் சொல், 'முறைமை' என்கிற பொருளில் பயன்படுத்தப்பட்டிருப்பதை, இலக்கியமும் நமக்குக் காட்டுகிறது.

1. ''கூழை விரித்தல் காதொன்று களைதல்
ஊழணி தைவரல் உடைபெயர்த் துடுத்தலொடு
கெழீஇய நான்கே இரண்டென மொழிப.''

—தொல்காப்பியம்-பொருள், 258.

ஊழணி = முறையாக அணிந்த அணி.

2. 'செறிவுடைத் திண்காப்பேறி வாள்கழித்து
உருகெழு தாயம் ஊழின் எய்தி
பெற்றவை மகிழ்தல் செய்யான்.'

—பட்டினப்பாலை, 226-228.

ஊழின் எய்தி = முறையாக அடைந்து.

3. 'சுழித்தெம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்து
ஊழ் ஊழ் ஓங்கிய.........'

—திருவாசகம்-திருவண்டப்பகுதி, 85-86.

கா. சு. பிள்ளை: எமது பாசக் கட்டாகிய கரைகளை மோதி அசைத்து உடைத்து, வரிசை வரிசையாக மேன்மேலும் வளர்ந்து சென்ற........

'கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர்
முறைவழிப் படூஉ மென்ப திறவோர்
காட்சியில் தெளிந்தன மாகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலு மிலமே.........' —புறம். 132

இறைவனின் திட்டத்திற்கிசைய அவன் நடத்தும் முறையை எதிர்க்க வல்லார் யார்? ஆகவே, யாவும் அவன் இயக்கும் முறை வழியே நடக்கும். அவன் வகுத்த வகையேயன்றி யார்க்கும் துய்த்தல் அரிது.

இறைவன் விதித்துள்ள இம் முறையாகிய ஊழை எதிர்க்க வியலுமா? எதிர்த்து வெல்ல இயலுமா? இயலும் என்கிறார் வள்ளுவர். இயலுமா! அப்படியானால், கடவுளின் திட்டத்தையும் உடைக்கவியலுமானால், உடைக்கும் அவ்வாற்றல், கடவுள் ஆற்றலினும் சிறந்ததன்றோ? கடவுள் ஆற்றலினும் சிறந்த ஓர் ஆற்றல் எவ்வாறு இருக்க வியலும்? கடவுள் கொள்கைப்படி, கடவுள் ஆற்றலினும் சிறந்த ஓர் ஆற்றல் இருக்க வியலாது.

''ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்'' —380

என வள்ளுவரே தெளிவாக ஊழின் வலிமையை அடைமொழியும் இட்டு 'பெருவலி' எனக் கூறுவதோடு, இதனினும் சிறந்தது வேறு ஒன்றும் இல்லை என, அதையும் தெளிவுபடுத்தும் முகத்தான் 'யாவுள' என, வினாவும் எழுப்பிவிடுகிறார். ஆகவே, வள்ளுவர் உள்ளத்தில், 'கடவுள் வலியினும் வேறு வலி உண்டோ' எனும் ஐயம் இல்லை. அப்படியானால், இந்த ஊழையும் வெல்ல வியலும் என்னும் கருத்தில் தெளிவாகவே,

''ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்'' —620

என ஆள்வினையுடைமை அதிகாரத்தில், வள்ளுவர் கூறக் காரணம் என்ன? இவை ஒன்றுக்கொன்று முரண் இல்லையா? ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய ஒன்று இது.

மிகப்பெரும் வலிமை வாய்ந்த பேரரசன் ஒருவன், ஒரு பெரிய நாட்டை ஆள்கின்றான். எல்லாம் அவன் விருப்பப்படியே-அவனது திட்டப்படியே முறையாக நடைபெற்று வருகின்றன. ஒரு சிறிய

வன் அரசனது அம்முறையை மாற்ற நினைக்கிறான். இயலுமா? நன்கு சிந்தித்து விடை கூறுங்கள். அரசனது ஆற்றலையும் இவனது ஆற்றலையும் ஒப்பிடுங்கால், இவனது, அரசனுக்கு எம்மாத்திரம்?

ஆகவே, அச்சிறியவனால் அரசனது முறையை, திட்டத்தை, விதியை. ஊழை மாற்ற வியலாது என நினைக்கலாம். ஆனால், ஆழ்ந்து சிந்தித்தால், அஃது அச் சிறியவனுக்கு முடிக்கக் கூடிய செயலே என்பது தெரியும்.

எவ்வாறு?

அரண்மனைத் தோட்டத்தில் 'யாரும் மலர் பறிக்கக் கூடாது' என அரசன் விதி வகுத்துள்ளான்; அது செயல் படுத்தப்படுகிறது என வைத்துக்கொள்ளுவோம். சிறியவன் அரண்மனைத் தோட்டத் திலுள்ள மலரை விரும்புகிறான். இவனுக்கு மலர் கிடைக்குமா? அரண்மனைத் தோட்ட மலரை மற்றவர் அடைய வியலாதென்பது விதியன்றோ? அவ்விதியை மாற்ற வியலுமா? அரசனை எதிர்த்து விதியை மாற்ற வியலாது. முயன்றால், காவலர் கொண்டு சென்று விடுவர். அரச 'விதியினும் பெரியது உண்டோ?'

'ஊழிற் பெருவலி யாவுள?'

அரசனை எதிர்த்து அம் முறையை மாற்ற வியலாது. ஆனால், 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' என்பதற்கேற்ப, மாற்ற விரும்பும் சிறுவன், அரசனது அருள் பெற்றவனாக- ஆதரவு பெற்ற வனாக- அன்பு பெற்றவனாக இருப்பானானால், அரசனது அனுமதி பெற்று மாற்ற வியலுமன்றோ?

ஆகவே, அரசனின் விதியைச் சிறியவன் மாற்ற வியல்கிறது.

'ஊழையும் உப்பக்கம் காண்பர்.'

இம் மாற்றம் அரசனை எதிர்த்து நடைபெறுவதன்று. அரசனது ஆதரவுடனேயே மாற்றப்படுவது.

அவ்வாறே கடவுளின் அடியவர், கடவுளின் அருளால், இயற்கை விதிகளையும் மாற்றும் ஆற்றல் பெறுகின்றனர். அவர்கள் கல்லை உணவாக்கலாம்; நீரைத் தேனாக்கலாம்; இறந் தோரை உயிர்பெற வைக்கலாம். இவை இயற்கை விதிக்கு முரண் பட்டவையாகத் தோன்றினாலும், இவற்றை அவர்களால் ஆற்றவியலும்.

**'ஊழையும் உப்பக்கம் காண்பர்.'**

ஆனால், கடவுள் கொள்கையற்ற பிறவிச் சுழற்சிக் கொள்கை யிலோ, பழவினையாகிய ஊழை யாராலும் மாற்றவே இயலாது. ஊழ்வினை தன் பயனைத் தந்தே தீரும்.

'ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும்.'

இடைக்காலத்தில் தமிழகத்தில் ஏற்பட்ட கலப்புக் கொள் கையின் காரணமாகக் கடவுள் கொள்கைக்கும் பிறவிச் சுழற்சிக் கொள்கைக்கும் இடையேயுள்ள வேற்றுமை, நன்கு தெளிவுபடுத்தப் படவில்லை. இன்றும் மக்கள் இக்கலப்புக் கொள்கையிலேயே இருக்கும் காரணத்தால், தெளிவு பெறவில்லை என்றே துணிந்து கூறலாம். கடவுள் கொள்கைக்கு முரண்பட்ட, பிறவிச் சுழற்சிக் கொள்கையில் கூறப்படும் தலைவிதியிலும் நம்பிக்கை கொண்டு, அதே நேரத்தில் கோவிலுக்குச் சென்று கடவுளையும் வணங்கும் மக்களே இன்று அதிகம்.

ஆகவே, வள்ளுவர் காட்டும் ஊழ், இறைவன் உலகை இயக்கும் முறையைத் தெரிவிப்பதேயன்றிப் பழவினையை அடிப்படையாகக் கொண்ட பிறவிச் சுழற்சிக் கொள்கையையுடையது அன்று.

ஆகவே, வள்ளுவர் பிறவிச் சுழற்சிக் கொள்கையையும் கடவுள் கொள்கையையும் கலந்து, கலப்படக் கொள்கையாகக் கூறவில்லை. அக் கலப்பு யாவும், இடைக்காலத்தில் திருக்குறளுக்கு உரைகண்ட உரையாசிரியர்களின் உள்ளத்திலிருந்து தோன்றியவையேயாகும்.

கடவுள் கொள்கைக்கு மாறான பிறவிச் சுழற்சிக் கொள்கையை நம்பும் மக்களுக்கு விவிலியம், திருக்குறள் வழியில், ஐந்தவித்தானின் செய்ந்நன்றியாகிய நற்செய்தியை அறிவிக்குங்கால், அவர்கள் உள்ளம் புரிந்துகொள்ளும் முறையில் இறைவனை ஏற்றுக்கொண் டால், 'உங்களுக்கு வரும்பிறவி இல்லை; உங்கள் தீவினைகளை யெல்லாம் அவன் நீக்கி விடுகின்றான்; இந்த ஒரு பிறவியிலேயே நீங்கள் பிறவி நீக்கம் பெற்றுச் சீவன் முக்தராகி, இறையடியில் மகிழ்ச்சி பெறலாம்' என்று கூறுதல் கடமையாகும்.

இப்படிக் கூறினால், கடவுள் கொள்கையும் பிறவிச் சுழற்சிக் கொள்கையும் இதில் கலந்திருப்பதாகத் தோன்றினும், உண்மையில் அத்தகைய கலப்பு இல்லை என்பது ஆழ்ந்து நோக்குவார்க்குப் புலப்படும்.

இந்த ஆழமான அறிவை உணர இயலாதவர்கள், பிறவிச் சுழற்சிக் கொள்கையை வெற்றி கொள்ளும் விவிலிய திருக்குறள்

வழியில், கடவுள் கொள்கையைப் புரிந்துகொள்ள இயலா நிலையில் ஏதேதோ பிதற்றுகிறார்கள் எனுங்கருத்தில்,

''சித்தாந்தத் தேசிவன்தன் திருக்கடைக்கண் சேர்த்திச்
 சென்னம்ஒன் றி லேசீவன் முத்த ராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
 மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்பன் என்று
 மொழிந்திடவும் உலகர்எல்லாம் மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
 பெருங்குழியில் வீழ்ந்திடுவர் இதுஎன்ன பிராந்தி''[67]

என்று சைவ சித்தாந்த சாத்திரம் கூறுகின்றது.

67. சிவஞானசித்தியார், 8-2-16.

# ஒப்பாய்வு - 2

## 1. உலகப் படைப்பு

'உலகமும் உயிர்களும் மனிதனும் கடவுளின் படைப்பு' என்னும் கருத்து, கடவுள் கோட்பாட்டுச் சமயங்கள் எல்லாவற்றிற்கும் பொதுவானதாக இருப்பினும், இக்கருத்தைச் சிறப்பாக — கோவை யாக — விளக்கச் சித்திரமாக விவிலியம் கூறுகின்றது எனலாம். இசுரவேலர்களுடைய படைப்பு விளக்கங்களுக்கு, அவர்களுக்கு முற்பட்ட இனங்களுடைய படைப்புக் கதைகள், அடிப்படையாய் இருக்கின்றன எனலாம். ஆயினும், விவிலியப் படைப்பு விளக்கத் திற்கு முற்பட்ட கதைகளிலிருந்து, விவிலியப் படைப்பு விளக்கம், முறைப்படுத்தப்பட்ட — சிறப்பானதொன்றாக விளங்குகின்றது.

யூதர்களுடைய திருமறையாகிய பழைய ஏற்பாட்டில் அந்த இனத்தின் வரலாற்றையும், அந்த இனத்திற்கும் கடவுளுக்கும் உள்ள உறவையும், அவ்வினத்தின் பின் சந்ததியார்க்கு எடுத்துக் கூறும் நோக்கில், அவ்வின முதல்வனாகிய இசுரவேல் எனப்பட்ட யாக்கோபுவின் வரலாற்றை, அவனுடைய பாட்டனான ஆபிரகாமி லிருந்து தொடங்கி எழுதியுள்ளனர். ஆபிரகாமின் குடி வரலாற்றைக் காட்டுமாறு அவனுடைய முன்னோர்களும் உலகம் பெருவெள்ளத் தால் அழிந்தபோது, அம்முன்னோரில் எஞ்சி நின்ற நோவாவும் கூறப்பட்டுள்ளனர். நோவாவின் முன்னோர் வரலாற்றைக் காட்டும்படியாக, அம்முன்னோர்களின் முதல்வனான ஆதாமும் அவன் மனைவியாகிய ஏவாளும் கூறப்பட்டுள்ளனர். 'பெற்றோர் களுக்குப் பிறக்காதவர்கள்' என்னும் கடவுளுடைய படைப்புத் தன்மையை விளக்கிக் காட்டுமாறு, உலகப் படைப்பு, விவிலியத்தின் முதல் நூலாகிய ஆதியாகமத்தின் முதல் மூன்று அதிகாரங்களிலே கூறப்படுகிறது.

விவிலியத்தின் படைப்புக் கருத்து, எபிரேயர்களிடையே வழி வழியாக நிலவி வந்த மரபு விளக்கங்களின் அடிப்படையைக் கொண்டது ஆகும்.

இசுரவேலரில் ஒரு பிரிவினராகிய யூதர்களில் ஒருவராக, இயேசுகிறித்து தோன்றினார். இயேசுகிறித்து காட்டிய நெறி மற்ற இனங்களுக்கும் பரவிய வரலாற்றைப் புதிய ஏற்பாடு கூறு கின்றது. கிறித்தவம் இசுரவேலர்களின் படைப்புக் கருத்தை ஏற்றுக்கொண்டு, அதன் அடிப்படையில் கிறித்தவ சமய விளக்கக் கருத்துகளை வெளியிடுகிறது.

ஆகவே, பழைய ஏற்பாடு — புதிய ஏற்பாடு ஆகிய இரண்டும் அடங்கிய விவிலியம், இறைவனுடைய படைப்பிலிருந்து தொடங்கி, இயேசு கிறித்துவின் நற்செய்தி உலகெங்கும் பரவியதுவரையுள்ள ஒரு வரலாற்றைக் கோவையாய் விளக்குவதாக அமைந்துள்ளது.

யூதம், கிறித்தவம் ஆகிய இரண்டையும் அடிப்படையாகக் கொண்டெழுந்த இசுலாமிய சமயமும் கிறித்துவத்தைப் போலவே இசுரவேலரின் படைப்புப் பற்றிய கருத்தை ஏற்றுக்கொண்டுள்ளது.

ஆபிரகாமின் மகனாகிய ஈசாக்கை, இசுரவேலர்கள் தங்கள் இன முதல்வனின் தந்தையாகக் கொள்வதைப் போல, ஆபிரகாமின் மூத்த மகனாகிய இசுமவேலைத் தங்கள் இன முதல்வரின் தந்தை யாக இசுலாமியர் கொள்ளுகின்ற காரணத்தால் இசுரவேலர், கிறித்தவர், இசுலாமியர் ஆகிய மூவகைப் பிரிவினருக்கும் ஆபிரகாமின் வரலாறும், அதற்கு முந்திய உலகப் படைப்புவரை உள்ள வரலாறும் பொதுவானவைகளாகக் காணப்படுகின்றன.

இத்தகைய வரலாற்று நோக்கில் இந்தியச் சமயங்கள் தங்கள் சமய வரலாற்றைக் கூற முயலாமையால், உலகப் படைப்புப்பற்றிய தெளிவான கருத்துகள் இந்தியச் சமயங்களில் காணப்படவில்லை.

திருக்குறள் ஒரு சமய வரலாற்றையோ சமயம் தோன்று வதற்குக் காரணமான ஓர் இன வரலாற்றையோ கூறும் நோக்கத் துடன் எழுந்த நூல் அன்று. ஆகையால், திருக்குறளில், விவிலி யத்தில் காணப்படுவது போன்ற படைப்புப் பற்றிய கோவையான கருத்துகளை நாம் காண இயலவில்லை.

அவ்வாறே சைவ சமய இலக்கியங்களும், சைவ சித்தாந்த சாத்திரங்களும் இறைவனைத் துதிப்பதற்காகவும், இறைவனைப் புரிந்துகொள்ளக்கூடிய தத்துவக் கருத்துகளை விளக்குவதற்காகவும் எழுதப்பட்ட நூல்களேயல்லாமல், சமய வரலாற்றைத் தொகுத்து கூறுவதற்காகவோ சமயம் தோன்றுவதற்குக் காரணமான இன வரலாற்றைக் கூறுவதற்காகவோ எழுதப்படாத காரணத்தால், உலகப் படைப்புப்பற்றிய தெளிவான கருத்துகளை நாம் அங்கும் காண இயலவில்லை.

ஆயினும் விவிலியம், திருக்குறள், சைவ சித்தாந்தம் இவை யாவும் கடவுள், மனிதன், உலகம் இவைகளுக்கிடையே உள்ள தொடர்புகளை விளக்க முற்படுகின்ற காரணத்தால், படைப்புப் பற்றிய வரலாறுகள் காணப்படாவிடினும், அடிப்படைத் தத்து வங்கள் காணப்படாதிருத்தல் இயலாது. ஒருசில குறிப்புகளேனும் ஆங்காங்கே காணப்படுதல் இயல்பே.

இந்த நோக்கில் நாம் இம்மூன்றையும் காண்போம்.

விவிலியத்தில் முதல் மூன்று அதிகாரங்களில், உலகப் படைப்பு விளக்கப்படுகின்றது. கடவுள், மனிதன், உலகம் இம்மூன்றுக்கும் உள்ள தொடர்பு எத்தகையது என்பதுபற்றிய விளக்கத்தில், மனிதன் இயல்பிலேயே தீமையுடையவனாகக் காணப்படுவதற்குக் காரணம் என்ன என்னும் வினா எழுகின்றது. மனிதன் கடவுளால் படைக்கப் பட்டிருப்பானானால், மனிதனுடைய இயல்பிலேயே ஒட்டி இருக்கும் தீமையும் கடவுளால் படைக்கப்பட்ட ஒன்றே எனவும், தீமையுடைய கடவுள் தீமையுடைய மனிதனைப் படைத்தார் எனவும், கடவுளிடத் தில் தீமை உண்டு எனவும் காட்டுவதாக முடிவுபெறும்.

கடவுளிடத்தில் தீமை இருத்தல் இயலாது. ஆகையால், கடவுள் தீமையுடைய மனிதனைப் படைத்திருத்தல் இயலாது. இந்த எண்ணங்களில் தீமை வந்த விதம் என்ன என்னும் வினா எழு கின்றது. அதற்கு விடை கொடுப்பதாகவே ஆதாம் ஏவாளைப் பற்றிய எபிரேய மரபுக்கதை அமைந்துள்ளது எனலாம். உலக மக்களின் ஆதிப் பெற்றோராகிய ஆதாமும் ஏவாளும், கடவுளுடைய சாயலாகப் படைக்கப்பட்டார்கள்.[1] கடவுளோடு 'ஏதேன்' என்னும் இன்ப வனத்தில் வாழ்ந்து வந்தார்கள். தீமையற்ற முக்தி நிலை யில் வாழ்ந்த அவர்கள் உள்ளத்தில், பின்னர் தீமை தோன்றியது எவ்வாறு என்பதைப் பாம்பு (தீமை) ஏவாளோடு பேசியதாகவும், அதன் காரணமாக ஏவாள் ஆணவம் கொண்டு கடவுளின் கட்டளையை மீறி தீமையாகிய பழத்தைப் பறித்துத் தானும் உண்டு தன் கணவனுக்கும் கொடுத்ததாகவும், அதன் பயனாக உலகில் தீமை புகுந்ததாகவும் விளக்கப்படுகிறது. இதைச் சித்தாந்த சாத்திரங்களில் முதலாவதான திருவுந்தியார்,

''முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்து
அத்தி பழுத்ததென் றுந்தீபற
அப்பழ முண்ணாதே யுந்தீபற''[2]

என்ற செய்யுளின் வழி விளக்கிக் காட்டுகிறது.

1. ஆதி. 1 : 27.
2. திருவுந்தியார். 41.

ஆதாம், ஏவாள், உலகம் இவை படைக்கப்பட்ட தன்மையை விவிலிய வழியில் நோக்கினால், படைப்பு ஒரே செயலால் நடைபெற்றதாகக் கொள்ளப்பெறவில்லை. ஆதாம் (அவன்) படைக்கப் பட்ட முறைக்கும் ஏவாள் (அவள்) படைக்கப்பட்ட முறைக்கும், உலகம்(அது) படைப்பட்ட முறைக்கும் வேறுபாடுகள் கூறப்படு கின்றன. இம்மூன்றையும் மூன்று வினைகளின் வழி இறைவன் தோற்றுவித்தான் எனவும், தோற்றுவிக்கப்பட்ட அவை நன்மையில் நிலை நின்று, பின்னர் நன்மையிலிருந்து ஒடுங்கித் தீமைக்கு(மலம்) உட்பட்டன எனவும், இதுவே பரிசுத்தமான (முக்தி) நன்மை உலகத்தின் முடிவும் (அந்தம்), தீமையுலகின் (சகசமலம்) தொடக்கமும் (ஆதி) ஆகும் எனவும் இறையறி புலமையுடையோர் விவிலியத்தில் கூறியுள்ளனர். சிவஞானபோதம் அதே கருத்துகளைக் கீழ்க்காணுமாறு கூறுகிறது.

''அவனவ ளதுவெனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கிமலத் துளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்.''[3]

திருவள்ளுவர் 'உலகியற்றியான்,' 'ஆதிபகவன் முதற்றே உலகு' முதலிய தொடர்களால் இறைவன் உலகைப் படைத்தான் என்னும் கருத்தையும், 'தனக்குவமையில்லாதான்' என்பதால், படைக்கப்பட்ட எல்லாவற்றிற்கும் மேலாக இறைவன் விளங்கு கின்றான் என்னும் கருத்தையும், 'வகுத்தான்,' 'வகுத்த வகை' என்னுமவற்றால், படைத்தவனே எல்லாவற்றையும் ஆட்சிபுரி கின்றான் என்னும் கருத்தையும் தெரிவிக்கின்றார்.

## 2. வீழ்ச்சி

மனிதன் பிறக்கும்போதே, தீமை அவனைத் தொடர்வது ஏன் என்னும் வினாவுக்கு விளக்கம் இருவகையில் கொடுக்கப்படுகின்றது. சமண பௌத்த சமயங்கள், கடவுள் கொள்கையை ஏற்றுக் கொள்ளாக் காரணத்தால் அச்சமயங்களில் மனிதனாகப் பிறந்த இப்பிறவிக்கு முந்திய பிறவிகளில், அவன் செய்த தீமையின் பயனால், அவன் இப்பிறவியில் பிறக்கும்போதே தீமை அவனைப் பின் தொடர்கிறது என்கிற விளக்கமும், இறைவனால் படைக்கப் பட்டவை மனிதனும் உலகமும் என்னும் கடவுள் கோட்பாட்டுச் சமயங்களில், இறைவனால் நல்லவனாகப் படைக்கப்பட்ட மனிதனில், ஆணவம் என்னும் தீமை பின்னர்ப் புகுந்துவிட்ட

3. சிவஞானபோதம், சூத். 1.

காரணத்தால், அவன் வழியில் பிறந்த மனிதர்கள் எல்லாரையும், தீமை பரம்பரைப் பிறப்பின் வழித் தொடர்கிறது என்னும் விளக்கமும் கொடுக்கப்படுகின்றன.

தெளிவான ஓரிறைக் கோட்பாட்டுச்சமயங்களாக உருவாகாமல், பல தெய்வக் கோட்பாட்டைக் கொண்டனவாகவும், படைப்புக் கொள்கை பற்றிய தெளிவான கருத்தற்றனவாகவும் விளங்குகின்ற சமயங்கள், மனிதன் பிறக்கும்போதே தீமை அவனைத் தொடர்வது ஏன் என்னும் வினாவுக்குத் தெளிவான விளக்கம் கூற இயலா நிலையில், கடவுள் கொள்கையற்ற சமண பௌத்த சமயங்களின் முற்பிறவிக் கொள்கையையோ ஓரிறைக் கோட்பாட்டுச் சமயங்களின் முன்னோர்வழி விளக்கத்தையோ ஏதாவதொன்றைத் தழுவிக் கொண்டு, விளக்கம் கொடுக்க முயல்கின்றன. எடுத்துக்காட்டாக, நான்கு வேதங்களையுடைய ஆரிய வைதீக சமயத்தில், மனிதன் பிறக்கும்பொழுதே அவனைத் தீமை தொடர்வது ஏன் என்னும் வினாவைப்பற்றித் தெளிவான எண்ணப்போக்கோ அதற்குத் தெளிவான விளக்கமோ காண இயலவில்லை. பிறக்கும் பொழுதே தான் உயர்ந்தவனாகப் பிறந்துள்ளவன் என்னும் எண்ணமும், அதே நேரத்தில் பிறவி தீமையானது என்னும் எண்ணமும், நாத்திகச் சமயத்தின் முற்பிறவிக் கோட்பாடும், எல்லாம் கலந்து நிற்கும் கலப்புக் கொள்கையாகவே நாளாவட்டத்தில் அது விளக்கம் பெற்றிருத்தலை நாம் அறியலாம்.

இசுரவேலரின் வரலாற்றில் எழுந்த விவிலியம், மனிதன் பிறக்கும்போதே தீமை தொடர்வதற்குரிய காரணத்தை இசுரவேலரின் வரலாற்றிலிருந்தே விளக்க முற்படுகிறது.

எகிப்திலும் பாபிலோனிலும் இசுரவேல் மக்கள் அடிமைகளாக நடத்தப்பட்டதற்கும், பாபிலோனில் இருந்து தாய்நாடு திரும்பிய யூதர்கள், பின்னர் கிரேக்கர்களாலும் உரோமர்களாலும் நசுக்கப் பட்டதற்கும், காரணம் காண முயன்ற அவர்கள் உள்ளத்தில், தங்களுடைய முன்னோர் கடவுளுடைய கட்டளைகளைக் கைக்கொள்ளாமல் மீறியதாலேயே, அம்முன்னோரின் வழியில் பிறந்த பின்னோராகிய தங்களுக்கும் பிறப்பின்வழித் தீமை வருகின்றது என்ற எண்ணம் ஏற்பட்டது. அதை அவர்களுடைய எழுத்துகளில் நாம் பார்க்கின்றோம்.

தீமை தங்களுக்கு மட்டுமல்லாது, உலகில் உள்ள யாவருக்குமே பொதுவாக விளங்குகின்ற காரணத்தால், உலக மக்கள் எல்லோருக்கும் அம்மையப்பராக விளங்கிப் பெற்றோருக்குப் பிறவாத,

பிறவா யாக்கைப் பெரியோனாகத் தம் மனைவியுடன் விளங்கிய— கடவுளால் படைக்கப்பட்ட ஆதி முதல் மனிதனாகிய ஆதாம், கடவுள் கொடுத்த கட்டளையை மீறியதால், அவனுடைய பின் சந்ததியாராகிய உலக மக்கள் யாவருக்கும், பிறக்கும்போதே தீமை வரக் காரணமாக ஆதாம் விளங்குகின்றான் என்னும் எபிரேய விளக்கக் கதை எழலாயின.

முழுவதுமாகக் கடவுளுடைய கட்டளையைக் கைக்கொண்டு நடந்தால், தீமையிலிருந்து விடுபடலாம் என்னும் எண்ணத்தோடு பழைய ஏற்பாடு நின்றுவிடுகிறது.

ஆனால், புதிய ஏற்பாடோ, இசுரவேல் இனத்தில் தோன்றிய இயேசு கிறித்துவின் வரலாற்றை அடிப்படையாகக்கொண்டு, இசுரவேலரின் பழைய விளக்கத்திற்கு, வரலாற்றுப் பின்னணியில் ஒரு முழுமையான விளக்கத்தைக் கொடுக்க முற்படுகின்றது.

கடவுளால் படைக்கப்பட்ட முதல் மனிதன், கடவுளின் கட்டளையை மீறியதால், அவன் வழிப்பிறந்த உலக மக்கள் யாவருக்கும் தீமை பிறப்பிலேயே தொடர்ந்து வருகிறது. பிறப்பிலேயே தொடர்ந்து வருகின்ற தீமையின் காரணமாகப் பிறந்த ஒவ்வொரு மனிதனும், தன் வாழ்நாளில் தீமையைச் செய்யக்கூடியவனாக மாறிவிடுகின்றான். ஆகவே,

(1) பிறப்பு வழித் தீமை (ஜென்ம பாவம், சகசமலம்)
(2) அவரவர் தத்தம் வாழ்நாளில் செய்யும் தீமை (கன்ம பாவம்)

ஆகிய இருள்சேர் இருவினைகளும் மனிதனைத் தொடர்கின்றன,

இந்த இருவினைகளையும் போக்குவதற்குக் கடவுளே மனிதனாகப் பிறந்து, முதல் மனிதன் செய்த கீழ்ப்படியாமையின் தண்டனையைத் தாம் ஏற்றுச் சிலுவை மரணம்வரை கீழ்ப்படிந்து, ஆதாம் என்ற ஒருவனால் வந்த தீவினை, கிறித்து என்னும் ஒருவரால் நீக்கப்பட்டுவிட்டது என்று நம்புமாறு, கிறித்தவம் கிறித்தவர்களை வழிநடத்துகிறது.[4]

கடவுளால் படைக்கப்பட்ட மனிதனின் ஆணவத்தால் வந்த தீமையைக் கடவுளே தமது படைப்புக்குள் புகுந்து, தாம் ஒரு மனிதனாகப் பிறந்து, குருவாக விளங்கி, சிலுவைத் தவத்தால் நீக்கியுள்

---

4. *உரோமர், 5:17-19.*

ளார் என்பது, இசுரவேல் வரலாற்றில் வந்த யூதப் பிரிவில் தோன்றிய இயேசு கிறித்துவின் வரலாற்றின் வழியாக, அவருடைய அடியவர்களுச்குக் கிடைத்த வரலாற்று நம்பிக்கை.

இந்த நம்பிக்கையை கிறித்தவ வரலாற்றோடு தொடர்புடைய சமயங்கள் ஏற்றுக்கொள்ள இயலுமேயல்லாமல், யூத கிறித்தவ வரலாற்றுக்கு மாறுபட்ட சமயங்கள், வரலாற்றில் வளர்ந்த இக்கொள்கையைப் புரிந்து கொள்ளவோ ஏற்றுக்கொள்ளவோ இயலாது.

யூத கிறித்தவ அடிப்படையில் தோன்றிய சமயமாக இசுலாம் இருந்தபோதிலுங்கூட, இயேசு கிறித்துவின் சிலுவை மரணத்தையும் உயிர்த்தெழுதலையும் இசுலாம் ஏற்றுக்கொள்ளாததால், பிறக்கும்போதே பாவம் மனிதனைத் தொடர்கின்றது என்னும் கருத்தைப்பற்றிய விளக்கமான கொள்கையோ கடவுள் மனிதனாகப் பிறந்து குருவாக விளங்கிப் பாவத்தைத் தம்முடைய தவத்தால் நீக்கியுள்ளார் என்னும் விளக்கங்களோ இசுலாமில் இடங்கொள்ள இயலாமல் போயிற்று.

இந்தியாவில் தோமையர் வழிவந்த கொள்கைகளும் சமயங்களும், வரலாற்று வழியில் காட்டும் கிறித்தவம் இக்கொள்கையைத் தம்மகத்தே கொண்டு விளங்குதல் இயல்பே.

யூத கிறித்தவ வழியில் வந்த இசுலாம், இயேசு கிறித்துவை ஒரு நபியாக ஏற்றுக்கொண்டபோதிலும், இயேசு கிறித்துவைக் குருவாக வந்த கடவுள் என்றோ சிலுவைத் தவத்தால் மீட்பைத் தேடியுள்ளார் என்றோ ஏற்றுக்கொள்ளா நிலையில், அதில் குருவாகிய கடவுள் அல்லது கடவுளாகிய குரு என்னும் கோட்பாடோ கடவுளின் திருமகன் (குமரக் கடவுள்) என்னும் கோட்பாடோ, குமரக் கடவுள் தோன்றுவதற்குக் காரணமானவர், சக்தி (Spirit) யாகிய கடவுள் என்னும் கோட்பாடோ தோன்றுவதற்கு வழியில்லாமல் போயிற்று.

ஆனால் கிறித்தவம், இயேசுவைச் சிறந்த மனிதர் (நபி) ஆக மட்டும் கொள்ளாமல், மனிதனாகப் பிறந்த கடவுள் என்று கொள்ளுகின்ற காரணத்தால், அக்கொள்கையை தமிழகத்தில் பரப்பிய தோமா வழியில் வளர்ந்த நூல்களும் சமயங்களும் கிறித்தவ வழியிலேயே அக்கொள்கையை விளக்க முற்படுதல் இயல்பே.

திருக்குறளில் 'தனக்குவமை இல்லாதான்' (7)எனக் கடவுளுக்கு இலக்கணம் கூறும் வள்ளுவர், ஐம்புலனை அவித்த ஐம்புல மனித

னாக 'ஐந்தவித்தான்' (6) என்னும் சொல்லால் கடவுளைக் கூறுவது கிறித்தவரல்லாதவர்களுக்கு ஏற்றுக்கொள்ள இயலாத ஒன்றாகும்.

"The word 'ஐந்தவித்தான்' is intriguing and rather jarring, not to say inappropriate if literally interpreted as some commentators and translators have done with reference to God the Almighty.

If applied to Mahavira or Lord Buddha or to Jesus Christ, its literal meaning namely one who has scotched or scorched one's five senses might hold good. But used with reference to God the Supreme, it will be absurd, nay blasphemous"[5]

சைவ சமயத்தைச் சேர்ந்த கே. எம். பாலசுப்பிரமணியம் மேற்கண்டவாறு கூறியபோதிலும், அதே சமயத்தைச் சேர்ந்த க. நடேச உடையார், கீழ்க்காணுமாறு கூறுகிறார்.

'பொறிவாயில் ஐந்தவித்தான்' என்னும் தொடர் 'தென்னன்' என மாணிக்கவாசகராலும் 'தட்சிணாமூர்த்தி' என மற்றும் பலராலும் போற்றப்படும் ஆசாரிய மூர்த்தியையே—ஆலமர் கடவுளையே — தென்னெறித் தலைவனையே — குறிக்கும். 'பொய்தீர் ஒழுக்க நெறி' என்பதும் அத் தென்னன் கூறிய பழந்தமிழ் நான்மறையையே குறிக்கும்."[6]

'தென்னன்' என்னும் குருமூர்த்தியின் வரலாறு என்ன என்பது, புராணப் போக்கிலன்றி, வரலாற்றுப் போக்கில் இதுவரை விளக்கப் படவில்லை. பழந்தமிழ் நான்மறை எவை என்பது இன்னமும் தெளிவுபடுத்தப்படவில்லை.

தோமாவின் வழி தமிழகத்தில் தோன்றி வளர்ந்த 'பொய்தீர் ஒழுக்க நெறி' இயேசு கிறித்துவாகிய ஆசாரிய மூர்த்தி (ஆலம்—விஷம்—சாவு) சாவை ஏற்றுக்கொண்ட செல்வனாக இந்தியாவில் தென்கோடியில் உள்ள தமிழகத்தில் நிலைபெற்றுப் பின்னர் வட பாகத்தில் உள்ள மக்களுக்குத் தென்திசைக் கடவுளாக வடக்கு

---

5. Tiruvasakamani K. M. Balasubramaniam, Tirukkural English Translation, The Manali Lakshmana Mudaliar Specific Endowment; Madras; 1962, pp. 282—283.
6. க. நடேச உடையார், திருக்குறள் திறவுகோல்—2. நீத்தார் பெருமை, சேலம் திருவள்ளுவர் கழகத்தார். 1955. பக். 55.

நோக்கிப் பரவிய காரணத்தால், இப்பெயர்கள் ஏற்படலாயின எனக் கொண்டால், இறைவன் உலகில் குருவாகத் தோன்றினான் என்னும் வரலாற்றுத் தொடர்ச்சியும், தமிழகத்தின் வழியாக இந்தியா முழுவதும் பரவிய தன்மையும் இணைக்கப்படுகின்றன எனலாம்.

கிறித்துவின் வழி தோமா, தோமாவின் வழி திருக்குறள், திருக் குறளின் வழி சைவ சமயம் என்னும் இணைப்பின் வரலாற்றினையும் நாம் அறிய இயல்கின்றது.

இந்த இணைப்பையே 'பொறிவாயில் ஐந்தவித்தான்', 'பொய் தீர் ஒழுக்க நெறி' என்னும் திருக்குறள் தொடர்கள் நமக்கு விளக்கு கின்றன எனலாம்.

திருக்குறளில் கடவுள் வாழ்த்தில், 'இருள்சேர் இருவினை' என்னும் தொடர் காணப்படுகிறது. இதற்கு விளக்கமாக, இருளில் சேர்க்கக்கூடிய இருவினைகள் என்பதற்கு நல்வினை, தீவினை என உரையாசிரியர்களால் பொருள் கொடுக்கப்படுகிறது. நல்வினை, தீவினை என்பன வினைத்தொகைகளாகும். முக்காலத்தும் நன்மையே பயக்கும் வினையே நல்வினையாகும். மயக்கம் காரணமாகத் தீமையைப் பயக்கும் வினை தீவினை எனப் பெயர் பெற இயலுமேயன்றி, நல்வினை எனப் பெயர் பெறல் இயலாது.

கிறித்தவத்திற்கும் திருக்குறளுக்கும் உள்ள தொடர்பை உணரா நிலையில், (6) இக்குறட்பாவிற்குச் சரியான பொருள் காண இயலாது. முதல் மனிதனாகிய ஆதாமின் வழி, உலகம் முழுவதையும் ஆண்டுகொண்டிருக்கும் சகச மலமாகிய ஆணவ மலம், ஒருவனின் பிறப்பிலிருந்தே தொடர்ந்து வருகின்ற காரணத்தால், பிறவிப்பெருங்கடல் (10) எனவும், ஒருவனுடைய வாழ்நாளில் அவன் செய்யும் தீவினைகள், அறமாக விளங்கும் 'அறவாழி அந்தண'னாகிய இறைவனுக்கு மாறாக விளங்குகின்றமையால், அவற்றைப் பிறவாழி (8) எனவும் குறிப்பிட்டு,பிறவிப் பெருங்கடல், பிறவாழி, ஆகிய இருள்சேர் இருவினைகளுக்கும் வள்ளுவர் விளக்கம் காட்டுவது கிறித்தவத்தின் வழி நின்றே ஆகும்.

இருள்சேர் இருவினைகளில் இருந்து மனிதன் விடுதலை பெறுமாறு, இறைவன் ஐம்புல மனிதனாக-வரலாற்றில் இயேசுவாகத் தோன்றிச் சிலுவைப் பொறிவாயில் ஐந்தவித்து ஈட்டியுள்ள பொருளை 'இறைவன் பொருள்' (5) எனத் திருக்குறள் குறிப்பிடு கிறது. பொறிவாயில் ஐந்துவித்து இறைவன் ஈட்டியுள்ள பொய்தீர் ஒழுக்க நெறியாகிய இறைவன் பொருளைச் சேர்ந்தவர்கள் பிறவிப்

பெருங்கடல், பிறவாழி ஆகிய இருள்சேர் இருவினைகளில் இருந்தும் விடுதலை பெற்று நீடு வாழ்வைப் பெறுவர், எனத் திருக்குறள் கூறுவதாக அதன் கடவுள் வாழ்த்து அமைந்துள்ளது.

மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத் திருக்குறள் ஆய்வக வெளியீடான 'திருக்குறளும் விவிலியமும்' என்னும் நூலில், செல்வி காமாட்சி சீனிவாசன் அவர்கள்,

''பொறிவாயில் ஐந்தவித்தான் என்னும் தொடரோ கிறித்தவ இறையியற் கொள்கைக்கே மிக ஏற்புடையதாகும். அங்கு அது எவ்வித இடர்ப்பாடுமின்றிப் பொருந்தும்''[7] எனக் கூறுகின்றார்.

இறைவனை 'தனக்குவமை இல்லாதான்' என்று கூறியுள்ள அதே அதிகாரத்தில் 'ஐந்தவித்தான்' எனக் கூறியிருப்பதும் 'பிறவாழி', 'பிறவிப் பெருங்கடல்'ஆகிய இருள்சேர் இருவினைகளைச் சுட்டியிருப்பதும், கடவுள் வாழ்த்தில் கடவுளை 'ஐந்தவித்தான்' எனக் குறிப்பிட்டுள்ள திருக்குறள் (6) நீத்தார் பெருமையில் நீத்தாரை 'ஐந்தவித்தான்' எனச் சுட்டியிருப்பதும் (26) 'ஐந்தவித்தான்.......இந்திரனே சாலுங்கரி' என்னும் குறட்பா கூறும் விளக்கமும் சிறித்தவத்திற்குமட்டுமே பொருந்தக் கூடியனவாக உள்ளன.[8] ''எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு'' என்னும் குறட்பா, ஐந்தவித்தானாகிய கடவுள் செய்துள்ள நன்மையை மறந்தவர்க்கு, உய்வில்லை என்பதையே விளக்குகிறது.

'யாண்டும் இடும்பை', 'இருள்சேர் இருவினை', 'பிறவிப் பெருங்கடல்', 'பிறவாழி', 'சார்புகெட ஒழுகல்', 'ஆரா இயற்கை அவா,' 'மனத்துக்கண் மாசு', 'இருள் சேர்ந்த இன்னா உலகம்', ''பொருள் அல்லவற்றைப் பொருளென உணரு மருள்', 'காமம் வெகுளி, மயக்கம்', 'நில்லாதவற்றை நிலையென உணரும் புல்லறிவாண்மை', 'யான் எனது யென்னும் செருக்கு' முதலியன வீழ்ச்சியைக் குறிக்கும் திருக்குறள் தொடர்களாகும்.

ஆதாமில் தொடங்கிய வீழ்ச்சி தொன்று தொட்டு, வித்தின் வழி மரமும் மரத்தின் வழி வித்தும் தொடர்ந்து வருவதைப் போல,

---

7. செல்வி காமாட்சி சீனிவாசன், திருக்குறளும் விவிலியமும், மதுரை காமராசர் பல்கலைக், கழகம் 1979, பக். 327.

8. புலவர் மு. தெய்வநாயகம், ஐந்தவித்தான் யார்? மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை, 1975.

மனிதனை, பிறப்பிலேயே தொடர்ந்து வந்துகொண்டிருக்கிறது என்னும் கருத்தை,

> ''உடற்செயல் கன்மம் இந்த உடல்வந்த வாறே தென்னின்
> விடப்படும் முன்னு டம்பின் வினையிந்த உடல்வி ளைக்குந்
> தொடர்ச்சியால் ஒன்றுக் கொன்று தொன்றுதொட்
> டநாதிவித்தின்
> இடத்தினின் மரம்ம ரத்தினில் வித்தும்வந் தியையு
> மாபோல்''[9]

என்று சிவஞான சித்தியார் வெண்பா விளக்குகிறது.

### 3. குருவாதல்

'மேசியா,' 'கிறிஸ்டாஸ்' என்னும் சொற்கள், 'எண்ணெய் வார்க்கப்பட்டவர்' என்னும் பொருளையுடைய எபிரேய கிரேக்கச் சொற்களாகும். 'எண்ணெய் வார்த்தல்' என்பது ஒருவரைத் தீர்க்கராகவோ குருவாகவோ அரசராகவோ நியமிப்பதற்கு இசுரவேல் மக்கள் கையாண்ட ஒரு சடங்கு ஆகும். எண்ணெய் வார்க்கப் பட்டவர் என்னும் பொருள் கொண்ட 'மேசியா' அல்லது 'கிறிஸ்டாஸ்' அல்லது 'கிறித்து' என்றால் தீர்க்கர், குரு, அரசர் என்னும் பொருளை உணர்த்தும்.

வரப்போகும் காரியங்களை உலகிற்கு முன்னறிவிக்கும் தீர்க்கராகவும், மாணவர்களுக்குக் குருவாகவும், அவர் போதித்த 'இறையரசு'க்கு அரசராகவும் இயேசு விளங்கினார்.

இறைவன் மக்களை மீட்கும்படியாக, மனித உருவில் தோன்றி, அவர்களுக்கு வருங்காலத்தை அறிவிக்கும் தீர்க்கராகவும், சிறந்த ஆன்மீக வழியைக் காட்டும் குருவாகவும், நிலையான விடுதலையைக் கொடுக்கும் அரசராகவும் விளங்குகின்றார் என்பது, இசுரவேலர் வழியில் வந்த யூதர்களுக்கு இயேசு கிறித்துவின் வரலாற்றில் வெளிப்படுத்தப்பட்ட உண்மையாகும்.

இசுரவேலின் வரலாற்றில் இயேசு கிறித்துவின் மூலமாக வெளியான இந்த உண்மை, இயேசு கிறித்துவுக்குப் பிறகு தத்துவமாக உருவாகி உலகெங்கும் பரவலாயிற்று.

---

9. சிவஞான சித்தியார் வெண்பா. 2-2-9

இந்தத் தத்துவத்தின் அடிப்படையில் எழுந்தவைகளாகத் திருக்குறளும் சைவ சித்தாந்தக் கருத்துகளும் விளங்குகின்றன.

இருள்சேர் இருவினைகளிலும் இருந்து மனிதனை மீட்க அருவத்தை நீத்து, ஐம்புலனாகிய உருவத்தை ஏற்ற நீத்தாராகிய குருவாக அவர் விளங்குவது 'நானே வழி' என்ற அவரின் வழி காட்டுதலின் தன்மையால் தெரிகிறது.

திருக்குறளில் கூறப்படும் 'ஐந்தவித்தான்' கடவுளா நீத்தாரா என்னும் வினாவுக்கு, ஐந்தவித்தான் 'கடவுளே,' அதே நேரத்தில் 'நீத்தாரே,' என்று வள்ளுவர் விடை கொடுப்பதாக அமைகிறது. இந்தக் கேட்பாடு கிறித்தவம் ஒன்றுக்குமட்டுமே பொருந்தும். இயேசு கிறித்து மனிதரா கடவுளா என்னும் வினாவுக்குக் கிறித்தவம் கொடுக்கும் பதில், அவர் கடவுள் - அதே நேரத்தில் மனிதர் என்பதாகும். அவர் முழுநிலையில் கடவுள், அதே நேரத்தில் முழு நிலையில் மனிதன் என்பது மற்ற சமயத்தினருக்கு விளங்கிக் கொள்ள இயலாத ஒரு புதிர் ஆகும். இது ஆராய்ச்சியாளர்களுக்கு விளங்க இயலாதது அன்று.

''கடவுள் தன்மையில் விளங்கிய அவர், கடவுளுக்கு இணையாயிருக்கும் நிலையை விடாமல் பிடித்துக்கொண்டிருக்க வேண்டிய தொன்றாகக் கருதவில்லை. ஆனால், தம்மையே வெறுமையாக்கி அடிமையின் தன்மைபூண்டு, மனிதருக்கு ஒப்பானார். மனித உருவில் தோன்றித் தம்மைத் தாழ்த்திச் சாவையேற்கும் அளவுக்கு- அதுவும் சிலுவைச் சாவையேயேற்கும் அளவுக்கு, கீழ்ப்படிபவரானார்,''[10] என்று அவருடைய நீத்த நிலையை விவிலியம் கூறுகின்றது. திருக்குறளை முதன்முதலில் மேலை மொழியில் மொழி பெயர்த்த வீரமாமுனிவர், தாம் எழுதிய தேம்பாவணியில் - பாயிரத்தில் 'நீத்த ஓர் கடவுள்' என்றே குறிப்பிடுகின்றார்.[11]

நீத்த ஒரு கடவுளை 'நீத்தார் பெருமை'யில் வாழ்த்துகின்றார் வள்ளுவர். 'நீத்தார்' என்பது துறவியாகிய மனிதனைக் குறிப்பது

10. *பிலிப்பியர் 2:6-8.*

11. *''சீரிய உலகம் மூன்றும் செய்தளித்து அழிப்ப வல்லாய்*
*நேரிய எதிர்ஒப்பு இன்றி நீத்தஓர் கடவுள் தூய*
*வேரிய கமல பாதம் வினையறப் பணிந்து போற்றி*
*ஆரிய வளன்தன் காதை அறமுதல் விளங்கச் சொல்வாம்.''*
*— **வீரமாமுனிவர், தேம்பாவணி, பாயிரம், 1.***

அன்று என்பதை விளக்குமுகத்தான், 'ஐந்தவித்தான்' என்னும் சொல்லால் கடவுளையும் நீத்தாரையும் ஒருவராக்கிக் காட்டியுள்ளார் வள்ளுவர். வள்ளுவர் ஒரு வரலாற்றைச் சொல்லுவதாகக் கொள்ளக் கூடிய இடம் பாயிரத்திலுள்ள,

''ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி'' -25

என்னும் குறட்பாவாகும்.

இதற்கும் கிறித்தவ இறையியல் அடிப்படையில் பொருள் காணும்போது இடர்ப்பாடு ஏற்படுவதில்லை.

''கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு'' -269

என்னும் குறட்பாவைப்போல 'ஐந்தவித்தான் ஆற்றல்' என்பது கூற்றம் குதித்த ஆற்றலாகும். கிறித்தவத்தில் அதை 'உயிர்த் தெழுதல்' என்பர். 'இந்திரனே சாலுங்கரி' என்பதில் உள்ள 'இந்திரன்' என்பது தலைவன் என்பதையே பொருளாகக் குறிக்கும். தேவர்களுக்குத் தலைவன் - தேவேந்திரன். நரகர் களுக்குத் தலைவன் - நரேந்திரன். சுரர்களுக்குத் தலைவன் சுரேந்திரன். கஜங்களுக்குத் தலைவன் - கஜேந்திரன். மிருகங் களுக்குத் தலைவன் - மிருகேந்திரன். 'அகல் விசும்புளார் கோமான் இந்திரன்' என்பது அகன்ற வானத்திலுள்ள தேவ தூதர்களுக்குத் தலைவன் என்பதைக் குறிக்கும். இயேசு கிறித்து உயிர்த்தெழுந்த தற்குச் சான்று, அகல் விசும்புளார் கோமான் இந்திரன்; அதாவது தேவதூதர்களின் தலைவன் என்று கிறித்தவ நிலையில் கொள் வதில் இடர்ப்பாடு ஒன்றுமில்லை.[12]

சிலுவைப் பொறிவாயில் ஐந்தவித்து, மக்கள் நீடுவாழ்வு அடையும்படியாகப் பொய்தீர் ஒழுக்கநெறியைக் காட்டிய ஐந்தவித் தானாகிய குருவின் நெறியில் நிலை நிற்பதற்குப் பரிசுத்த ஆவியாகிய வானின் துணை, எப்படிப்பட்டவர்களுக்கும் வேண்டும் என்பதை 'யார்யார்க்கும் வானின்றமையாது ஒழுக்கு' (20) என்னும் குறட்பாவால் விளக்கிக் காட்டுகிறது திருக்குறள். அப்

12. *''ஆண்டவரின் தூதர் வானின்று இறங்கிவந்து ...*
*..... உங்களுக்குச் சொல்லிவிட்டேன்.''*
*மத். 28 : 2 - 8.*

பொய்தீர் ஒழுக்க நெறிக்காகவே கடவுள் தன்மையின் அருவத்தை நீத்து, மனிதத் தன்மையின் உருவத்தை ஏற்ற ஒழுக்கத்து நீத்தாரின் பெருமையைச் சிறந்த பனுவல்கள் எடுத்துக் கூறு கின்றன என்பதை,

> ''ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
> வேண்டும் பனுவல் துணிவு'' — 21

என வள்ளுவர் கூறுகின்றார். வள்ளுவர் கூற்றின் நிறைவாகவே இன்று உலகம் முழுவதிலும் உள்ள எழுத்துருவம் பெற்ற மொழிகள் அத்தனையிலும், ஒழுக்கத்து நீத்தாராகிய இயேசுவின் பெருமை பேசப்படுகின்றது எனலாம்.

இது பிலிப்பியர் 2:6 முதல் 11 வரையுள்ள திருமறைப் பகுதி யில் நிறைவேற்றமாகக் காணப்படுகின்றது.

மற்ற உலகக் குருக்கள் அத்தனைபேரும் இம்மை, மறுமை ஆகிய இரண்டில் இம்மையைமட்டுமே முழுமையாக அறிந்தவ களாக விளங்குகின்றனர். ஆனால், இயேசு கிறித்துவைப் பற்றியோ,

''மேலிருந்து வருபவர் எல்லோருக்கும் மேலானவர். மண்ணி லிருந்து உண்டானவன் மண்ணுலகைச் சார்ந்தவன்; அவன் மண்ணுலகைச் சார்ந்தவனாகவே பேசுகிறான்; விண்ணுலகிலிருந்து வருபவரோ எல்லாருக்கும் மேலானவர். தாம் கண்டதையும் கேட்டதையும் குறித்தே அவர் சாட்சியம் பகர்கின்றார்''[13] என்று விவிலியம் கூறுகின்றது.

திருக்குறளும் அதே கருத்தை,

> ''இருமை வகைதெரிந்து ஈண்டறம் பூண்டார்
> பெருமை பிறங்கிற்(று) உலகு'' -23

எனக் கூறுகின்றது.

''ஆதிமுதல் இருந்ததை - நாங்கள் கேட்டதை - கண்ணால் பார்த்ததை உங்களுக்கு அறிவிக்கின்றோம். அதை நாங்கள் நோக்கினோம்; கையால் தொட்டுணர்ந்தோம். நாங்கள் அறி விப்பது உயிரின் வார்த்தையைப் பற்றியது. அந்த உயிர் வெளிப்

---

*13. அரு. 3:31-32.*

படுத்தப்பட்டது; அதனை நாங்கள் கண்டோம்; அதற்குச் சான்று பகர்கின்றோம்.''[14]

மேலே கூறப்பட்டுள்ள புனித அருளப்பரின் கூற்றில் இயேசுவை 'ஆதிமுதல் இருந்த உயிரின் வார்த்தை' என்று குறிப்பிடுவது எண்ணிப் பார்க்கத்தக்கது. 'உயிரின் வார்த்தை' என்பதற்கும் 'நிறைமொழி' என்பதற்கும் பொருள் ஒன்றே. மனித வார்த்தைகள் அல்லது மொழிகள் யாவும் குறைபாடு உடையனவே. ஆனால், இறைவனுடையதோ நிறைமொழி அல்லது உயிரின் வார்த்தை ஆகும்.

''ஆதியிலே வார்த்தை இருந்தார். அவ்வார்த்தை கடவுளோடு இருந்தார். அவ்வார்த்தை கடவுளாயும் இருந்தார்.''[15]

''வார்த்தை மனுவுருவானார்; நம்மிடையே குடிகொண்டார். அவரது மாட்சிமையை நாங்கள் கண்டோம்.''[16]

வார்த்தை மனுவுருவானார்; மனுவுருவாகிய அந்த வார்த்தையைத் திருவள்ளுவர் 'நிறைமொழி மாந்தர்' எனக் குறிப்பிடுகின்றார். அந்நிறைமொழி மாந்தரின் பெருமையை இவ்வுலகில் நமக்கு அறிவிப்பது, மறைமொழியாகிய வேதாகமம் ஆகும்.

''நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்'' -28

நிறைமொழி மாந்தராகிய இயேசுபெருமான், நாம் நீடு வாழ்வடையப் பொய்தீர் ஒழுக்க நெறியை நிலைநாட்டிப் பொறிவாயில் ஐந்தவித்து, அகல் விசும்புளார் கோமான் சான்றாகத் தமது ஆற்றலைக் காட்டிய செய்தியைத் தெரிவிப்பது மறைமொழி ஆகும்.

''மறை நூலில் எழுதியுள்ளது இதுதான். மெசியா பாடுபட்டு, இறந்தோரிடமிருந்து மூன்றாம் நாள் உயிர்த்தெழுவார். பாவ மன்னிப்படைய மனந்திரும்ப வேண்டுமென்று எருசலேமில் தொடங்கிப் புறவினத்தார் அனைவருக்கும் அவர் பெயரால் அறிவிக்கப்படும். இவற்றிற்கெல்லாம் நீங்கள் சாட்சி.''[17]

---

14. *1 அரு. 1:1-2.*

15. *அரு. 1:1.*

16. *அரு. 1:14.*

17. லூக். 24:46-48.

கடவுளாய் இருந்த நிறைமொழியாகிய வார்த்தை மாந்தராகி, இவ்வுலகிலே வாழ்ந்து பெருமையை நிலைநாட்டினார். ஒழுக்கத்து நீத்தார் பெருமை, துறந்தார் பெருமை, இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டார் பெருமை, நிறைமொழி மாந்தர் பெருமை எனத் திருவள்ளுவர் கூறும் ஐந்தவித்தானாகிய கடவுளின் பெருமை களையெல்லாம், இப்பூவுலகிலே மறைமொழி காட்டிவிடும் எனக் கூறுகின்றார். மறைமொழி எவ்வாறு காட்டும் என்பதற்கு விளக்க மாக, 'அற்றம் மறைக்கும் பெருமை' (980), 'பணியுமாம் என்றும் பெருமை' (978) என்று கூறுகின்றார்.

நிறைமொழி என்பது, 'ஆம்,' 'ஓம்,' 'ஆமென்' என்னும் இறைவனின் உடன்பாட்டு ஒலிகளே ஆகும். உலகம் படைக்கப் படுவதற்கு 'மூலப் பிரணவம்' எனப்படும் இவ்வொலியே காரணமாய் விளங்கிற்று. 'ஆம்,' 'ஓம்,' 'ஆமென்' என்பன மூன்று பொருளை யுடைய மூன்று ஒலிகள் அல்ல. ஒரே பொருளையுடைய ஒரே ஒலியே ஆகும்.

''இறைமகனாகிய இயேசு கிறித்துவிடம் ஆம் என்பதும் இல்லை என்பதும் கலந்தில்லை. ஆம் என்பது ஒன்றே அவரிடம் இருந்து வருகிறது. ஏனெனில், கடவுளின் வாக்குறுதிகள் யாவற் றுக்கும் ஆம் என்பதே அவரிடம் இருந்தது. ஆகையால்தான், நாம் கடவுளுக்குப் புகழுரை கூறும்பொழுது, அவர் வழியாகவே 'ஆமென்' என்கிறோம்.''[18]

''ஆமென் எனும் பெயருள்ளவர், உண்மையான சாட்சி யானவர், நம்பத் தக்க சாட்சியானவர்; கடவுள் படைத்த படைப்பின் ஆதியாய் உள்ளவர்.''[19]

ஆமென், ஆம், ஓம் என்பவை கடவுளின் குமாரனாகிய இயேசு கிறிஸ்துவையும், குமரக்கடவுள் எனப்படும் முருகனையும், கடவுளின் பிள்ளை எனப்படும் பிள்ளையாரையும் குறிக்கும் ஒரே ஒலியாகும்.

குமரக்கடவுளாகிய இயேசு, முருகன், பிள்ளை என்பன குருவாக உலகத்திற்கு வந்த இறைவனைக் குறிக்கும் பெயர் விளக்கங்கள் ஆகும்.

---

18. II கொரி. 1:19-20.

19. திருவெளி. 3:14.

இறைவனே குருவாக வந்தபோதிலும் அவன் அருவத்தை நீத்து, ஐம்புல உருவத்தை ஏற்று மனிதனாக விளங்கிய காரணத்தால், இறைமகன் எனவும் குமரக்கடவுள் எனவும் இறைவனின் பிள்ளை எனவும் குறிக்கப்படுகின்றான்.

இறை விருப்பத்தை ஐம்புல குருவாக வந்த இறைமகன் தவறாமல் செயல்படுத்துகின்ற காரணத்தால், உடன்பாட்டு ஒலியாகிய ஆம், ஓம், ஆமென் என்னும் மூல ஒலி எழுவதற்கு அக்குருவே காரணமாகின்றார். அவரிடமிருந்தே ஒலி எழுகிறது.

அவ்வொலி மற்ற எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அறவாழி அந்தணனாக, என்பும் பிறர்க்கீயும் அன்புடையராகக் குருவாய் நின்று அறத்தை உலகத்திற்கு வெளிப்படுத்துவதாக விளங்குகிறது.

''அந்தண ரென்போர் அரவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்'' -30

என்று நீத்தார் பெருமையின் இறுதியில் கூறுவதன் வாயிலாகப் பொய்தீர் ஒழுக்க நெறியில் ஒழுகிக் காட்டிய அந்தணனாகிய நீத்தார் காட்டியதே அறம் என்றாகிறது.

''அறம் என்ற சொல், முதன் முதலில் எப்பொருளை உணர்த்த உருவாகியது என்று சுட்டுவது கடினமானாலும், சொல்லமைப்பு ஆய்வியல் அடிப்படையில் நோக்கும்போது, 'அறு' என்ற வினைச் சொல் அடியாகத்தான் பிறந்தது.''[20]

''பொய் தீரொழுக்க நெறி என்னுமிடங்களில் குறிக்கப் பெறும் ஆறு, நெறி, என்பனவெல்லாம் இவ்வறவாறு அறநெறி என்பனவே யாகல் வேண்டும்.''[21]

ஆகவே, ஐந்தவித்தான் காட்டிய, மனமாசை அறுக்கும் பொய்தீர் ஒழுக்க நெறியாகிய சமயம், அறத்தைக் காட்டும் சமயமே

20. ஆ.த.முத்தையா, அறம், இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், 12-வது க்ருத்தரங்கு ஆய்வுக் கோவை, தொகுதி-3 ப. 249.

21. டாக்டர் மு. கோவிந்தசாமி, திருக்குறள் பொருள் அகராதி அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1972, ப. 28.

ஆகும் என்பது வள்ளுவர் கொள்கை என்றாகிறது. இயேசு கிறித்துவைப் பற்றியும் விவிலியம் கீழ்க்காணுமாறு கூறுகின்றது.

''இவர் அறத்தை அறிவிப்பார்
சச்சரவு செய்யமாட்டார்
இவர் குரல் தெருவில் கேட்காது
அறம் வெற்றிபெறச் செய்யும் வரை
இவர் நெறிந்த நாணலை முறியார்
புகையும் திரியை அணையார்.''[22]

அறவாழி அந்தணனாகிய கடவுள் மற்ற எவ்வுயிர்க்கும் செந் தண்மைபூண்டு, ஒழுக்கத்து நீத்தாராகி, ஒழுகிக் காட்டிய அறமே வள்ளுவரின் பொய்தீர் ஒழுக்க நெறியாகும். அந்த அறத்தை விரித்துரைப்பதே வள்ளுவர் நூல் செய்த நோக்கம்.

மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மைபூண்டு, பொறிவாயில் ஐந் தவித்தானாம் அறவாழி அந்தணன், ஒழுகிக் காட்டிய பொய்தீர் ஒழுக்க நெறியாகிய அறத்தில் நிலை நிற்போரின் தன்மையை, வள்ளுவர் கீழ்க்கண்டவாறெல்லாம் விளக்கிக் காட்டுகின்றார்.

என்பும் பிறர்க்குரியதாகும் அன்புடைத்தாதல். —72

ஒப்புரவினால் வரும் கேட்டைத் தன்னை விற்றும் கொளல். —220

நத்தம் போல் கேடும் உளதாகும் சாக்காடும் அடைதல். —235

தன்னுயிர் தானறப் பெறுதல். —268

பெயக் கண்டும் நஞ்சுண்டு அமைதல். —580

தோல்வி துலையல்லார் கண்ணும் கொளல். —986

இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல். —987

துன்பஞ் சுடச்சுட நோற்றல். —267

கறுத்து இன்னா செய்தவக் கண்ணும்
மறுத்து இன்னா செய்யாதிருத்தல். —312

ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும்
கண்ணோடிப் பொறுத்தாற்றல். —579

22. *மத். 12:18-20*

தீய செறுவார்க்கும் செய்யாது விடல். —203

திறனல்ல தற்பிறர் செய்யினும்
நோநொந்து அறனல்ல செய்யாதிருத்தல். —157

இறந்தார் வாய் இன்னாச் சொல் நோற்றல். —159

இன்னா செய்தார்க்கும் அவர் நாண
நன்னயம் செய்தல். —314

மறந்தும் பிறன்கேடு சூழாதிருத்தல். —204

பெருக்கத்தும் பணிதல். —963

அற்றம் மறைக்கும் பெருமையுடைத்தாதல். —980

மருந்தாகித் தப்பா மரமாதல். —21

இவ்வாறு குருவாக வந்து உலகில் தோன்றி, மற்ற உயிர்க்கும் செந்தண்மைபூண்டு, ஐந்தவித்தலாகிய தவத்தில் ஒழுகியதுடன் 'பணியுமாம் என்றும் பெருமை' என்னும் குறளுக்கேற்ப, நீத்தார் பெருமையின் பணிவுத் தன்மையை வெளிக்காட்டியுள்ளார்.

குமரக் கடவுளாகிய அவர் தந்தையின் விருப்பத்திற்குப் பணிந்து, எல்லாத் தீமைகளையும் தாம் ஒருவரே ஏற்றுக் கொண்டதுடன், தம் மாணவர்களுடைய கால்களையும் தாமே நீர் கொண்டு கழுவும் அளவுக்குப் பணிவை இவ்வுலகிற்குக் கற்பித்தார் என்று, அவருடைய பெருமையை மறைமொழியாகிய வேதாகமம் கூறு கின்றது. அதிலும் சிறப்பாகத் தம்மிடத்திலே மாணவனாயிருந்து கொண்டே தம்மைக் காட்டிக்கொடுக்கப் போகும் யூதாசை அறிந் திருந்தும், அவனுடைய காலையும் கழுவும் அளவுக்குச் சென்றுள் ளமை, அவருடைய பேரன்பையும் பணிவையும் விளக்கும் பெருமை யன்றோ?[23] இப்பெருமைகளையெல்லாம் விளக்குவதே 'பனுவல் துணிவு' மறைமொழி காட்டும் தன்மை எனலாம்.

இத்தகைய குணக்குன்றாகிய அவனிடத்திலும் வெகுளி யுண்டோ? அதை எண்ணிப் பார்த்த வள்ளுவர் 'வெகுளி கணமேயும் காத்தல் அரிது' எனக் கூறுகின்றார். யாருக்கு அரிது? வெகுளி ஏன்? குணமென்னும் குன்றேறி நின்றார்க்கும் வெகுளி உண்டோ! என்பன எண்ணிப் பார்க்கத் தக்கன.

---

*23. யோ, 13: 2-26*

'இறைவனடி சேராதார் பிறவிப் பெருங்கடல் நீந்தார்'[24], 'எண்குணத்தான் தாளை வணங்காத் தலை குணமிலவே'[25] 'தாள் சேர்ந்தார்க்கு அல்லால் நீந்தல் அரிது'[26] 'தாள் சேர்ந்தார்க்கல்லால் மனக்கவலை மாற்றலரிது'[27] என இறைவனைப் பற்றிக்கொள்ளாதவர்களின் துன்ப நிலையை விளக்கமாகக் கூறுகின்றார் வள்ளுவர். அப்படியே ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்கநெறி நிற்காதவர் நீடு வாழார்; அதாவது அழிவர். இறைவன் பொருள்சேர் புகழ்புரியார் மாட்டு இருள்சேர் இருவினையும் சேரும்; வேண்டுதல் வேண்டாமையிலானடி சேராதார்க்கு யாண்டும் இடும்பையுண்டு; மலர்மிசையேகினான் மாணடி சேராதார் நிலமிசை நீடு வாழார்; அதாவது அழிவர்; என்னும் கருத்துகளையும் பெறும்படியாக வள்ளுவர் வைத்திருப்பது ஆழ்ந்து நோக்கத் தக்கது.

நீடு வாழ்வளிக்கும் பொய்தீர் ஒழுக்கநெறியை மக்களுக்கு அளிக்கவே தனக்குவமையில்லாக் கடவுள் தனக்குரிய எல்லாவற்றையும் நீத்து மனிதனாகி, அவனுடைய அற்றத்தைத் தான் ஏற்றுப் பொறிவாயில் ஐந்தவித்து, மனிதனுக்கு எல்லாக் குணச் சிறப்புகளையும் வெளிப்படுத்தியும், மனிதன் அதை ஏறெடுத்தும் பாராது தட்டிக் கழித்திருப்பானானால், அவன் முடிவு என்னாகும்? அம் முடிவையே கடவுள் வாழ்த்துச் செய்யுளில் மேற்கண்டவாறு வரிசையாக அமைத்துள்ளார்.

'வேண்டுதல் வேண்டாமையிலான்,' என இறைவன் கூறப் பெற்றிருப்பது ஆழ்ந்து நோக்கத்தக்கது. விருப்பு வெறுப்பற்றவன் என்னும் நிலையே அது. அதுவே நீதிபதியின் நிலை. இறைவனைப் பெரும்நீதிபதியாகக் காட்டுகின்றார் எனலாம். இருள்சேர் இருவினையிலிருந்து விடுதலையை ஏற்படுத்தி வைத்திருந்தும், அதை ஏற்றுக்கொள்ள மறுக்கின்றவர்கள் நீதியின்படி தண்டனையைப் பெறுவது இயல்புதானே? தண்டனை கொடுப்பதும் முறைதானே? அந்நேரத்தில் அந்நீதிபதியின் முகத்தில் கோபக்குறி காணுவதும்

---

24. திருக்குறள், 10
25. ,, 9.
26. ,, 8.
27. ,, 7.

இயல்புதானே? ஆகவே, 'வருங் கோபத்திற்குத் தப்பிக்கொள் ளுங்கள்' என்று மக்களுக்கு அமைதியாக அறிவுறுத்துவதுபோன்று, திருவள்ளுவர் தம் திருக்குறளை அமைத்துள்ளார் எனலாம்.

''குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது''[28]

இக்கருத்தினையே திருமுழுக்கு முனிவராகிய அருளப்பர் என் பார்.

''வரப்போகும் சினத்துக்குத் தப்பித்துக் கொள்ள
உங்களுக்குச் சொல்லிக் கொடுத்தவன் யார்?

எனவே, மனந்திரும்பியவர்க் கேற்ற செயலைச்
செய்து காட்டுங்கள்....

ஏற்கனவே அடிமரத்தில் கோடாரி வைத்தாயிற்று.
நற்கனி கொடாத மரமெல்லாம் வெட்டுண்டு
தீயில் போடப்படும்''[29]

எனக் கூறுகின்றார். மேலும், ஐந்தவித்தானாகிய கிறித்து, நியாயாதிபதியாக வெளிப்படுங்கால், நடைபெறும் நிகழ்ச்சியை விவரிக்கும் வேதாகமப் பகுதி கீழ்க்கண்டவாறும் அமைந்துள்ளது.

''அந்த மலைகளையும் பாறைகளையும் நோக்கி,
அவர்கள் 'எங்கள்மேல் விழுந்து அரியணைமேல்
வீற்றிருப்பவரின்
முகத்தினின்றும் செம்மறி (ஐந்தவித்தான்) யின் சினத்
தினின்றும் எங்களை மறைத்துக்கொள்ளுங்கள். ஏனென்னில்
அவருடைய சினம் வெளிப்படும் பெருநாள் வந்துவிட்டது.
அதை எதிர்த்து நிற்பவன் யார்' என்று
சொன்னார்கள்.''[30]

---

*28, திருக்குறள். 29.*

*29. மத். 3:7-10.*

*30. திருவெளிப்பாடு, 6:16-17.*

'வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை இல,' 'வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர் வைத்தூறு போலக் கெடும்' என்பன குணமென்னும் குன்றேறி நின்றாராக விளங்கும் உருவாகிய நீத்தாரின் வெகுளியில் இருந்து, தன்னைக் காத்துக்கொள்வதற்கு வாழும்பொழுதே செய்யவேண்டியதைக் கூறும் அறிவுரையாக விளங்குகின்றன.

தமிழ்நாட்டில் தோன்றிய சைவம், பிற்காலத்தில் வட நாட்டவர்களால் மேற்கொள்ளப்பட்ட வரலாற்றையும்,முதலில் தோன்றிய சைவசித்தாந்த சாத்திரங்களாகிய திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞானபோதம் ஆகியவைகளையும் அவைகளுக்குப் பின்னர் விளக்க நூல்களாக எழுந்த சாத்திரங்களையும் அவற்றின் தன்மைகளையும் முன்னர்ப் பார்த்தோம். திருவுந்தியாரும் சிவஞான போதமுமாகிய இவ்விரு நூல்கள்மட்டுமே மூல நூல்களாக விளங்க மற்றவை யாவும் இவைகளை விளக்குவதற்கு எழுந்த விளக்க நூல்களாகவே அமைந்துள்ளமையும் பார்த்தோம். பின்னர் எழுந்த விளக்க நூல்களுக்கும், அவற்றின் காலத்திற்குப் பின்னர் வந்தவர்கள் முரண்பட்ட முறையில் பொருள் விளக்கம் கொடுத்து, அவ் விளக்கங்களே சித்தாந்த சாத்திர உண்மைகள் என்னும் நம்பிக்கையை ஏற்படுத்தியுள்ளனர்.

இறைவன் குருவாக வந்த தன்மையைத் திருவுந்தியாரும் சிவஞான போதமும் தெளிவாகக் கூறுகின்றன. பின்னர் வந்தவர்கள் இறைவன் அருள் உருவோடு மாயத் தோற்றத்தைக் கொண்டு, குரு வடிவில் காட்சியளிக்கின்றானேயன்றி, உலகில் நம்மைப்போல ஒரு மனிதனாகப் பிறந்து, உருவின் தன்மையை வெளிக் காட்டியிருத்தல் இயலாது என்னும் மாற்றுக் கருத்தை எழுப்பி வெளியிடலாயினர். இன்றும் சைவசித்தாந்த அன்பர்களின் உள்ளங்களில் அம்மாற்றுக் கருத்தே இடம் பெற்றிருக்கின்றது. ஆனால், சித்தாந்த சாத்திரங்களின் விளக்கங்களில் பெரும்பகுதியை எழுதிய உமாபதி சிவாசாரியார்,

> ''அருளுரு என்ற பொருளினை ஆயின்
> மாயா உருவினன் மாயா உருவினை
> ஏயான் ஏய்ந்தவர் எம்ம னோரே''[31]

எனவும்,

---

*31. சங்கற்ப நிராகரணம், சைவவாதி நிராகரணம், 25-27.*

"இறவாத இன்பத் தெமைஇருத்த வேண்டிப்
பிறவா முதல்வன் பிறந்தான்"[32]

எனவும் இறைவன் மனிதனாக இப்பூவுலகில் நம்மைப்போல் பிறந்த தன்மையைத் தெள்ளத்தெளிவாக விளக்கிக் காட்டியுள்ளார். பின்னர் வந்தவர்கள் இவ்விளக்கத்தையும் மறைப்பதற்குத் திட்டமிட்ட முயற்சி செய்துள்ளனர். இதன் விளைவாகவே சந்தான குரவர்களை நால்வராகக் கூறும் கருத்தும், நால்வரில் ஒருவராக மறைஞான சம்பந்தரை இணைத்தமையுமாகும்.

திருமறையை அருளி இறைஞானத்தை உலகோருடன் சம்பந்தப்படுத்திக் காட்டும்படியாக, உலகில் இறைவன் குருவாகப் பிறந்து வளர்ந்த தன்மையை விளக்குவதற்கு 'மறைஞான சம்பந்தர்' என்ற பெயரால் உமாபதி சிவாசாரியார் இறைமகனைக் குறிக்கின்றார். அத்துடன் 'இறவா இன்பத்து எமை இருத்தல் வேண்டிப் பிறவா முதல்வன் பிறந்தான்' என்று தம்முடைய குரு இறவா இன்பத்து முதல்வனே என விளக்கமாகத் தெளிவு படுத்தியும் உள்ளார்.

பின்னர் வந்தவர்களோ சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனையும் எழுதிய,

(1) திருவியலூர் உய்யவந்த தேவர்.

(2) திருக்கடவூர் உய்யவந்த தேவர்.

(3) மெய்கண்டார்.

(4) அருள்நந்தி சிவாச்சாரியார்.

(5) மனவாசங்கடந்தார்.

(6) உமாபதி சிவாச்சாரியார்.

ஆகிய அறுவரில், முதல் இருவரையும் ஐந்தாமவரையும் நீக்கிவிட்டு மீதி மூவரை மட்டும் தனியே பிரித்து, எந்த நூலும் எழுதாதவரும், உமாபதி சிவாச்சாரியாரால் மனிதனாக வந்த இறைவனாகச் சொல்லப்படும் மறை ஞான சம்பந்தரைச் சந்தான குரவருள் ஒருவராகச் சேர்த்திருப்பது, பிறவா முதல்வன் பிறந்த தன்மையை மறுப்பதற்கும் மறைப்பதற்குமே எடுத்துக் கொண்ட முயற்சியாகும்.

---

32. போற்றிப்ப.'. றொடை, 69.

சமயக்குரவர் நால்வரும் பாடல்கள் பாடியவர்கள். சந்தான குரவர் எனக் கூறப்படுகின்ற நால்வரில் மூவரே பாடல் எழுதிய வர்கள். ஒழுங்குப்படி சந்தானக் குரவர்களில் இணைக்கப்பட்டிருக்க வேண்டிய எஞ்சிய மூவரும் தள்ளப்பட்டதற்கான காரணமும் இல்லை. ஒரு நூலும் எழுதாத 'இறவா இன்பத்து முதல்வன்' எனப்பட்ட மறைஞான சம்பந்தர் சேர்க்கப்பட்டமைக்குப் பின்னர் வந்தவர்களின் மாறுபட்ட உணர்வேயன்றி வேறு காரணம் எதுவும் இல்லை.

தோமா வழியாகத் தமிழகத்திற்குக் கொடுக்கப்பட்ட நற் செய்தி, பிற்காலத்தில் வேற்று மக்களால் ஒடுக்கப்பட்டு—மறைக் கப்பட்டு—திரிக்கப்பட்டுப் பலவித மாற்றங்களுக்கு உள்ளாக்கப் பட்டது என்பதை இது புலப்படுத்துகின்றது.

பதினான்கு சித்தாந்த சாத்திரங்களில் முதல் சாத்திரமான திருவுந்தியார், இறைவன் குருவாக உலகில் பிறந்ததை,

''அகளமாய் யாரும் அறிவரி தப்பொருள்
சகளமாய் வந்ததென் றுந்தீபற
தானாகத் தந்ததென் றுந்தீபற''[33]

என இறைவன் தன்னைத் தானாகத் தந்ததைக் கூறுகின்றது. அவர் இந்த உலகில் மனிதனாகப் பிறந்து, சாவாகிய கண்டத்தை ஏற்று, மீட்பாகிய கருமத்தை முடித்து விட்ட காரணத்தால், திரும்ப வந்து மறுபடியும் பிறக்க வேண்டும் என்னும் அவசியம் இல்லை. இறைவன் பல அவதாரங்களை எடுத்துத் தீமையை அழிக்கின்றான் என்று கூறுவது தவறு. ஒரே முறையில் உலக மீட்பிற்கான காரியத்தைச் செய்து விட்டார் என்பதால், இனி இறைவன் உலகில் பிறக்கப் போவதும் இல்லை இறக்கப் போவதும் இல்லை என்பதை,

''கண்டத்தைக் கொண்டு கருமம் முடித்தவர்
பிண்டத்தில் வாராரென் றுந்தீபற
பிறப்பிறப் பில்லையென் றுந்தீபற''[34]

எனத் திருவுந்தியார் கூறுகின்றது.

---

33. திருவுந்தியார், 1.

34. திருவுந்தியார், 3.

உலகில் துன்பங்களை ஏற்றுத் தவம் செய்யும் தவ முனிவர்களின் தவங்களில் எல்லாம், மிக உயர்ந்த தவம் இறைவனுடையதாகும்.

தன்னுயிர் தானறப் பெறுதலாகிய தவங்களில், தன் உயிரைச் சிலுவையின் சித்திரவதைக்கு ஒப்புக் கொடுத்துத் துன்பங்களின் உச்ச நிலையைத் தாங்கிக் கொண்ட அவருடைய தவம், எல்லாத் தவங்களிலும் தலைமையானதாகும். பாவமாகிய இருள் நிறைந்த மூலையிலிருந்து மீட்பாகிய ஒளி நிறைந்த முற்றத்திற்குக் கொண்டு வந்துவிட்டவராகிய அவரே தவத்தில் தலைவராகின்றார் என்பதை,

''மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியரென் றுந்தீபற
தவத்தில் தலைவரென் றுந்தீபற''[35]

என்று திருவுந்தியார் கூறுகின்றது.

குருவாக வந்த இறைவன், சிலுவைத் தவத்தில் நிலைநின்ற போது, தன்னைச் சிலுவையில் அடித்த மக்களுக்காக, ''தந்தையே இவர்களை மன்னியும்; தாங்கள் செய்வது இன்னதென்று அறியாதிருக்கிறார்களே'' என்று அவர்களுக்காக வேண்டிக் கொண்டதுடன், அவருக்கு அருகில் சிலுவையில் அறையப்பட்ட கள்வன் ஒருவன் அவரிடத்தில் வேண்டிக் கொண்டதற்கிணங்க[36] ''இன்று என்னுடனே மேலுலக இல்லத்தில் இருப்பாய்''[37] என்று கூறி அவனுக்கு வீட்டை அருளிய அவரோடு சேருங்கால், ஒளியையுடைய வீட்டை எளிதாகப் பெறலாம் என்பதை,

''கள்ளரோ டில்ல முடையார் கலந்திடில்
வெள்ள வெளியாமென் றுந்தீபற
வீடும் எளிதாமென் றுந்தீபற''[38]

எனத் திருவுந்தியார் கூறுகின்றது. அந்தக் கள்வனுக்கு மட்டுமல்லாது, ஆணவ மலமாகிய இருளிலே ஆழ்ந்திருக்கும் வையகம்

---

*35. திருவுந்தியார், 12.*

*36. லூக். 23:42*

*37. லூக். 23:43*

*38. திருவுந்தியார்-23*

முழுவதையும் மீட்டு, அவர்கள் உய்யும் படியாக இந்த உலகில் குருவாக வந்தவருடைய திருவுரைகளை உணர்ந்தவர்களே உண்மை உணர்ந்தவர்கள் என்பதை,

''வைய முழுதும் மலக்கயங் கண்டிடும்
உய்யவந் தானுரை யுந்தீபற
உண்மை யுணர்ந்தாரென் றுந்தீபற''[39]

எனத் திருவுந்தியார் கூறுகிறது. இவ்வாறு குருவாக உலகில் பிறந்து வாழ்ந்து, ஆணவ மலத்திலிருந்து உலக மக்களுக்கு விடுதலையைத் தேடித் தந்துள்ள இறைவனாகிய வித்திலிருந்து முளைத்தெழுந்த முளையாக விளங்கும் அருள் குருவை அறியாது கைவிட்டு, முளை தோன்றுவதற்குக் காரணமாகிய வித்தினை மட்டுமே (இறைவனை) தேடி முளையை (குருவை) கைவிட்வர்கள், பித்தர்களாக விளங்குவதுடன் அவர்கள் பெறக் கூடியது இவ்வுலகில் ஏதும் இல்லையென்பதை,

''வித்தினைத் தேடி முளையைக்கை விட்டவர்
பித்தேறி னார்களென் றுந்தீபற
பெறுவதிங் கென்பெணே யுந்தீபற[40]

எனத் திருவுந்தியார் கூறுகிறது.

இறைவனோடு மகிழும் முக்தி நிலையில் தோன்றிய முதல் கொடியான ஆதாமால் ஏற்பட்ட, மோகக் கொடியாகிய பாவத்தின் காரணமாக உலகில் பழுத்த தீமையை, அருளாகிய கத்திகொண்டு மோகக் கொடியை அறுத்து, அதில் திரும்பவும் முக்திப் பழத்தைப் பழுக்க வைக்குமாறு, ஒப்பற்ற கொடியாகிய இறைக்குமரன் இவ் வுலகில் தோன்றிய தன்மையை,

''முத்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்
தத்தி பழுத்த தருளென்னுங் - கத்தியினால்
மோகக் கொடியறுக்க முத்திப் பழம்பழுக்கும்
ஏகக் கொடியெழுங்காண் இன்று''[41]

எனத் திருக்களிற்றுப்படியார் கூறுகிறது.

---

39. திருவுந்தியார், 45.
40. ,, 28.
41. திருக்களிற்றுப்படியார், 93.

இறைவன் குருவாக வந்து, சிலுவைத் தவத்தினில் உலக மக்களுக்கு உணர்த்தி, மனிதரை மீட்டுக்கொண்ட தவத்தின் தலைவனான தன்மையை,

> ''ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
> தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்டு
> அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே''[42]

எனச் சிவஞானபோதம் கூறுகிறது.

## 4. தவத்தினில் உணர்த்தல்

உயிர்களுக்குத் தாமாக இறைவனை உணர்ந்துகொள்ளும் ஆற்றல் இல்லை என்பதையும், இறைவனே உயிர்களுக்குத் தன்னை உணர்த்தும் ஆற்றல் பெற்றவன் என்பதையும், 'காந்தங் கண்ட பசாசத் தவையே' (5) என்னும் சிவஞானபோதத் தொடர் விளக்குகின்றது. அவன், அவள், அது எனுமவை மூவினைமையின் தோற்றுவிக்கப்பட்டு, முக்தி நிலையிலிருந்தன. பின்னர் மோகக் கொடி எழுந்த காரணத்தால், ஒடுங்கி மலத்துளதாயின. அதன் காரணமாக மனிதர்களுக்குப் பிறப்பிலேயே பிறவிப்பெருங்கடல், பிற வாழி ஆகிய இருள்சேர் இருவினைகள் இணையலாயின.

இந்த இருள்சேர் இருவினைகளையும் நீக்குவதற்கு, இறைவன் சிலுவைத் தவமாகிய நல்வினையால், பொறிவாயில் ஐந்தவித்து ஈட்டியுள்ள 'இறைவன் பொருளே' நீடுவாழ்வு ஆகும்.

மனிதன் பிறக்கும் பொழுதே அவனைத் தொடரும் தீவினையி லிருந்து, இறைவன் பொறிவாயில் ஐந்தவித்தலாகிய தவத்தினால், ஈட்டிய 'இறைவன் பொருளை' ஈவாக ஈந்து, மனிதருக்கு நீடு வாழ்வைக் கொடுத்துள்ளான்.

இதனால் மனிதனைப் பிறப்பிலேயே தொடர்ந்து வருகின்ற தீவினையாகிய இருள்சேர் இருவினை, இறைவனுடைய பொறிவாயில் ஐந்தவித்த நல்வினையின் காரணமாக நீக்கப்படு கின்றது. மனிதனுடைய தீவினை இறைவனுடைய நல்வினையால் நீக்கப்படும் இந்நிகழ்ச்சி இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்தினி பாதம் என விளக்கப்படுகிறது.

---

42. சிவஞானபோதம், 8.

இருவினை ஒப்பாவதும் மலபரிபாகம் நடைபெறுதலும் சத்தினி பாதம் சேருதலும் ஆகிய மூன்றும் தொடர்ந்து நடைபெறுகின்ற நிகழ்ச்சிகள் ஆகும்.

'அவன் அருளாலே அவன் தாள் வணங்கி' என்பதில் இறைவனை வணங்குவதற்கும் அவன் அருளே காரணமாய்க் கூறப்படுகின்றது.

இயல்பிலேயே களிம்பு சேரும் தன்மையுடைய செம்பிலிருந்து அக்களிம்பை நீக்குவதற்கு, இயல்பில் களிம்பே சேராத பசும் பொன்னானது, தான் தீயில் உருகிச் செம்பைத் தன்னோடு இணைத்துச் செம்புடன் இரண்டறக் கலந்து செம்பில் அதன்பின் களிம்பு சேராவண்ணம் காத்தல் போல, பாவமற்ற இறைவனும் பாவமுள்ள மனிதனை மீட்கப் பொறிவாயில் ஐந்தவித்தலாகிய சிலுவைத் தவத்தைச் செய்து, 'தவத்தில் தலைவனாக' விளங்கி மனிதரை மீட்டுள்ளான்.[43]

இதையே மெய்கண்டாரும் ''தம்முதல் குருவுமாய் தவத்தினில் உணர்த்த''[44] எனக் கூறியுள்ளார்.

குருவாக வந்த இறைவனுடைய வரலாற்று உணர்வு பிற் காலத்தில் மறைக்கப்பட்ட காரணத்தால், தவத்தில் தலைவனாகிய முதல்வனின் தவம் அறியப்படா நிலையில், ஆன்மாவின் தவமாகப் பொருள் கூறப்படும் நிலையை அது அடைந்தது. தாமாக இறைவனை உணர இயலா நிலையில் இரும்புபோல் கிடக்கும் ஆன்மா, எவ்வாறு தவம் செய்தல் இயலும்? 'தம்முதல் குருவுமாய் தவத்தினில் உணர்த்த' என்பதற்கு விளக்கம் கொடுத்த உரை யாசிரியர்கள், இறைவனுடைய தவம் அது என அறிய இயலா நிலையில், 'ஆன்மாவின் தவம்' எனப் பொருள் கூறிச் சென்றுள் ளனர். அப்படிப்பட்ட எண்ணம் தோன்றிய காலை, உமாபதி சிவாசாரியார் தம்முடைய 'சங்கற்ப நிராகரணம்' என்னும் நூலில், அத்தகைய எண்ணமுடைய சைவ வாதியை மறுத்துக் கீழ்க்காணும் வினாக்களை எழுப்புகின்றார்:-

---

43. சிவஞானசித்தி சுபக்கம் 11-5

44. சிவஞான போதம், சூத்திரம் 8.

''சத்தினி பாதமோ தகுமல பாகமோ
உய்த்த காரண காரியம் ஓதுக
பாகம் காரண மாகில் மற்றது
காலா வதியிற் காயா வதியில்
மேலா மென்னும் வினையுறும் அவதியில்
துயரென உயிர்க்குத் தோன்றிடும் அவதியில்
நயமிகும் இறையவன் நல்கிடும் அவதியில்
ஏதிற் கூடும் ஓதுக இருவினை
ஒத்த எல்லையில் வைத்தனர் என்னில்
அருவினை தூக்க உருவினை நில்லாது
ஒருவினை புரிகால் இருவினை ஆகா
ஒப்புறு மாறு செப்புக.''[45]

இறைவன் சிலுவைத் தவத்தில் சிந்திய செந்நீரால் மனிதனுடைய பாவம் கழுவப்படுகிறது. செந்நீரைச் சிந்தும் திருத்தாள்கள் 'செம்மலர் நோன்றாள்'[46] எனக் குறிக்கப்படுவதுடன், அம்மலம் கழுவிய அன்பர் எனவும் இறைவர் போற்றப்படுகின்றார்.

''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே''[47]

என்னும் திருமூலர் வாக்கின் வழி, அன்பு வேறு சிவம் வேறு அன்று என்பது தெளிவுறுத்தப்படுகிறது.

அன்பின் மறு பெயரே சிவம் என்பர்.

''அன்பேயென் அன்பேயென் றன்பால் அழுதரற்றி
அன்பேயன் பாக அறிவழியும் - அன்பன்றித்
தீர்த்தந் தியானம் சிவார்ச்சனைகள் செய்யுமவை
சாற்றும் பழமன்றே தான்''[48]

---

45. சங்கற்ப நிராகரணம், பாடல் 20, வரி 13-24.
46. சிவஞானபோதம், சூத். 12.
47. திருமூலர் திருமந்திரம், 257.
48. திருக்களிற்றுப்படியார், 55.

என்னும் திருக்களிற்றுப்படியார் வாக்கின்படி, அன்பால் அழுது அரற்றல் சிறப்பிக்கப்படுகிறது. அன்புக்கும் அழுகைக்கும் இணைப்புக் கூறுவானேன் என்கிற நோக்கில் நாம் காணும்போது, 'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர் புண்கணீர் பூசல் தரும்' என்று திருக்குறள் விளக்கம் தருகிறது. 'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் இலக்கணத்திற்கு இலக்கியமாக, இயேசு கிறித்துவின் வாழ்க்கை அமைந்திருப்பதாகத் திரு. வி. க. கூறுகின்றார்.

இயேசு கிறித்துவின் சிலுவைப்பாடாகிய வரலாறும், அன்பின் உருவான சிவபெருமான் நஞ்சுண்டதாகிய புராண விளக்கமும், இறைவனின் அன்பை, அன்பால் ஏற்றுக்கொள்ளும் துன்பத்தை-தவத்தை வெளிப்படுத்திக் காட்டும் செயல்களாகும். இயேசுகிறித்து ஏன் சிலுவையில் அடிபட வேண்டும்? சிவன் ஏன் நஞ்சுண்ண வேண்டும் என்னும் வினாக்கள் இறைவனின் தவத்தை உணர வியலாதவர்களின் வினாக்களாக அமைந்துள்ளன.

'செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பர்'[49]

தவம் அவ்வாறு விளங்குகின்றது.

'மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு' (30), 'தன்னுயிர் தான்அறப் பெறுதலாகிய'(258),'குணமென்னும் குன்றேறி நின்ற' (29), 'அன்பின் வழியது உயிர்நிலை' (80), 'ஐந்தவித்தான் ஆற்றல் எனப்படும் கூற்றம் குதித்தலாகிய சாவை வெல்லுதல்' (269), 'உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காத்து' (24), 'ஐந்தின் வகை தெரிந்து' (27), 'பொறிவாயில் ஐந்தவித்த' (6), தவத்தினால் 'பொய்தீர் ஒழுக்கநெறி'யாகிய (6), அன்பு நெறியாம் சைவத்தை உலகிற்குக் காட்டியுள்ளார். அதனைப் பின்பற்றும் மக்கள் 'வரன் என்னும் வைப்பிற்கோர் வித்தாகிய' (24) அவனை உள்ளத்தே உணர்ந்துகொண்ட காரணத்தால், நிலையான புகழுடம்புகொண்டு விளங்கும் தன்மையடைகின்றனர். அந்த வித்தை தம்மகத்தே கொண்டவர்களுக்கல்லாமல் மற்றவர்களுக்கு என்றும் நிலைநிற்கும் புகழுடம்பு ஏற்படுவதில்லை என்பதை "நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும் வித்தகர்க் கல்லால் அரிது" (235) என வள்ளுவர் கூறியுள்ளார்.

---

49. சிவஞானபோதம், 12.

அன்பாகிய சிவம் ஐம்புல மனிதனாகி, குருவாக இவ்வுலகிற்கு வந்து, சிலுவைப் பொறிவாயில் ஐந்தவித்த தன்மையைத் 'தம் முதல்குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த'[50] எனவும் அதை உணரும் தன்மை ஆன்மாவிற்கு உண்டு என்பதை 'இருதிறன் அறிவுள்ள ஆன்மா,'[51] 'மாயா எந்திர தனுவினுள் உணர்த்த உணர்கின்றது'[52] எனவும் மெய்கண்டார் கூறுகின்றார். தவத்தினில் உணர்த்தாவிட்டால், ஆன்மா இறைவனின் அன்பை உணர இயலாது என்பது இதன் வழி பெறப்படுகின்றது.

ஆகவே, சிலுவையில் இறைமகனாகக் கருதப்பட்ட இயேசு கிறித்து பட்டபாடுகளாகிய வரலாற்று நிகழ்ச்சி, தோமா வழியாக இந்தியாவிற்கு வந்து, திருக்குறள் போன்ற இலக்கியங்களிலும், சைவசித்தாந்தம் போன்ற சாத்திரங்களிலும் இடம் பெறலாயின என்பதில் ஐயம் இல்லை.

தவத்தில் தலைவராகிய அவருடைய சிலுவைப் பொறிவாயில் ஐந்தவித்தலாகிய பலி, அதுவரை நடைபெற்ற பலிகளுக்கெல்லாம் நிறைவேற்றமாக விளங்கி, அதற்குப் பின்னர் பலியைத் தேவையற்றதாக்கிவிட்ட காரணத்தால், 'இறப்பில் தவம்' என அது பெயர்பெற்றது என்பதை,

''பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்
இசைத்து வருவினையில் இன்பம்-- இசைத்த
இருவினை ஒப்பில் இறப்பில் தவத்தான்
மருவுவனாம் ஞானத்தை வந்து''[53]

என்று சிவஞானபோத வெண்பா கூறுகிறது.

## 5. வீட்பு

முக்தி முதற்கொடியில் மோகக் கொடி படர்ந்த காரணத்தால் அத்தி பழுத்தது. அதனால், மனித சமுதாயம் முழுவதும் பிறப்பில் தீமையுடையதாய்ச் சகசமலத்தில் ஆழ்ந்துள்ளது. தன்னைத் தானே விடுவித்துக்கொள்ளும் ஆற்றல் அதற்கில்லை.

---

50. சிவஞானபோதம். 8
51. சிவஞானபோதம். 7
52. சிவஞானபோதம். 3
53. சிவஞானபோதம் உதாரண வெண்பா, 46.

''நன்மை செய்யும் விருப்பம் என்னிடம் இல்லாமல் இல்லை; அதைச் செய்யத்தான் முடியவில்லை; நான் விரும்பும் நன்மையைச் செய்வதில்லை; விரும்பாத தீமையையே செய்கிறேன். அப்படி நான் எதை விரும்பவில்லையோ அதையே செய்கிறேன் என்றால், அதைச் செய்பவன் நானல்லேன்; என்னில் குடிகொண்டிருக்கும் பாவமே அதைச் செய்கிறது என்பது தெளிவு''[54] என இயல்பான மனிதனுடைய நிலையை விவிலியம் படம் பிடித்துக் காட்டுகிறது.

இந்த நிலையிலிருந்து விடுதலைபெற என்ன செய்யவேண்டும் என்னும் வினாவுக்கு விவிலியமும் திருக்குறளும் சைவசித்தாந்தமும், தன் முயற்சியினால் மட்டுமே மனிதன் எதையும் செய்துகொள்ள இயலாதெனப் பதில் கொடுக்கிறது.

தன் முயற்சி தேவையில்லையா என்னும் வினாவுக்குத் தன் முயற்சியினால் மட்டும் மீட்பு கிடைக்காது. இறைவனுடைய அருள் இருந்தால் மட்டுமே ஒருவன் விடுதலையைப் பெற இயலும் என்னும் கருத்தோட்டமே மூன்றிலும் சிறந்து நிற்கின்றது.

''என்னை அனுப்பிய தந்தை ஈர்த்தாலொழிய எவனும் என்னிடம் வர இயலாது''[55] என்பது குமரக் கடவுளாகிய இயேசுவின் திருவாக்கு.

'வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது' -377

என்பது வள்ளுவர் வாக்கு.

'உணர்த்த உணர்தலின்'[56] என்பது மெய்கண்டாரின் திருவாக்கு. ''அவனருளாலே அவன்றாள் வணங்கி''[57] என்பது சைவ சமயக் குரவரான மாணிக்கவாசகரின் திருவாக்கு.

மனிதன் தன்னுடைய தீமையிலிருந்து, தன்னைத் தானே விடுவித்துக்கொள்ள இயலா நிலையில், கடவுள் குருவாக வந்து

---

54 உரோமர். *7 : 18-20.*

55. அரு. 6 : **44.**

56. சிவஞானபோதம், *3.*

57. திருவாசகம், சிவபுராணம், வரி. *18.*

அவனை விடுவித்த தன்மையையே விவிலியம், திருக்குறள், சைவசித்தாந்தம் மூன்றும் கூறுகின்றன. மனிதன் தன்னால் ஏதும் செய்ய இயலாது என்று உணரும் வாய்ப்பைப் பெறும் போது, அவனில் இறைவன் செயல் நடைபெறுகின்றது.

அந்த மீட்பிற்காகவே இயேசு கிறித்து சிலுவைப் பொறியில் தம்மையே தந்துள்ளார். இதனை,

"நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்நாதன்
தன்செயல் தானேயென் றுந்தீபற
தன்னையே தந்தானென் றுந்தீபற"[58]

எனத் திருவுந்தியார் கூறுகின்றது.

தன்னையே தந்ததாகிய நாதன் தன் செயலே மீட்பு ஆகும். தன்னைத் தந்ததாகிய அவன் செயலின்றி ஒருவரும் மீட்புப் பெறல் இயலாது.

தன்னைத் தந்த நாதனுடைய அச்செயலை யாரால் உணர்ந்து கொள்ள இயலும்? அவருடைய அருள் பெற்றவர்களுக்கே உணர்ந்து கொள்ள இயலும்.

உலகிலுள்ள மற்றவர்கள் செய்யும் நன்மைகள் யாவும், சிறிது காலம் நன்மையைக் கொடுக்கக் கூடியவைகளேயாகும். தன்னைத் தந்ததாகிய நாதன் செயலோ, மனிதர்களுக்கு முக்காலமும் நன்மையைத் தரக்கூடியது ஆகும். ஆகவே, மற்ற வருடைய நன்மை நன்றி எனவும், தன்னைத் தந்த நாதனுடைய நன்மை முக்காலத்துக்கும் உரிய வினைத் தொகையாகச் செய்ந் நன்றி எனவும் குறிக்கப்படுகின்றது. மற்றவர்கள் நன்மையை மறந்தாலும் மறக்கலாம். ஆனால், தன்னைத் தந்த நாதனுடைய ஐந்தவித்தலாகிய செய்ந்நன்றியைக் கொன்றவர்களுக்கு, உய்வாகிய மீட்பு இல்லையென்பதை "எந்நன்றி கொன்றார்க்கும் உய் வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு" (110) என்னும் குறட்பா விளக்குகின்றது. இதே கருத்து, உலகம் தலைகீழாக மாறினும், ஒப்பற்ற இறைவன் குமரக் கடவுளாக வந்து செய்த நன்றியை மறந்தவர்களுக்கு உய்வே இல்லை என்பதை "நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன் செய்தி

58. திருவுந்தியார், 6.

கொன்றோர்க்கு உய்தியில்''[59] என்னும் புறப்பாட்டின் வழி விளக்கப்படுகின்றது.

குருவாக வந்த இறைவன் செய்த நன்றியை உணர்வதற்கு, ஒவ்வொருவருக்கும் இறைவனுடைய அருட் சக்தியின் (Holy Spirit) துணை வேண்டும்.

அருட்சக்தியின் துணையில்லாமல் ஒருவனும் இறைவனை உணர்தல் இயலாது; அவர் செய்த நன்றியை உணரவும் இயலாது.

இயேசு பெருமானின் மாணவர்கள், அருட்சக்தியாகிய பரிசுத்த ஆவியின் நிறைவைப் பெறும்வரை, அவர்கள் இயேசு கிறித்துவோடு உண்டு- உறங்கி வாழ்ந்த போதிலும், தங்களுடைய ஆன்ம மீட்பைப்பற்றி, முழுமையாகப் புரிந்து கொள்ளவில்லை. ஆனால், இயேசுபெருமானின் உயிர்த்தெழுதலுக்குப் பின்னர், அருட்சக்தியாகிய பரிசுத்தாவியின் நிறைவைப் பெற்றபோது, முழுவதும் வேறுபட்ட மனிதர்களாக - அருளின் ஆற்றல் பெற்றவர்களாக, வலிமையுடன் விளங்கினார்கள். விவிலியம், திருக்குறள், சைவம் மூன்றிலும் அருவமாக விளங்கும் இறைவன், மனித உருவில் தோன்றிய குமரக் கடவுளாகிய குரு, மனிதர் உள்ளங்களில் என்றும் செயல்படும் அருட்சக்தியாகிய - பரிசுத்த ஆவி ஆகிய மூன்றும் தந்தை, பரிசுத்த ஆவி, மகன்—கடவுள், வான், நீத்தார்—அப்பன், அருட்சக்தி, மகன் என்னும் மூன்று நிலைகளில் விளக்கப்படுகின்றார். மீட்பிற்கான ஆயத்தங்களைச் செய்தவர் தந்தை. மீட்பை நிறைவேற்றியவர் மகன். மீட்பைக் கொடுத்து மனிதனை மீட்டுக்கொள்கின்றவர் அருட்சக்தி.

ஆகவே, கடவுளின் இம்மூவொரு நிலையையும் சரியாகப் புரிந்து கொள்ளுதல் இன்றியமையாதது ஆகும். கடவுள் அருவமானவர் என்பதாலும், எல்லாவற்றையும் கடந்து நிற்பவர் என்பதாலும் அவரைப் புரிந்து கொள்வதில் அதிகக் கடினம் இல்லை. ஆனால், தந்தைக்கும் மகனுக்கும் இடையேயுள்ள பரிசுத்த ஆவியையும், கடவுளுக்கும் நீத்தாருக்கும் இடையேயுள்ள வானையும், அப்பனுக்கும் மகனுக்கும் இடையே உள்ள அருட்சக்தியையும் சரியாகப் புரிந்துகொள்வதில் சில இடர்ப்பாடுகள் உள்ளன.

---

59. *புற. 34.*

பரிசுத்த ஆவியை 'வான்' என வள்ளுவர் குறிப்பிடுகின்றார். வான் மாரியாகவும் மாரி, மாரி அம்மனாகவும் உருவகிக்கப்படும் பொழுது, பரிசுத்த ஆவி பெண்ணா ஆணா என்னும் ஐயங்கள் எழும்பி அம்மை, விஷ்ணு ஆகிய இருபால் விளக்கங்கள் பிற் காலத்தில் எழுந்தமையை முன்னர் அறிந்தோம்.

கிறித்தவத்தில் பரிசுத்த ஆவி ஆண் என்றோ பெண் என்றோ கொள்ளப்படாமல், ஆள் தன்மையுடையவர் என்று மட்டுமே கொள்ளப்படுகின்றார். தந்தையையும் மகனையும், அல்லது கடவுளையும் நீத்தாரையும்,எளிதாக விளங்கிக்கொள்ளுகின்ற அளவுக்கு ஆவியை விளங்கிக்கொள்வது கடினமேயாகும். ஆவியை முன்மாரி, பின்மாரி, மழை, தூறல், பனி இவைகளோடு ஒப்பிட்டு, விளக்கிக் காட்ட முற்படுகின்றது விவிலியம்.

> "அவர் மழையைப் போலவும், பூமியின்மேல் பெய்யும் முன்மாரி, பின்மாரியைப் போலவும் நம்மிடத்தில் வருவார்."[60]

> "நான் இசுரவேலுக்குப் பனியைப் போலிருப்பேன்"[61]

> "புல்லறுப்புண்ட வெளியின்மேல் பெய்யும் மழையைப் போலவும், பூமியை நனைக்கும் தூறலைப் போலவும் இறங்குவார்."[62]

மேலே கண்டபடி,விவிலியத்தில் உவமையாகச் சொல்லப்பட்டதோடு கீழ்க்காணுமாறு உருவமாகவும் விளக்கப்பட்டுள்ளது.

> "தாகமுள்ளவன்மேல் தண்ணீரையும், வறண்ட நிலத்தின் மேல்
> ஆறுகளையும் ஊற்றுவேன்; உன் சந்ததியின்மேல் என்
> ஆவியையும் உன் சந்தானத்தின்மேல் என் ஆசீர்வாதத் தையும்
> ஊற்றுவேன்.
> அதனால், அவர்கள் புல்லின் நடுவே நீர்க்கால்களின்
> ஓரத்திலுள்ள அலரிச்செடிகளைப்போல வளருவார்கள்"[63]

60. ஓசி, 6:3
61. ஓசி, 14:5
62. சங். 72:6
63. ஏசா. 44:3,4

மேலே கண்ட குறிப்பில் உருவகமும் பொருளும் இணைந்து வரு வதைக் காணலாம்.

உருவகமாக மட்டுமே விளக்கப்படுகின்ற இடங்களும் உண்டு.

> ''ஜீவதண்ணீர் ஊற்றாகிய என்னை விட்டுவிட்டார்கள்.''[64]

> ''அந்நாளிலே பாவத்தையும், அழுக்கையும் நீக்க
> தாவீதின் குடும்பத்தாருக்கும் எருசலேமின் குடி—
> களுக்கும் திறக்கப்பட்ட ஒரு ஊற்று உண்டா—
> யிருக்கும்.''[65]

> ''அந்நாளிலே ஜீவதண்ணீர்கள் எருசலேமிலிருந்து புறப் பட்டு,
> பாதி கிழக்குச் சமுத்திரத்துக்கும், பாதி மேற்குச்
> சமுத்திரத்திற்கும் போய், மாரிக் காலத்துக்கும்
> கோடைக் காலத்துக்கும் இருக்கும்.''[66]

> ''நான் தரும் தண்ணீரைக் குடிப்பவனோ, என்றுமே
> தாகங்கொள்ளான்; நான் அவனுக்கு அளிக்கும்
> தண்ணீரோ அவன் முடிவில்லா வாழ்வடைய அவனுக்குள்
> பொங்கியெழும் ஊற்றாகும்.''[67]

> ''யாரேனும் தாகமாயிருந்தால் என்னிடம் வரட்டும்;
> என்னில் விசுவாசங்கொள்பவன் குடிக்கட்டும்;
> மறைநூல் கூறுவதுபோல், அவனுடைய உள்ளத்திலிருந்து
> உயிருள்ள நீர் ஆறாய்ப் பெருக்கெடுத்து ஓடும்

என்றார். தம்மில் விசுவாசங்கொள்வோர் பெறப்போகும் ஆவி யானவரைக் குறித்து அவர் இவ்வாறு சொன்னார்.''[68]

---

64. எரோ. 2:13.
65. சகரி. 13:1
66. சகரி, 14:8.
67. அரு, 4:14.
68. அரு. 7:37-39.

''பெந்தே காஸ்தே என்னும் திருநாளின்போது, அவர்கள் எல்லோரும் ஒரே இடத்தில் கூடியிருந்தார்கள்; அப்பொழுது திடீரென, பெருங்காற்று வீசுவது போன்ற இரைச்சல் வானத்தினின்று உண்டாகி, அவர்கள் இருந்த வீடு முழுவதையும் நிரப்பிற்று; நெருப்புப் போன்ற நாவுகள் அவர்களுக்குத் தோன்றிப் பிளவுண்டு, ஒவ்வொருவர்மேலும் வந்து தங்கின. எல்லாரும் பரிசுத்த ஆவியால் நிரப்பப் பெற்று, ஆவியானவர் அருளியபடி, அயல் மொழிகளில் பேசத் தொடங்கினர்.''[69]

மேலே கண்ட குறிப்புகளிலிருந்து, ஆவியை விளக்குவதற்கு உவமையாகவோ உருவகமாகவோ நீர், மழை, பனி, ஊற்று, பெருங்காற்று, நெருப்பு இவைகள் விவிலியம் முழுவதும் பயன்படுத்தப்பட்டிருப்பதை நாம் அறியலாம். வள்ளுவரும் உருவக முறையில் வான் (11,20), மழை (12,15), விண் (13), புயல் (14), விசும்பின் துளி (16), எழிலி (17), வானம் (18,19) என்னும் சொற்களால் அருட்சக்தியாகிய ஆவியை விளக்கிக் காட்ட முற்படுகின்றனர்.

இறைவனடி சேராதார் பிறவிப் பெருங்கடலினை நீந்தார் எனவும், ஐந்தவித்தான் நெறி நின்றார் நீடுவாழ்வார் எனவும், அந்த நீடுவாழ்வை அளிக்கும் அமிழ்தமாக விளங்குவது பரிசுத்த ஆவியாகிய வான் ஆகும் எனவும் அறிய 'வானின்று உலகம் வழங்கி வருதலால் தான் அமிழ்தம் என்றுணரற் பாற்று' (11) என வள்ளுவரால் விளக்கிக் கூறப்படுகின்றது. நீடுவாழ்வளிக்கும் அமிழ்தம் வான் என்று கூறப்படுகின்ற காரணத்தால், அது வெறும் மழையைக் குறிப்பது அன்று. பரிசுத்த ஆவியின் பொழிவைக் குறிப்பது ஆகும். முடிவில்லா வாழ்வு[70] நீடுவாழ்வு (6) ஆகிய இரண்டும் ஒரு பொருளைக் குறிப்பனவே. இதைக் கொடுக்கும் அமிழ்தமாக விளங்குவது வான் எனத் திருக்குறளிலும் (16) தண்ணீர் என விவிலியத்திலும்[71] குறிக்கப்பட்டுள்ளமை ஒப்பு நோக்கத் தக்கது,

உயிரினும் ஓம்பப்படும் ஒழுக்கம், யார்யார்க்கும் நிலை நிற்பதற்குக் காரணம் வானே என்பது (20) அவ்வதிகாரத்தை முடித்துக் காட்டும் வள்ளுவரின் கருத்தாகும். உயிரினும் சிறந்த ஒழுக்கம் நிலை நிற்பதற்கு அடிப்படையாகும் வானை, உரை

---

69. அப். 2 : 1-4.

70. அரு. 4 : 14.

71. அரு. 4 : 14.

யாசிரியர்கள் வெறும் மழையாகக் கருதியதற்குக் காரணம், பாயிரத்தில் உள்ள கடவுள், வான், நீத்தார் ஆகிய வள்ளுவர் கூறுகின்ற இயல்புடைய மூவரை (11) அறிந்துகொள்ள இயலா நிலையே எனலாம்.

''கடவுள் வாழ்த்து அதிகாரத்துக்குப் பின், மழையைக் கடவுளாக உருவகித்து, அம்மழை உருவில் கடவுள் வாழ்த்தைத் தொடர்வது 'வான் சிறப்பு' என்னும் இவ்வதிகாரம்.

கடவுளது இன்ப வடிவின் = அன்புருவின் சின்னம் மழை.... இறை வாழ்த்து அதிகாரத்தில் கடவுளின் பண்பாற்றல்களையெல்லாம் தொகுத்துரைத்த வள்ளுவர், இந்த 'வான் சிறப்பு' அதிகாரத்தில் வெளிப்படையாக மழைச் சிறப்புமட்டுமே கூறுகின்றாரானாலும், உண்மையிலும் அவர் முதற்பொருள் மழையை வருணிப்பதன்று. கடவுளின் கருணையாற்றலை வகுத்துரைப்பதேயாகும்''[72] எனப் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் கூறுகின்றார்.

மனிதர்கள் மீட்படைவதற்கு எப்போதும் செயல்பட்டுக்கொண்டிருப்பது இறைவனுடைய அருட்சக்தியே ஆகும். அருட்சக்தியின்றேல் ஒருவரும் மீட்படைதல் இயலாது. முதல்வனாகிய இறைவனின் திருவருளால், காந்தத்தால் இழுக்கப்படும் இரும்பினையொத்து, ஆன்மாக்கள் செயல்படுகின்ற தன்மையை 'தமியருள் காந்தங்கண்ட பசாசத் தவையே'[73] எனச் சிவஞானபோதம் கூறுகின்றது.

மீட்கப்பட்டவர்கள், ''கிறித்துவோடு சிலுவையில் அறையப்பட்டிருக்கிறேன். இனி, வாழ்பவன் நானல்லன்; என்னில் வாழ்பவர் கிறித்துவே''[74] என்னும் நிலையை உணர்ந்து செயல்படுகின்ற காரணத்தால், அவர்களுடைய பழைய செயல்கள் மறைந்து, இறைவனின் திருப்பணி அவர்கள் மூலமாகச் செயல்படுகிறது என்பதையும், அவர்களுடைய பழைய இருள்சேர் இருவினைகளும் நீங்குகின்றன என்பதையும்,

---

72. *மணி விளக்கவுரை, கா. அப்பாத்துரை, பக். 387-390.*

73. *சிவஞானபோதம், 5.*

74. *கலாத். 2:20.*

"அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகன் ஆகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை இன்றே"[75]

என மெய்கண்டார் சிவஞானபோத சூத்திரத்தால் விளக்குகின்றார்.

மீட்கப்பட்ட ஆன்மாவின் செயல் ஒடுங்கி, இறைவனின் செயல் அவனில் பெருகுங்கால், இறைபணி செவ்வனே நடைபெறுகின்றன. ஆன்மா, 'சார்பு உணர்ந்து சார்புகெட ஒழுகி நோய் சார்தரா' நிலையை அடைகிறது. (359)

"உங்களுடைய முந்தின நடத்தையை விட்டுவிட்டுத் தீய இச்சைகளால் ஏமாந்து பாழ்பட்டுப் போகும் பழைய இயல்பைக் களைந்து விடுங்கள். உள்ளத்தின் ஆழத்தில் உங்களைப் புதுப்பித்துக் கொள்ளுங்கள். உண்மையால் ஏற்படும் நீதியிலும் புனிதத்திலும், கடவுள் சாயலாகப் படைக்கப்பட்ட புதிய இயல்பை அணிந்து கொள்ளுங்கள்"[76] என்று அப்படிப்பட்டவர்களை விவிலியம் வழி நடத்துகின்றது. இறைவன் பொருளாகிய மீட்பாலன்றி, ஒருவரின் தன் முயற்சியால் இதைச் செய்ய இயலாது. தன் முயற்சியினால் இதைக் கைக்கொள்ள முயன்று, பழைய பழக்கத்திலிருந்து விடுபட இயலாமல் தவிக்கும் ஆன்மாவைப் பார்த்து,

"பழக்கந் தவிரப் பழகுவ தன்றி
உழப்புவ தென்பெணே யுந்தீபற
ஒருபொரு ளாலேயென் றுந்தீபற"[77]

எனத் திருவுந்தியார் கூறுகின்றது.

இறைவனின் மீட்பைப் பெறுவதற்குத் தான் தகுதியற்றவன்; தான் செய்துள்ள பாவம் மிகக் கொடியது எனத் தயங்குகிறவர்களைப் பார்த்து விவிலியம் "இயேசுவின் இரத்தம் எல்லாப் பாவத்தினின்றும் நம்மைத் தூய்மைப் படுத்துகிறது"[78] என ஆறுதல் சொல்லித் தேற்றி அரவணைத்து மீட்பை அருள்கின்றது. இதையே சைவசித்தாந்தமும்,

---

75. சிவஞானபோதம், 10,

76. எபேசி. 4:22-24.

77. திருவுந்தியார், 2.

78. 1 அரு. 1:7.

''பாதகங்கள் செய்திடினும் கொலைகளவு கள்ளுப்
பயின்றிடினும் நெறியல்லா நெறிபயிற்றி வரினும்
சாதிநெறி தப்பிடினும் தவறுகள்வந் திடினும்
தனக்கெனஓர் செயலற்றுத் தான்அதுவாய் நிற்கில்
நாதன்இவன் உடல்உயிராய் உண்டுறங்கி நடந்து
நானாபோ கங்களையும் தானாகச் செய்து
பேதமற நின்றிவனைத் தானாக்கி விடுவன்
பெருகுசிவ போகமெனப் பேசுநெறி இதுவே''[79]

எனக் கூறுகின்றது.

பிறவிச் சுழற்சிக் கோட்பாட்டில் நம்பிக்கை உள்ளவர்களால், இதை ஏற்றுக்கொள்ள இயலாது. இறைவன் இந்த ஒரு பிறப்பிலேயே பாவங்களையெல்லாம் கழுவி, ஆன்மாவைத் தேற்றித் தன்னோடு இன்புறும் நிலையைக் கொடுக்கின்றார் எனவும், நீங்கள் நம்புகின்ற, வரும் பிறப்புகள் இனி இல்லை; அவை அறுபட்டுப் போயின எனவும் கூறியவுடன், பிறவிச் சுழற்சிக் கொள்கையாளரின் நிலை என்னவாகிறது என்பதைச் சைவ சித்தாந்தம் வியப்பு மேலிடக் கீழ்க்காணுமாறு கூறுகின்றது.

''சித்தாந்தத் தேசிவன்தன் திருக்கடைக்கண் சேர்த்திச்
செனனம்ஒன்றி லேசீவன் முத்தராக
வைத்தாண்டு மலங்கழுவி ஞான வாரி
மடுத்தானந் தம்பொழிந்து வரும்பிறப்பை யறுத்து
முத்தாந்தப் பாதமலர்க் கீழ்வைப்பன் என்று
மொழிந்திடவும் உலகர்எல்லாம் மூர்க்க ராகிப்
பித்தாந்தப் பெரும்பிதற்றுப் பிதற்றிப் பாவப்
பெருங்குழியில் வீழ்ந்திடுவர் இதுஎன்ன பிராந்தி''[80]

## 6. திருக்கூட்டம்.

இயேசு பெருமான் இவ்வுலகில் வாழ்ந்தபோது, பலர் அவரைப் பின்பற்றினர். அவர்களில் எழுபது பேர்களைத் தெரிந்து கொண்டார். அந்த எழுபது பேர்களிலும் பன்னிருவரை எப்போதும்

---

79. உண்மைநெறி விளக்கம், 6.

80. சிவஞான சித்தியார். 8-2-16.

தம்மோடு இருக்கும்படியாகச் சிறப்பாகத் தெரிந்து கொண்டார். அவரைப் பின்பற்றியவர்கள் பொதுவாக மாணவர்கள் (சீடர்கள்—disciples) என்றே அறியப்பட்டனர்.

யூத சமயத்தில் திருச்சட்டங்களை விளக்கி வந்த குரு (ரபீ) மாரிடம் கல்வி கற்றுவந்த மாணவர்கள், சீடர்கள் என்ற பெயரைப் பெற்றனர். குருவின் போதனையைப் கேட்பதுமட்டு மன்றித் தம் சிக்கல்களைத் தீர்த்துக் கொள்ளவும் மாணவர் அனுமதிக்கப்பட்டனர்.[81]

முழுக்கு முனிவர் யோவானுக்கும் மாணவர்கள் இருந்தனர்.[82]

பரிசேயரின் மாணவர்கள்[83] அக்காலத்தில் வாழ்ந்துள்ளனர். ஆகவே, மாணவர் என்பது, யாராவது ஒரு குருவிடம் கல்வி பயிலும் எல்லோரையும் குறிக்கக் கூடிய பொதுப் பெயராகும்.

இயேசு கிறித்து இவ்வுலகில் வாழ்ந்த காலைத் தம்முடைய மாணவர்களுக்குத் தனித்த நிலையில், சிறப்புப் பெயர் எதுவும் கொடுக்கவில்லை. இயேசு கிறித்துவின் சிலுவை மரணத்தின் போது, சிதறியோடிய அவர்தம் அடியவர்கள், இயேசுவின் உயிர்த் தெழுதலுக்குப் பின்னர், புத்துணர்ச்சி பெற்று ஒன்றாக இணைந் தனர். இயேசுவின் உயிர்த்தெழுதலை நம்ப மறுத்த தோமாவும், உயிர்த்தெழுந்த இயேசுவைக் கண்டபொழுது புது உற்சாகம் கொண்டார். இயேசு கிறித்து அவர்களை நோக்கி, ''உலகெங்கும் படைப்பிற்கெல்லாம் நற்செய்தியை அறிவியுங்கள்''[84] என்று கட்டளையிட்டதுடன், இறைவனின் அருட்சக்தியாகிய பரிசுத்த ஆவியை அவர்கள் பெறும்பொழுது நடைபெறப் போவதைக் குறித்து ''பரிசுத்த ஆவி உங்கள்மேல் வரும்போது, அவரது வல்லமையைப் பெற்று எருசலேமிலும், யூதேயா—சமாரியா முழுவதிலும், மண்ணுலகின் இறுதி எல்லை வரைக்குமே நீங்கள் என் சாட்சிகளாயிருப்பீர்கள்''[85] என அவர்களை ஆசீர்வதித்தார்.

---

81. லூக்கா, 2 : 46.
82. மத், 9:14, 11:2; மாற்கு 2:18, லூக். 7:18, யோவா. 1:35,37.
83. மத். 22:16.
84. மாற். 16:15
85. அப். 1:8.

அவருடைய ஆசீர்வாதப்படியே ஐம்பதாம் நாளில் அவர்கள் யாவரும் இறைவனின் அருட்சக்தியாகிய பரிசுத்த ஆவியால் நிரப் பப்பட்டு (சால்பு—நிறைவு) உலகெங்கும் சிறந்த சான்றுகளாக விளங்கத் தொடங்கினர்.

'பரிசுத்த ஆவியின் நிறைவைப் பெற்றவர்கள், இயேசு பெருமானுக்குச் சான்றுகளாக விளங்க இயலும்' என்பதாகக் கூறப்பட்டுள்ளது.

கடவுளைப்பற்றி இயற்கை ஒழுங்குகள் சான்று பகர் கின்றன.[86]

கடவுள் தம் மகனைப்பற்றிச் சான்று கூறியுள்ளார்.[87] திரு மறை இயேசுவைக் குறித்துச் சான்று கொடுக்கின்றது.[88] 'கடவுளாகிய தந்தை ஏசுவை அனுப்பினார்' என்று இயேசுவின் செயல்கள் சான்று கொடுக்கின்றன.[89] இயேசுவின் மாணவர்கள் அவருடைய உயிர்த்தெழுதலைக் குறித்துச் சான்று கூறினர்.[90] இயேசுவின் நற்செய்திக்கு அவருடைய மாணவர்கள் சான்றுகளாய் இருந்தனர்.[91]

ஆகவே, இயேசு பெருமான் கடவுளுடைய திருமகன் என்ப தற்கும், அவர் உலக மக்களை மீட்கச் சிலுவைப்பாடுகள் ஏற்று உயிர்துறந்து, திரும்பவும் உயிர் பெற்றெழுந்து மாணவர்களுக்குக் காட்சியளித்தமைக்கும் சான்றாக விளங்கும் சான்றாளர்களாக அவர்கள் விளங்கினர்.

"ஆதிமுதல் இருந்ததை, நாங்கள் கேட்டதை, கண்ணால் பார்த்ததை உங்களுக்கு அறிவிக்கின்றோம். அதை நாங்கள் நோக்கினோம். கையால் தொட்டுணர்ந்தோம். நாங்கள் அறி விப்பது உயிரின் வாக்கு. அந்த உயிர் வெளிப்படுத்தப்பட்டது.

---

86. அப். 14:17.

87. 1 யோ. 5:10

88. யோ, 5:39.

89. யோ. 5:36.

90. அப். 1:22, 4:33

91. 1 பேது. 5:1.

அதனை நாங்கள் கண்டோம். அதற்குச் சான்று பகர்கின்றோம்''[92] என அருட்சக்தியின் நிறைவாகிய சால்புடைய சான்று கூறும் சான்றோர்களாக, இயேசுவின் அடியவர்கள் உலகெங்கும் பரவத் தொடங்கினர்.

அவர்களைத் தொடர்ந்து பரிசுத்த ஆவியின் நிறைவைப் பெற்றவர்கள், வழிவழியாக இயேசு பெருமானுக்குச் சான்று கூறும் சான்றாளர்களாக, இந்நாள்வரை செயல்பட்டு வருகின்றனர்.

இயேசு பெருமானைப் பின்பற்றிய மக்களுக்குச் சாட்சி அல்லது சான்று கூறும் சான்றாளர் என்னும் பெயரே, இயேசு கிறித்துவினால் கொடுக்கப்பட்டது.[93]

இயேசுவின் சான்றாளர்கள், இயேசுவே ஆன்மீக மீட்பைக் கொடுக்கும் அரசன் (கிறித்து) என்று உறுதியோடு கூறிவந்த காரணத்தால், சாதாரண எளிய மக்களாகிய அவர்களை, மற்றவர்கள் இகழ்ச்சிக் குறிப்புத் தோன்ற, அரசனுடையவர்கள் (கிறித்தவர்கள்) எனக் கூறி இகழ்ந்தனர். அவர்களை ஆண்டு கொண்டிருந்த உரோம அரசனும், வேறொரு அரசனை இவர்கள் பின்பற்றுவதாக எண்ணி, இவர்களைப் பல்வேறு வழிகளில் துன்புறுத்தியதை, ஆதித் திருச்சபை வரலாறு கூறுகின்றது. உரோம அரசனுக்குப் பயந்து வாழ்ந்த இவர்கள், தங்களை இயேசுவாகிய அரசனுடையவர்கள் என உரிமை பாராட்டியது, மற்றவர்கள் பார்வைக்கு நகைப்புக்குரியதாகத் தோன்றியது. ஆகவே, அந்தியோகியாவில் முதன் முதல் சான்றாளர்களாகிய இயேசுவின் மாணவர்களை நகையாடும்படியாக, ‘அரசனுடையவர்கள்' என்பதைக் குறிக்குமாறு கிரேக்கமொழியில் ‘கிறித்தவர்கள் என்ற பெயரை மற்றவர்கள் சூட்டினார்கள்.[94] விவிலியம் முழுவதிலும் மூன்று இடங்களில் மட்டுமே[95] இ ப் பெ ய ர் பயன்படுத்தப்பட்டுள்ளது. நகையாடும் பொருளில் இது மற்றவர்களால் இடப்பட்ட போதிலும், அங்கிருந்த சான்றாளர் அதை ஏற்றுக் கொண்டனர்; அப்பெயரில் பெருமை கொண்டனர். புதிய ஏற்பாடு

---

92. 1 அரு. *(யோவான்)* 1:1-3.
93. அப். 1:8.
94. அப். *11 : 26.*
95. அப். 11 : 26, 26 : 28; 1 பேதுரு 4 :16.

கிரேக்க மொழியில் எழுதப்பட்டமையால், கிரேக்க ஒலியே பின்னர் நிலைபெறலாயிற்று.

ஆனால் தோமாவோ, சான்றாளர்களுக்குக் 'கிறித்தவர்கள்' என்ற கிரேக்கப் பெயர் ஏற்பட்டுப் பரவுவதற்கு முன்னர், இந்தியாவுக்கு வந்துவிட்டமையால், 'கிறித்தவர்கள்' என்னும் கிரேக்கப் பெயர் அவருக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. பரிசுத்த ஆவியின் நிறைவு (சால்பு) பெற்று, இயேசு பெருமானின் மீட்பின் செய்திக்குச் சான்றாக விளங்கும் — சான்றாளராக அவர் விளங்கியதுடன், தமிழகத்தில் சான்றோர் குழாத்தினை அமைக்கும் பணியிலும் ஈடுபட்டார்.

பரிசுத்த ஆவியின் நிறைவு (சால்பு) பெறாமல், எவரும் இயேசு பெருமானுக்குச் சான்று கூறும் சான்றாளராக அல்லது சான்றோராக வாழ்தல் இயலாது என்பது கிறித்தவ நம்பிக்கை.

சான்றாக விளங்கியவர், சான்றாளர், சான்றவர், சான்றார், சான்றோர் என்ற பெயர்களைப் பெற்றனர்.

தோமா தமிழகத்துக்கு வரும் முன்னரே 'சான்றோர்' என்னும் சொல்லுக்குத் தமிழ்மொழியில் இருந்துவந்த பொருள் பின்னர் மாற்றம் பெற்றது.[96]

தோமாவின் வருகைக்குப் பின்னர், இயேசு பெருமானின் நற்செய்திக்குச் சான்றாக விளங்கிய சான்றோர்கள், குறிப்பிட்ட கொள்கையுடன் ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோராக[97] விளங்கினார்கள்.

சங்க இலக்கியங்களில், ஆரிய வைதீகத்தின் செல்வாக்கையும், ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர்களின் செல்வாக்கையும் நாம் ஓரளவு பார்க்க இயல்கின்றது. சான்றோர்களைப்பற்றிய கீழ்க்காணும் குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன.

> "பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி அறனறிதல்
> சான்றவர்க் கெல்லாம் கடன்"[98]

---

96. ஆ. வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப. 43.

97. புற. 191.

98. கலி. நெய்தல் 139.

"சான்றோர் கடன்நிலை குன்றலுமிலர்"[99]

"அறவிலை வணிக னாயலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறியென
ஆங்குட் பட்டன் றவன்கை வண்மையே"[100]

"..............இவ் வுலகத்துச்
சான்றோர் செய்த நன்று"[101]

"சான்றோ ருரைப்பவுந் தெளிகுவர்கொல்"[102]

"..................சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெ.ஃ.கார்"[103]

"சான்றோ ரிருந்த அவையத் துற்றோன்
ஆசா கென்னும் பூசல் போல"[104]

மேலே கண்ட சங்க இலக்கியப் பாடல்களில், ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர், சான்றவர்க்கெல்லாம் கடன், சான்றோர் சென்ற நெறி முதலிய தொடர்கள், தோமா வழிவந்த சான்றோர்க்குப் பொருந்தக் கூடியனவாக உள்ளன.

சங்க கால முதலே சான்றோர் திருக்கூட்டம் செயல்பட்டு வந்தமையை, இது காட்டுகிறது எனலாம்.

ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் திருக்கூட்டம், தனியொரு இயக்கமாகவே செயல்பட்டமையை விவிலியம் நமக்குக் காட்டுகின்றது.

"விசுவாசித்தவர் எல்லோரும் ஒருமித்துத் தங்கள் உடைமைகள் அனைத்தையும் பொதுப் பொருளாய்க் கொண்டனர்"[105] என்பதால்

---

99. நற்றிணை, 327.
100. புற. 134.
101. புற, 34.
102. பதிற்றுப்பத்து, 8-3
103. அகநானூறு, 112
104. புற. 266.
105. அப். 2:44.

அவர்களுக்குள் தனியுடைமை என்பது இல்லாமல் எல்லாம் பொது வுடைமையாய் இருந்தன. இவர்கள் பரம்பரைப் பிறப்பினால் இணைக்கப்பட்டவர்கள் அல்லர். ஒவ்வொருவரும் உள்ளம் மாறிப் பிறந்த புது அனுபவம் பெற்ற புத்துணர்வால், இணைக்கப்பட்டிருந் தனர் என்பதை விவிலியம் கூறுகிறது.[106]

ஒருவனும் பிறப்பால் சான்றோர் திருக்கூட்டத்தைச் சார்ந்தவனாய் இருத்தல் இயலாது. உள்ளம் மாறிப் பிறந்த புத் துணர்வு உடையவர்களே, இத்திருக்கூட்ட அங்கத்தினர்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டனர்.

திருவள்ளுவர்,சான்றோர் திருக்கூட்டத்தைப்பற்றித் தம் குறட் பாக்களில் கூறியிருப்பதுடன், ஆண்மையுடன் சான்று பகர்வதைச் 'சான்றாண்மை' எனவும் சிறப்பிக்கின்றார். திருக்குறளில் கூறப் பட்டுள்ள சான்றாண்மையைப்பற்றி,

''சான்றாண்மை என்பது, குறளின் நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களிலும் இழையோடி நிற்கின்றது. குறளில் எல்லா அறங்களும் கூறப்பட்டிருந்தபோதிலும், அவற்றில் மிகுந்து நிற்பது சான்றாண்மையே''[107] என எஸ்.பி. இராமச்சந்திரன் கூறுகிறார்.

''ஈன்றபொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச் 'சான்றோன்' எனக்கேட்ட தாய்'' (69)என்னும் குறட்பா விவிலிய அடிப்படையில், இரண்டாம் முறை பிறந்தவனே சான்றோன் எனத் தெளிவுபடுத்து கிறது என்பதை,

''ஈன்ற என்னும் சொல், ஈனோர் (இவ்வுலகத்தோர், உடல் வாழ்வு மட்டுமேயுடைய கீழுலக மக்கள்) என்னும் சொல்லுடன் தொடர்புடையது. ஈன்ற என்பதன் எதிர்சொற்களே ஆன்ற, சான்ற என்பவை. இவை ஆன்மிகப் பிறப்புற்ற 'ஆன்றோர்','சான்றோர்' என்பவரைக் குறிக்கும்.

'ஈன்ற பொழுதில்' என்பதில் 'பொழுது' என்னும் சொல், தாயின் பிள்ளைப் பேற்றின் முதற் பிறப்பைச் சுட்டி, அதன்பின் பிள்ளை 'சான்றோன்' எனக் கேட்ட 'பொழுது' ஆகிய இரண்டாம்

---

*106.* *அரு. 3:3.*

*107.* எஸ். பி. இராமச்சந்திரன், குறளும் இறையும், வாசு பிரசுரம் சென்னை, 1966, ப. 55.

பிறப்பைக் குறித்துக் காட்டுகிறது''[108] என்னும் கா. அப்பாத்துரையார் உரை புலப்படுத்துகின்றது.

குலம், குடி, இனம் என்னும் சொற்களைத் திருவள்ளுவர் பயன்படுத்தியுள்ளார். பரம்பரைப் பிறப்பின் வழியாக வருகின்ற குலத்தையோ குடியையோ இச்சொற்கள் குறிப்பன அல்ல. பிறவியிலேயே தொடர்ந்து வருகின்ற தீமை நீங்கப்பெறல் வேண்டும். அதுவே அறங்களில் எல்லாம் சிறந்த அறம் என்பதை 'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்' (34) என விளக்கியுள்ளார். இப்படி மன மாசு நீங்கப்பெற்றவர்களுக்கு உறுதியான ஒரு கொள்கை உண்டு. மாசு நீங்கப்பெற்றவர்கள் பின்பற்றும் கொள்கையைச் சிறப்பித்து 'மாசற்றார்கோள்' என்னும் தொடரைப் பயன்படுத்தியுள்ளார் என்பது,

''கறுத்துஇன்னா செய்தவக் கண்ணும் மறுத்துஇன்னா
செய்யாமை **மாசற்றார்** கோள்'' — 312

''சிறப்புஈனும் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை **மாசற்றார்** கோள்'' — 311

என்னும் குறட்பாக்களால் வெளிப்படுகின்றன.

இந்த மாசற்ற கொள்கையுடையவர்களையே 'சான்றோர்' என்னும் பெயரால் வள்ளுவர் குறிப்பிடுகின்றார் என்பது,

''குணநலம் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத்து உள்ளதூஉம் அன்று'' — 982

என்னும் குறட்பாவால் விளங்குகின்றது. 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்று கூறியுள்ள வள்ளுவர்,

''அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புடைமை என்னும் வழக்கு'' — 992

என்னும் குறட்பாவில் 'ஆன்றகுடிப்பிறத்தல்' என்பது உள்ளம் மாறிப் பிறந்து, சான்றோராகிய மாசற்றார் கோளில் இணைவதைக் குறிப்பதே சிறப்பாகும். உடல் பிறப்பால் வரும் குடிப் பிறப்பை வள்ளுவர் இங்குச் சுட்டல் இயலாது என்பது,

---

*108.* **க. அப்பாத்துரையார், மணி விளக்கவுரை-2, ப. 538.**

"சலம்பற்றிச் சால்பில செய்யார் மாசற்ற
குலம்பற்றி வாழ்தும்என் பார்" — 956

"ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்" — 133

என்னும் குறட்பாக்களின் வழித் தெரிகின்றது. 'மாசற்ற குலம்' சேருவதும், 'இழிந்த பிறப்பாகி விடுவதும்,' அவரவர் உள்ளத்தின் தன்மையால் அமைகின்றதேயன்றி உடல்பிறப்பால் அமைவதன்று.

மாசற்ற குலத்தைப்பற்றி வாழாக் காரணத்தினாலேயே ஒருவனுடைய நலத்தின்கண் நாரின்மை தோன்றியுள்ளது என்றும் அப்படிப்பட்டவன் இழிந்த மனமுடையவர்களோடு சேர்ந்திருக்கக் கூடும் என்றும் அவனை ஆராய்தல் வேண்டும் என்றும் கூறுவதாக,

"நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும்" — 958

"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு" — 452

என்னும் குறட்பாக்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஒருவனுக்குச் சிறந்த குலம் வேண்டுமென்றால், அவனுக்குப் பணிவு வேண்டுமென்பதை,

"நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு" — 960

என்னும் குறட்பாவால் வள்ளுவர் கூறுகின்றார்.

நாணம், பணிவு, அன்பு, ஒப்புறவு, கண்ணோட்டம் இவையெல்லாம், பொறிவாயில் ஐந்தவித்தான் காட்டிய ஒழுக்க நெறியாகிய, மாசற்ற கொள்கையில் நிற்கும் சான்றோர்களின் சிறப்புக் குணங்களாகும். உலகத்திலுள்ள நல்ல குணங்கள் அத்தனையையும் மேற்கொண்டு ஒழுகுதலே சான்றோர் கடன் என்பதை,

"சகோதரர்களே, உண்மை எதுவோ கண்ணியமானது எதுவோ, நீதி எதுவோ தூயது எதுவோ, இனியது எதுவோ எதெல்லாம் நற்பண்புடையதோ, எதெல்லாம் புகழ்ச்சிக்குரியதோ அவற்றையே மனத்தில் கொள்ளுங்கள்"[109] என விவிலியம் கூறுகிறது.

---

109. *பிலி.* 4:8.

மேற்கண்ட விவிலியத்தின் கருத்துச் சுருக்கமாகக் கீழ்க்காணும் திருக்குறள் விளங்குகிறது எனலாம்.

"கடன்என்ப நல்லவை எல்லாம் கடன்அறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு" — 981

சான்றோர்களுடைய முக்கியக் குணங்களாக அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்தையும் வள்ளுவர் கூறுகின்றார் :

"அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண்" -983

"கிறித்து நமக்காகத் தம் உயிரைக் கொடுத்தார்;
இதனால் அன்பு இன்னதென்று அறிந்தோம்."[110]

"நாம் கடவுளுக்கு அன்பு செய்ததில் அன்று; அவரே நமக்கு அன்பு செய்து நம் பாவங்களுக்குப் பரிகாரமாகத் தம் மகனை அனுப்பியதில்தான் அன்பின் தன்மை விளங்குகிறது"[111]

என விவிலியம் அன்பை விளக்கிக் காட்டுகிறது. வள்ளுவர்,

"அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு" — 72

எனக் கூறுகிறார். வள்ளுவர் கூறும் அன்புடைமையும், இயேசுவின் அன்பின் செயலையும் ஒப்பிட்டுச் சைவசமயப் பெரியாரான திரு. வி. கலியாணசுந்தரனார்,

"அன்பேநீ ஆதலினால் ஆருயிர்கள் பொருட்டுன்
அழகுடலை வதைக்கவிட்டாய்; அருளுயிரை நீத்தாய்;
இந்நிலத்தில் அச்செயலை எக்குரவர் ஏற்றார்?
இளங்கன்னி வயிற்றுதித்த இறைமை மணிவிளக்கே!
அன்பினிலே குறையிருந்தால் அருஞ்செயலை ஆற்றல்
ஆகாதே ஆகாதே! 'அன்புடைய அறவோர்

110. 1 அரு. 3:16; எபேசி. 5:2.

111. 1 அரு. 4:10.

என்பும் பிறர்க்குரியர்' எனஎழுந்த மொழிக்குகந்த
இலக்கியமா யிலங்கி நிற்கும் ஏசுகுருநாதா''[112]

எனக் கூறுகிறார்.

''கிறித்து தம்மையே கடவுளுக்கு நறுமணம் வீசும் காணிக்கையும் பலியுமாக, நம்மை முன்னிட்டுக் கையளித்து, உங்கள்மேல் அன்புகூர்ந்தது போல், நீங்களும் அன்புகொண்டு ஒழுகுங்கள்.''[113]

தன்னை சிலுவைச் சாவாகிய அழிவுக்கு ஒப்புக்கொடுத்தலாகிய வீரச் செயலுக்கும் அன்பே காரணமாயிற்று.

''அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.'' -76

ஒருவர் மனந்திருந்துதலுக்குக் காரணமாய் இருப்பது, தான் செய்த தவறுக்கு நாணமடைதலாகும். இதனை 'நாணுடைமை' என்னும் அதிகாரத்தில் வள்ளுவர் விளக்குகின்றார். பெண்களுடைய நாணத்திற்கும், தவறுக்காக வருந்துதற்குரிய நாணத்திற்கும் வேறுபாடு உண்டு. இதனை,

''கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற'' -1011

என வள்ளுவர் கூறுகின்றார். நாணுடைமையே சான்றோர்க்குள்ள சால்பின் அடிப்படையாகும் என்பதனை,

''ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாண்என்னும்
நன்மை குறித்தது சால்பு'' -1013

எனத் திருக்குறளில் வள்ளுவர் கூறுகின்றார்.

கொள்கை தவறினால் சான்றோர் குடிப்பிறப்புக் கெடும். நாணில்லா தன்மை நிலைபெற்றால் நன்மையெல்லாம் நீங்கிவிடும் என்பது,

''குலஞ்சுடும் கொள்கை பிழைப்பின் நலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை'' -1019

---

*112. திரு. வி. கலியாணசுந்தரனார், கிறித்துவின் அருள் வேட்டல்.*

*113. எபே. 5 : 2.*

என்னும் குறட்பாவால் விளக்கப்படுகிறது. இயேசு பெருமானின் போதனையில் முக்கியமானது, தான் செய்த தவறுதலுக்காக வருந்தி மனந்திருந்துதலாகும். அப்படி மனந்திருந்தாதவர்கள் மனிதர்கள் அல்லர். அழிவுக்குரிய மரக்கட்டைகளே என்பதை,

''நாண்அகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று'' -1020

என்னும் குறட்பாவால் விளக்கப்படுகிறது. மனந்திருந்திய மனிதன், மற்ற மனிதர்களோடும் இறைவனோடும் ஒப்புரவாகும் தன்மையை 'ஒப்புரவறிதல்' என்னும் அதிகாரத்தில் வள்ளுவர் கூறுகின்றார். ஒப்புரவினால் தான் அழியக்கூடிய கேடு ஏற்படினும், தன்னை விற்றாவது அதைப் பெற்றுக்கொள்ளவேண்டும் என்னும் சிறப்புடையது அது (குறள். 220) என வள்ளுவர் கூறுகிறார். மற்றவர்களுக்கு மன்னிக்க வேண்டும்; அப்போதுதான் நாம் இறைவனிடம் மன்னிப்பைப் பெற்றுக்கொள்ள இயலும் என்னும் கருத்து 'கண்ணோட்டம்' என்கிற அதிகாரத்தில் விளக்கப்படுகின்றது.

''ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை'' -579

''பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயதத்க்க
நாகரிகம் வேண்டு பவர்'' -580

என்னும் குறட்பாக்கள் சிலுவைத் துன்பத்தை ஏற்றுக்கொள்வதாகிய நஞ்சுண்பதைக் குறிப்பனவாகக் கொள்ளலாம்.

யாதொன்றும் தீமையில்லாத சொல்லுதலாகிய இறைவனின் நற்செய்தி கூறுதலை 'வாய்மை' அதிகாரத்தில் விளக்கிச் சான்றோரின் பொய்யா விளக்கைச் (299) சிறப்பித்துத் திருவள்ளுவர், தமது சொந்த அநுபவத்தில் கிடைத்த நற்செய்தியைப் பின்வருமாறு கூறுகின்றார் :—

''யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற'' -300

சான்றோரை விளக்கு எனவும் (299) அவர்களை உப்பு (802) எனவும் இயேசு பெருமான் கூறிய வழியில் (மத். 5:13-14) வள்ளுவரும் கூறுகின்றார்.

''உலகிற்கு உப்பு நீங்கள்'' (மத். 5:13)

''நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்கு
உப்பாதல் சான்றோர் கடன்'' (802)

''உலகிற்கு ஒளி நீங்கள்'' (மத். 5:14)

.... ... ...

''உங்கள் ஒளி மனிதர்முன் ஒளிர்வதாக''
(மத். 5:16)

''எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு'' (299)

சான்று கூறவேண்டிய சான்றவர், ஆண்மையோடு சான்று கூறுவதில் குறைவுபட்டால், நிலவுலகம் தன் பாரத்தைச் சுமக்க வியலாமல் போய்விடும் என்பதை,

''சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை'' (990)

என வள்ளுவர் கூறுகின்றார். 'இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல் சால்பு' (987), 'தமக்கு ஒப்பில்லாத தாழ்ந்தோரிடத்திலும் தோல்வியை ஏற்றுக் கொள்ளுதல்' (986), 'தம் பகைவரிடத்தில் உள்ள பகைமை மாற்றும்படியாக அவரிடத்திலும் பணிந்து நடந்துகொள்ளுகின்றமை' (985) முதலியன வள்ளுவர் கூறும் சான்றோரின் சிறப்புக் குணங்கள் ஆகும். இச்சிறப்புக் குணங்கள் இயேசு பெருமான் சிலுவையில் தன்னைக் கொலை செய்தவர்களுக்காகவும் வேண்டிக்கொண்டதை நினைவுபடுத்தும் குறிப்புகளாகும்.

வள்ளுவர் காலத்திற்குப் பின்பு, சான்றோர் திருக்கூட்டம் அன்பு நெறியைப் பின்பற்றும் சைவம் (சிவம்—அன்பு) எனவும், மீட்பு நெறியைப் பின்பற்றும் வைணவம் (விஷ்ணு—மீட்பர்) எனவும், இரண்டாகப் பிரிந்தது. இத்திருக்கூட்டங்களும் பக்தி மேலீட்டால் எழுந்த தன்மையைப் பக்தி இயக்க வரலாறு நமக்குத் தெளிவு படுத்துகின்றது. சைவத் திருக்கூட்டத் தலைவர்கள் நாயன்மார்கள் எனவும், வைணவத் திருக்கூட்டத் தலைவர்கள் ஆழ்வார்கள் எனவும் பெயர் பெறலாயினர். நாயன்மார்களின் வழியில் சைவசித்தாந்தம் உருவாகியது.

சைவ சித்தாந்த சாத்திரங்களின் தலைமையானதாகக் கருதப் படும் சிவஞானபோதம், திருக் கூட்டம் பற்றி,

''செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே''[114]

எனக் கூறுகின்றது. அதற்கு விளக்கம் கொடுக்கும் அருள்நந்தி சிவாசாரியார்,

''செங்கமலத் தாளிணைகள் சேர வொட்டாத்
திரிமலங்கள் அறுத்தீசன் நேசரொடுஞ் செறிந்திட்
டங்கவர்தந் திருவேடம் ஆலயங்கள் எல்லாம்
அரனெனவே தொழுதிறைஞ்சி யாடிப் பாடி
எங்குமியாம் ஒருவர்க்கும் எளியோம் அல்லோம்
யாவர்க்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித்
திங்கள்முடி யார்அடியார் அடியோம் என்று
திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே''[115].

எனக் கூறுகிறார்.

## 7. முக்தி

இறைவனால் படைக்கப்பட்டு இறைவனோடு மகிழ்ந்திருந்த ஆன்மா, ஆணவ மலத்திற்குட்பட்டு, இறைவனை விட்டுப் பிரிந்து, இறைவனை அறியா நிலையில் துன்பத்தில் உழன்றபோது, இறைவன் குருவாக இவ்வுலகில் தோன்றி, ஆணவ மலத்தை அறுத்துத் திரும்பவும் ஆன்மாவை முக்தி நிலைக்குச் சேர்த்தலே விவிலியம், திருக்குறள், சைவசித்தாந்தம் இவை மூன்றும் காட்டும் ஆன்மாவின் படிநிலைகளாகும்.

'ஏதேன்' என்ற இன்ப வனத்தில் இறைவனோடு மகிழ்ந்து கொண்டு முக்தி நிலையிலிருந்த ஆதாம், கீழ்ப்படியாமையால் முக்தியை இழந்ததின் நிமித்தம், அவன் பரம்பரையில் தோன்றிய மனிதர்கள் யாவருமே முக்தி நிலைக்குப் புறம்பாயினர்.

---

*114.* சிவஞானபோதம், சூத்திரம் *12.*

*115.* சிவஞானசித்தியார், சுபக்கம், சூத்திரம் *12.*

மனிதர்களை மீண்டும் முக்தி நிலையில் சேர்க்குமாறு இறைவன் இயேசுவாகிய குருவாக இவ்வுலகில் தோன்றி, மனிதரை மீட்டுத் திரும்பவும் முக்தி நிலையில் சேர்க்கிறார் என்பது விவிலிய நம்பிக்கை.

''ஒரே ஒருவனின் குற்றம் எல்லா மனிதர்க்கும் தண்டனைத் தீர்ப்பாய் முடிந்ததுபோல், ஒரே ஒருவரின் ஏற்புடைய செயல், எல்லா மனிதர்க்கும் வாழ்வளிக்கும் விடுதலைத் தீர்ப்பாய் மலர்ந்தது''[116]

இந்த வாழ்வளிக்கும் விடுதலைத் தீர்ப்பே 'நீடுவாழ்வு' எனத் திருவள்ளுவரால் போற்றப்படுகிறது. முக்திக்குரிய ஒழுக்க நெறியில் பொய் சேர்ந்த காரணத்தால், அந்தப் பொய்யை நீக்கும்படியாகத் தனக்குவமை இல்லாதானாகிய கடவுள், ஐம்புலனையுடைய மனிதனாகிப் பொறிவாயில் ஐந்தவித்து, இருள்சேர் இருவினையும் மனிதரைச் சேரா வண்ணம் காத்து, ஒழுக்க நெறியில் இணைந் திருந்த பொய்யை அகற்றிப் பொய்தீர் ஒழுக்க நெறியைக் காட்டி, நீடுவாழ்வை ஏற்படுத்தினார் என்பது திருக்குறளின் நம்பிக்கை.

அமரருள் உய்க்கும், வானுறையும் தெய்வத்துள் வைக்கப் படும், புத்தேளிர் வாழும் உலகு, நல்விருந்து வானத்தவர்க்கு, நிலமிசை நீடு வாழ்வார், மற்றின்பம் வேண்டுபவர், சிறப்பீனும் செல்வம், வானோர்க்கு உயர்ந்த உலகம், பேரா இயற்கை, புக்கில் (340) முதலியன முக்தியாகிய மறுமையைக் குறித்து விளக்கிக் காட்டுவனவாக வள்ளுவர் கையாண்டிருக்கும் சொற்றொடர்கள் ஆகும்.

சைவசித்தாந்தம் விவிலியக் கருத்தை அப்படியே விளக்குவதாய்

''முக்தி முதற்கொடிக்கே மோகக் கொடிபடர்ந்
தத்தி பழுத்த தருளென்னுங்—கத்தியினால்
மோகக் கொடியறுக்க முத்திப் பழம்பழுக்கும்
ஏகக் கொடியெழுங்காண் இன்று''[117]

என முக்தியைக் கொடுக்கும் ஏகக் கொடியாகிய குமரக் கடவுளைக் குறிக்கிறது.

''பாதகங்கள் செய்திடினும் கொலைகளவு கள்ளுப்
பயின்றிடினும்..............பேசு நெறி இதுவே..............''[118]

---

116. உரோ. 5 : 18.

117. *திருக்களிற்றுப்படியார், 93.*

118. *உண்மைநெறி விளக்கம், 6.*

# 7. நிறைவுரை

முதல் ஐந்து இயல்களிலும், இவ்வாய்வுரையின் ஒப்பாய்வுக்குப் பின்புலமாக இருந்த பொருள்கள் விளக்கப்பட்டன. இருப்பினும் ஆங்காங்கே ஏற்ற இடங்களில் பொருள் விளக்கம் செய்துவந்த போதே, ஒப்பாய்வுக் கருத்துகளும் இடம் பெற்றுள்ளமை தவிர்க்க இயலாததாகிவிட்டது. இதனால், சில கருத்துகளைத் திரும்பக் குறிப்பிட வேண்டிய நிலையும் ஏற்பட்டுள்ளது. இந்நிலைமை நேர் ஒப்பாய்விலும் நிகழ்ந்துள்ளது.

ஆசியாவில் தோன்றிய கிறித்தவம், ஐரோப்பாவில் பரவிப் பெருகுவதற்கு முன்னரே தமிழகத்தில் வேர் கொள்ளலாயிற்று. தோமா வழியாகத் தமிழகத்திற்கு வந்த ஆதி கிறித்தவம் 'கிறித்து' 'கிறித்தவம்' என்ற ஐரோப்பியப் பெயர்களை அறியாததாய், திராவிடப் பண்பாட்டில் கலந்து திராவிட மூலக் கருத்துகளாக வளர்ச்சி பெற்றது என்பது தெரிகிறது.

சைவ வைணவ சமயங்கள் உள்ளிட்ட இன்றைய இந்து சமயத்தின் அடிப்படைச் சமயக் கருத்துகள், ஆரியத்திற்கு மாறுபட்ட திராவிட மூலக்கருத்துகளை அடிப்படையாகக் கொண்டுள்ளன. திராவிட மூலக் கருத்துகளின் மணிமுடியாக விளங்கும் மும்மூர்த்தி வழிபாடு, ஆதி கிறித்தவத்திலிருந்து வளர்ச்சி பெற்றதென்பது புலப்படுகிறது.

யூத கிறித்தவ திராவிட சமயங்களின் அடிப்படை இணைப்பாக விளங்கும் மும்மூர்த்தி வழிபாடு, ஆரிய வைதீகக் கொள்கையாகிய வேள்விக் கோட்பாட்டிற்கும், சமண பௌத்த சமயங்களாகிய வேள்வி மறுப்புக் கோட்பாட்டிற்கும் மாறுபட்டு, கிறித்தவ சமயத்தின் வேள்வி நிறைவேற்றக் கோட்பாட்டினை உடையதாக விளங்கி, இன்றைய இந்து சமயத்தைச் சிறப்பிக்கின்றது என்பது அறியப்படுகின்றது.

மேற்கு நாடுகளில் பேதுரு, பவுல் போன்றவர்களால் பரப்பப்பட்ட கிறித்தவம், புதிய ஏற்பாட்டு நூல்களைத் தொகுத்ததைப் போன்று, தமிழகத்தில் சைவ வைணவ சமயங்களாக எழுவதற்குக் காரணமாய் இருந்த தோமையரால் பரப்பப்பட்ட ஆதி கிறித்தவம்

பன்னிரு திருமுறை, நாலாயிரத் திவ்வியபிரபந்தம் ஆகியவைகளைத் தொகுப்பு நூல்களாகக் கொண்டு சிறப்புறுகின்றது எனலாம்.

தென்னகத்தில் 16-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர், ஐரோப்பிய வழிக் கிறித்தவம், ஐரோப்பியரால் இந்தியாவில் பரப்பப்பட்டபின்பு இயேசு கிறித்துவின்கொள்கையைக் கைக்கொண்டவர்கள் இந்தியாவில், இந்துக் கிறித்தவர்கள் எனவும், சீரியக் கிறித்தவர்கள் எனவும், ஐரோப்பியக் கிறித்தவர்கள் எனவும், ஐரோப்பியவழி இந்தியக் கிறித்தவர்கள் எனவும் நான்கு வகையாக விளங்குகின்றனர். ஐரோப்பியக் கிறித்தவர்கள் 1947க்குப் பின்னர் இந்தியாவிலிருந்து அகற்றப்பட்டனர்.

ஐரோப்பியக் கிறித்தவம் தென்னகத்திற்கு வரும் முன்னர், இந்துக் கிறித்தவர்களும், சீரியக் கிறித்தவர்களும் தனித்தனிப் பிரிவாக விளங்கிய போதிலும் இணைந்து வாழ்ந்தனர்.

ஆனால், ஐரோப்பியக் கிறித்தவர்களில் முதலாவதாக வந்த போர்த்துகீசியர்களிடம், சீரியக் கிறித்தவர்கள் தஞ்சம் அடைந்த காரணத்தால், சீரியக் கிறித்தவர்களுக்கும் இந்துக் கிறித்தவர்களுக்கும் இருந்த தொடர்பு துண்டிக்கப்பட்டு, ஐரோப்பிய வழி இந்தியக் கிறித்தவர்கள் உருவாக்கப்பட்டார்கள். இதனால், இந்துக் கிறித்தவத்திற்கும் ஐரோப்பிய வழி இந்தியக் கிறித்தவத்திற்கும் எவ்வித ஒட்டும் உறவும் இல்லாத நிலையேற்பட்டு, இரண்டும் முற்றிலும் வேறுபட்ட சமயங்களாக மாற்றம் அடைந்தன. பிற்காலக் கிறித்தவம் இந்தியாவில் வேற்றுப் பண்பாட்டையுடைய வேற்றுச் சமயமாகக் கருதப்பட்டு இந்திய மக்களால் ஒதுக்கப்படும் நிலையை அடைந்தது.

ஆயினும், தோமா புதைக்கப்பட்ட இடத்தில் கட்டப்பட்ட ஆலயமும், அதைப்பற்றிய பழக்க வழக்கங்களும், அதில் காணப்படும் கல்வெட்டுகளும், உடைந்த சிலைகளும் இந்துக் கிறித்தவத்திற்கும் ஐரோப்பிய வழிக் கிறித்தவத்திற்கும் உள்ள இணைப்பையும் உறவையும் வெளிக் காட்டுவனவாய் உள்ளன.

பிற்காலத்தில் தமிழகத்தில் நற்செய்திப் பணியாளர்களாகவந்த, ஐரோப்பியர்களான கிறித்தவக் குருக்கள் இந்துக்கிறித்தவத்திற்கும் ஐரோப்பியக் கிறித்தவத்திற்கும் உள்ள தொடர்புகளை, திருக்குறள், சைவசித்தாந்த நூல்கள் முதலியவற்றின் வழி ஆராய்ந்து ஓரளவு விளக்கிக் காட்டியுள்ளனர்.

விவிலியம் பழைய ஏற்பாடு,புதிய ஏற்பாடு என இருவேறு பகுதி களாகக் காணப்படினும் பன்னிரு திருமுறை, நாலாயிரத் திவ்விய பிரபந்தம் போன்ற தொகுப்பு நூல்கள் தோன்றுவதற்கு முன்னோடியாய் விளங்கிய ஒரு தொகுப்பு நூலாகும்.

திராவிடப் பண்பாடு கொண்ட 'ஊர்' என்ற தமிழ்ப் பெயர் பெற்ற நகரத்தையுடைய கல்தேயர் நாட்டிலிருந்து புறப்பட்ட ஆபிரகாம் என்ற இறைத் தொண்டர் வழிவந்த இசுரவேல் என்னும் கூட்டத்தினரின் வரலாற்றையும், அவர்கள் வரலாற்றில் இறைவனை அவர்கள் புரிந்துகொண்ட தன்மையையும் பழைய ஏற்பாடு விளக்குகிறது.

திராவிடப் பண்பாடு கொண்ட ஆபிரகாம் வழியில், உலகம் முழுவதும் ஆசீர்வதிக்கப்பட்ட நிலை, இயேசு கிறித்துவில் நிறை வேறியுள்ளமை வரலாற்றின் வழியாகப் புதிய ஏற்பாட்டில் விளக்கப் படுகிறது.

இயேசு கிறித்து வாழ்ந்தபொழுது, அந்நாட்டை ஆண்டுவந்த உரோமப் பேரரசரான அகசுடசுக்கும் (Augustus) பாண்டிய நாட்டிற்கும் நல்ல தொடர்பு இருந்ததை வரலாறு தெளிவுபடுத்து கிறது. உரோமர்களுக்கு முன், அந்நாட்டை ஆண்டுவந்த கிரேக்கர் களின் மொழியால், தமிழகத்தில் ஏற்பட்டுப் பரவிய 'யவனர்' என்ற சொல் கிரேக்கர், உரோமர், யூதர், சீரியர் ஆகியவர்களைக் குறித்தது. இயேசுவின் மாணவராகிய தோமா, யவனராகத் தமிழகத்திற்கு வந்து, இயேசுவின் நற்செய்தியை அறிவித்து, திருக்குறள் எழவும் பின்னர் சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு எழவும் கருவாய் விளங்கினார்.

சைவ வைணவ சமயங்கள் தோன்றியதற்கு மூலக்கரு திருக் குறள் என்பது இவ்வாய்வின் விளைவாகப் புலப்படும் செய்தியாகும். திருக்குறளுக்குப் பின்னர் எழுந்த எல்லாச் சமயங்களும் அதன்மீது உரிமை பாராட்டி நிற்க, திருக்குறளின் பாயிர அமைப்பும், திருக் குறளில் உள்ள 'ஐந்தவித்தான்,' 'வான்,' 'நீத்தார்,' 'இயல் புடைய மூவர்' முதலான தொடர்களும் கிறித்தவத்தை வெளிப் படுத்தும் கருத்துக் களஞ்சியங்களாகக் காணப்படுகின்றன. இது வரை புரியாத புதிராக இருந்த இவை, இந்த ஒப்பாய்வின் விளை வாகப் புது உண்மைகளையும் புது இணைப்புகளையும் வெளிப் படுத்துவதுடன், திருக்குறள் உலகப் பொதுமை வாய்ந்தது என்னும் கருத்தையும் வலியுறுத்துகின்றன.

திருக்குறளின் வழி, பக்தி இயக்கமாக எழுந்த சைவ வைணவ சமயங்களில், சைவசித்தாந்த சாத்திரங்களே ஒப்பாய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டமையால், வைணவத்தைப்பற்றி ஓரிரு குறிப்புகளே கூறப்பட்டுள்ளன.

சைவ சமயம் தமிழ் நாட்டில் செல்வாக்குப் பெற்று எழுந்த போது, அதன் செல்வாக்கைத் தங்களுக்கு ஆதரவாகப் பயன் படுத்திக்கொள்ள முனைந்த வைதீகப் பெருமக்களின், முயற்சி தமிழக வரலாற்றில் வெற்றி பெற்ற காரணத்தால், சைவசித்தாந்த சாத்திரங்களின் மூல நூல்களைப் பாடிய பெரியவர்களும், அவற்றின் வழி நின்ற சித்தர்களும் பஞ்சமர் என ஒதுக்கப்படும் நிலையை அடைந்ததுடன், ஆதி கிறித்தவத்தை வெளிப்படுத்தும் சைவ சித்தாந்த அடிப்படை உண்மைகள் மறைக்கப்பட்டும் திரிக்கப் பட்டும் ஒதுக்கப்பட்டும் உள்ளன.

தமிழகத்தில் பிற்காலத்தில் ஏற்பட்ட ஆரிய வைதீகச் செல் வாக்கின் காரணமாக மறைக்கப்பட்டிருந்த பழைய உண்மைகள், இவ்வாய்வின் மூலமாக ஓரளவு வெளிக்காட்டப்பட்டுள்ளன. மேலும் விளக்கப்பட வேண்டிய பகுதிகள் ஏராளமாய் உள்ளன. ஆய் வேட்டின் பக்க வரையறையை நோக்கி விளக்கப்பட வேண்டிய பல உண்மைகள் முழுமையாக விளக்கப்படவில்லை. எனினும், தமிழக சமய வரலாற்றுக்கும் கிறித்தவத்திற்கும் உள்ள இணைப்பை, இதில் இயன்ற அளவு காட்டுவதற்கு முயற்சி செய்யப்பட்டுள்ளது.

ஆரியப் பண்பாட்டிலிருந்து தனித்து நின்ற, திராவிடப் பண் பாட்டின் சிகரமாக விளங்கிய திராவிட சமயத்தை உருவாக்கிய வரலாறு, ஒரு தனி ஆய்வாக நடத்துவதற்கு ஏற்ற ஒரு பெரும் பொருளாகும். பக்தி இயக்கத்தின் தோற்றமும் வளர்ச்சியும், அதன் தனிச்சிறப்பும் பண்புகளும் தனி ஓர் ஆய்வாக நடத்துவதற்கு ஏற்றவையாகும்.

'கிறித்தவமும் திருக்குறளும்' என்னும் பொருளும் தனிப்பெறும் ஆய்வுக்குரியதாகும். பக்தி இயக்கத்தின் இரு கண்களாக விளங்கும் சைவமும் வைணவமும், தனித்தனியே கிறித்தவத்துடன் ஒப்பாய்வு செய்வதற்குப் பெரிதும் ஈர்ப்புடைய பொருள்களாக விளங்கு கின்றன. இந்த எண்ணக் கருவூலங்களுடன் விவிலியம், திருக்குறள், சைவசித்தாந்தம் இவற்றைப்பற்றிய ஒப்பாய்வு நிறைவு பெறு கின்றது.

# 1. விவிலிய நூல்கள்

கத்தோலிக்க திருச்சபையார் கையாளும் விவிலியத்தில், பழைய ஏற்பாட்டில் 46 நூல்களும், புதிய ஏற்பாட்டில் 27 நூல்களுமாக மொத்தம் 73 நூல்கள் அமைந்துள்ளன; அவை பின்வருமாறு :

## பழைய ஏற்பாடு

ஆதி ஆகமம்.
யாத்திராகமம்.
லேவிய ராகமம்.
எண்ணாகமம்.
உப ஆகமம்.
யோசுவா ஆகமம்.
நீதிபதிகள் ஆகமம்.
ரூத் ஆகமம்.
1 சாமுவேல் ஆகமம்.
2 சாமுவேல் ஆகமம்.
1 அரசர் ஆகமம்.
2 அரசர் ஆகமம்.
1 நாள் ஆகமம்.
2 நாள் ஆகமம்.
எஸ்றா ஆகமம்.
நெகேமியா ஆகமம்.
தொபியாசு ஆகமம்.
யூதித் ஆகமம்..
எஸ்தர் ஆகமம்.
யோபு ஆகமம்.
சங்கீதங்கள்.
பழமொழி ஆகமம்.
சங்கத்திருவுரை ஆகமம்.
உன்னத சங்கீதம்.
ஞான ஆகமம்.
சீராக் ஆகமம்.
இசையாஸ் ஆகமம்.
எரேமியாஸ் ஆகமம்.
புலம்பல் ஆகமம்.
பாரூக் ஆகமம்.
எசேக்கியேல் ஆகமம்.
தானியேல் ஆகமம்.
ஓசியா ஆகமம்.
யோவேல் ஆகமம்.
ஆமோஸ் ஆகமம்.
அப்தியாஸ் ஆகமம்.
யோனாஸ் ஆகமம்.
மிக்கேயாஸ் ஆகமம்.
நாகூம் ஆகமம்.
ஆபகூக் ஆகமம்.
செப்போனியாஸ் ஆகமம்.
ஆகாய்ஆகமம்.
சக்காரியாஸ் ஆகமம்.
மலாக்கியா ஆகமம்.
1 மக்கபே ஆகமம்.
2 மக்கபே ஆகமம்.

## புதிய ஏற்பாடு

புனித மத்தேயு
புனித மாற்கு
புனித லூக்காஸ்
புனித அருளப்பர்
அப்போஸ்தலர் பணி

உரோமையர்
1 கொரிந்தியர்
2 கொரிந்தியர்
கலாத்தியர்
எபேசியர்
பிலிப்பியர்
கொலோசேயர்
1 தெசலோனிக்கேயர்
2 தெசலோனிக்கேயர்
1 தீமோத்தேயு
2 தீமோத்தேயு
தீத்து
பிலமோன்
எபிரேயர்

யாகப்பர்
1 இராயப்பர்
2 இராயப்பர்
1 அருளப்பர்
2 அருளப்பர்
3 அருளப்பர்
புனித யூதா
திருவெளிப்பாடு

## சீர்திருத்தத் திருச்சபையில் விவிலியம்

பழைய ஏற்பாடு 39<br>புதிய ஏற்பாடு—27 } = 66

**பழைய ஏற்பாடு**

ஆதியாகமம்
யாத்திராகமம்
லேவியராகமம்
எண்ணாகமம்
உபாகமம்
யோசுவா
நியாயாதிபதிகள்
ரூத்
1. சாமுவேல்
2. சாமுவேல்
1. ராஜாக்கள்
2. இராஜாக்கள்
1. நாளாகமம்
2. நாளாகமம்
எஸ்றா
நெகேமியா
எஸ்தர்
யோபு
சங்கீதம்
நீதிமொழிகள்
பிரசங்கி
உன்னதப்பாட்டு
ஏசாயா
எரேமியா
புலம்பல்
எசேக்கியேல்
தானியேல்
ஓசியா
யோவேல்
ஆமோஸ்
ஒபதியா
யோனா
மீகா
நாகூம்
ஆபகூக்
செப்பனியா
ஆகாய்
சகரியா
மல்கியா

**புதிய ஏற்பாடு**

மத்தேயு
மாற்கு
லூக்கா
யோவான்
அப்போஸ்தலருடைய (நடபடிகள்
ரோமர்
1. கொரிந்தியர்
2. கொரிந்தியர்
கலாத்தியர்
எபேசியர்
பிலிப்பியர்
கொலோசெயர்
1. தெசலோனிக்கேயர்
2. தெசலோனிக்கேயர்
1. தீமோத்தேயு
2. தீமோத்தேயு
தீத்து
பிலமோன்
எபிரெயர்
யாக்கோபு
1. பேதுரு
2. பேதுரு
1. யோவான்
2. யோவான்
3. யோவான்
யூதா
வெளிப்படுத்தின விசேஷம்

## 2. பன்னிரு திருமுறைகள்

| திருமுறை எண் | ஆசிரியர் பெயர் |
|---|---|
| 1 | திருஞான சம்பந்தர். |
| 2 | ,, |
| 3 | ,, |
| 4 | திருநாவுக்கரசர் |
| 5 | ,, |
| 6 | ,, |
| 7 | சுந்தரர் |
| 8 | மாணிக்கவாசகர் |
| 9 | 1. திருமாளிகைத் தேவர் |
| | 2. சேந்தனார் |
| | 3. கருவூர்த்தேவர் |
| | 4. பூந்துருத்தி நம்பி |
| | 5. காட நம்பி |
| | 6. கண்டராதித்தர் |
| | 7. திருவாலியமுதனார் |
| | 8. புருடோத்தம நம்பி |
| | 9. சேதிராயர் |
| 10 | திருமூலர் |
| 11 | 1. திருவாலவாயுடையார். |
| | 2. காரைக்காலம்மையார் |
| | 3. ஐயடிகள் காடவர்கோன் |
| | 4. சேரமான் பெருமாள் நாயனார் |
| | 5. நக்கீர தேவர் |
| | 6. கல்லாட தேவர் |
| | 7. கபில தேவர் |
| | 8. பரண தேவர் |
| | 9. இளம்பெருமானடிகள் |
| | 10. அதிராவடிகள் |
| | 11. திருவெண்காட்டடிகள் |
| | 12. நம்பியாண்டார் நம்பி |
| 12 | சேக்கிழார் |

## 3. சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கும் அவற்றின் ஆசிரியர்களும்

| எண் | நூல் பெயர் | ஆசிரியர் பெயர் | காலம் |
|---|---|---|---|
| 1 | திருவுந்தியார் | திருவியலூர் உய்யவந்த தேவர் | 1148 |
| 2 | திருக்களிற்றுப்படியார் | திருக்கடவூர் உய்யவந்த தேவர் | 1178 |
| 3 | சிவஞான போதம் | மெய்கண்ட தேவர் | 1221 |
| 4 | சிவஞான சித்தியார் | அருள்நந்தி | 1253 |
| 5 | இருபா இருபஃது | ,, | 1254 |
| 6 | உண்மை விளக்கம் | மனவாசகம் கடந்த தேவர் (மெய்கண்டாரின் மாணவர்) | 1255 |
| 7 | சிவப்பிரகாசம் | உமாபதி | 1306 |
| 8 | திருவருள் பயன் | ,, | 1307 |
| 9 | வினா வெண்பா | ,, | 1308 |
| 10 | போற்றிப் ப.'.றொடை | ,, | 1309 |
| 11 | கொடிக்கவி | ,, | 1310 |
| 12 | நெஞ்சுவிடு தூது | ,, | 1311 |
| 13 | உண்மைநெறி விளக்கம் | ,, | 1312 |
| 14 | சங்கற்ப நிராகரணம் | ,, | 1313 |

# 4. பயன்பட்ட நூல்கள்


1. அந்தனி ஜான்., வள்ளுவரும் விவிலியமும் - ஓர் ஒப்பாய்வு-ஆய்வேடு, சென்னைப் பல்கலைக் கழகம், 1979.

2. அப்பாத்துரை, க., மணிவிளக்க உரை, முதல் பதிப்பு.

3. அர்ச்சுனனார், வே. த., திருக்குறள் இடைப்பாயிரமும் நூற்பாயிரமும் (விளக்கவுரை), சுதரிசன மன்றம், சென்னை, 1952.

4. அரவிந்தன், மு. வை., திருக்குறளும் சங்க இலக்கியமும், முத்துப் பதிப்பகம், வளவனூர், 1970.

5. அருணாசலம், ப., குறளில் செய்தி, பாரி நிலையம், சென்னை, 1968.

6. அழகரடிகள். திருக்குறள் அறம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1970.

7. அனவரத விநாயகம் பிள்ளை, சைவசித்தாந்த வரலாறு,

8. ,, சிவநெறிப் பிரகாசம், முன்னுரை,சிவாக்கிரயோகிகள் அருளியது.

9. இராசமாணிக்கனார், மா., தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும், தனலட்சுமிப் பதிப்பகம், மதுரை, 1974.

10. இராதாகிருஷ்ணன். கீழை மேலை நாடுகளின் மெய்ப்பொருளியல் வரலாறு, இந்திய அரசாங்கக் கல்வி அமைச்சகம், தமிழ் மொழிபெயர்ப்பு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1970.

11. ஊரன் அடிகள். வள்ளலார் மறைந்தது எப்படி? முன்னுரை, 1976.

12. கந்தையா பிள்ளை, ந.சி. தமிழகம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1962.

13. கனகசபை, வி., ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம், திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1973.

14. காமாட்சி சீனிவாசன். திருக்குறளும் விவிலியமும், மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1979.

15. ,, குறள் கூறும் சமயம், மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை, 1979.

16. காரட், தோ.சா., கிறித்து மேசியா திருமறை சொற்பொருள், கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை, 1963,

17. கைலாசபதி, க., பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும், மக்கள் வெளியீடு, 1978.

18. கோவிந்தசாமி, மு., திருக்குறள் பொருள் அகராதி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1972.

| | | |
|---|---|---|
| 19. | கோவிந்தசாமி, மு., | குறள் மணம், பாரி நிலையம், சென்னை, 1958. |
| 20. | சதாசிவ பண்டாரத்தார், தி. வை., | பிற்காலச் சோழர் வரலாறு, மூன்றாம் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1971. |
| 21. | சாமிநாதையர், உ.வே., | திருவள்ளுவரும் திருக்குறளும், கலைமகள் வெளியீடு, சென்னை-1936. |
| 22. | சாரங்கபாணி. | குறள் விருந்து, தி சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி-1973. |
| 23. | சிதம்பரம் பிள்ளை, வ.உ., | திருவள்ளுவர் திருக்குறள் அறத்துப்பால், விருத்தியுரை-1935. |
| 24. | சிரில் புரூஷ் பெர்த் | இந்திய திருச்சபை வரலாறு, தமிழாக்கம், ஆ. தே. மனுவேல் கிறித்தவ இலக்கியச் சங்கம்-1962. |
| 25. | ,, | சிலப்பதிகாரம், மூலமும், பொ. வே. சோமசுந்தரனார், விளக்க உரையும், திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1969. |
| 26. | சுப்பிரமணிய பிள்ளை, கா., | தமிழர் சமயம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1971. |
| 27 | சோமசுந்தர பாரதியார், ச., | திருவள்ளுவர், நாவலர் புத்தக நிலையம், மதுரை-1971. |
| 28. | ,, | திருக்குறள், பரிமேலழகர் உரை. |

| | | |
|---|---|---|
| 29. | தயானந்தன் பிரான்சிஸ். | தமிழ்ச் சைவம், கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை-1972. |
| 30. | தண்டபாணி தேசிகர், ச., | திருக்குறள் அழகும் அமைப்பும், முத்தையா நிலைய வெளியீடு, சென்னை-1969. |
| 31. | திருமங்கையாழ்வார். | பெரிய திருமொழி, 3-ஆம் பத்து. |
| 32. | திருஞானசம்பந்தம், கே.ஏ., | சங்க காலப் பண்டமாற்று நெறியும் காசுகளின் புழக்கமும், எம். .`.பில் ஆய்வேடு, சென்னைப் பல்கலைக் கழகம்-1980. |
| 33. | துரைசாமிப் பிள்ளை, சு., | சைவ இலக்கிய வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்-1978. |
| 34. | நடேச உடையார், க., | திருக்குறள் திறவுகோல் - 2, நீத்தார் பெருமை, சேலம் திருவள்ளுவர் கழகத்தார், 1955. |
| 35. | நீலகண்ட சாஸ்திரி, கே.ஏ., | தென்னிந்திய வரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை-1973. |
| 36. | ,, | பத்துப்பாட்டு (முதற் பகுதி), திரு. பொ. வே. சோமசுந்தரனார் உரை, கழக வெளியீடு-1966. |
| 37. | ,, | பத்துப்பாட்டு (இரண்டாம் பகுதி), திரு. பொ. வே. சோமசுந்தரனார் உரை, கழக வெளியீடு, 1968. |
| 38. | பிள்ளை, கே. கே., | தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,சென்னை-1972. |

| | | |
|---|---|---|
| 39. | பிள்ளை, கே. கே., | புறநானூறு (இரண்டாம் பாகம்), சு. துரைசாமிப் பிள்ளை விளக்க உரை, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1968. |
| 40. | ,, | மணிமேகலை, ந. மு. வேங்கடசாமி நாட்டார், சு. துரைசாமிப் பிள்ளை பதவுரை, விளக்கவுரை, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1969. |
| 41. | மறைமலையடிகள் | சிவஞானபோத ஆராய்ச்சி, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1971. |
| 42. | முத்துராமன் | சைவசித்தாந்தம், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை-1975. |
| 43. | முருகரத்தினம் | குறள் கூறும் சமயம், மதுரை காமராசர் பல்கலைக் கழகம்-1979. |
| 44. | வ. உ. சி. | உரைப்பாயிரம் திருவள்ளுவர் திருக்குறள் அறத்துப்பால், விருத்தி உரை-1935. |
| 45. | வச்சிரவேல் முதலியார். | திருக்குறளின் உட்கிடை சைவசித்தாந்தமே, திருவருள் தவநெறி மன்றம், மதுரை-1953. |
| 46. | வரதராசனார், மு., | வள்ளுவர் வாய்மொழி. |
| 47. | வெள்ளை வாரணம், க., | திருக்குறளிற் சைவமும் வைணவமும், திருக்குறட் சிந்தனைகள். |

48. வேங்கடசாமி, மயிலை, சீனி. பழங்காலத்துத் தமிழர் வாணிகம், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் - பிரைவேட் லிமிடெட், சென்னை-1978.

49. ,, சமணமும் தமிழும் (முதற் பகுதி), திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1970.

50. ,, கிறித்தவமும் தமிழும், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1978.

51. வேலுப்பிள்ளை, அ., தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், தமிழ்ப்புத்தகாலயம், சென்னை-1969.

52. ஸ்ரீபால், ஜீவபந்து,டி.எஸ்., தமிழகத்தில் ஜைனம், ஸ்வஸ்தி ஸ்ரீலக்ஷ்மி சேனாபாட்டாராக பட்டாசார்யவர்ய, மகாசுவாமிகள், ஜைனமடம், கோல்பர்-1975.



# 5. துணைநூற் பட்டியல்


| | | |
|---|---|---|
| 1. | — | அகநானூறு, ந. மு. வேங்கடசாமி நாட்டார், ரா. வேங்கடாசலம் பிள்ளை, பதவுரை விளக்கவுரைகளுடன், த. வை. இ. தமிழ்ச் சங்க வெளியீடு-1968. |
| 2. | அரங்கநாதன், வீ., | திருக்குறளும் இறையருளும், அருளமுது வெளியீடு, பண்ணுருட்டி, 1978. |
| 3. | அருணாசலம், மு., | சைவ சமயம், பாரி நிலையம், சென்னை-1969. |
| 4. | அருணை வடிவேல் முதலியார், சி., | சித்தாந்தத் தெளிவியல், தருமையாதீனம்-1968. |
| 5. | அருளப்பா, இரா., | திருக்குறள் கூறும் அறம், மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை, 1982. |
| 6. | ஆதித்தர், அ.கு., | 30 குறளின் மெய்ப்பொருள், அரோமா பிரிண்டர்ஸ், சென்னை-1968. |
| 7. | இரத்தின சபாபதி, வை., | திருமுறைத் தெளிவே சிவஞானபோதம், டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன், மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம், சென்னைப் பல்கலைக் கழகம்-1979. |
| 8. | இலக்குவனார், சி., | திருக்குறள்-எளிய பொழிப்புரை, வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை-1963. |

9. இளவழகனார். — முதற்குறளும் நூற்பாவும், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1964.

10. இரத்தினஞ் செட்டியார், முரு. பழ., (தொகுப்பாசிரியர்) — புலால் தின்பது தீவினையா? மறைமலையடிகள் மன்றம், புன்செய்ப் புளியம்பட்டி-1975.

11. இராகவையங்கார், மு., — ஆழ்வார்கள் கால நிலை, மணிவாசகர் நூலகம், சிதம்பரம்-1981.

12. இராசமாணிக்கனார், மா., — திருவள்ளுவர் காலம், பாரி நிலையம், சென்னை-1962.

13. இராமச்சந்திரன், தி. ப., — துவைத வேதம், டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன், மெய்யுணர்வு மேல்நிலைக் கல்வி நிறுவனம், சென்னைப் பல்கலைக்கழகம்-1981.

14. இறையனார். — வள்ளுவர் கொள்கையும் வடவர் கொள்கையும், தமிழகம், உறையூர்-1949.

15. ,, — ஐந்திணையைம்பது, அ. நடராசப்பிள்ளை விளக்கவுரை, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1963.

16. கந்தசாமி முதலியார், ச., — வள்ளுவர் நகைச்சுவை, வள்ளுவர் மருந்து, வள்ளுவர் வேதாந்தம், பாரி நிலையம், சென்னை,1964.

17. கந்தையாபிள்ளை, ந.சி., — இந்து சமய வரலாறு, புரொகிரசிவ் அச்சகம், சென்னை 1960.

18. கந்தையா பிள்ளை, ந.சி., கலித்தொகை, நச்சினார்க்கினியருரையும் பொ. வே. சோமசுந்தரனார் விளக்கமும், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1969.

19. கலியாணசுந்தரனார், திரு. வி., சைவத்தின் சமரசம், அரசி புக் டிப்போ, சென்னை-1970.

20. ,, சைவத் திறவு, சாது அச்சுக் கூடம், சென்னை-1955.

21. குப்புசாமி முதலியார். திருக்குறள் விளக்கம், பி.என். பிரஸ், சென்னை-1924.

22. குமாரசாமி ஐயர். திருவள்ளுவரும் சிவப்பிரகாசரும், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1956.

23. ,, குறுந்தொகை, திரு பொ. வே. சோமசுந்தரனார் உரை, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1965.

24. குரு ஏகலைவ அடிகள். திருவள்ளுவர் கண்ட மறுபிறப்பு உண்மையும், பேரின்பப் பெருவாழ்வும், சோம. இராசரத்தினம், வெளியீட்டாளர், திருநள்ளாறு-1968.

25. குன்றக்குடி அடிகளார். குறட்செல்வம், கலைவாணி புத்தகாலயம், சென்னை-1969.

26. சக்கரவர்த்தி நயினார், ஆ., திருக்குறள் வழங்கும் செய்தி, பாரி நிலையம், சென்னை-1959.

| | | |
|---|---|---|
| 27. | சங்கர பண்டிதரவர்கள். | சைவப் பிரகாசனம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1925. |
| 28. | சண்முகம் பிள்ளை, மு., | திருக்குறள் அமைப்பும் முறையும், சென்னைப் பல்கலைக் கழகம்-1972. |
| 29, | ,, | அகப்பொருள் மரபும் திருக்குறளும், சென்னைப் பல்கலைக் கழகம்-1980, |
| 30. | ,, | சிவஞானபோத மூலமும் சிற்றுரையும், சு. துரைசாமிப் பிள்ளை பதிப்பு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்-1968. |
| 31. | ,, | சிவநெறிப் பிரகாசம், சிவாக்கிரயோகிகள் உரை, சு. அனவரதவிநாயகம் பிள்ளை, பதிப்பு, சென்னை சர்வகலாசாலை, சென்னை-1936. |
| 32. | சிவ அருண சிவயோகிகள். | சிவபரத்துவ விளக்கம், மெய்கண்டார் கழகம், காஞ்சிபுரம்-1953. |
| 33. | சிவகுருநாத பிள்ளை, ப., | சிவஞான சித்தியார் ஆராய்ச்சி, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1955. |
| 34. | சிவத்திரு வாலையானந்த அடிகள். | திருவள்ளுவர் சித்தாந்த சைவர், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1970. |
| 35. | சிவம், மு. ச., | வாழ்வாங்கு வாழ வள்ளுவர் வழங்கும் அறிவுரைகள், மீரா நிலையம், ஈரோடு-1980. |

| | | |
|---|---|---|
| 36. | சிவம், மு. ச., | சீவகசிந்தாமணி, மூலமும் உரையும், முதல் பாகம், அரசு பொ. வே. சோமசுந்தரனார் உரை, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1967. |
| 37 | ,, | சீவகசிந்தாமணி, மூலமும் உரையும், இரண்டாம் பாகம், அரசு,பொ. வே. சோமசுந்தரனார் உரை, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1968. |
| 38. | சுந்தரவடிவேலனார், க. பொ., | அருட்குமரனின் ஆறுபடை வீடுகள், பைலட் பப்ளிகேஷன்ஸ், சென்னை-1978. |
| 39. | சுந்தரமூர்த்தி, இ., | திருக்குறள் அணி நலம், சென்னைப் பல்கலைக் கழகம்-1981. |
| 40. | சுப்பிரமணிய பிள்ளை,கா., | சைவசித்தாந்த உண்மை வரலாறு, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1980. |
| 41. | ,, | சைவசித்தாந்த சந்தானாசாரியர்களும் அவர்கள் அருள் நூல்களும் சைவசித்தாந்த விளக்கமும். திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1925. |
| 42. | சுப்பிரமணிய ஐயர், எம். எஸ்., | திருக்குறள், ஐயம் கம்பெனியார், சென்னை-1949. |
| 43. | சுப்பிரமணிய பிள்ளை, ஜி., | வள்ளுவர் விருந்து, தமிழ் நிலையம், புதுக்கோட்டை-1965. |

44. சேதுப்பிள்ளை, ரா.பி., — திருவள்ளுவர் நூல் நயம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1965.

45. ,, — வழி வழி வள்ளுவர், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-1970.

46. சேரமான் பெருமாள் நாயனார். — பொன்வண்ணத் தந்தாதி.

47. ஞானசம்பந்தம், அ.ச., — குறள் கண்ட வாழ்வு, பாரி நிலையம், சென்னை-1959.

48. ஞானசிகாமணி,வீ., — அகத்தியர் ஞானம், விளக்கவுரை, ஞானோதயம், சென்னை-1981.

49. தண்டபாணி தேசிகர், ச., — திருக்குறள் உரைவளம், அறத்துப்பால், தருமபுர ஆதீனம்-1950.

50. தாமோதரன், அ., — திருக்குறள் மேற்கோள் விளக்கம், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை-1970.

51. திருநாவுக்கரசு, க. த., — திருக்குறளும் இந்திய அறநூல்களும், மணியகம், சென்னை-1978

52. ,, — திருக்குறளில் கற்பனைத்திறனும் நாடக நலனும். சென்னைப் பல்கலைக் கழகம்-1982.

53. ,, — திருக்குறள் நீதி இலக்கியம், சென்னைப் பல்கலைக் கழகம்-1977.

54. ,, — திருமந்திரம், ப. இராமநாத பிள்ளை விளக்கமும், அ. சிதம்பரனார் எழுதிய குறிப்பும், திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,சென்னை-1975.

55. திருநாவுக்கரசு, க. த., திருவாசகம், கா. சுப்பிரமணிய பிள்ளை உரை, ப. இரத்தின நாயகர் ஸன்ஸ் பதிப்பு, சென்னை-1959.

56. ,, திருக்குறள், பரிமேலழகருரை, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1967.

57. ,, திருக்குறள், அறத்துப்பால், பொருட்பால், காமத்துப் பால்-மூலமும் பரிமேலழகருரையும், வை. மு. கோபாலகிருஷ்ணமா சார்யா கம்பெனி, சென்னை-1965.

58. ,, திருக்குறள், மூலமும் ஓர் பழைய உரையும், மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலைய வெளியீடு, சென்னை-1961.

59. துரைசாமிப் பிள்ளை, சு., சைவ இலக்கிய வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்-1978.

60. தெய்வநாயகம், மு., அருட்செல்வம் யாது? மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-1974.

61. ,, திருக்குறளும் பைபிளும், மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-1981.

62. ,, மெய்கண்டார் அருளிய சிவஞான போதம், விளக்க உரை, மெய்ப் பொருள் பதிப்பகம், சென்னை, 1982.

63. ,, சான்றோர் யார்? மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-1962

| | | |
|---|---|---|
| 64. | தெய்வநாயகம், மு., | திருவள்ளுவர் பெருமைபடுத்தும் நீத்தார் யார் ? மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-1975. |
| 65. | ,, | பொதுமறையும் பொருளிலக்கண மும்(முதற்பகுதி), மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-1975. |
| 66. | ,, | எழு பிறப்பு, மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-1972. |
| 67. | ,, | ஐந்தவித்தான் யார் ? மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை-1971. |
| 68. | ,, | திருவள்ளுவர் கிறித்தவரா ? மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை, 1969. |
| 69. | ,, | நற்றிணை நானூறு மூலமும், அ. நாராயணசாமி ஐயர் உரை விளக்கமும், பொ. வே. சோம சுந்தரனார் இலக்கணக் குறிப்பும். திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1967. |
| 70. | நாமக்கல் கவிஞர். | திருவள்ளுவர் திடுக்கிடுவார், இன்ப நிலையம், சென்னை-1963. |
| 71. | — | நீலகேசி மூலமும் பொ. வே. சோமசுந்தரனார் உரையும், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1964. |
| 72. | பட்டுசாமி ஓதுவார், தி., | திருக்குறள் உரைக்கொத்து, பொருட்பால், ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள்-1960. |

73. — பதிற்றுப்பத்து, சு. துரைசாமிப் பிள்ளை உரை, திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1968.

74. — பரிபாடல், பொ.வே.சோமசுந்தரனார்உரை, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1969.

75. பரமசிவானந்தம், அ. மு., வள்ளுவர்வகுத்த வாழ்க்கைநெறி, பாரி நிலையம், சென்னை-1969

76. — பழமொழி நானூறு, புலவர் மா. இராசமாணிக்கம் பிள்ளை உரை, திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1961.

77. பால்ராஜ் துரை. சிவன் யார்? இயேசு நேசிக்கின்றார்வெளியீடு, மதுரை-1980.

78. புலவர் குழந்தை. திருக்குறள்-குழந்தையுரை, பாரி நிலையம், சென்னை-1667.

79. பேயாழ்வார். மூன்றாம் திருவந்தாதி.

80. பொய்கையாழ்வார். முதலாம் திருவந்தாதி.

81. மறைமலையடிகள். பழந்தமிழ் கொள்கையே சைவ சமயம், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1968.

82; மறைமலையடிகள். திருக்குறள் ஆராய்ச்சி, பாரி நிலையம், சென்னை-1957.

83. மாணிக்கம், வ. சுப, வள்ளுவம், பாரி நிலையம், சென்னை-1959.

84. முத்துக்குமார சுவாமித் தம்பிரான். திருக்குறள்-உரைக் கொத்து, (காமத்துப்பால்), ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள்-1970.

85. ,, மெய்கண்ட சாத்திரம், (முதற்பகுதி) திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1969.

86. ,, மெய்கண்டசாத்திரம்-பதினான்கு, (இரண்டாம் பகுதி) மூலமும் உரையும், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-1969.

87. மோகனராசு, கு., திருக்குறளில் மரபுகள், தமிழ் இலக்கியத்துறை, சென்னைப் பல்கலைக் கழகம், 1981.

88. வரதராசன், மு., திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், பாரி நிலையம், சென்னை-1967.

89. விசுவநாதம், கி. ஆ. பெ., திருக்குறள் புதைபொருள், பாரி நிலையம், சென்னை-1970.

90. ,, வள்ளுவரும் குறளும், பாரிநிலையம், சென்னை-1971.

91. வையாபுரிப் பிள்ளை, எஸ்., புறத்திரட்டு.

92. ஜகந்நாதன், கி. வா., (பதிப்பாசிரியர்) திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு, ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன் வித்யாலயம், கோவை ஜில்லா-1963.

# கட்டுரைகள்


1. இராமலிங்கம், கி., — வள்ளுவர் வாய்மொழி, (பேரறிஞர் கட்டுரைகள்), தமிழ் மணம், சென்னை-1969.

2. சாமுவேல் அமிர்தம். — பழைய ஏற்பாட்டு இறையியல் திருமறைத் தோழன், கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை-1972.

3. ,, — பழைய ஏற்பாட்டு 'கனோன்' திருமறைத் தோழன், கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை-1972.

4. ஞான இராபின்சன். — இசுரவேலர் சமயம், திருமறைத் தோழன், கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை-1972.

5. பியான் பியாஸ்டட் — புதிய ஏற்பாட்டு கனோன், திருமறைத் தோழன், கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை-1972.

6. வெஸ்லி நியுபிகின் — திருமறையைப் படிப்பதெப்படி? திருமறைத்தோழன், கிறித்தவ இலக்கியச் சங்கம், சென்னை-1972.

## ENGLISH JOURNALS

Saiva Siddhanta

Volume — IX, January—March, 1974.

,, — X, July—December, 1975.

,, — XI, January—March, 1976.

Hon. Editor, Dr. V. A. Devasenapathi

Published Quarterly by :

The Saiva Siddhanta Mahasamajam,
Madras, S. India.

## 6. ENGLISH BOOKS


1. Arulappa, R., God in Thirukkural, Meipporul Publishers, Madras, 1976.
2. ,, Thirukkural A Christian Book?, Meipporul Publishers, Madras, 1974.
3. ,, Thiruvalluvar A Mystic God The Bridegroom, Meipporul Publishers, Madras, 1976.
4. Balasubramaniam, K. M., Introduction Special Lectures on Saiva Siddhanta, Annamalai University, 1959.
5. ,, Saiva Siddhanta, Annamalai University, 1959.
6. Bowman Arthur, H., Christian Thought and Hindu Philosophy, The Religious Tract Society. London, 1917.
7. Correa Landas da India, Vol. II-Quoted by George Mask Moraes, A History of Christianity in India, Bombay, 1964.
8. Devasenapathi, V. A., Saiva Siddhanta, University of Madras, 1974.

| | | |
|---|---|---|
| 9. | Hostan, H., | Antiquities from Santhome and Mylapore, The Diocese of Mylapore, 1936. |
| 10. | Ignatius Hirudayam | Christianity and Tamil Culture, University of Madras, 1977. |
| 11. | Jawaharlal Nehru | Glimpses of World History, 1934. |
| 12. | Marcopolo | Vol. II, P. 290, Quoted by C. R. Mathew and M.M. Thomas, I. S. S. P. C. K. Delhi, 1967. |
| 13. | Mathias Mundadan, A., | "St. Thomas Christians 1498-1552", Bangalore-29, 1967. |
| 14. | Meenakshisundaram.K., | -The Contribution of European Scholars to Tamil, University of Madras, 1974. |
| 15. | Meenakshisundaram,T.P., | The Notes on the Tamil Plutarch, Quoted by N. C. Kandaiya Pillai, History of Hinduism, The Progressive Printers, Madras. |
| 16. | Narayana Ayyar, C. V., | Origin and Early History of Saivism in South India, University of Madras, 1939. |
| 17. | Natesan | Thiruvalluvar's Life and Message to the World, C. R. N.& Sons, Madras, 1968. |
| 18. | Paranjoti | Saiva Siddhanta, Luzac & Co. Ltd., London, First Published in 1938. |

19. Perumali, A. C., The Apostles in India, Xavier Teachers Training Institute.

20. Piet John, H., A Logical Presentation of the Saiva Siddhanta Philosophy, The Christian Literature Society for India, 1952.

21. Podipara, P. J., The Thomas Christians, St. Pauls Publications, Bombay, 1970.

22. Pothan, S. G., The Syrian Christians of Kerala, Asia Publishing House, Madras, 1963,

23. Pope, G. U., The Thiruvasagam, At the Clarendon Press, 1900.

24. Radhakrishnan, S., East and West in Religion, 1958.

25. Raghavachar, S. S., Visistadvita, The Dr. S. Radhakrishnan, Institute for Advanced Study in Philosophy, University of Madras, 1977.

26. Sayce, A. H., The Berbert Lectures 1887— Origin and Growth of Religion, Ancient Babylon.

27. Sanjeevi, N., First All India Tirukkural Research Seminar Papers, University of Madras, 1973.

28. Stephen Neill. Bhakti Hindu and Christian, Christian Literature Society, Madras, First Published, 1974.

29. Subramania Pillai, G., Introduction & History of Saiva Siddhanta, Annamalai University, 1948.

30. Thirumalai Muthuswamy, A., A Bibliography on Tirukkural, Madurai, 1962.

31. Tiruvachakamani. Tirukkural English Translation, The Manali Lakshmana Mudaliar Specific Endowment Madras, 1962.

32. Varadachari, K. C., Visistadvaita and its Development, Chakravarthy Publications, Tirupati, A. P., India, 1969.

# சிறப்புப் பெயர் அகராதி

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. | தமிழர் தோற்கருவிகள் | ... ரூ. 10-00 |
| 2. | தமிழும் தமிழரும் | ... ரூ. 5-00 |
| 3. | உலகத் தமிழ் எழுத்தாளர் யார்? எவர்? | ... ரூ. 6-00 |
| 4. | தமிழ் இலக்கியக் கொள்கை-8 | ... ரூ. 20-00 |
| 5. | ம. பொ. சி. யின் இலக்கிய நூல்கள் ஓர் மதிப்பீடு | ... ரூ. 20-00 |
| 6. | தொல்காப்பியம் புணரியல் | ... ரூ. 10-00 |
| 7. | தொல்காப்பியம் வேற்றுமை மயங்கியல் | ... ரூ. 12-00 |
| 8. | தொல்காப்பியம் - விளிமரபு | ... ரூ. 6-00 |
| 9. | தொல்காப்பியம் - பெயரியல் | ... ரூ. 12-00 |
| 10. | தொல்காப்பியம் - வினையியல் | ... ரூ. 20-00 |
| 11. | திருமயிலை உலா | ... ரூ. 7-00 |
| 12. | வெள்ளைக்காரன் கதை | ... ரூ. 7-00 |
| 13. | சிந்து இலக்கியம் | ... ரூ. 8-00 |
| 14. | தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள் | ... ரூ. 10-00 |
| 15. | பிரபந்த தீபிகை | ... ரூ. 12-00 |
| 16. | திராவிடமொழி இலக்கியங்கள் | ... ரூ. 35-00 |
| 17. | தமிழில் விடுகதைகள் | ... ரூ. 12-00 |
| 18 | இஸ்லாம் வளர்த்த தமிழ் | ... ரூ. 15-00 |
| 19. | தஞ்சைமாவட்ட ஊர்ப்பெயர்கள் | ... ரூ. 12-00 |
| 20. | தமிழ்ச் சுவடிகள் அட்டவணை | ... ரூ. 6-00 |
| 21 | டாக்டர் உ. வே. சா. காப்பியப் பதிப்புகள் | ... ரூ. 10-00 |
| 22 | தமிழரின் தாயகம் | ... ரூ. 10-00 |
| 23 | தமிழ் இலக்கியக் கொள்கை - 9 | ... ரூ. 20-00 |
| 24. | தன்வந்திரி குழந்தை வாகடம் | ... ரூ. 14-00 |
| 25. | உ. வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள் | ... ரூ. 10-00 |
| 26. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - தொகுதி-1 | ... ரூ. 12-00 |
| 27. | இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - தொகுதி-2 | ... ரூ. 22-00 |
| 28. | வர்மசூத்திரம் | ... ரூ. 10-00 |
| 29. | இளங்கோவின் இலக்கிய உத்திகள் | ... ரூ. 12-00 |
| 30. | தமிழர் இசை | ... ரூ. 70-00 |
| 31. | பாவாணரும் தனித்தமிழும் | ... ரூ. 12-00 |
| 32. | Language and Grammar-Heritage of the Tamils | ... Rs. 22-00 |
| 33. | Cultural Heritage of the Tamils | ... Rs. 20-00 |
| 34. | Literary Heritage of the Tamils | ... Rs. 50-00 |
| 35. | Papers on Tamil Studies | ... Rs. 15-00 |
| 36. | Tamil Drama | ... Rs 20-00 |
| 37 | A Study of the Perunkatai | ... Rs. 12-00 |
| 38. | Thiru Murugan | ... Rs. 5-00 |
| 39 | Dr. Mu. Va. | .. Rs. 20-00 |
| 40. | Dissertations on Tamilology | ... Rs. 10-00 |
| 41 | Tamil writers Directory | ... Rs. 10-00 |
| 42 | Tamil-Text (An-Auto Instructional Course) | ... Rs. 25-00 |
| 43. | Heritage of the Tamils-Siddha Medicine | ... Rs. 45-00 |
| 44. | Siddha Medical Manuscripts in Tamil | ... Rs. 8-00 |
| 45. | Karaikkal Ammaiyar | ... Rs. 6-00 |

Japonica – Dial 441913